# எரியும் பனிக்காடு
# (Red Tea)

பி.எச். டேனியல்

தமிழில் : இரா. முருகவேள்

## அறிமுகம்.....

ஆனைமலைக்காடுகளில் தழைத்திருக்கும்
ஆங்கிலேயர்களின் தேயிலைத் தோட்டங்களில்
அடியுரமாய் இடப்பட்டவை எமது உயிர்கள்
....நீங்கள் கதகதப்பாய் உறிஞ்சிக் குடிக்கும்
ஒவ்வொரு துளி தேனீரிலும்
கலந்திருக்கிறது எமது உதிரம்...
------ ஆதவன் தீட்சண்யா

உழைக்கும் மக்களின் வரலாற்றில் மிக இருண்ட ஓர் அத்தியாயத்தைப் பற்றிப் பேசும் ‘ரெட் டீ’ ஆங்கிலத்தில் எழுதப்பட்டு முப்பத்து எட்டு ஆண்டுகள் கழித்து முதல்முதலாக ‘எரியும் பனிக்காடாக’த் தமிழுக்கு வருகிறது.

இன்றைய எழில்மிகுந்த மலைநகரங்களையும், அன்னியச் செலாவணியை அள்ளித்தரும் தேயிலைத் தோட்டங்களையும் கட்டியமைக்கக் கூட்டங் கூட்டமாகப் பலிகொடுக்கப்பட்ட, அந்தக் கண்கவரும் பசிய சரிவுகளில் புதையுண்டு போன ஆயிரமாயிரம் ஒடுக்கப்பட்ட மக்களின் கதைதான் ‘எரியும் பனிக்காடு.’

தமிழ் இலக்கியம் மிக அரிதாகவே தீண்டிய அந்த இருண்ட, இரத்தம் தோய்ந்த வரலாற்றை, அந்த மக்களின் கற்பனைக்கெட்டாத சோகங்களை, அவல வாழ்வை நம் கண்முன் நிறுத்துகிறது ‘எரியும் பனிக்காடு’.பிரிட்டிஷ் அரசும் அந்நாட்டுத் தொழில் நிறுவனங்களும் வேறு வேறு அல்ல என்றிருந்த காலத்தில் அவை ஒன்றிணைந்து அரங்கேற்றிய கொடுமைகள்தான் இந்நவீனமாக உருப்பெற்றன.

இன்று தொழிலாளர்களின் உரிமைகள் கொஞ்சம் கொஞ்சமாக நசுக்கப்பட்டு கேம்ப் கூலி முறை போன்ற நவீன கொத்தடிமை முறைகள் பல்வேறு அலங்காரமான பெயர்களில் தொழில் துறையின் மையத்திற்கு வந்துகொண்டிருக்கும் காலகட்டத்தில் இப்போக்கு நிறுத்தப்படாவிட்டால் அது எதில் சென்று முடியும் என்பதற்கான எச்சரிக்கையே இந்நூல்.

இலக்கியத் தளத்தில் தலித் இலக்கியத்திற்கும், பாட்டாளி வர்க்க இலக்கியத்திற்கும் இடையிலான கற்பனையான லட்சுமண ரேகைகள் மறைந்து, இரண்டும் ஒன்றிணையும் புள்ளியாகவும் இருக்கிறது, ‘எரியும் பனிக்காடாக’ வெளிவரும் ‘ரெட் டீ.’

தமிழில் உருப்பெற்று வரும் தலித் இலக்கியத்திற்கும், பட்டாளி வர்க்க

இலக்கியத்திற்கும் ‘ரெட் டீ’ ஓர் உன்னதமான தொடக்கம் என்பதை உணர்ந்து கொள்ளும்போது தமிழிலக்கியத்தின் எல்லைகள் விரிந்து பரவும். அப்போது ஒருவேளை அலெக்ஸ் ஹேலியின் ரூட்ஸுக்கு இணையான நவீனங்கள் இங்கே உருவாகலாம்.

இந்நாவலைத் தமிழ்ப்படுத்த அனுமதியளித்த ஆசிரியரின் மகள் திருமதி பமீலா மோசஸ் மற்றும் அவரது கணவர் டாக்டர் மோஸஸ் அவர்களுக்கும், ‘‘ரெட் டீ - ஒரு மீளாய்வு ’’என்ற தலைப்பில் நான் எழுதிய கட்டுரையை வெளியிட்டு அறிமுகம் தேடித்தந்த புதிய புத்தகம் பேசுது இதழுக்கும், அதன் ஆசிரியர் தோழர் நாகராஜனுக்கும்,

நூலின் ஒரு பகுதியை புதுவிசையில் வெளியிட்டு, ஓர் அற்புதமான கவிதையும் தீட்டிய தோழர் ஆதவன் தீட்சண்யாவிற்கும்,

ரெட் டீ தமிழில் வரவேண்டும் என்ற அக்கறையோடு மொழி பெயர்ப்பின் ஒவ்வொரு கட்டத்திலும் ஆலோசனைகள் வழங்கிய தோழர் ச. பாலமுருகனுக்கும்,

மேலும் இந்நூலை அறிமுகம் செய்த தோழர் குமார், பல்வேறு வழிகளில் உதவிகரமாக நின்ற தோழர் ராஜ்குமார், டாக்டர் குணசேகரன், கவிதைகளை மொழிபெயர்ப்பதில் உதவிய கவிஞர் மீனாட்சிசுந்தரம், பைபிள் வாசகங்களைத் தேடிப் பிடித்துத் தந்த வழக்குரைஞர் ஜேக்கப் ஆகியோருக்கும்,

வால்பாறையின் மண்ணையும் மக்களையும் அறிமுகப்படுத்திய விடியல் பதிப்பகத்தின் கணிப்பொறியாளர் கே.கீதாவுக்கும், தேயிலைத் தோட்டங்களில் பயன்படுத்தப்படும் வழக்குச் சொற்களை மொழி பெயர்ப்பதில் உதவிகரமாக நின்ற பன்னிமேடு எஸ்டேட் பேச்சியம்மாள் அவர்களுக்கும், என் மனமார்ந்த நன்றிகள்.

மேலும் இருவரது பங்களிப்பில்லாமல் போயிருந்தால் இந்நூல் வெளிவந்திருப்பது சாத்தியமே இல்லை. ஒருவர் இந்நூலில் இடம்பெறும் உரையாடல்களை திருநெல்வேலி வட்டார வழக்கிற்கு மாற்றுவதில் பேருதவியாகவிருந்த தோழர் திருப்பூர் குணா,

மற்றொருவர் என் மனைவி பானுமதி. இந்நூலைப் பொறுத்த வரை சுருக்கெழுத்தாளர், ஆலோசகர், காரியதரிசி மற்றும் முதல்வாசகர் என்று ஒவ்வொரு பக்கத்திலும் அவரது உழைப்பு உள்ளது.

கோயம்புத்தூர்,

முப்பத்தைந்து ஆண்டுகள்
கடவுள் கொடுத்த வரமாக
என்னுடனிருந்த
என் மனைவி லீலாவுக்கும்,

கடவுள் கொடுத்த வரமான
என் மகள்கள் பமீலா மோசஸுக்கும்
ஷீலா ராஜனுக்கும்,

என் மருமகன்கள்
டாக்டர் டபிள்யூ ஈ மோஸஸுக்கும்,
ராஜன் ஐசக்குக்கும்,

என் பேரக்குழந்தைகள்
மனோஜ், ஆஷா
லீலா மற்றும் பிரேமுக்கும்

# முன்னுரை

இந்நூலை நான் எழுதி முடித்த நேரத்தில் சர் பெர்சிவல் கிரிபித் என்பவர் எழுதிய ‘இந்தியத் தேயிலைத் தொழிலின் வரலாறு’ (The History of Indian Tea Industry) என்ற நூலைப் படிக்க நேர்ந்தது. அது ஏராளமான விவரங்கள் கொண்ட ஒரு மிகப் பெரிய புத்தகம். ஆனால் அவ்வளவு பெரிய நூலில் ஒரு இடத்தில் கூட இந்தியாவில் தேயிலைத் தொழிலை வேரூன்றச் செய்வதற்கு இந்தியத் தொழிலாளர்களும், எழுத்துப் பணியாளர்களும் புரிந்த தியாகங்களை அங்கீகரிக்கும் ஒரு சிறு குறிப்புக் கூட இல்லை. அந்த ஆசிரியரைப் பொருத்தவரை, தேயிலைத் தோட்ட நிர்வாகங்கள், இந்திய நிலப் பிரபுக்களிடம் கொத்தடிமைகளாக இருந்த இந்தியத் தொழிலாளர்களை விடுவித்து, அவர்களுக்கு தோட்டங்களில் வேலையளிக்கும் பணியையும் மேற்கொண்டன. ஆனால் அற்பத்தனமான இந்தியர்கள், அவ்வளவு நல்லெண்ணத்துடன் தேயிலைத் தோட்டங்களில் தங்களுக்கு அளிக்கப்பட்ட வேலையைச் செய்யாமல் அங்கிருந்து ஓடிவிடுகின்றனர். அங்கு வேலை செய்வதைவிட தங்கள் கிராமங்களில் பட்டினி கிடப்பதையே விரும்புகின்றனர். இதன் காரணமாகவே பிரிட்டிஷ் அரசு மெட்ராஸ் தேயிலைத் தோட்டச் சட்டம் 1902 என்ற சட்டத்தை உருவாக்க வேண்டி வந்தது (The Madras Plantation Act 1902).

எந்தத் தொழிலாளியாவது சரியான காரணமில்லாமல் வேலைக்கு வராமலிருந்தாலோ, வேலையை அலட்சியப்படுத்தினாலோ, வேலை செய்ய மறுத்தாலோ அவனுக்கு நான்கு அணா அபராதம் விதிக்கப் படுவதோடு வேலைக்குப் போகாமலிருந்த நாட்களுக்காக 14 நாட்கள் வரை சிறைத் தண்டனையும் விதிக்கப்படலாம் என்று சட்டம்-3, பிரிவு 25 கூறுகிறது. ஒரு தேயிலைத் தோட்ட மேலாளர், ஒரு தொழிலாளி தோட்டத்தை விட்டு ஓடிவிட்டான் என்று மாஜிஸ்திரேட்டிடம் எழுத்து மூலமாகப் புகார் கொடுப்பாரேயானால், அவர் அழைப்பாணையோ (summon) பிடியாணையோ (warrant) பிறப்பித்து அந்தக் கூலியைப் பிடித்துக் கொண்டு வந்து தன் முன் நிறுத்தச் செய்ய வேண்டும் என்று பிரிவு 26 கூறுகிறது. ஒப்பந்தக்காலம் முடிவதற்கு முன்பே ஓடிச் சென்ற தொழிலாளிகளுக்கு ரூ 50 அபராதம் அல்லது ஒரு மாதச் சிறைத்தண்டனை அல்லது இரண்டும் விதிக்கப்பட வேண்டும்.

பிரிட்டிசார் தங்களுக்குத் தாங்களே குத்திக் கொள்ளும் பதக்கத்திற்கு இன்னொரு புறமும் இருக்கிறது என்பதை இப்படியொரு சட்டம் போட வேண்டியதன் அவசியம் காட்டுகிறது. இந்நூலில் அந்த மறுபக்கத்தைக்

காட்ட முயற்சித்துள்ளேன். 1920 இலிருந்து 1930 வரை தேயிலைத் தோட்டங்களில் இருந்த நிலைமைகள் குறித்துத் துல்லியமான, உண்மையான ஒரு அறிமுகத்தைத் தர என்னால் முடிந்தவரை முயற்சி செய்துள்ளேன்.

1941 இலிருந்து 1965 வரை 25 ஆண்டுகள் தேயிலைத் தோட்டங்களில் வேலை செய்திருக்கிறேன். இந்தக் காலகட்டத்தில் 1900 இலிருந்து 1930 வரை தோட்டங்களில் பணிபுரிந்த பலரைப் பேட்டி கண்டிருக்கிறேன். அக்காலத்தில் அவர்கள் பணிபுரிந்த சூழ்நிலைகள் குறித்து அவர்களிடமிருந்து எழுத்துப்பூர்வமான வாக்குமூலங்களும் பெற்று இருக்கிறேன். அவற்றின் அடிப்படையிலேயே இந்நூல் எழுதப்பட்டுள்ளது.

இந்நூலில் தேயிலைத் தோட்டங்களைப் பற்றி மட்டும்தான் எழுதியுள்ளேன். ஆனால் இது காபி மற்றும் ரப்பர் தோட்டங்களுக்கும் பொருந்தும். இதில் வரும் கதாபாத்திரங்கள் முழுவதும் கற்பனையே. இந்நூலை எழுதுவதற்குப் பேருதவியாயிருந்த என் மனைவி லீலா டேனியலுக்கு நான் பெரிதும் கடன்பட்டுள்ளேன் என்பதை இங்கு பதிவு செய்ய விரும்புகிறேன்.

இந்நூலைத் தொடர்ந்து இன்னொரு நூலும் வரவுள்ளது. அதில் 1940லிருந்து 1960 வரையான காலத்தில் தேயிலைத் தோட்டங்களில் இருந்த நிலைமை, தொழிற்சங்க இயக்கத்தின் வளர்ச்சி, தோட்டங்களை நிர்வகிக்கும் ஏஜென்ஸி சிஸ்டத்தின் பங்கு, சுதந்திரத்திற்குப் பின்பு இந்திய முதலாளிகளின், நிர்வாகத்தில் தேயிலைத் தோட்டங்களில் தற்போதுள்ள நிலைமை ஆகியவை குறித்து எழுத உள்ளேன்.

பி.எச்.டேனியல்

கோயம்புத்தூர்
செப்டம்பர் 24,1969

# முன்னுரை

பொதுவாக நவீனங்களுக்கு முன்னுரை தேவையில்லை. ஆனால் டாக்டர் டேனியலின் “ரெட் டீ” முற்றிலும் வேறு வகையானது. இது ஒரு கதை வடிவில் தேயிலைத் தோட்டங்களில் பணிபுரிந்தவர்களின் துன்ப, துயரங்களை கண்முன் நிறுத்துவதோடு தொடக்கக் காலங்களில் அங்கிருந்த நிலைமைகள் குறித்த துல்லியமான விவரணைகளையும் தருகிறது.

தோட்டத் தொழிலாளர்களோடு நெருங்கிய தொடர்பு கொண்டவர் டாக்டர் டேனியல். அவர்களிடையே முதல்முதலாக தொழிற் சங்கம் அமைத்தவர்களில் ஒருவர் அவர். எனவே மற்றெல்லோரையும் விட இந்நூலை எழுதுவதற்குத் தகுதி பெற்றவர் டாக்டர் டேனியல்தான்.

நூலில் வரும் கதாபாத்திரங்கள் வேண்டுமானால் கற்பனையானவையாக இருக்கலாம். ஆனால் ஆசிரியர் விவரித்துள்ள நிலைமைகள் தோட்டங்களில் உண்மையில் நிலவியவைதான். இந்தத் தோட்டங்கள் ஒருகாலத்தில் படுமோசமாக நிர்வகிக்கப்பட்டவை. அவற்றில் பணி புரிந்த தொழிலாளர்களுக்கு நல்ல வாழ்க்கையைக் கொடுக்க மிக மிகக் குறைவான முயற்சியே எடுக்கப்பட்டது.

தொடக்கக் காலங்களில் தேயிலைத் தோட்டங்களில் பணிபுரிந்த தொழிலாளர்களின் வாழ்வையும், வாழ்நிலையையும் பற்றி அறிந்து கொள்ள விரும்பும் அனைவருக்கும் இந்நாவலைப் பரிந்துரை செய்கிறேன்.

வி.வி.கிரி

துணை குடியரசுத் தலைவர்
இந்தியா

புதுடெல்லி, ஏப்ரல் 18, 1969

# இரண்டாவது பதிப்பிற்கான முன்னுரை

இந்நூலின் முதல் பதிப்பிற்கு நாடு முழுவதிலும் மற்றும் வெளி நாடுகளிலும் உள்ள தொழிலாளர்கள், சமூக நல அமைப்புக்கள் மற்றும் பொது மக்கள் அளித்த வரவேற்பு எனக்கு மிகவும் மகிழ்ச்சியளிக்கிறது. இந்நூலை நான் எழுதியதற்கான ஒரே நோக்கம் தென்னிந்தியாவில் தேயிலைத் தொழிலை நிறுவுவதற்குத் தொழிலாளர்களும், எழுத்துப் பணியாளர்களுமாகிய நமது நாட்டு மக்கள் புரிந்த மகத்தான தியாகங்கள் அங்கீகரிக்கப்பட வேண்டும், நினைவுகூரப்பட வேண்டும் என்பதாகும்.

வாசகரே!

உங்களது அமைதி தவழும் இல்லத்தில் உங்கள் அன்புக்குரியவர்கள் சுற்றியிருக்கையில் மனதுக்கு இதமளிக்கும் ஒரு கோப்பைத் தேனீரை உறிஞ்சும்போது, அதற்காக முந்தைய ஆண்டுகளில் உங்களுடையவற்றைவிட எளிய, ஆனால் உங்களுடையதைப் போன்றே இன்பமும் அமைதியும் நிலவிய ஆயிரமாயிரம் இல்லங்கள் சிதைக்கப்பட்டன, அழித்து நாசமாக்கப்பட்டன என்பதை நினைவுகூறுங்கள்.

பி.எச்.டேனியல்<br>கோயம்புத்தூர் 43 , செப்டம்பர் 20, 1984

# பாகம்
# ஒன்று

கோக் டவுனின் புனைகதைகளில் இதுவும்
ஒன்று. ஆறு பென்ஸைக் கொண்டு அறுபதாயிரம்
பவுண்ட் சம்பாதித்த ஒவ்வொரு முதலாளியும்,
பக்கத்திலிருக்கும் அறுபதாயிரம் நபர்களால்
இதை ஏன் சாதிக்க முடியவில்லை என்று தான்
வியப்படைவதாகக் கூறிக் கொள்கிறார். இந்தச்
சின்ன விசயத்தை இன்னும் செய்து முடிக்காமல்
இருப்பதற்காக அத்தனை பேரையும் அவர்
கடிந்து கொள்ளவும் செய்கிறார்

ஹார்டு டைம்ஸ்
- சார்லஸ் டிக் கென்ஸ்

# 1

ஆளரவமற்று நிலவொளியில் நனைந்து
கொண்டிருக்கும் தெருவில்
எவ்வளவு தனிமை நிறைந்ததாய்
எதிரொலிக்கிறது என் காலடியோசை

எ.சம்மர்நைட்
மேத்யூ ஆர்னால்ட்

1925ஆம் ஆண்டு, ஒரு டிசம்பர் இரவு...

திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள ஒரு சின்னஞ்சிறிய கிராமம் மயிலோடை. கிராமம் முழுவதிலும் சேர்த்து சுமார் முப்பது வீடுகளே இருந்தன. ஓடு போடப்பட்ட ஒரேயொரு செங்கல் வீட்டைத் தவிர மற்றவை அனைத்துமே பனையோலையால் வேயப்பட்ட, ஒற்றை அறை களைக் கொண்ட குடிசைகள்தான். சுவர்கள் மண்ணால் கட்டப்பட்டவை. சில குடிசைகளில்தான் மலிவான மரங்களாலான கதவுகள் காணப்பட்டன. மற்றவற்றில் மூங்கில் தட்டிகளையும், பனை யோலைகளையும் கொண்டு கைகளால் செய்யப்பட்ட படல்களே கதவுகளாகப் பயன்பட்டு வந்தன. மக்கள் அத்தனை பேரும் தாழ்த்தப் பட்டவர்கள். பக்கத்து ஊர்களைச் சேர்ந்தவர்களின் நிலங்களில் கூலி வேலை செய்தே தங்கள் வயிற்றுப்பாட்டைக் கவனித்து வந்தார் கள்.இந்தக் குடிசைகளில் ஒன்றில் ஒரு கிழிந்த பாயில் கருப்பன் சுருண்டு படுத்துக் கொண்டிருந்தான். இரவின் நிசப்தத்தினூடே அவ்வப்போது யாரோ உலுக்கி விட்டது போல அவனுடல் தூக்கித் தூக்கிப் போட்டுக் கொண்டிருந்தது. நெடுநேரத்துக்கு முன்பே விழிகளிலிருந்து உறக்கம் விடைபெற்றுச் சென்றிருந்தது. இரவெல்லாம் ஊமை எரிச்சலாக இருந்த பசி அதிகாலை நேரத்தில் புதுவேகம் பெற்று குடல்களைப் பிடுங்கியெடுக்க மனது மட்டும் குடும்பத்தின் அவசரத் தேவைகளுக்காக இரண்டு மூன்று ரூபாய் புரட்டுவதற்கான திட்டங்களைப் பரபரப்புடன் வகுத்துக் கொண்டிருந்தது.

பக்கத்தில் அவனின் இளம் மனைவி வள்ளி ஆழ்ந்த உறக்கத்திலிருந்தாள். அவர்களுக்குத் திருமணமாகி ஆறு மாதங்கள்தான் ஆகியிருந்தன. போன அறுவடையின்போது கருப்பன் சேர்த்து வைத்திருந்த சிறு தொகை முழுவதும் திருமணத்தின்போது செலவழிந்து போய்விட்டது. அவன் வேலைக்குத் தயங்காத கடும் உழைப்பாளிதான். ஆனால் வேலை தான் கிடைத்தபாடில்லை. இந்நேரம் விதைப்பு நடந்து

முடிந்து எத்தனையோ காலமாகியிருக்க வேண்டும். ஆனால் கடவுள் கருணை காட்ட வேயில்லை. மழைக்காலம் தள்ளித் தள்ளிப் போய் கொண்டேயிருந்தது.

ஒவ்வொரு நாளும் கருப்பனும் பக்கத்து வீட்டுக்காரர்களும் மழைக்கான அறிகுறி ஏதாவது தெரிகிறதா என்று வானத்தை வீணே துருவித் தேடுவார்கள். ஆனால் ஆழ்ந்த நீலவானமும், சுட்டெரிக்கும் பகல்களும்தான் அவர்களுக்கு விடையாகக் கிடைக்கும். இரவு நேரங்களில் வெள்ளி போல் ஒளிர்ந்த நிலவும் அவர்களுக்கு விரக்தியையே அளித்தது.

கடந்த வாரம் முழுவதும் வள்ளியின் கொலுசை அடகு வைத்ததில் கிடைத்த பணத்தைக் கொண்டுதான் கருப்பனின் அம்மா உட்பட அவர்கள் மூவரும் எப்படியோ நாட்களை ஓட்டி வந்தார்கள். சாப்பாடு ஒரு நாளைக்கு ஒரு வேளையாகக் குறைந்து போய்விட்டிருந்தது. அதைச் சாப்பாடு என்று சொல்லவே முடியாது. நிறையத் தண்ணீரில் ஒரு கைப்பிடி ராகிமாவு கலந்து காய்ச்சிய நீர்த்த கஞ்சியும் இரண்டு மூன்று சுட்ட மிளகாய்களும்தான். அதுவும் இன்றைக்குக் கிடைக்காது போலிருந்தது.

கருப்பன் இயலாமையுடன் தலையைத் தூக்கிச் சுற்றிலும் பார்த்தான். கூரையாக வேயப்பட்டிருந்த பனையோலைகள் ஏறக்குறைய இறுதி மூச்சை விடும் நிலையிலிருந்தன. அதிலிருந்த எண்ணற்ற ஓட்டைகளின் வழியே அறைக்குள் புகுந்த நிலவொளியில் எதிர் மூலையில் கிழிந்த நாராகக் கிடந்த அம்மாவின் உருவம் மங்கலாகத் தெரிந்தது.

அடுப்பருகே இருந்த நான்கைந்து மண்சட்டிகளைத் தவிர அறை வெறிச்சோடிக் கிடந்தது. ஒரு காலத்தில் அந்த அறையை அலங்கரித்துக் கொண்டிருந்த இரண்டு பித்தளைப் பானைகளையும் மூன்று பித்தளைத் தட்டுகளையும் குவளைகளையும் விற்று நீண்ட நாட்களாகி விட்டன. இப்போது மூலையில் சும்மா கவிழ்த்து வைக்கப்பட்டிருக்கும் கூடையில் குடியிருந்து வந்த சேவலை மூன்று வாரங்களுக்கு முன்பு மாரியம்மனின் கோபத்தைத் தணிப்பதற்குப் பலி கொடுத்தாகி விட்டது.

ஏறக்குறைய கிராமத்திலிருந்த அத்தனைச் சேவல்களும் பலி கொடுக்கப்பட்ட பின்பும் அம்மனின் கோபம் ஏன் தணியவில்லை என்பதைக் கருப்பனால் புரிந்து கொள்ளவே முடியவில்லை. அவனது எளிய மனம் அதற்கு ஒரு விடையும் காண முடியாமல் திகைத்துப் போயிருந்தது.

“கொக்கரக்கோ கோ” பக்கத்து வீட்டிலிருந்த ஒரு சேவல் கூவியது. அது விடுத்த சவாலை ஏற்றுக் கொள்வதைப் போல ஊரின் மறு கோடியிலிருந்து இன்னொரு சேவல் கூவியது. இரண்டு மூன்று நிமிடங்களுக்குப் பிறகு இந்தக் கச்சேரி திடீரென்று நின்றுவிட்டது. திரும்பவும் அமைதி குடிகொண்டது. ஊரில் மிஞ்சியிருப்பவை இந்த இரண்டே இரண்டு சேவல்கள்தான் போலும்.விரைவில் விடிந்துவிடும். உணவோ வேலையோ தேடும் பிரச்சினை பெரும்பாரமாக மனதை அழுத்த கருப்பன் கயத்தாறுக்குப் போகலாமா என்று யோசித்தான். அளவில் கயத்தாறு ஒரு பெரிய கிராமம்தான் என்றாலும் மயிலோடை கிராமத்துக்காரர்களைப் பொறுத்தவரை அதுதான் டவுன்.

“அய்யோ... அம்மா!” அம்மா முத்தாத்தாள் ஈனஸ்வரத்தில் முனகுவது கேட்டது. மூட்டு வலியால் அவளது முழங்கால்கள் வீங்கிப் போயிருந்தன. “பாவம் அம்மை! போன வருசம் அப்பாவும் இருந்தாவ. நல்லா சம்பாறிச்சு எல்லாரும் நல்லாத்தா இருந்தோம். அம்மையும் அப்ப நல்லா இருந்தா. இப்ப அப்பா போயிட்டாவோ. இன்னொரு வாய்க்கும் கஞ்சி ஊத்த வேண்டி இருக்கு. அம்மதா இந்த ஒரு வருசத்தில எவ்வளவு கௌடு தட்டி மெலிஞ்சு போயிட்டா” மனம் போன போக்கில் அவன் எண்ணங்கள் ஓடிக் கொண்டிருந்தன.

கருப்பன் எப்போது கண்ணயர்ந்தானோ தெரியாது. இரண்டாவது முறை சேவல் கூவியதும் திடுக்கிட்டு விழித்துக் கொண்டான். “வள்ளி”என்று மென்மையாக மனைவியை எழுப்பினான்.

“காட்டுக்குப் போயிட்டு நேரா கயத்தாறுக்கு போயி, ஏதாச்சும் வேலை கெடைக்குமான்னு பாக்கேன். நல்லபடியா வேலை கெடைச்சா திரும்பி வாரப்போ வரகும், மத்த சாமானும் வாங்கிட்டு வாரேன். இப்ப வீட்டில ஏதாவது ராயி மிச்சமிருந்தா ஆக்கி அம்மையும் நீயும் சாப்பிட்டுகிடுங்க.”

“கொஞ்சம் இரு மாமா” வள்ளி கண்ணைக் கசக்கிக் கொண்டே சொன்னாள். “ராயி மாவு கொஞ்சம் மிச்சமிருக்கு இப்ப கஞ்சி காய்ச்சிடுதேன், குடிச்சிட்டு போ”

“வேண்டா வேண்டா. எனக்கு எதுவும் சாப்பிடத் தோணல. வேல கெடைக்கறதே குதிரைக் கொம்பா இருக்கு. வெடியாலப் போனாத்தா எங்கெயாவது வேலயைப் புடிக்க முடியும்” என்று அவளுக்கு பதில் சொல்லி விட்டு கருப்பன் கதவைத் திறந்து கொண்டு வெளியேறினான்.

நிலவு இன்னும் ஒளிவீசிக் கொண்டு இருந்தாலும் விடியப் போவதற்கு அடையாளமாக அதன் ஒளி மெல்ல மெல்ல மங்கி வந்தது. கொஞ்சம்

முன்பிருந்ததைவிட இருட்டு இன்னும் கனமாக அப்பிக் கொண்டது. அதற்குள் எழுந்து விட்டிருந்த பறவைகளின் கீச்சொலிகள் காற்றில் நிறைந்திருந்தன. காக்கைகள் கரடு முரடான குரல்களில் கரைந்தபடி ஏற்கெனவே மரத்துக்கு மரம் பறந்து கொண்டிருந்தன.

ஊர் இன்னும் விழித்துக் கொள்ளவில்லை. தெரு வெறிச்சோடிக் கிடந்தது. ஊர்க்கிணற்றுக்கு அருகிலும் கூட அமைதி குடி கொண்டிருந்தது. ஆனால் ஊரிலிருந்த ஒரே கல் வீடான வைரமுத்துவின் வீட்டுக் கூரையிலிருந்து புகை சுருள் சுருளாக மேல்நோக்கி எழுந்து கொண்டிருந்தது. கருப்பன் அந்த வீட்டைக் கடக்கும்போது உள்ளே அடுப்பு மூட்டப்பட்டிருப்பதைக் கண்டான்.

“வைரமுத்து யோகக்காரன். பொஞ்சாதி வெள்ளெனவே எழும்பி சோறாக்கத் தொடங்கிட்டா. ஒரு மாசத்துக்கு ஊரு முழுசுக்கும் ஆக்கி போடற அளவுக்கு அவங்கிட்ட ராயி இருக்கும். நா வேணுமுன்னா பந்தயம் கட்டுதேன்.”

ஊரிலேயே வைரமுத்துதான் பணக்காரன். அவனுக்கு வயது அறுபதுக்கு மேலிருக்கும். ஊருக்கு அருகிலேயே அவனுக்கு ஐந்து ஏக்கர் நிலம் இருந்தது. உழுவதற்கும் சொந்த மாடுகள் இருந்தன. ஊரிலிருந்த ஒரேயொரு மாட்டு வண்டியும் அவனுடையதுதான். வாரத்துக்கு ஒருமுறை கயத்தாறில் சந்தை கூடும்போது அந்த வண்டி பூட்டப்படும். விற்பதற்கு யாரிடமாவது ஏதாவது இருந்தால் அவர்கள் வைரமுத்துவுக்கு ஒரு சிறிய தொகை கொடுத்துவிட்டு அவனது மாட்டு வண்டியிலேறிச் சந்தைக்குப் போவார்கள். வைரமுத்து வட்டிக்கும் பணம் கொடுத்து வந்தான். ஆனைமலையில் உள்ள தேயிலைத் தோட்டங்களில் வேலை செய்து அவன் இவ்வளவு பணத்தையும் சேர்த்திருந்தான். இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு வைரமுத்து ஊருக்குத் திரும்பி வந்ததையும், அவன் ஐயாயிரம் ரூபாய் கொண்டு வந்திருக்கிறான் என்று கிசுகிசுக்கப்பட்ட தையும் கருப்பன் நினைத்துக் கொண்டான்.

“நாமும் மலைக்குப் போய் கொஞ்சம் காசு பாத்தாதான் என்ன?” என்று கருப்பனுக்குத் தோன்றியது. மாலை திரும்பி வரும்போது வைரமுத்துவைப் பார்த்து மலைக்குப் போனால் வேலை கிடைக்குமா, பணம் சம்பாதிக்க முடியுமா என்று கேட்க வேண்டுமென்று தனக்குள் நிச்சயம் செய்து கொண்டான். எந்த நம்பிக்கையுமின்றி நாலாபுறமும் இழுபட்டுக் கொண்டிந்த மனதுக்கு இந்த முடிவு ஒரு விசித்திரமான அமைதியைக் கொடுத்தது.

இந்தப் புது முடிவு அளித்த நம்பிக்கையில் காலைக் கடன்களை

முடித்துவிட்டு உற்சாகமாக கயத்தாறை நோக்கி நடக்கத் தொடங்கினான்.

# 2

துணிந்தவனையே அதிர்ஷ்டம் தேடி வரும்

- - அனீய்ட் --- விர்ஜில்

சுற்றியுள்ள கிராமங்களுக்கெல்லாம் சேர்த்து கயத்தாறில்தான் சந்தை கூடும் என்பதால் அது முக்கியமான இடமாகக் கருதப்பட்டது. சந்தை நாட்களில் ஆயிரக்கணக்கான கிராமவாசிகள் தங்கள் பொருட்களை விற்கவும், தேவையானவற்றை வாங்கவும் இங்கே திரண்டு வருவார்கள். பக்கத்து ஊர்கள் அனைத்திற்கும் சேர்த்து கயத்தாறில்தான் பள்ளியும், அரசு மருத்துவமனையும், காவல் நிலையமும் இருந்தன. ரயில் நிலையம் கயத்தாறில் இருந்து பதினைந்து கிலோமீட்டர் தொலைவில் உள்ள கோவில்பட்டியில் இருந்தது. கயத்தாறிலிருந்து கோவில்பட்டிக்கும், மதுரைக்கும் பேருந்துகள் சென்று வந்தன. கோவில்பட்டியிலிருந்து திருநெல்வேலி செல்லும் பேருந்துகளும் கயத்தாறு வழியாகவே செல்லும்.

சந்தை நாட்களில் மாட்டு வண்டிகள் வரிசை வரிசையாக கம்பும், ராகியும், சோளமும் மற்ற பொருட்களும் ஏற்றிக் கொண்டு சந்தைக்கு வரும். வாய்ப்புள்ள ஒவ்வொரு இடத்திலும் பெட்டிக் கடைகள் முளைத்து விடும். காலையிலிருந்து மாலை வரை துளியும் ஓய்வின்றி சுறுசுறுப்பாக வியாபாரம் நடக்கும். அந்த நாட்களில் நிறைய வேலை கிடைக்கும் என்பதால் கருப்பன் தவறாமல் கயத்தாறுக்கு வந்து விடுவான். சில நேரங்களில் வயல்களில் வேலை செய்ததில் கிடைத்த ராகியோ, கம்போ இருந்தால் அவற்றை விற்பதற்கு வள்ளியும் அவனுடன் வருவாள். அந்த நாட்களில் அவற்றை விற்றதில் கிடைத்த பணத்தைக் கொண்டு அந்த வாரத்திற்குத் தேவையான சாமான்களை வாங்கிக் கொள்வார்கள். இல்லாவிட்டால் கருப்பன் மட்டும் தனியாக வந்து மூட்டைதூக்கியும், ஓட்டல் கடைகளுக்கு விறகு பிளந்து கொடுத்தும் எட்டணா வரை சம்பாதிப்பான்.

அன்று சந்தை கூடும் நாள் இல்லை. என்றாலும் யாராவது விறகு பிளக்கக் கூப்பிடுவார்கள் என்ற எதிர்பார்ப்பு கருப்பனுக்கு இருந்தது. அவன் கயத்தாறுக்கு வந்து சேர்ந்த நேரத்தில்தான் டீக்கடைகள் ஒவ்வொன்றாகத் திறக்கப்பட்டுக் கொண்டிருந்தன. அவன் ஒவ்வொரு கடையாகச் சென்று ஏதாவது வேலை இருக்கிறதா என்று கேட்டபடியே

கடைவீதி நெடுக நடந்தான். யாருக்கும் வேலைக்கு ஆள் தேவைப்படவே இல்லை. கடைசியில் கயத்தாறிலேயே பெரியதான ஒரு நாய்க்கருக்குச் சொந்தமான டீக்கடைக்கு வந்து சேர்ந்தான். அந்தக் கடையின் முன் கொட்டை எழுத்துக்களில் 'பெருமாள் நாயக்கர் ஓட்டல் மற்றும் டீக்கடை' என்று எழுதப்பட்டிருந்தது. கடையின் முன் தெருவை ஆக்கிரமித்து ஒரு பந்தல் போடப்பட்டிருந்தது. அங்கேதான் அரிசனங்களுக்கும், உள்ளே அனுமதிக்கப்படாத மற்றவர்களுக்கும் உணவு பரிமாறப்படும்.

தாழ்த்தப்பட்ட சாதியினைச் சேர்ந்த பணம் படைத்த வாடிக்கை யாளர்களுக்காக பந்தலின் கீழ் ஒரு அழுக்கடைந்த மரபெஞ்ச் போடப்பட்டிருந்தது. மற்றவர்கள் வெறும் தரையில் உட்கார்ந்து சாப்பிட வேண்டியதுதான். ஓட்டல் சிப்பந்திகள் அந்த மக்களுக்கு நேரடியாக உணவு பரிமாற மாட்டார்கள். கொண்டு வந்து பெஞ்சிலோ, தரையிலோ வைத்துவிட்டுப் போய் விடுவார்கள். தாழ்த்தப்பட்ட மக்கள் தாங்களே எடுத்து தங்களுக்குத் தாங்களே பரிமாறிக் கொள்ள வேண்டியதுதான்.

காவல் நிலையத்துக்கு அருகில் ஒரு பிராமணாள் காப்பிக் கடை இருந்தது. ஆனால் பெருமாள் நாயக்கர் கடைதான் பெரியது. அதற்குத்தான் ஏராளமான வாடிக்கையாளர்கள் இருந்தார்கள். கருப்பன் அங்கே வந்தபோது பந்தலின் கீழ் இருந்த பெஞ்சில் ஒரு ஐம்பது வயது மதிக்கத்தக்க ஆள் உட்கார்ந்து பித்தளை டம்ளரில் காப்பி குடித்துக் கொண்டிருந்தான். உட்கார்ந்திருந்தவன் சுத்தமான வெள்ளை வேட்டியும், பளிச்சிடும் வண்ணங்கள் கொண்ட சட்டையும் அணிந்து அங்கவஸ்திரமும் போட்டிருந்தான். காதுகளில் கற்கள் பதித்த கடுக்கண்கள் ஒளிவீசிக் கொண்டிருந்தன. சட்டைப் பையில் இருந்த தோல் மணிபர்ஸ் உப்பிப் புடைத்திருந்தது.

"என்ன கங்காணி புட்டு கொண்டாரவா?" கடை சிப்பந்தி வெளியே தலையை நீட்டி தெருவின் இரைச்சலுக்கு மேல் கூச்சலிட்டுக் கேட்டான்.

"இப்ப வேண்டா" என்றான் கங்காணி. "கோவில்பட்டிக்கு போயிட்டு இருக்கேன். பஸ் எப்ப வேணுமானாலும் கிளம்பிரும்." "உனக்கு என்னலே வேணும்?" சிப்பந்தி கொஞ்சம் தள்ளி நின்று கொண்டிருந்த கருப்பனைப் பார்த்துக் கேட்டான்.

"சாமி, ஏதாவது வேலை கெடைக்குமா?"

"நாளைக்கு வா, நாளன்னிக்குதான சந்த. அப்பதான் வெறகு பொளக்க வேண்டியிருக்கும்" என்றான் சிப்பந்தி.

“இன்னைக்கே அதைச் செய்யுதேனே சாமி, உங்க அடிமை, அடிமையோட பொஞ்சாதி, அம்ம யாருமே நேத்தேலிருந்து சாப்பிடல. சாமி அந்த வேலய இன்னைக்கே குடுத்தீங்கன்னா, கொஞ்சம் ராயி வாங்கிக்கிடுவேன். கஞ்சி ஊத்தினமாரி இருக்கும்.” கருப்பன் இங்கேயும் மறுக்கப்பட்டு விடுமோ என்ற பயத்தோடு மூச்சுவிடாமல் பேசினான்.

“கட்டை எல்லாம் கொட்டாயில கெடக்குடே. எனக்கு இப்ப நேரமில்லல்லா. சொன்னாக் கேளு, நாளைக்கு வா.”

“சாமி, இன்னைக்கு ஏதாவது வேலைதாங்க” கருப்பன் மன்றாடினான்.

“இன்னைக்கு ஒரு வேலையும் இல்லலே. போ” சிப்பந்தி உள்ளே போய்விட்டான்.

தளர்ந்துபோய் போய் சோர்வுடன் திரும்பிய கருப்பனை கங்காணி என்றழைக்கப்பட்டவன் அழைத்தான். “ஏலே நில்லு”. அவன் அதற்குள் காப்பியை குடித்து முடித்து விட்டிருந்தான்.

கங்காணி காப்பிக்கு பணம் கொடுத்துவிட்டு பந்தலுக்கு வெளியே விட்டிருந்த செருப்புகளைப் போட்டுக் கொண்டு பின்னால வரும்படி கருப்பனிடம் சைகை காட்டிவிட்டு நடக்கத் தொடங்கினான். ஏதாவது வேலை கிடைக்கும் என்ற நம்பிக்கையில் கருப்பன் கங்காணியைத் தொடர்ந்தான். பேருந்து நிறுத்தத்தை அடையும்வரை யாரும் ஒரு வார்த்தையும் பேசவில்லை. அங்கே வந்து சேர்ந்ததும் ஷெட்டில் நிறுத்தப்பட்டிருந்த பேருந்துக்கு அருகே சென்று பக்கத்தில் நின்று கொண்டிருந்த நடத்துனரிடம் பேருந்து எப்போது கோவில் பட்டிக்குக் கிளம்பும் என்று புதியவன் விசாரித்தான்.

“ஏழரைக்கு”

அவன் பெரிய மனித தோரணையோடு சட்டைப் பையிலிருந்து ஒரு கடிகாரத்தை எடுத்துப் பார்த்தான். “அட, இன்னும் ஏழே ஆகல”என்று தனக்குத்தானே முணுமுணுத்துவிட்டு கருப்பனிடம் திரும்பினான். “தம்பி, நீ எங்கிருந்து வார?”

“மயிலோடையிலயிருந்துண்ணே” என்றான் கருப்பன்.

“ஏதோ கவலையில இருக்கிறமாதிரி இருக்கியே,. என்னன்னு சொல்லு.”

இவ்வளவு கண்ணியமான ஒரு மனிதன் தன்னைத் தம்பி என்று விளித்ததில் கருப்பன் மகிழ்ந்து போய், மழை இல்லாததால் வேலையே கிடைப்பதில்லை என்றும், தாங்கள் பட்டினி கிடப்பதையும், ஏதாவது வேலை கிடைக்குமென்ற நம்பிக்கையில்தான் கயத்தாறுக்கு

வந்ததையும் கொட்டித் தீர்த்து விட்டான். அவன் முடிக்கும் வரை கங்காணி குறுக்கிடவே இல்லை.

பின்பு “பொறந்த எடத்துலயே சாவணும்னு நெனைக்கற வனுகளுக்கு இதுதாம்ல தலையெழுத்து. ஆனா...” என்றவன் சற்று இடைவெளி விட்டு விட்டுத் தொடர்ந்தான். “பணம் கொட்டிக் கெடக்கற எடத்தத் தேடிப் போகணும்டே. தைரியம் இருந்தாத்தான் நெனச்சது கெடைக்கும். என்னப் பாருல, சின்ன வயசில நானும் உன்னைமாதிரி கஞ்சிக்கில்லாமத்தான் இருந்தேன். உன்னை விட என்னெலம மோசமாத்தான் இருந்தது. உனக்காவது ஒதுங்கறதுக்கு ஒரு கூரை இருக்கு. ஆனா நான் அப்ப மரத்தடியிலதா படுத்துக் கெடப்பேன். பசிக்கு கஞ்சித் தண்ணியத் தவிர வேற ஒண்ணும் கெடைக்காது. அப்படி ஒரு நாள் ஓய்ஞ்சு போயி ஊருக்கு வெளிய உட்கந்துட்டு இருந்தப்போ ஒரு நாய்க்கரு ஆட்டுக்கெடைய ஓட்டிட்டு வந்தாரு. நெறைய ஆடுக. உன்னை மாதிரியே நானும் எனக்கு ஏதாச்சும் வேலை குடுங்கன்னு அவருகிட்டக் கெஞ்சினேன். அவரு மந்தயப் பாத்துக்குவியாடேன்னு கேட்டாரு. நான் சந்தோசமா ஒத்துகிட்டேன். கொஞ்சம் சோறு தந்து கூட கூட்டிகிட்டு போனாரு. அப்புறம் நான் அவரோட வேலைக்காரன் ஆயிட்டேன். நாய்க்கரு பொஞ்சாதி ஒரு பயங்கரமான பொம்பளை. அவா என்னை வீட்டுக்குப் பக்கத்துலகூட விடமாட்டா. ஆட்டோட ஆடா நானும் பட்டியிலதான் தூங்குவேன். காலைல ஒரு மண்ணு சட்டியில சொஞ்சம் கஞ்சிய ஊத்தி பட்டிக்கு முன்னாடி வச்சிட்டு போயிருவா. அதக் குடிச்சிட்டு ஆடுகளைப் பத்திட்டு போவேன். சாயந்தரம் வந்ததும் இன்னொரு சட்டி கஞ்சி கெடைக்கும். அவ்வளவுதான் சோறு. சில்லற சமாச்சாரத்துக்கெல்லாம் அவா வானத்துக்கும் பூமிக்குமா கெடந்து துள்ளுவா. ஒரு பெரிய கம்பால என்னை அடி வெளுத்துருவா. ஆனா ஏதோ கொஞ்சம் கஞ்சி கெடைச்சதால ஒரு வருசமா அங்கேயே இருந்தேன்.”

“ஒருநாள் ஆடுகள மேய்ச்சிட்டு இருக்கும்போது எங்க ஊர்க்கார ஆளு ஒருத்தரப் பாத்தேன். நா ஊரில இருக்கும்போதே அவரு ஆனமலைல இருக்கிற ஏதோ டீ எஸ்டேட்டுக்கு போயிட்டாரு. இப்பப் பாத்தா அடையாளமே தெரியாம அவ்வளவு பவுசா துணிமணி போட்டுட்டு நிக்காரு. எல்லாத்தையும் எஸ்டேட்டிலதான் சம்பாரிச்சதாவும், கைக்கும் வாய்க்கும் பத்தாம இந்த ஊருல கெடக்கறத உட்டுட்டு எஸ்டேட்டு பக்கம் போனா பணமாக் குவிக்கலாம்னு சொன்னாரு. என்னையும் எஸ்டேட்டுக்கு வாறியான்னாரு. நா ஒடனே ஒத்துகிட்டேன். வழிச்செலவுக்கு அவரே பணம் போட்டு ஆனமலைல அவரு

மேஸ்திரியா* இருந்த எஸ்டேட்டுக்குக் கூட்டிட்டு போனாரு. அவருகிட்ட அஞ்சு வருசம் கூலியா இருந்தேன். எஸ்டேட்டில பெரிய குமாஸ்தாவுக்கு என்னய ரொம்பப் புடிச்சுப்போச்சு. நானும் மேஸ்திரியாயிட்டேன். எங்கிட்ட மொதல்ல பத்து கூலியாளுக இருந்தாங்க. அப்புறம் இருபத்தஞ்சு, அம்பதுன்னு அதிகமாயிட்டே போயி இப்ப நூறு பேரு வேலை பாக்குதாங்க. இப்ப நான் நெனச்சா நாய்க்கரு டீக்கடைய மட்டுமில்ல, நாய்க்கரையே வெலைக்கு வாங்க முடியும்லா."

* கங்காணிகளை ஆனைமலைகளில் மேஸ்திரி என்றழைப்பது வழக்கம். கங்காணியும் மேஸ்திரியும் ஒரே பொருளைத்தான் குறிக்கின்றன.

கருப்பன் திறந்தவாய் மூடாமல் ஆச்சரியத்துடன் கேட்டுக் கொண்டிருந்தான். அன்று காலையில்தான் வைரமுத்துவைப் பார்த்துப் பேச வேண்டும் என்று நினைத்துக் கொண்டதையும், இப்போது ஏதோ சொல்லி வைத்தாற்போல் தன்னைப் போலவே வறுமையிலிருந்து எஸ்டேட்டுக்குப் போய் பணக்காரனாகத் திரும்பி வந்திருக்கும் ஒரு மேஸ்திரி கண்முன் நிற்பதையும் நினைக்கும்போது கருப்பனுக்கு வியப்பாக இருந்தது. இது ஏதோ தெய்வச் செயல் என்ற எண்ணம் மனதில் தோன்ற, எஸ்டேட்டுக்குப் போய்விடுவது என்று அந்தக் கணத்தில் முடிவு செய்தான்.

"அங்க எவ்வளவு வேணும்னாலும் வேலை கெடைக்கும்போது இங்கே கெடந்து ஏண்டே கஷ்டப்படுத. மனசில மட்டும் தைரியமிருந்தா பை நிறைய பணம் பாக்கலாம்டே. எதுக்கு இங்கன கஞ்சிக்கில்லாம பட்டினி கெடக்க?"

"எப்பவும் வேலை கெடைக்குமா? வருசம்பூரா?" கருப்பன் கேட்டான். மேஸ்திரி சிரித்தான்.

"நூறு பேரைக் கூட கூட்டிட்டு போனாலும் அத்தனை பேருக்கும் வேல கெடைக்கும். எல்லா எஸ்டேட்டும் வெள்ளைத் தொரைகளோடது. அவுக எல்லாம் வரம் வாங்கிட்டு வந்தவங்க. இங்கன நாய்க்கருகிட்டயும், தேவமாருகிட்டயும் நெலம் இருக்கு. ஆனா அவுங்க நம்மல என்ன பாடு படுத்தரானுவோ, அவுங்க வீட்டுப் பக்கம் கூட நம்மை விட மாட்டானுவோ. தண்ணித் தாகத்துல நாக்கு வறண்டு செத்தாலும் அவுங்க கெணத்தில இருந்து சொட்டுத் தண்ணி எடுக்க உட மாட்டானுவோ. இத்தனை வருசமா உங்கிட்ட வேலை வாங்குனவங்க இப்ப நீ பட்டினி கெடக்கட்டும்னு விட்டிட்டானுவல்லா. ஆனா வெள்ளைத் தொரைக அப்படி இல்ல. அன்பானவங்கல்லா. அதனால

தான் சாமி அவங்களயும் அவங்க தொழிலையும் நல்லா வெச்சிருக்கு. இங்கபாரு, நாய்க்கமாரும், தேவமாரும் நாயைவிடக் கேவலமா நம்மை நடத்துறானுவ. அதனால சாமிக்குக் கோபம் வந்து மழையே இல்லாமப் போச்சு. ஆனா தொரைக நம்ம மாதிரி மாட்டுக்கறி திங்கறாங்க, நம்ம சாதிக்காரவுகதான அவங்களுக்கு சோறு சமைக்காக. நம்மகூட சமமாப் பழகறாங்க. அவுங்க அப்படி இருக்கிறதால சாமியும் அவுகமேல பாசமா இருக்கு. வருசம் பூரா எஸ்டேட்டில மழை பெய்யுது. நெலம் செழிப்பா இருக்கு. எல்லா நாளும் வேலை கெடக்கு.”

“இங்க உனக்கு ஒடம்புக்கு சுகமில்லன்னா என்ன செய்வ? மைல் கணக்கா நடந்து சர்க்கார் ஆஸ்பத்திரிக்குப் போவே. ஆனா எஸ்டேட்டுல தொரைங்க அங்கேயே வைத்தியர்களை வெச்சிருக்காக. அவுங்க வீட்டுக்கே வந்து வைத்தியம் பார்ப்பாக. மருந்து தருவாக. ரொம்ப முடியாமப் போச்சுன்னா அவுகளே ஆஸ்பத்திரிக்கு தூக்கிட்டுப் போவாக. ஆஸ்பத்திரியில சோறும், மருந்தும் சும்மாவே கெடைக்கும்.”

“இங்கே உடம்பு சொகமில்லாமப் போச்சுன்னா உங்கம்மாவும், பொஞ்சாதியும் பட்டினிதானலே? மலைல எப்படித் தெரியுமா? நீ படுத்தியானா மருந்தும், சாப்பாடும் உனக்கு மட்டுமில்ல குடும்பத்துக்கும் சேர்த்து எஸ்டேட் கடையில இருந்து காசில்லாம அரிசி கெடைக்கும்லா. இங்கன எப்பவும் ராயியும், கம்பும்தான திங்க. எஸ்டேட்டுல வருசம் முழுசும் அரிசியே கெடைக்கும். இந்த ஊரில உனக்கு ஒரு பயலாவது நாலணாவுக்காவது சாமான் கடன் தருவானா? எஸ்டேட்டுல அப்படி இல்ல. துணிமணி, அரிசி எது வேணுமானாலும் கடனுக்குக் கெடைக்கும். வருசக் கடைசியில பணம் குடுத்தாப்போதும்,” கருப்பனின் பிரமிப்பைப் பார்த்து உற்சாகமடைந்த மேஸ்திரி நிறுத்தாமல் தொடர்ந்து பேசிக்கொண்டே போனான்.

“என்னிக்காவது ஆடு, மாடு செத்துப்போனாத்தான உனக்கு இங்கே கறி கெடைக்கும். ஆனா எஸ்டேட்டில ஒவ்வொரு வாரமும் நமக்காகவே நல்லா கொழுத்த மாடுகளையும், பசுக்களையும் வெட்டுதாங்க. எங்கெயோ கண்காணாத எடத்துக்குப் போறம்னு நெனச்சுக்காதலே. அங்கிருக்கிற கூலியாளுகள்ல பாதிபேரு திருநெல்வேலி, மதுர, ராமநாதபுர ஜில்லாக்காரங்கதான். ஒண்ணு ரெண்டு பேரைத் தவிர, எல்லாரும் நம்ம சாதிக் காரங்கதான். கொஞ்சம் மறவருங்களும், மலையா ளம் பேசுற மேல்சாதிக்காரங்களும் கூலியா இருக்கிறாங்க. ஆனா வெள்ளைத் தொரைங்களுக்கு நாமும், அவங்களும் ஒண்ணுதான். நம்பேறன்னா நம்பு. இல்லாட்டிப்போ. என்கேங்கில கூட மேல் சாதிகாரங்க கொஞ்சம் பேரு இருக்குதாங்க. நான் நம்ம

சாதிக்காரங்களை எப்படி நடத்துறேனோ, அப்படித்தான் அவங்களையும் நடத்துதேன். அவங்களும் நம்மோட ஒரே பாடியிலதான் குடியிருக்கணும் ஒரே தண்ணித்தான் குடிக்கணும்.”

“பாடின்னா என்னண்ணே?” கருப்பன் முதன்முதலாக வாயைத் திறந்தான்.

“பாடின்னா வரிசையா வீடுக இருக்கும். அதை எஸ்டேட்லலைன்னு சொல்லுவாக. ஒவ்வொரு குடும்பத்துக்கும் படுத்துகிறதுக்கு ஒரு அறையும், சமைக்கறதுக்கு ஒரு அறையும் குடுப்பாக. ஒரு லைன்ல அஞ்சு வீடு இருக்கும். சில சமயம் ஆறு ஏழு கூட இருக்கும். அதனால எஸ்டேட்டும் நம்ம ஊரு மாதிரி தான்லே. எங்கயோ வந்திட்ட மாதிரியோ, தனியா இருக்குறமாதிரியோ இருக்கவே இருக்காது. நெறைய காசு கெடைக்கும். நல்ல சோறு கெடைக்கும். சின்னச்சின்ன வேலைதான் செய்ய வேண்டி யிருக்கும். சந்தோஷமா இருக்கலாம்.”

“எஸ்டேட்டுக எல்லாம் காட்டுக்கு நடுவில இருக்கும்னும், அங்கிருக்கிறது ரொம்ப கஷ்டம்னும் சொல்லுதாங்களேண்ணே?”

“அதெல்லாம் முட்டாப்பயக பேச்சு. ஒரு காலத்தில நெசமாவே காடாத்தான் இருந்திச்சு. ஆனா இப்ப ஒவ்வொரு எஸ்டேட்டும், நம்ம ஊரு பத்துப் பதினஞ்சை ஒண்ணா சேத்தா எவ்வளவு பெருசா இருக்குமோ அவ்வளவு பெருசா இருக்கும். சோம்பேறிப் பயல்களுக்கு எங்கயிருந்தாலும் கஷ்டம்தான். ஆனா வேல செய்யணும், காசு சேக்கணும்னு நெனக்கிறவனுக்கு அங்கே எவ்வளவு நல்லாயிருக்கும்னு தெரியுமாடே. நீ இங்க பொழைக்கிற நாய்ப் பொழப்புக்கு அது எவ்வளவோ நல்லாயிருக்கும்லா!”

“ரொம்பக் குளிரா இருக்குமா?”

“இங்கத்த விட குளுராத்தான் இருக்கும். ஆனா குளிர்காத்து அடிச்சு எஸ்டேட்டுல ஒருத்தனும் சாவறதில்ல. நம்ம ஊர் மாதிரிதான் அங்கேயும் புள்ளைங்க எஸ்டேட்டை சுத்தி அம்மணமா ஓடி வெளையாடிட்டு இருக்கும். அதுகெல்லாம் குளுருல செத்தாப் போச்சு?”

“சரிதாண்ணே. எனக்கும் எஸ்டேட்டுக்கு வரணும்னு ஆசயாத்தான் இருக்கு. ஆனா போகவர செலவுக்கு எங்கிட்ட காசே இல்லையே...” கருப்பன் இழுத்தான். அவன் முகத்தில் ஒரே நேரத்தில் வருத்தமும், மேஸ்திரி இதற்கும் ஏதாவது வழி சொல்லுவான் என்ற ஆசையும் ஒருங்கே தெரிந்தன.

“அதப்பத்தி நீ ஏன்டே கவலைப்படுத. தொரைமாருங்க

தங்கமானவங்கல்லா. எஸ்டேட் போறதுக்கான எல்லா செலவுகளையும் அவங்களே பாத்துக்குவாங்க. நா இப்ப லீவுல வீட்டுக்கு வந்திருக்கேன். எஸ்டேட்டுக்கு போகணும்னு ஆசை இருந்தா நா திரும்பிப் போகும்போது எங்கூட வா. அங்க போயிட்டா வருஷத்துக்கு ஒரு தடவை எல்லாரும் ஊருக்கு வரலாம். ஒரு மாசமோ, ரெண்டு மாசமோ இருந் துட்டு எஸ்டேட்டுக்குத் திரும்பப் போகலாம். நா வந்து ஒரு மாசத்துக்கு மேலாச்சு. அடுத்தவாரம் கௌம்புதேன். எங்கஊரு, பக்கத்து ஊரில இருந்து எக்கச்சக்கமான பேரு பொண்டு, புள்ளைகளோட எங்கூட எஸ்டேட்டுக்கு வாராக. அதுல நெறைய பேரு மொதத் தடவையா வாரவுகதான். எல்லாரும் ஒண்ணாத்தாம்ல போவோம். ஏதோ கல்யாணத்துக்குப் போறமாதிரி இருக்குமில்லா. நீயும் வந்தா செலவெல்லாம் நானே பாத்துக்குதேன். எம்பேரு சங்கரபாண்டியன் மேஸ்திரி. எங்க ஊரில வேணும்னா என்னப்பத்தி கேட்டுப்பாத்துக்கோ.”

“எனக்கென்னவோ ஆசையாத்தான் இருக்குதுண்ணே. ஆனாப் பொஞ்சாதியையும், அம்மையையும் என்ன பண்றதுண்ணே வெளங்கலையே.”

“பொஞ்சாதியையும் கூடக் கூட்டிட்டுவா” மேஸ்திரி தொடர்ந்தான். எஸ்டேட்டுல தேயிலச் செடியில கொளுந்து கிள்ளுறது தான் முக்கியமான வேலை. அதைப் பொம்பளைங்கதான் செய்வாங்க.அது வெளையாட்டு மாதிரி. பத்து வயசுப் புள்ளைங்ககூட நல்லா இலை புடுங்க முடியும். ஆம்பளைங்கள விட கொளுந்து கிள்ளுற பொண்ணுகளுக்குத்தான் நல்ல காசு. எஸ்டேட்டைப் பொறுத்தவரைக்கும் தனியா வாரவங்களவிட, பொண்டு, புள்ளைங்களோட இருக்கிறவுகதான் அவங்களுக்கு வேணும். எங்கேங்கில இருக்கிற எல்லாருமே அப்படித்தான் வாராங்க. அதனால உம்பொஞ்சாதிக்குத் துணையா நெறையப் பொம்பளைங்க இருப்பாங்க. ரெண்டு பேரும் வேலை செஞ்சா நல்லாக் காசு பாக்கலாம்லா. பொதுவா கிழடு கட்டைகளுக்கு வீட்டை விட்டு வாரதுக்குப் புடிக்காது. அதனால, அம்மைய யாராவது ஒறவுக்காரங்க வீட்டுல விட்டுரு. அது இங்க இஷ்டம் போல இருக்கட்டுமே”

“எம் பொஞ்சாதிக்கு எலை புடுங்குறது ஒண்ணும் தெரியாதேண்ணே.”

“ஒரு செடியிலிருந்து எலையப் புடுங்கிறதுக்குப் பெருசாப் பழகணுமோ? நேத்து நடக்கப் பழகுன கொழந்தகூட புடுங்கிடும்னு சொல்றேன்லா. நெறைய பொம்பளைங்க உம்பொஞ்சாதி மாதிரிதான் மொதத்

தடவையா எங்கூட வாராக. கூட்டம் கூட்டமா முப்பது நாப்பது பொம்பளைப் புள்ளைங்க ஒண்ணா சேந்துதான் தேயிலைச் செடியிலிருந்து கொளுந்து கிள்ளுவாங்க. அதனால நீ பயப்படுறதுக்கு ஒண்ணுமே இல்லடே."

"நா வள்ளிகிட்ட சொல்லிப் பாக்கேன். அம்மை தனியா இருக்குமான்னு தெரியல. ஒரணா, ரெண்டணா கூட இல்லாம இருக்கும்போது யாரு மனசு வந்து அதப் பாத்துக்குவாங்க?" போக வேண்டும் என்று முடிவு செய்துவிட்ட பிறகு அதற்கு முன்பு தான் சந்திக்க வேண்டிய பிரச்சினைகளை நினைத்துப் பார்க்கும்போது கருப்பனுக்குக் கொஞ்சம் பயம் வந்தது.

"இத பாருல. பொஞ்சாதியக் கூட்டிட்டு எஸ்டேட்டுக்கு வாரேன்னு சொல்லு. நா உன்ன இங்கிருக்கிற ஏஜெண்டுகிட்ட கூட்டிட்டு போறேன். எஸ்டேட் வேலைக்காரங்களோட நல்லது கெட்டதைப் பாத்துக்கிட வெள்ளைத் தொரைங்க எல்லா முக்கியமான எடங்கள்லயும் ஏஜெண்டுகள வெச்சிருக்காக. மொத மொதலா எஸ்டேட்டுக்கு வரும்போது இங்கிருக்கிற கணக்கு வழக்கெல்லாம் முடிச்சிட்டு வாரதுக்கு ஏஜெண்டு எப்பவும் தலைக்குப் பத்துரூவா தருவான். ஆனா நா ஏஜெண்டுகிட்டப் பேசி உனக்கும் உம் பொஞ்சாதிக்கும் நாப்பது ரூவா வாங்கித் தாரேன். ரெண்டு பேரும் துணிமணி வாங்கிக்கங்க. மீதியை அம்மைக்குக் கொடுத்திடலாம். எஸ்டேட்டில ஒரு மாசம் வேலை செஞ்சா கை நெறையப் பணம் இருக்கும்லா. எப்பெல்லாம் அம்மைக்கு வேணுமோ அப்பெல்லாம் பணம் அனுப்பிவை. இங்க பட்டினி கெடந்து சாகக் கூடாதுன்னு முடிவு பண்ணுலே மொதல்ல. மத்ததெல்லாம் ஒண்ணுமே இல்ல."

"அப்போ அக்காகிட்ட அம்மையைப் பாத்துக்கிட சொல்லிருவேன். ஆனா பொஞ்சாதிக்கு அந்த எடம் ஒத்து வரலன்னா...?"

"நம்ம ஊருக்காரங்க, நம்ம ஆளுங்க ஆயிரக்கணக்கான பேரு எஸ்டேட்டுல வேலை செய்யுதாங்க. அவங்க அத்தன பேருக்கும் அந்த எடம் ஒத்து வருதுன்னா உனக்கும், உம்பொஞ்சாதிக்கும் கண்டிப்பா ஒத்து வரும். ஆனா நீ ஒண்ணும் பயப்பட வேண்டியதில்லடே. அப்படியே ஒரு வேள உம்பொஞ்சாதிக்குப் புடிக்காமப் போச்சுன்னா வெள்ளைத் தொரைங்க உங்கள திருப்பி அனுப்பிருவாங்க. இங்கிருக்கிற தேவமாரு, நாய்க்கமாரு மாதிரி இல்ல. அவங்க தங்கமானவங்க."

"உங்களப் பாத்தா எங்கய்யா மாதிரி இருக்குண்ணே. உங்க பேச்ச நம்பி

வாரேன். ஆனா இங்க கொஞ்சம் சோலியெல்லாம் இருக்கு. அதுகள முடிச்சுட்டு வாரேன். எம் பொஞ்சாதி எங்கக்கா மக. அம்மைய அக்கா பாத்துக்கும். அதுவும் பணம் குடுத்துட்டா யாருக்கும் ஒரு சிரமமும் இல்ல. இப்ப எனக்கு உடனே காசு வேணும். அதுக்கு வழி சொல்லுங்கண்ணே"

"நாளைக்கு வெடியால திரும்பவும் கயத்தாறு வருவேன். அந்த நாய்க்கர் கடைக்கு வந்திருடே. எல்லா ஏற்பாடும் நாளைக்குப் பண்ணிடுதேன்."

"சரிண்ணே! நாளைக்கு வெடியால வந்துருதேன்."

மேஸ்திரி சிரித்துக் கொண்டே கருப்பனின் தோளை லேசாகத் தட்டிக் கொடுத்தான். "ஏலே இந்தா ஒரு ரூபா. வீட்டுக்கு வேணுங்கறத வாங்கிட்டுப் போ. நாளைக்கு மறக்காம வந்துரு என்ன?"

கருப்பன் உணர்ச்சிப் பெருக்குடன் மேஸ்திரியின் கால்களைப் பிடித்துக் கொண்டான். அவன் கண்களிலிருந்து கண்ணீர் அருவி போலக் கொட்டியது.

"எங்க பொழப்பே உங்க கைலதான்யா இருக்கு. பெத்தபுள்ள மாதிரி நெனச்சுக்குங்கைய்யா. உங்கள சாமி கைவிடாது."

பேருந்து கிளம்பியது. கருப்பன் சங்கரபாண்டியனுக்குக் கையசைத்து விடையளித்தான்.

# 3

தூரம் காட்சிக்கு இனிமை சேர்க்கிறது

தி பிளஷர்ஸ் ஆப் ஹோப்
- டி.கேம்பெல்

கருப்பன் பக்கத்திலிருந்த மளிகைக் கடைக்குச் சென்று இரண்டு படி அரிசியும் கொஞ்சம் ராகியும் சாமான்களும் வாங்கித் துண்டில் மூட்டை கட்டித் தோளில் போட்டுக் கொண்டு ஊரை நோக்கி உற்சாகமாக நடக்கத் தொடங்கினான். மனதிலிருந்த பாரமெல்லாம் காணாமல் போய் லேசாகி விட்டிருந்தது.

வீட்டு வாசலில் உட்கார்ந்திருந்த முத்தாத்தாள் கருப்பன் மூட்டையுடன் வருவதைத் தொலைவிலேயே பார்த்துவிட்டாள். “வள்ளி ஒன் வீட்டுக்காரன் வந்துட்டான்” எனறு உள்ளே நோக்கிக் குரல் கொடுத்தாள்.

நாலே எட்டில் பாய்ந்து வாசலுக்கு வந்துவிட்ட கருப்பன் “ஒரு வழியா நமக்கு விடிவு வந்துருச்சும்மா” என்று ஏறக்குறைய கூச்சலிட்டான்.

“என்ன என்ன?” வள்ளியும் முத்தாத்தாளும் ஒரே குரலில் எல்லையற்ற ஆர்வத்துடன் கேட்டனர்.

கருப்பன் மூட்டையை வள்ளியிடம் நீட்டினான். “இதுல அரிசியிருக்கு. மொதல்ல சோறு பொங்கு. பொறவு சொல்லுதேன்.” மூட்டையை அவிழ்த்த வள்ளி கடந்த ஒரு மாதகாலமாக நினைத்தே பார்க்க முடியாதவையாகி விட்டிருந்த அரிசி, ராகி, வெல்லம், மிளகாய்களைப் பார்த்து பிரமித்து நின்றாள்.

அடுப்பு மூட்டப்பட்டதும் கருப்பன் தான் சங்கரபாண்டியனை சந்தித்ததையும் எஸ்டேட்டுகளைப் பற்றி அவனிடமிருந்து தான் தெரிந்து கொண்டவற்றையும் தான் அங்கு செல்ல முடிவு செய்திருப்பதையும் விளக்கமாகச் சொன்னான்.

“நீயில்லாம நாங்க மட்டும் இங்க இருந்து என்ன மாமா செய்யறது?” வள்ளி கவலையுடன் கேட்டாள்.

“அம்மைய உங்க வீட்டுல உட்டுட்டு ஒன்னையும் கூட கூட்டிட்டு போலாம்னு நெனைக்கேன். மேஸ்திரி நமக்கு நாப்பது ரூவா வாங்கித் தாறேன்னு சொல்லியிருக்குதாரு. உங்கம்மைகிட்ட இருபது ரூவா

குடுத்துடலாம். எஸ்டேட்டுல போய் காசு சம்பாதிக்கத் தொடங்குன பின்னாடி இன்னும் காசு வேணும்னா அனுப்பலாம்லா?” என்றான் கருப்பன்.

“இன்னைக்கு வரைக்கும் நா ஊர விட்டு வெளியே போனதே இல்லையே. தனியா அவ்வளவு தூரம் போறத நெனச்சாலே பயமாயிருக்கு மாமா. கண்காணாத எடம். என்ன ஏதுன்னே தெரியாது. அங்கபோனப் பொறவு ஒத்து வரலன்னா என்ன செய்யறது?” கருப்பன் சொல்வதெல்லாம் உண்மை என்று இன்னும் வள்ளியால் நம்பவே முடியவில்லை.

“நம்ம சாதிக்காரக ஆயிரக்கணக்கான பேர், எல்லாம் இந்த ஜில்லாக்காரங்கதான், எஸ்டேட்டுல வேல செய்யுதாகளாம்.” கருப்பன் அவசரமாகச் சொன்னான். வள்ளியின் தயக்கம் மறுப்பாக மாறுவதற்கு முன்பு எல்லாவற்றையும் சொல்லிவிட வேண்டுமென்ற பரபரப்பு அவனைத் தொற்றிக் கொண்டது.

“மத்தவங்களுக்கு எஸ்டேட்டுக்கு ஒத்துப் போச்சுன்னா நமக்கும் ஒத்துப் போகும்தான வள்ளி! அப்புறம் வருசத்துக்கு ஒரு தடவ இங்க வந்து ஒரு மாசம் இருக்கலாமாம். அப்புறம் போகணும்னு ஆசப்பட்டாப் போனாப் போதுமாம். இங்க பட்டினி கெடந்து சாகறதுக்கு பதுலா அங்க போயி வேல செஞ்சாத்தான் என்ன? எடம் புடிக்கலன்னா திரும்ப வந்த பொறவு இங்கயே இருந்துட்டாப் போச்சு. வைரமுத்தைப் பாரு, அவனும் நம்ம மாதிரி இருந்தவன்தான். இப்ப அவங்கிட்ட இருக்குற பணமெல்லா எஸ்டேட்டுல போயி சம்பாதிச்சதுதான. கொஞ்சம் மனசு வெச்சாப் போதும் வள்ளி, சோறில்லாமக் கெடக்க வேண்டியதில்ல. நாமளும் வைரமுத்து மாதிரி ஆயிடலாம்.” என்று கூறிவிட்டு கருப்பன் வள்ளியின் முகத்தை ஆர்வத்துடன் பார்த்தான். பட்டினியையும் வைரமுத்துவையும் பற்றித்தான் குறிப்பிட்டது கட்டாயம் அவள் மனதை மாற்றியிருக்கும் என்று தோன்றியது.

ஆனால் வள்ளியின் முகத்தில் தெரிந்த குழப்பமும் நம்பிக்கையின்மையும் மாறவேயில்லை. சொந்த ஊரைவிட்டுப் போவதற்கு அவள் தயங்குவது வெளிப்படையாகத் தெரிந்தது.

“மலைல இருக்குற தண்ணி ரொம்ப மோசம், அத யார் குடிச்சாலும் குளிர்காச்சல் வந்திடும்னு சொல்லுதாங்களே மாமா? நமக்கும் தண்ணி சேராம எப்பப் பாத்தாலும் காச்ச வந்துட்டிருந்தா என்ன பண்றது? ஒச்சாசைக்கு யாரிருக்காங்க?”

“மலைல இருக்கறவங்கள்ள முக்காவாசிப்பேரு நம்மூருக்காரங்கதான்னு சொல்லுதன்ல. நமக்கு மட்டும் எப்படி தண்ணி சேராமப் போகும்? அப்புறம் எடம் புடிக்கலன்னா இடையிலேயேகூட திரும்பி வந்துரலாமாமா.

* கெட்ட தண்ணீரைக் குடிப்பதால் மலேரியா வருகிறது என்று மக்கள் அந்தக் காலத்தில் நம்பியிருந்தனர். ஆசிரியர். வெள்ளைக்காரங்க தங்கமானவங்களாமா அவங்க செலவுலயே நம்மளத் திருப்பி அனுப்பிருவாங்களாமா. மேஸ்திரி சொல்லுதாரு.”

“எதுக்கு காசு குடுத்து மலைக்குக் கூட்டிட்டுப் போவணும். அப்புறம் நமக்குப் புடிக்கலன்னா ஏன் அவங்க காசுலேயே திருப்பி அனுப்பனும்? ஒண்ணுமே புரியலயே?” வள்ளி தந்திரமாகப் பேசினாள்.

“என்னம்மா பேசாம இருக்க, நீ என்ன சொல்லுத?” வள்ளிக்கு நேரடியாகப் பதில் சொல்ல முடியாமல் கருப்பன் அம்மாவைத் துணைக்கழைத்தான்.

“எனக்கு ஒண்ணுமே தோணமாட்டேங்கேப்பா. நீ சொல்ற எடத்தப் பத்தி எனக்கு எதுவுமே தெரியாதுல்லா. மொதல்ல வள்ளியோட அய்யாட்ட கேட்டுக்க. அவுரு ஒத்துக்கிட்டா வைரமுத்து மேஸ்திரிகிட்ட போ. நீ பாத்தவன் யாரோ எவனோ அவஞ் சொல்லுறத மட்டும் கேட்டுட்டு கண்காணாத எடத்துக்குப் போறது சரியில்லல்லா?” என்றாள் முத்தாத்தாள்.

“பாட்டி சொல்லுறதுதான் சரி” வள்ளி உடனே அதை ஏற்றுக் கொண்டாள்.

உணவு தயாரானதும் ஆளுக்கொரு மண்சட்டியோடு சாப்பிட அமர்ந்தனர். பரிமாறிய வள்ளி அவர்கள் சாப்பிடத் தொடங்கியதும் தானும் போட்டுக் கொண்டு உட்கார்ந்தாள். சொல்லப்போனால் ஒரு மாதமாக அரைப்பட்டினி முக்கால் பட்டினியில் காலம் தள்ளி வந்தவர்களுக்கு அரிசிச் சோறும் அதன் மணமும் வித்தியாசமாகத் தோன்றியது. பானையை சுத்தமாக வழித்து விரல்களை நாவால் நக்கிவிட்டு எழும்வரை ஒருவரும் ஒரு சொல்லும் பேசவில்லை.

கைகழுவிவிட்டு குடிசைக்கு வெளியே வந்து சாவகாசமாக உட்கார்ந்து கருப்பன் கையோடு வாங்கி வந்திருந்த வெற்றிலையை மெல்லத் தொடங்கினார்கள். வயிறு நிறைந்த திருப்தியில் முத்தாத்தாள் தாங்கள் அனைவரும் கருப்பனின் அப்பாவோடு சேர்ந்து மகிழ்ந்திருந்த இனிமையான காலங்களைப் பற்றிப் பேசத் தொடங்கினாள். கொஞ்ச

நேரத்தில் அவளையறியாமலேயே பேச்சு நிகழ் காலத்துக்குத் திரும்பியது.

“உங்கப்பா ஒருத்தரு சம்பாதிச்சத வெச்சே அப்பெல்லாம் நம்மால நல்ல படியா இருக்க முடிஞ்சது. நீ வேலதேடி கண்காணாத மலைக்குப் போக வேண்டியிருக்கும்னு அப்ப யாராவது நெனச்சுப் பார்த்துருப்பமா? போன காலம் இனி திரும்பி வருமா என்ன?” முத்தாத்தாள் பெருமூச்சு விட்டாள்.

“ஏவ்வ்வ்” கருப்பன் நீளமாக ஏப்பம் விட்டான். “வயிறு நெறஞ்சு போய் சந்தோசமா இருக்கு. இப்ப போய் வைரமுத்து மேஸ்திரிய பாத்துட்டு வந்து வள்ளியக் கூட்டிட்டு அவங்கப்பாட்ட போறன்” என்று சொல்லிவிட்டு வெளியில் சென்றான்.

ஒரு மணிநேரம் கழித்து அவன் திரும்பியபோது முத்தாத்தாள் குறட்டை விட்டுத் தூக்கிக் கொண்டிருந்தாள். தாய்வீடு செல்லத் தலைவாரிக் கொண்டிருந்த வள்ளி அவனைப் பார்த்ததும் “மேஸ்திரி என்ன சொன்னாரு?” என்று கேட்டாள்.

“குளுர மட்டும் தாங்கிட்டாப் போதுமாம். நல்லாச் சம்பாதிக்கலாம்னு சொன்னான். உங்கப்பா என்ன சொல்லுதாருன்னும் கேட்டுக்கலாம். சங்கரபாண்டியன் மேஸ்திரி நாளைக்கு வரச்சொல்லியிருக்குதாரு. அதனால இன்னிக்குள்ள முடிவு செஞ்சாகணும்” கருப்பன் வள்ளியை அவசரப்படுத்தினான்.அவர்கள் முத்தம்மாளின் தூக்கத்தைக் கலைக்காமல் படலைச் சாத்திவிட்டு மூன்று பர்லாங் தொலைவிலிருந்த வள்ளியின் அப்பா மகாலிங்கத்தின் வீட்டுக்குச் சென்றார்கள். வீட்டுக்கு வெளியே வள்ளியின் அம்மா தனது இரண்டு மாதக் குழந்தையை கால்களில் கிடத்தி எண்ணெய் தேய்த்துக் கொண்டிருந்தாள்.

“அம்மா” வள்ளி ஏறக்குறையக் கூச்சலிட்டாள். “அப்பா எங்க? முக்கியமா ஒண்ணு கேக்கணும்.”

“நாய்க்கரு வீட்டிலிருந்து இப்பத்தான் வந்து சாப்பிட்டுட்டு இருக்காவ.”

மகாலிங்கம், வடிவேல் நாயக்கர் என்ற பெரிய பண்ணையாரிடம் எடுபிடி வேலை பார்த்து வந்தார். நாய்க்கரின் நிலங்களில் வேலை செய்ததோடு அவரது ஆடுமாடுகளையும் மகாலிங்கம்தான் கவனித்து வந்தார். தினக்கூலிக்கு பதிலாக ஒவ்வொரு மாதமும் ஐந்து ரூபாய் சம்பளம் கொடுக்கப்பட்டு வந்தது. அதோடு அறுவடை காலத்தில் ராகி அல்லது ஏதாவது தானியம் கொடுக்கப்படும். அது அவர்களுக்கு அடுத்த அறுவடைவரை போதுமானதாக இருக்கும். தீபாவளி நேரத்தில்

துணிமணிகளும் கிடைக்கும். எனவே மகாலிங்கம் குடும்பத்தினர் பணத்தில் புரளவில்லை என்றாலும் ஒருபோதும் பட்டினியும் கிடக்கவில்லை. மகளின் குரல் கேட்டு மகாலிங்கம் கையைத் துடைத்துக் கொண்டே வெளியே வந்தார். எடுத்த எடுப்பிலேயே வள்ளி, “அப்பா, ஆனமலை டீ எஸ்டேட்டுக்கு வேலைக்குப் போலாமா, வேண்டாமான்னு உங்கிட்ட கேக்க வந்திருக்கோம்” என்றாள்.

இதைச் சற்றும் எதிர்பாராத மகாலிங்கம் திகைத்துப் போய் ஒரு விநாடி பேச்சற்று நின்றுவிட்டார். “இந்த மாதிரி சங்கதியெல்லாம் யாரு ஓந்தலையில ஏத்துனது?”

“நாந்தான்”. கருப்பனின் குரலில் லேசான தயக்கம் இருந்தது. “எனக்கு இங்கே வேலயே கெடைக்க மாட்டேங்கு. எப்பவாவது கொஞ்சம் மழை பெஞ்சாத்தான் ஏதோ அரைவயித்துக்குக் கெடைக்கு. ஒரு மாசமா பட்டினிதான் கெடக்கோம். இன்னிக்கு விடியால ஏதாச்சும் வேல கெடைக்குமான்னு பாக்க கயத்தாறுக்கு போனப்ப, ஆனமலை டீ எஸ்டேட்டுல வேல பாக்குத ஒரு மேஸ்திரியப் பாத்தேன்” என்றவன் தங்களுக்கிடையே நடந்த உரையாடலை விளக்கிவிட்டு “நீங்க ஒத்துக்கிட்டா வள்ளியக் கூட்டிட்டு மலைக்குப் போலாம்னு பாக்கேன். எங்க ஊரு வைரமுத்து மேஸ்திரியும் அந்த மேஸ்திரி சொன்னதையே தான் சொல்லுதான். அம்மையும் சரின்னு தோணிச்சுன்னா செய்யின்னு சொல்லிருச்சு. அதனால நீங்க என்ன சொல்லுதீங்கன்னு கேக்கலாம்னு வந்தோம்” என்றான்.

“அம்ம என்ன செய்யும்?”

“நீங்கதான் பாத்துகிடணும்னு நெனைக்கேன். இப்போதைக்கு இருபது ரூவா குடுத்துட்டு போறேன். மலைக்குப் போய் காசு வரத் தொடங்கிட்டா வேணுங்கும்போது பணம் அனுப்புதோம் மாமா.”

“அம்மையை நாங்க பாத்துக்குதோம்” இவ்வளவு நேரம் மௌனமாக நின்று கொண்டிருந்த மகாலிங்கத்தின் மனைவி சொன்னாள்.

“நீ என்ன சொல்லுதே வள்ளி?” மகாலிங்கத்தால் இன்னும் ஒரு முடிவுக்கு வர முடியவில்லை.

“உங்களையெல்லாம் விட்டுட்டு கண்காணாத இடத்துக்கு போறதுக்கு பயமா இருக்குப்பா. இங்கேன்னா வேலையே கெடைக்க மாட்டேங்கு.. என்ன பண்றதுன்னே தெரியல.”

“வைரமுத்து மேஸ்திரி போலாம்னு சொல்லுதானா?” “குளிரப் பொறுத்திட்டு பத்து வருசம் வேலை செஞ்சா அவனை மாதிரி

கைநிறைய சம்பாதிச்சுடலாம்னு சொல்லுதான்.”

“பத்து வருசமா? அங்கேயே இருக்கணும்ன்னா சொல்லுதே?” மகாலிங்கத்தின் குரலில் கவலை நிரம்பியிருந்தது.

“அப்படியொண்ணும் இல்ல மாமா. ஒரு வருசம் கழிச்சு திருப்பி வந்துடலாமாமா. அப்புறம் நாம போகணும்னா போகலாம். இல்லாட்டி வேண்டாம்” சங்கரபாண்டியனிடம் படித்த பாடத்தை அப்படியே ஒப்பித்தான் கருப்பன்.

“நீ போயே ஆகணும்னு நெனக்கியா?”

“ஆமாம்”

“நீ...?” மகாலிங்கம் வள்ளியைப் பார்த்தார்.

“எனக்கு ஒண்ணும் தோணமாட்டேங்குப்பா. அது கங்காணாத எடம். ஒறவுக்காரங்க, தெரிஞ்சவுக ஒரு ஆளு கூட இல்ல. ஆனா இங்கன சோறு பொங்கறதுக்கே வழியில்லாம எவ்வளவு நாளு இப்படி இருக்க முடியும்?”

“ரெண்டு பக்கமும் பேசாத வள்ளி. ஏதாவது ஒண்ணு சொல்லு”கருப்பன் வற்புறுத்தினான்.

எந்த முடிவும் எடுக்க முடியாமல் திணறிப் போன வள்ளி “அம்மா நீ சொல்லு” என்று அம்மாவை உதவிக்கழைத்தாள்.

“நா மலைக்குப் போனதே இல்ல மவளே. ஒன்னும் தோணமாட்டேங்குதே!”

மகாலிங்கத்துக்கு எரிச்சல் வந்தது. “மொதல்ல இந்த மாதிரி ரெண்டுங்கெட்டானாப் பேசறத நிப்பாட்டுங்க. இங்ஙன பட்டினி கெடந்து சாகறத விட மலைக்குப் போறதுன்னு கருப்பன் முடிவு பண்ணிட்டான். முருகன் துணையிருப்பான்.”

“நச் நச் நச் நச்” ஏதோ ஒரு மூலையிலிருந்து பல்லி ஒலி எழுப்பியது.

“கெவுளி சொல்லிடுச்சு நல்ல காலம் வருது நீ போலாம் மவளே. மலையில யோகம் வரும். நா இப்ப நம்புதேன்” தன்னால் தீர்க்க முடியாத பிரச்சினையை பல்லி தீர்த்து விட்டதால் ஏற்பட்ட நிம்மதியோடு வள்ளியின் அம்மா சொன்னாள்.

எனவே அடுத்தநாள் கயத்தாறுக்குச் சென்று சங்கரபாண்டியன் மேஸ்திரியை சந்தித்து எஸ்டேட்டுக்கு வருவதாகச் சொல்லிவிடுவது என்று ஒருமனதாக முடிவு செய்யப்பட்டது.

வள்ளியும், கருப்பனும் திரும்பி வந்தபோதும் முத்தாத்தாள் தூங்கிக் கொண்டுதானிருந்தாள். "பசியினால ஒரு வாராமத் தூங்கவேயில்ல. வயிறு நெறைஞ்சிட்டு. எல்லாத்துக்கும் சேத்துவச்சு தூங்குது. தூங்கட்டும்; எழுப்ப வேண்டாம்."

ஆனால் முத்தாத்தாள் சத்தம் கேட்டு எழுந்துவிட்டாள். "ஐயோ முருகா" என்று முனகியவள் "கொஞ்சம் தூக்கிவிடு" என்று தன் வீங்கிப்போன கால்களை சுட்டிக் காட்டினாள்."நல்லாத் தூங்கிப்போயிட்டேன். வைரமுத்து மேஸ்திரியப் பாத்தீகளா? வள்ளியோட அப்பாவை...?"

"ரெண்டு பேரையும் பாத்தாச்சு"

"பொறவு?"

"போறதுன்னு முடிவு பண்ணிட்டோம்மா" என்றான் கருப்பன். முத்தாத்தாள் பதில் பேசவில்லை. அவள் முகத்தில் ஏமாற்றத்தின் நிழல் படர்ந்தது. அதைக் கவனித்த கருப்பன் பக்கத்தில் உட்கார்ந்து சமாதானப்படுத்தத் தொடங்கினான். "மலைக்குப் போறதுதான் எல்லாத்துக்கும் நல்லதும்மா. அக்காவும், மச்சானும் உன்னை நல்லபடியா பாத்துக்கு வாங்க. இப்ப இருபது ரூவா குடுத்திட்டு போறேன். போன பொறவு இன்னும் நெறைய பணம் கெடைக்கும் நீயே பாரு. சோறில்லாம எப்படி மெலிஞ்சு போயிட்டே. நிக்க முடியல நடக்க முடியல. அங்க போயிட்டா சோறு வேணுங்கிற அளவுக்கு கெடைக்குமில்லா, நா அங்க போயிட்டு திரும்பி வரும்போது நீ பத்து வயசு கம்மியான மாதிரி இருப்பே பாரு."

"அது சரி மக்கா. எங்கெயாவது போயி நாலு காசு சம்பாரிக்கத் தானே வேணும். எனக்கென்ன எம்புள்ள பாத்துக்குவா. ஆனா கண்ணாலம் ஆனதிலிருந்து குடியிருந்திட்டு இருக்கிற இந்தக் குடிசைய விட்டுட்டு போகத்தான் மனசு கேக்கல."

"வரும்போது நெறைய காசோட வருவோமில்லமா. குடிசைக்கு ஓடு போட்டிடலாம். ரெண்டு மூணு வருசத்தில ரெண்டு மாடும் ஒரு பசுவும் வாங்கிடலாம். அதப் பாத்துக்கவே உனக்கு பொழுது செரியா இருக்கும். எங்க நெனப்பே வராது."

வள்ளி இரவு உணவு சமைக்கத் தொடங்கினாள். அதுதான் எப்போதும் மறுநாள் காலைக்கும். கருப்பனும் அம்மாவும் வெளியே சென்று சாவகாசமாக உட்கார்ந்து கொண்டிருந்தார்கள். பொழுது சாயத் தொடங்கி விட்டிருந்தாலும்கூட பெரும்பாலான குடிசைகள் மூடப்பட்டே இருந்தன. ஆள் நடமாட்டமே இல்லை. பழைய காலத்தை

நினைவு கூர்ந்தும், எதிர்காலம் குறித்தும் தங்களை மறந்து பேசிக் கொண்டிருந்தவர்கள் வீடடுக்கு முன்னால் வந்து நின்ற கோடங்கியை முதலில் கவனிக்கவே இல்லை. அவனது குடுகுடுப்பை ஒலி கேட்டுத்தான் அவர்கள் கவனம் கலைந்தது.

குடுகுடு குடுகுடு குடுகுடு டக், குடுகுடு குடுகுடு குடுகுடு டக். “நல்ல காலம் பொறக்குது, நல்லகாலம் பொறக்குது.” கருப்பன் தன்னை கவனித்ததை உணர்ந்ததும் கோடங்கி பேசத் தொடங்கினான். குடுகுடு குடு குடு டக், குடுகுடு குடுகுடு டக், “உனக்கு நல்லகாலம் வந்திட்டிருக்கு. முகத்துல அதிர்ஷ்டக்களை தெரியுது. இந்த ஊட்டுக்கு நல்லகாலம் வந்திட்டிருக்கு.”

குடுகுடு குடுகுடு டக், “உன் மூஞ்சுல யோகம் வர்றது தெரியுது. வெளியூருப்பயணம் போகப் போறது தெரியுது.” குடுகுடு குடுகுடு டக்,“தூரத்து ஊருக்கு நீ சீக்கிரம் போகப்போற. மூட்டை மூட்டையா காசு சேக்கப் போற. வரப்போற யோகம் உம்மூஞ்சுல தெரியுது. ஊட்டுக்கு நல்ல காலம் வரப்போகுது. அது அம்மா மொகத்தில தெரியுது. சீக்கிரம் வீட்டைப் புதுசாக் கட்ட போறாக.” குடுகுடு குடுகுடு டக், “வீட்டில் ரெண்டு காளைமாடு நிக்கப் போகுது. வீடு முழுக்க நெல்லுமூட்டை நெறைஞ்சு கெடக்கப் போகுது. நல்ல காலம் வருது” குடுகுடு குடுகுடு டக், “ஏதாவது குடு தாயி.”

“எம்மவன் மலைக்குப் போயி நெறயக் காசோட திரும்பி வருவானா? அதப் பாக்க நான் இருப்பனா? ஒனக்கு நல்லாத் தெரியுமா?” முத்தாத்தாள் படபடத்தாள்.

குடுகுடு குடுகுடு டக், “ஒங்க ரெண்டு பேர் மொகத்திலயும் அது எழுதியிருக்கு தாயி. நான் அதைக் கண்ணால பாக்கேன். குடுகுடு குடுகுடு டக், குடுகுடு குடுகுடு டக், வீட்டுக்கு லட்சுமி வந்திட்டிருக்கா. அம்மா நெலம் வாங்கப்போற, மாடு வாங்கப்போற அம்மா ரொம்ப காலம் இருக்கப்போற. பேரப்பிள்ளைங்க வீட்டச் சுத்தி ஓடி விளையாடுறதப் பாக்கப்போற.” குடுகுடு குடுகுடு டக், “எனக்கேதாவது குடுதாயி...”

முத்தாத்தாள் “வள்ளி” என்று குரல் கொடுத்தாள். “கருப்பன் கொண்டு வந்த அரிசியில கொஞ்சம் இந்த கோடங்கிக்குப் போடு. நல்லகாலம் வருதுன்னு சொல்லுதான்.”

“லட்சுமி வந்திட்டிருக்கா” குடுகுடு குடுகுடு டக், கோடங்கியும் குரல் கொடுத்தான்.

வள்ளி கொண்டு வந்த அரிசியைத் தன் தோளில் தொங்கிக் கொண்டிருந்த மூட்டைகளில் ஒன்றில் வாங்கிக் கொண்டவன் வள்ளியின் முகத்தை உற்றுப் பார்த்தான்.

"ரொம்ப யோகக்கார மொகம் இந்த மொகம். இந்த மொகத்துல லட்சுமி சிரிக்கிறா. தங்கத்தில ஜொலிக்கப் போகுது இந்த மொகம்." குடுகுடு குடுகுடு டக்...

கோடங்கியின் குடுகுடுப்பை ஒலி மெல்ல மெல்ல தொலைவில் சென்று மறைந்தது. சூது வாதில்லாத முத்தாத்தாளின் மனம் கோடங்கியின் ஒவ்வொரு சொல்லையும் அப்படியே நம்பிவிட்டது.

"இப்ப நா ஒத்துக்குதேன்" என்றாள் அவள். சற்று நேரம் அவள் பார்வை எங்கோ தொலைவில் நிலை குத்தியிருந்தது. "நீ மலைக்குப் போவப் போறதச் சரியாச் சொல்லிட்டான் பாரு. அப்ப அவஞ் சொன்ன மத்ததும் சரியாத்தான் இருக்கணும். நீ மலையிலிருந்து நெறயக் காசு கொண்டு வறத நா பாப்பேன். நாம நல்லாயிருப்போம். நீ வுட்டுட்டுப் போறேன்னு நான் கவலப்பட மாட்டேன்."

நம்பிக்கையோடு பேசினாலும் அவள் குரல் மட்டும் கம்மிப் போயிருந்தது.

"மேஸ்திரியப் பாக்க எப்ப போகப் போறே?" முத்தாத்தாளே திரும்பவும் பேச்சைத் தொடங்கினாள்.

"நாளைக்கு வெடியாலம்மா!"

"ராகுகாலம் பாத்துக்கப்பா."

"விடிஞ்ச பொறவுதா ராகுகாலம். அதுக்கு முன்னாடியே போயிடுவேன்."

"போகும்போது வலதுகால எடுத்து வெச்சு கெளம்பு. எதுலயும் முட்டிக்காம கவனமா இருக்கணும்."

"சரிம்மா. சகுனம் பாத்து பத்தரமா போயிட்டு வாறன்." கருப்பன் ஏற்கனவே மனதளவில் கயத்தாறுக்குக் கிளம்பி விட்டிருந்தான்.

மறுநாள் காலை இருள் பிரிவதற்கு முன்பே கருப்பன் கயத்தாறுக்குக் கிளம்பினான். நிலவு இன்னும் ஒளிவீசிக் கொண்டிருந்தது. பறவைகள் எழுவதற்கான அறிகுறியே காணப்படவில்லை. பக்கத்தில் எங்கிருந்தோ ஒரு ஆந்தை கோரமான குரலில் அலறியது. இருள்மண்டி வெறிச்சோடிப் போயிருந்த தெருக்களின் வழியே நடந்து செல்லும் போது கருப்பனுக்கு இதயம் கனத்துப் போனது.

“பொறந்து வளர்ந்து அப்பா அம்மாவோட சந்தோசமா இருந்தது எல்லாம் இந்த ஊருலதான். இங்கதா கண்ணாலமும் ஆச்சு. அம்மைய வேற தனியா விட்டுட்டுப் போக வேண்டியிருக்கு. போனா என்ன அக்காதான் இருக்காளே அவப் பாத்துக்குவா. பேரக் கொழந்தைகளும் இருக்குல்லா. அம்மை நல்லாத்தான் இருப்பா. அதப்பத்திக் கவலைப்பட வேண்டியதில்ல கொஞ்ச நாள் வெளியே போய் கஷ்டப்பட்டாப் போதும் பொறவு நல்லாயிருக்கலாம்.”

கருப்பனின் நடையின் வேகத்துக்கு ஏற்றவகையில் மனமும் வேகமாக இயங்கிக் கொண்டிருந்தது. உற்சாகமும் அதே நேரத்தில் ஏதோ வொரு இனம்புரியாத வெறுமையும் அவனை மாறி மாறி அலைக்கழித்துக் கொண்டிருந்தன. அது எப்படியிருந்தாலும் ஐந்தாண்டுகளுக்கு மேல் எஸ்டேட்டில் இருக்கக்கூடாது என்று தனக்குத்தானே தீர்மானம் செய்து கொண்டான். அதற்குள் ஒரு சோடி மாடுகளும், கொஞ்சம் நிலமும் வாங்கிவிட முடியுமென்று தோன்றியது. அதுபோதும்.

சூரியன் உதிக்கும் முன்பே கயத்தாறை அடைந்து விட்டவன் தான் முன்பு சங்கரபாண்டியனைச் சந்தித்த கடைக்குச் சென்றான். மேஸ்திரி இன்னும் வரவில்லை. கடையே இன்னும் திறக்கப்படவில்லை. அவன் தெருவில் உட்கார்ந்து முழங்கால்களைக் கட்டிக் கொண்டு மேஸ்திரியை எதிர்பார்க்கத் தொடங்கினான். அரைமணி நேரம் கழித்து கடையைத் திறந்து ஒருவன் ஒரு பெஞ்சை வெளியே கொண்டு வந்து போட்டான். உணவு தயார் என்று அறிவிக்கும் வகையில் ஒரு கிராமபோன் கரகரப்பான குரலில் பாடத் தொடங்கியது. கடைசியில் ஒரு வழியாக சங்கரபாண்டியன் வந்து சேர்ந்தான். வரவேற்க எழுந்து நின்ற கருப்பனைப் பார்த்ததும்,

“அட அதுக்குள்ள வந்துட்டியா? என்ன சொல்லுத?” என்றான்.

“எங்களயும் கூடக் கூட்டிட்டுப் போங்கண்ணே. பெத்த தகப்பன் மாதிரி நெனச்சு உங்களோட வாறோம். எங்களுக்கு ஒரு வழி சொன்னா உங்களுக்குப் புண்ணியமாப் போகும்.”

மேஸ்திரியின் முகத்தில் ஒரு மெல்லிய புன்முறுவல் அரும்பியது.“நா பாத்துக்கறன்டே. இப்பவே கோவில்பட்டி ஏஜெண்ட்டுக்கிட்ட கூட்டிட்டுப் போயி எல்லா ஏற்பாடும் பண்ணிடுதேன். மலைக்கு வேலைக்கு வாரேன்னு ஒரு கையெழுத்துப் போட்டுடு. பொறவு பணம் கெடைக்கும். மொதல்ல எதுனாச்சும் சாப்புடலாம்” என்று சொல்லி விட்டு அருகில் கிடந்த பெஞ்சில் அமர்ந்தான். கருப்பன் சற்றுத் தள்ளி தரையில் உட்கார்ந்து கொண்டான்.

சிப்பந்தி வெளியே தலையை நீட்டினான்.

"கங்காணி என்ன சாப்பிடுதே?"

"எங்க ரெண்டு பேருக்கும் புட்டும், காபியும்"

சிப்பந்தி இரண்டு பாக்கிலைகளில் இட்லிகளை எடுத்து வந்து சங்கரபாண்டியனுடையதை பெஞ்சிலும், கருப்பனுடையதைத் தரையில் வைத்தான். மேஸ்திரிக்குப் பித்தளை டம்ளரிலும், கருப்பனுக்கு மண் குவளையிலும் காபி வந்தது. கருப்பன் ஆர்வத்துடன் நொடியில் இலையைக் காலி செய்துவிட்டான். மேஸ்திரி பணம் கொடுத்துவிட்டு அவனை பேருந்து நிற்குமிடத்திற்கு அழைத்துச் சென்றான். பஸ்ஸில் மேஸ்திரிக்கு நடுவிலும், கருப்பனுக்கு கடைசி சீட்டிலும் இடம் கொடுக்கப்பட்டது.

கருப்பன் அதற்கு முன்பும் பேருந்தைப் பார்த்ததுண்டுதான். ஒரு முறை நின்று கொண்டிருந்த பஸ்ஸில் திருட்டுத்தனமாக ஏறி உட்கார்ந்து கூடப் பார்த்திருக்கிறான். ஆனால் பயணம் செய்வது இதுதான் முதல் முறை. அவனுக்கு ஏதோ ஆகாயத்தில் பறந்து கொண்டிருப்பது போல் தோன்றியது. கோவில்பட்டி வந்து சேர்ந்து விட்டதைக் கூட உணராமல் தன்னை மறந்து உட்கார்ந்திருந்த கருப்பனை சங்கரபாண்டியன் எழுப்பி ஏஜெண்ட்டிடம் அழைத்துச் சென்றான்.

ஏஜெண்டின் அலுவலகமென்னவோ சாதாரணமாகத்தான் தோன்றியது. ஆனால் நாட்டின் எசமானர்களான வெள்ளைத் துரைகளின் முக்கியமான சேவகன் என்ற தனது தகுதிக்கு ஏற்ப ஏஜென்ட் அதிகார தோரணையுடன் வீற்றிருந்தான். சங்கரபாண்டியன் வணக்கம் செலுத்திவிட்டுப் பின்னால் நின்றிருந்த கருப்பனை இழுத்து நிறுத்தினான். "இந்தப்பய ஆனமலை எஸ்டேட்டுக்கு வேலைக்கு வர ஆசைப்படுதான். இவம்பேரையும் இவம் பொஞ்சாதி பேரையும் சேத்துக்கங்கைய்யா. அப்புறம் வழக்கமாக் குடுக்குற பணம் வேணுமாம்."

ஏஜண்ட் கருப்பனின் மீது ஒரு கம்பீரமான பார்வையை வீசினான். கருப்பன் முழுச் சரணாகதியைக் காட்டும் விதத்தில் தாழக்குனிந்து வணங்கிவிட்டு ஒரு கையால் வாயைப் பொத்திக் கொண்டு நின்றான்.

"இதுக்கு முன்னாடி ஏதாவது தேயிலத் தோட்டத்துல வேல செஞ்சிருக்கியாடே?"

கருப்பன் தலையசைத்து மறுத்ததும் ஏஜெண்ட் மேஸ்திரியிடம் திரும்பினான்.

“என்ன மேஸ்திரி எல்லா வெவரமும் சொல்லிட்டியா? இல்ல சொல்ல வேண்டியத மட்டுமாவது சொல்லியிருக்கியா?”

“எல்லாத்தையும் சொல்லிட்டன்லா. இவனப்பத்தி வெசாரிக்கவும் செஞ்சிட்டேன். நல்ல பய. கயத்தாறுல மொதமொதல்ல பாத்தப்ப கடகடயா வேல கேட்டுக் கெஞ்சிட்டிருந்தான். இப்படி நல்லா வேல செய்யக்கூடிய ஒருத்தன் சோறில்லாம கெடக்கறதப் பாத்தாப் பாவமாயிருந்தது. அதான் எஸ்டேட்டுக்கு வாறியான்னேன். செரின்னுட்டான். பொஞ்சாதி சொந்தபந்தம் எல்லாத்துகிட்டயும் கேட்டுட்டுதான் சொல்லுதான். பய மலைக்கு வர ரொம்ப ஆசயா இருக்கான்.”

ஏஜெண்ட் கருப்பனை அளவெடுப்பது போல் பார்த்துவிட்டு “என்னடே பொஞ்சாதியோட குமரிமலைத் தோட்டத்துக்குப் போறியா? தொரைங்ககிட்ட வேல பாப்பியா?” என்றான்.

“போறேன்” கருப்பன் பணிவுடன் பதிலளித்தான்.

“ம் சரி சேத்திடலாம். பணம் எவ்வளவு வேணும்?”

கருப்பன் சங்கரபாண்டியனைப் பார்த்தான்.

“நாப்பது ரூவா குடுங்க. பயலுக்கு வயசான அம்மை ஒண்ணு இருக்கு. அத சொந்தக்காரங்க வூட்ல உட்டுட்டு பணம் கொடுத்துட்டுத்தான் வரணும். இவன் நல்ல வேலக்காரங்கைய்யா. பாத்தாலே தெரியுதுல்லா”

“சட்டப்படி ஒரு ஆளுக்குப் பத்து ரூவாதான் குடுப்போம். மிஞ்சிப்போன பதினைஞ்சு ரூவா. ஆனா நீ சொல்றதால ஆளுக்கு இருபது ரூவா தாரேன்.”

ஏஜெண்ட் ஒரு வெள்ளைக் காகிதத்தை எடுத்து கருப்பனின் பெயரையும் ஊரையும் எழுதி அதில் அவன் ரேகை வாங்கிக் கொண்டான். இந்தச் சடங்கு முடிந்ததும் கருப்பனிடம் நாற்பது ரூபாய் வழங்கப்பட அவன் பயபக்தியோடு இரண்டு கையாலும் பெற்றுக் கொண்டான்.

“ஏலே போயி நல்லபடியா வேல பாரு. நீ நல்லபடியா இருந்தா தொரைகளும் ஒன்ன நல்லபடியாப் பாத்துக்குவாக பொறவு பணம் கூரையைப் பிச்சுட்டுக் கொட்டும். இதோ இந்த மேஸ்திரி மாதிரி.”

“ஒரு வருசம் கழிச்சு வரும்போது என்னப் பாக்க மறந்துடாதடே”

“இல்ல சாமி”

சங்கரபாண்டியன் அவனை அழைத்துச் சென்று கயத்தாறுக்கு டிக்கெட்

வாங்கிக் கொடுத்தான்.

“ஏலே வார திங்க கெழம கெளம்புதோம். செய்ய வேண்டியதச் செஞ்சு முடிக்கறதுக்கு நெறய நேரமிருக்கு. ஒருநாள் முன்னால ஞாயித்துக்கெழம நாய்க்கர் டீக்கடைக்கு வந்து எப்ப எங்க வரணும்னு கேட்டுட்டுப் போடே” என்ற மேஸ்திரி தான் வேறு இடத்திற்குப் போக வேண்டியிருப்பதாகவும், பஸ் கிளம்ப இன்னும் ஒரு மணிநேரம் இருப்பதாகவும் அதுவரை ஊரைச் சுற்றிப் பார்க்கும்படியும் சொல்லி விட்டுக் கிளம்பிப் போனான்.

கருப்பன் அதுவரை ரயிலைப் பார்த்ததேயில்லை. ஏற்கனவே பஸ் பயணத்தால் பிரமித்துப் போயிருந்தவன் ரயிலையும் பார்த்து விடுவதென்ற முடிவோடு ரயில் நிலையத்துக்குச் சென்று அங்கே போடப்பட்டிருந்த வேலியைப் பிடித்துக் கொண்டு உள்ளே எட்டிப் பார்த்தான். அங்கே பல சரக்கு ரயில் பெட்டிகள் நின்று கொண்டிருந்தன.

அதுதான் ரயில் என்று நினைத்துக் கொண்டு, இது எப்படி நகரும், ஆட்கள் எங்கே உட்காருவார்கள் என்று வியப்புடன் யோசித்துக் கொண்டிருந்தவன் தூரத்தில் புகையைக் கக்கிக் கொண்டு வந்து கொண்டிருந்த பயணிகள் ரயிலைக் கவனிக்கவேயில்லை. என்ஜின் இடி போன்ற ஓசையுடன் திடீரென்று அவனைக் கடந்து சென்றபோது பீதியில் மயக்கமே வந்து விட்டது. மார்பே வெடித்துவிடும் போலாகி கை கால்களெல்லாம் பதறிப் போய்விட்டன.

ரயில் சற்றுத் தொலைவு சென்று நிற்பதையும் அதிலிருந்து பயணிகள் இறங்கிச் செல்வதையும் பார்த்த பிறகுதான் அவனுக்கு ஆசுவாசம் ஏற்பட்டது. கருப்பன் வியப்பும் ஆர்வமும் நிறைந்த கண்களால் ரயிலையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தான். அதற்குள் அவனது பிளந்த வாயையும் விரிந்த கண்களையும் கண்டு கொண்ட சில பையன்கள் கேலியும் கிண்டலும் செய்யத் தொடங்கினர். தன்னைப் பார்த்துத்தான் அவர்கள் சிரிக்கிறார்கள் என்பதை உணர்ந்ததும் அவன் மிகுந்த தயக்கத்துடன் அங்கிருந்து அகன்றான்.

பஸ்ஸில் ஏறியதும் வேடிக்கை பார்ப்பதற்கு வசதியாக கடைசி சீட்டின் ஒரு மூலையில் உட்கார்ந்து கொண்டான். கயத்தாறுக்கு வந்து சேர்ந்த பின்பு ஓட்டமும் நடையுமாக வீட்டுக்குச் சென்று அம்மாவிடமும் வள்ளியிடமும் ஒரே மூச்சில் நடந்தது அனைத்தையும் கூறியவன் ஏஜெண்ட் கொடுத்த பணத்தைப் பெருமையாக காட்டினான். உடனடியாக பயணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளை அவர்கள் செய்யத் தொடங்கினார்கள்.

# 4

திருமணம் மரியாதைக்குரியது. ஆனால்
வீட்டு நிர்வாகம் தொல்லை பிடித்தது

- பழமொழி

ஆண்டிப்பட்டி மயிலோடையை விடப் பெரிய கிராமம். சுமார் எழுபது வீடுகள் இருந்த அந்த கிராமத்தில் சங்கரபாண்டியனுடைய வீடுதான் பெரியது. வைரமுத்து மேஸ்திரியின் வீட்டை விட பெரியதாக இருந்த அந்த ஓட்டுக் கூரை வீட்டுக்கு மண்ணால் கட்டப்பட்ட ஒரு மதில் சுவருமிருந்தது. சங்கரபாண்டியனுக்கு இரண்டு மனைவிகள். இருவரும் அக்கா தங்கைகள்.

மூத்தவளைத் திருமணம் செய்யும்பொழுது மேஸ்திரி சாதாரணக் கூலியாகத்தான் இருந்தான். மேஸ்திரியானதும் முதலில் வீட்டை இடித்துக் கட்டினான். பின்பு ஒரு சோடி காளைமாடு வாங்கினான். அப்புறம் கொஞ்சம் நிலம். பிறகு இன்னும் கொஞ்சம் இன்னும் கொஞ்சம் என்று ஒவ்வொரு ஆண்டும் மேஸ்திரிக்குச் சொந்தமான நிலங்களின் பரப்பளவு அதிகரித்துக் கொண்டே போனது. இப்போது சங்கரபாண்டியன் தன் குழுவில் நூறு பேரைக் கொண்டுள்ள ஒரு பெரிய மேஸ்திரி. அவனுக்கு ஒவ்வொரு வருடமும் கமிசன் மட்டுமே ஆயிரம் ரூபாய் வந்து கொண்டிருந்தது.

முதலில் சங்கரபாண்டியனின் அப்பாதான் நிலங்களைக் கவனித்து வந்தார். பின்பு ஆட்களைப் பிடித்துச் சமாளித்தார். ஒரு கட்டத்தில் அவரால் நிர்வாகம் செய்யவே முடியாத அளவிற்கு அவை பரந்து விரிந்துவிட்டன. அதோடு புதிதாக வாங்கிய ஏராளமான ஆடுமாடுகள் வேறு.

ஒருநாள் சங்கரபாண்டியன் அப்பாவை அழைத்துத் தன் மனைவியை அவரது உதவிக்கு விட்டுவிட்டுப் போவதாகக் கூறினான்.

“அப்ப மலையில யாரு ஒனக்குப் பொங்கிப் போடுவா?”

“இன்னொரு கண்ணாலம் கட்டிக்கப் போறேன்.”

“யாரை?” அப்பா ஆச்சரியத்துடன் கேட்டார்.

“வேற யார! பொஞ்சாதியோட தங்கச்சியத்தான்.”

“அட, என்னலே திடீர்னு இப்படி சொல்லுதே? ஒம் மாமன் அவளையும் ஒனக்குக் கட்டித் தருவானா?”

“தந்துதான் ஆகணும். இல்லாட்டி இத்தனை வருஷம் அவம் பொண்ணு புள்ளைகளுக்கு நான் செலவழிச்ச காசையெல்லாம் திருப்பித் தரட்டும்.”

அந்த மாமனார் கடனைத் திருப்பித் தருவதைப் பற்றி யோசிக்கவே வழியில்லாதவர் என்பதால் தனது இன்னொரு மகளையும் பணக்கார மருமகனுக்குத் தர மகிழ்ச்சியுடன் ஒப்புக் கொண்டார். எனவே கருப்பனைப் பார்ப்பதற்கு சில நாட்களுக்கு முன்புதான் சங்கரபாண்டியனுக்கு இரண்டாவது திருமணம் நடந்திருந்தது.

கோவில்பட்டியிலிருந்து மாலை மயங்கும் வேளையில் ஊர் திரும்பிய சங்கரபாண்டியன் வீட்டு வாயிலில் கோடங்கி தனக்காகக் காத்துக் கொண்டிருப்பதைக் கண்டான். மேஸ்திரியைப் பாத்தவுடன் கோடங்கி குடுகுடுப்பையை முழக்கத் தொடங்கினான்.

“நல்ல காலம் பொறக்குது, நல்லகாலம் பொறக்குது. இன்னும் கொஞ்ச ஆளுகள மலைக்கு இழுத்திட்டு போறதில ஜெயிச்சிட்டேங்கிறது மொகத்திலயே தெரியுது. நல்ல காலம் பொறக்குது. நல்லகாலம் பொறக்குது.” குடுகுடு குடுகுடு டக்.

“மயிலோடைக்கு எப்பலே போன?” சங்கரபாண்டியன் வெடுக்கென்று கேட்டான்.

“நீ சொன்ன அன்னைக்கே போயிட்டேன்லா”

“வீடு கண்டுபிடிக்க முடிஞ்சுதா? அவன் இருந்தானாலே?”

“ஆமா கங்காணி. தெரிஞ்ச ஒரு கெளவி சொல்லுச்சு. ஊட்டுக்குப் போனப்போ அம்மையும் மகனும் குடிசைக்கு முன்னாடிதான் உக்காந்திருந்தாக. எல்லா நல்லபடியா முடிஞ்சுது. எனக்கு நல்ல காலம் பொறக்குது. நல்ல காலம் பொறக்குது” குடுகுடு குடுகுடு டக்.

சங்கரபாண்டியன் வாய்விட்டு சிரித்தான்.

“நல்ல காரியம் செஞ்சேடே. இப்பத்தான் கருப்பனையும், அவம்பொஞ்சாதியையும் வேலைக்கு சேத்திட்டு வாரேன்.”

குடுகுடு குடுகுடு டக். கோடங்கி கையிலிருந்த பாத்திரத்தை நீட்டினான். சங்கரபாண்டியன் அதில் இரண்டு அரை ரூபாய் நாணயங்களைப் போட்டான்.

“எப்ப மலைக்குக் கெளம்புத கங்காணி?”

“வார திங்கக் கெழம”

“யோகம் வருது. ரெண்டாவது பெஞ்சாதி வடிவில யோகம் கூடவே வருது.” குடுகுடு குடுகுடு டக். கோடங்கி வாய் நிறைய சிரிப்போடு தன் வழியே நடக்கத் தொடங்கினான்.

# 5

விடையளிக்கிறோம் ஒருவேளை
என்றென்றைக்குமாக...

---ஃபேர் தி வெல் -சு- பைரண்

கருப்பன் ஞாயிறு காலை திரும்பவும் கயத்தாறுக்குச் சென்று சங்கரபாண்டியனை சந்தித்து தாங்கள் வரத்தயாராக இருப்பதை உறுதிப் படுத்திவிட்டு, அம்மாவுக்கும், மனைவிக்கும் புதுத் துணிகள் வாங்கிக் கொண்டு வீடு திரும்பினான். அதற்குள் செய்தி ஊர் முழுக்கப் பரவி ஊரிலுள்ள அத்தனை பேரும் அங்கே வந்து குவிந்து விட்டிருந்தனர்.

மதிய உணவுக்குப் பிறகு ஊர்க்காரர்கள் வாழ்த்தி விடையளிக்க அவர்கள் வீட்டைப் பூட்டிவிட்டு மகாலிங்கம் வீட்டுக்குக் கிளம்பினர். வெளியே வரும்போது முத்தாத்தாளின் கண்களிலிருந்து கண்ணீர் தாரை தாரையாகப் பெருகியது. அவள் முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு இந்த வீட்டில் முதல்முதலாகக் காலடி வைத்தாள். பின்பு அவள் வாழ்வோடு இரண்டறக் கலந்து விட்டிருந்தது இந்த வீடு. இங்கேதான் தன் மூன்று குழந்தைகளையும் பெற்று வளர்த்தாள். அவளது அன்பிற்கு மிகவும் பாத்திரமானதாயிருந்த கடைசிக் குழந்தை இங்கேதான் கண்களை மூடியது. அவள் கணவன் இறந்து போனதும் இதே வீட்டில்தான். அவள் மகளுக்கும், மகனுக்கும் திருமணம் நடந்ததும் இதே வீட்டில்தான்.

அவளது இன்பத்திலும் துன்பத்திலும் பிரிக்க முடியாதபடி கலந்து போயிருந்த இந்த வீட்டை விட்டுப் பிரிந்து செல்வதென்பது. இதயத்தையே பிளப்பது போலவும், தன் உடலின் ஏதோவொரு பாகத்தையே விட்டுச் செல்வது போலவும் தோன்றியது. வயோதி கத்தாலும், தொடர்ந்து வந்த வேதனைகளாலும் ஒளியிழந்து போயிருந்த அவள் கண்களிலிருந்து கண்ணீர் ஊற்றெடுத்தது போலப் பெருகிக் கொண்டேயிருந்தது. கருப்பனும் வள்ளியும் இருபுறத்திலும் தாங்கிக் கொள்ள முத்தாத்தாள் தன் வீட்டை விட்டு வெளியேறினாள். ஒருவேளை என்றென்றைக்குமாக...

மறுநாள் அதிகாலை கருப்பனும் வள்ளியும் விடைபெற்றுக் கொண்டனர். முத்தாத்தாவிடமிருந்து விம்மல் வெடித்துக் கிளம்பியது.

“ஐயோ எம் மக்கா! நீ திரும்பி வரும்போது நான் இருப்பனோ மாட்டனோ இப்படி என்ன விட்டுட்டுப் போறியே மக்கா! இதப் பாக்கவா நா உசுர வெச்சுட்டிருக்கேன்!”

கருப்பனால் ஒன்றுமே பேச முடியவில்லை. அவனுடலும் குலுங்கிக் கொண்டிருந்தது. வாய் மட்டும் அவ்வப்போது “அழுவாதம் மா அழுவாத” என்று முணுமுணுத்தது. வள்ளியின் அம்மாவும் மகளை அணைத்துக் கொண்டு கண்ணீர் வடித்தாள்.

“மக்கா! மூத்தவளே பக்கத்து ஊர்லயே இருப்பேன்னு நெனச்சனே! இப்ப எங்கியோ கண்காணாத எடத்துக்குப் போறியே! எதுக்குத்தான் இப்பிடியெல்லாம் நடக்குதோ? ”

எதுவும் புரியாவிட்டாலும் கூட அக்காவும், அம்மாவும், பாட்டியும் அழுவதைப் பார்த்து குழந்தைகளும் அழத் தொடங்கின. மகாலிங்கம்தான் எல்லோரையும் சமாதானப்படுத்த வேண்டி வந்தது. அவரும் கயத்தாறுக்கு வருவதாயிருந்தார். முத்தாத்தாள் உள்ளே சுருண்டு கிடக்க வள்ளியின் அம்மாவும், குழந்தைகளும் வாசலுக்கு வந்து அவர்கள் போவதையே பார்த்துக் கொண்டிருந்தனர்.

துணிகளும், வழியில் சாப்பிடுவதற்குப் பலகாரங்களும் இருந்த மூட்டையைக் கருப்பன் தூக்கிக் கொள்ள, மகாலிங்கம் வள்ளியைக் கைத்தாங்கலாக நடத்திச் சென்றார். சாலை வளையுமிடத்திற்கு வந்தவுடன் வள்ளி திரும்பி அம்மாவையும் தம்பி தங்கைகளையும் பார்த்தாள். மௌனமாகக் கையாட்டி விடைபெற்றுக் கொண்டபோது ஒரு பெரும்பாரம் மனதில் வந்து உட்கார்ந்து கொண்டது. தான் இனிமேல் அவர்களை ஒருபோதும் பார்க்கவே போவதில்லை என்று ஏனோ அவளுக்குத் தோன்றியது.

மூவரும் அவரவர் சிந்தனையில் மூழ்கிய நிலையில் அமைதியாக நடந்து கொண்டிருந்தனர். கயத்தாறில் சங்கரபாண்டியன் நாய்க்கர் டீக்கடை முன்பு அவர்களுக்காகக் காத்துக் கொண்டிருந்தான். “இது மாமா, இது எம் பொஞ்சாதி” என்று கருப்பன் தன்னவர்களை அவனுக்கு அறிமுகப்படுத்தினான்.

“இன்னைக்கு வரைக்கும் எம்மவ சொந்த ஊரவுட்டு வெளியவே போனதில்ல. ரெண்டுபேரும் சின்னப்புள்ளைங்க. வெவரமில்லாதவங்க. உங்க கைல அவங்கள ஒப்புக் கொடுக்கேன். பெத்த புள்ளைங்க மாதிரி பாத்துக்குங்க, சாமி உங்களுக்குக் கண் தொறக்கும்” மகாலிங்கத்துக்கு நா தழுதழுத்தது.

“ஒண்ணும் பயப்பட வேண்டாம். நா பாத்துகுதேன்” மேஸ்திரி மகாலிங்கத்தின் தோளில் தட்டினான். “எஸ்டேட்டுல ராசா மாதிரி இருக்கப் போறாக. இவங்கள மாதிரி இன்னும் எத்தன சின்னப் பயலுவளும், புள்ளைங்களும் எங்கூட வராங்க தெரியுமா? பஸ்ல வந்து பாருங்க. நான் இவங்க எப்படியிருக்காங்கன்னு லெட்டர் போடுதேன். வெள்ளைத் தொரைங்க ரொம்ப நல்லவங்க. தேவமார, நாய்க்கமார மாதிரியில்ல. பாசமானவங்க” என்று சொல்லிவிட்டு கலங்கிப் போய் நின்று கொண்டிருநத வள்ளியைப் பரிவுடன் பார்த்தான்.

“அம்மா அப்பாவப் பிரிஞ்சு வாரேன்னு கவலப்படாதம்மா. மலைல சந்தோசமா இருப்ப பாரு. உன் வயசுப் பொண்ணுக நெறயப் பேரு கூடவே இருப்பாக. முப்பது நாப்பது பொண்ணுங்க ஒண்ணாச் சேந்துதான் கொழுந்து கிள்ளுவாங்க. எல்லாருமே நம்ம ஜாதிக்காரங்கதான். வூட்ல இருக்கிற மாதிரிதான் இருக்கும்.”

பின்பு மேஸ்திரி உத்தரவிட எல்லோருக்கும் காபி வந்தது. மேஸ்திரியுடன் வந்திருந்த இளைஞர்களாலும் இளம்பெண்களாலும் பேருந்து நிலையம் நிரம்பி வழிந்து கொண்டிருந்தது. அந்தக் கூட்டத்தில் சில குழந்தைகளும்கூட இருந்தன. அங்கிருந்தவர்கள் எல்லோருமே தங்கள் சாதிக்காரர்கள்தான் என்று சங்கரபாண்டியன் சொன்னதும் கருப்பனும், வள்ளியும் நிம்மதிப் பெருமூச்சு விட்டனர். அவர்களில் வயது வந்தவர்கள் முப்பது பேரும் குழந்தைகள் பத்துப் பனிரெண்டு பேரும் இருந்தனர்.மேல்புறம் மூடப்படாத ஒரு பேருந்து வந்ததும் எல்லோரும் ஏறிக் கொண்டனர். குழந்தைகள் பெரியவர்களின் மடியில் அமர்த்தப்பட்டனர். வள்ளிக்கு ஒரு ஓரத்தில் இடம் கிடைத்தது. பஸ்

கிளம்பியதும் உறவினர்கள் கையசைத்து விடை கொடுத்தனர். எல்லாப் புறங்களிலும் ஆட்கள் மறைத்து நின்றாலும் வள்ளியால் வெளியில் நின்று கொண்டிருந்த அப்பாவைப் பார்க்க முடிந்தது. மகாலிங்கம் எம்பி நின்று மகளின் தோளில் தட்டிக் கொடுத்துவிட்டு கூட்டத்தில் எங்கோ காணாமல் போயிருந்த கருப்பனிடம் போய்ச் சேர்ந்ததும் கடிதம் போடும்படி கூச்சலிட்டார்.

பஸ் வேகமெடுப்பதற்கு அடையாளமாக ஹாரன் நாராசமாக ஒலித்தது. மகாலிங்கமும் மற்றவர்களும் கொஞ்சம் கொஞ்சமாக பார்வையிலிருந்து மறைந்தனர்.

# பாகம்-இரண்டு

“ உலகில் இன்பமயமான விஷயங்களில்
ஒன்று பயணம் போவது...”

-ஆன் கோயிங் எ ஜேர்னி
வில்லியம் ஹேஸ்லிட்

# 1

புகைவண்டி வந்து சேர்ந்தது. அதனுள் நுழைவது இன்னொரு பெரும் போராட்டம். வசவுகள் இஷ்டத்திற்கு அள்ளி வீசப்பட்டன. ஏற்கனவே ஏறிவிட்ட பயணிகளும் ஏற முயல்பவர்களும் ஒருவரை யொருவர் தள்ளிக்கொண்டனர். நாங்கள் பிளாட்பாரத்தில் மேலும் கீழும்நடந்தோம். பரிசோதகரிடம் சொன்னோம். எல்லா இடத்திலும் அடுத்த ரயிலில் போ என்றே பதில் கிடைத்தது.

ஏன் ஆட்டோபயாகிராபி.
- - மகாத்மா காந்தி

வள்ளி அம்மா அப்பாவின் நினைவுகளில் மூழ்கிப் போய் கொஞ்சநேரம் எதையும் கவனிக்கவில்லை. சில நிமிடங்களில் பஸ்ஸின் ஓட்டத்தில் விரைந்து பின்னால் சென்று கொண்டிருந்த வீடுகளும் மரங்களும் அவள் கவனத்தை ஈர்க்கத் தொடங்கிவிட்டன. இந்தப் புதுமையான அனுபவம் தந்த மகிழ்ச்சி அவள் வேதனையைக் கூட சற்றே மறக்கச் செய்துவிட்டது. தன்னை மறந்து வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தவள் ஏதோ நினைத்துக் கொண்டு கருப்பனைத் தேடினாள். ஆனால் அவளைச் சுற்றி சில பெண்கள் மறைத்து நின்று கொண்டிருந்ததால் அவனைக் கண்டுபிடிக்க முடியவில்லை. ஒருவேளை கருப்பன் வண்டியிலேயே இல்லையோ என்று பயந்து போய், மாமா என்று கத்த வாயெடுத்த நேரத்தில் பஸ் ஏதோ கிராமத்தில் நின்றது. அவளைச் சுற்றி நின்று கொண்டிருந்த பெண்கள் இறங்கிப் போய்விட இரண்டு வரிசைகளுக்கு முன்னால் அவன் நின்று கொண்டிருப்பதைக் கண்டு கொண்டாள்.

கோவில்பட்டி வந்து சேர்ந்ததும் சங்கர பாண்டியன் தலைகளை எண்ணிச் சரிபார்த்துவிட்டு ரயில் நிலையத்துக்கு அழைத்துச் சென்றான். அங்கே கூரையில்லாத பிளாட்பாரத்தில் ஏராளமான மரங்களிலிருந்தன. அதில் ஒரு பெரிய மரத்தைத் தேர்ந்தெடுத்து அதனடியில் தன் குழுவினரை உட்காரச் செய்தான்.

“திருநெல்வேலியிலிருந்து ரயில் மத்தியானம்தான் வரும். அதனால இங்கயே உட்கார்ந்திருங்க. எங்கிட்ட சொல்லாம யாரும் எங்கயும் போகக்கூடாது. அப்படிப் போனா காணாமப் போயிருவீக”வந்தவர்கள் வட்ட வட்டமாக அமர்ந்து தங்களுக்குள் பழக்கம் செய்து கொள்ளத் தொடங்கினர்.

கூட்டத்திலிருந்து சற்று தள்ளி ஒரு வாட்ட சாட்டமான இளம் பெண் ஒரு இரும்புப் பெட்டி மீது உட்கார்ந்திருந்தாள். அவளுக்கு வயது சுமார் பதினெட்டிருக்கும். கண்ணைப் பறிக்கும் சிவப்பு வண்ணத்தில் சேலையணிந்திருந்தாள். ரவிக்கை அணியும் வழக்கமில்லாத ஹரிஜனப் பெண்களைப் போலல்லாமல் அவள் ரவிக்கையும் அணிந்திருந்தாள். கிராமத்து வழக்கப்படி காதுகளில் சுத்தமான தங்கத்தினாலான ஏராளமான வளையங்கள் தொங்கிக் கொண்டிருந்தன. கால்களில் இருந்த கனமான வெள்ளிக் கொலுசுகள் அவளது ஒவ்வொரு அசைவுக்கும் ஒலியெழுப்பி தாங்கள் ருப்பதைக் காட்டிக் கொண்டிருந்தன.

குழுவிலிருந்த பெண்களனைவரும் அவளைப் பார்ப்பதும் தங்களுக்குள் கிசுகிசுத்துக் கொள்வதுமாயிருந்தனர். சங்கரபாண்டியனின் இரண்டாவது மனைவி அவள் என்றும் முதல் முதலாக எஸ்டேட்டுக்குப் போகிறாளென்றும் வள்ளியிடம் ஒருத்தி சொன்னாள். சங்கர பாண்டியனைத் தவிர அடிக்கடி அவளிடம் சென்று பேசிக் கொண்டிருந்த ஒரு இளைஞனைச் சுட்டிக்காட்டி “இதுதான் வெள்ளையன், அவளோட அண்ணன்” என்றாள் எஸ்டேட்டுக்குப் போய் பழக்கப்பட்ட ஒருத்தி. “சங்கரபாண்டியனுக்குக் கீழ அவன் கோல் மேஸ்திரியா இருக்கான்.”

“கோல் மேஸ்திரின்னா என்னக்கா?”

“பெரிய மேஸ்திரிக்குக் கீழ இருக்கிறவன் கோல் மேஸ்திரி. சங்கரபாண்டியன்கிட்ட மூணு கோல் மேஸ்திரிக இருக்காக. பாண்டிதான் அந்த எஸ்டேட்லயே பெரிய மேஸ்திரி. நூறு கூலிக்காரங்க அவங்கிட்ட இருக்காங்க. இருபத்தஞ்சி கூலிகளுக்குக் கொறவா வெச்சிருக்கற மேஸ்திரிகளுக்குக் கோல் மேஸ்திரி கெடயாது” அந்தப் பெண் விளக்கினாள்.

எங்கோ புறப்படுவதற்குத் தயாராக எழுந்து நின்ற சங்கரபாண்டியன், ‘ஏலே வெள்ளையா இங்கன வாடே” என்று அழைத்தான். “ரயிலு ரெண்டு மணிநேரம் கழிச்சுதான் வருதாமா. பக்கத்துல ஓட்டல்காரனுக்கு சோறு பொங்கி வெக்கச் சொல்லி கடுதாசு போட்டேன். போயி பாத்துட்டு வாரேன். இங்கன ஆளுங்க யாரும் காணாம போயிடாமப் பாத்துக்க.”

அதற்குள் சில குழந்தைகள் தரையிலேயே நீட்டிப்படுத்துத் தூங்கத் தொடங்கி விட்டிருந்தன. சற்று நேரம் கழித்துத் திரும்பி வந்த மேஸ்திரி எல்லோருக்கும் டிக்கெட் வாங்கி விட்டதாகவும், சாப்பாடு தயாராக வைக்கச் சொல்லித் தான் போட்ட கடிதம் கிடைக்காததால்

ஓட்டல்காரன் சாப்பாடு சமைக்கவில்லையென்றும் வேறு ஏதாவது ஏற்பாடு செய்வதாகக் கூறியிருக்கிறான் என்றும் சொல்லிவிட்டு எல்லோருக்கும் சாப்பாடு சரியாகக் கிடைக்கிறதா என்று பார்த்துக் கொள்ளும்படியும் வெள்ளையனுக்கு உத்தரவிட்டு விட்டு தன் புது மனைவியை அழைத்துக் கொண்டு ஓட்டலுக்குக் கிளம்பினான்.

அங்கே தாழ்த்தப்பட்ட சாதிகளைச் சேர்ந்தவர்களுக்குப் பரிமாறுவதற்காக ஒரு கூரையிடப்பட்ட பகுதியிருந்தது. அதில் நுழைந்த மேஸ்திரியை ஓட்டல் முதலாளி சிரிப்புடன் வரவேற்றார்."கங்காணி தோட்டத்துக்குத் திரும்பிப் போயிட்டிருக்கியா? இது யாரு?"

"இவளத்தான் ரெண்டாவதாகக் கட்டிக்கிட்டிருக்கேன். மூத்தவளோட தங்கச்சி. என் கடுதாசி கெடச்சுதா? புட்டு தயாராயிருக்கும்னு நெனக்கேன். உங்க ஆளுங்க ரெண்டு பேர புட்டுக் கூடையோட பிளாட்பாரத்துக்கு அனுப்பி பெரியவங்களுக்கு ரெண்டு ரெண்டு புட்டும், சின்னவங்களுக்கு ஒரேயொரு புட்டும் குடுக்கச் சொல்லுதீயளா! வரக்காபியும் குடுத்து அனுப்புங்க. ஒத்தாசைக்கு வெள்ளையனக் கூப்புட்டுக்கோங்க. அப்புறம் கூலியாளுங்ககிட்ட என்னோட கடுதாசு கெடக்கல அதனால சோறு பொங்கி வைக்கலன்னு மறக்காம சொல்லச் சொல்லிருங்க. இப்ப எங்க ரெண்டு பேருக்கும் சோறு போடுங்க.

முதலாளி பவ்யமாகத் தலையசைத்தபடி ஒருவனை அழைத்தான். "ஏலே பெருமாளு புட்டும் வரக்காபியும் கொண்டு போயி கூலிகளுக்குக் கொடுத்துடு. அப்புறம் கடுதாசி வந்து சேர்ந்துடுச்சு கங்காணி தான் சோறு பொங்க வேண்டாம் புட்டு சுட்டு வைக்கச் சொன்னாருன்னு மறக்காம சொல்லிடுலே என்னா?" சுற்றிலுமிருந்த சிப்பந்திகள் சிரிக்கத் தொடங்கினார்கள். சங்கரபாண்டியனும் அவர்களோடு சேர்ந்து சிரித்து விட்டு "சிரிப்பிருக்கட்டும், நான் சொன்னபடி சொல்லச் சொல்லிடுங்க"என்றான்.

"நானொன்னும் வெளாட்டு பண்ணல. எங்காளுங்க, முக்கியமா பெருமாள் பொய்யே சொல்லமாட்டான். அதவிட முக்கியம் இந்தப் பயலுக பொய் சொல்லி என் தொழிலக் கெடுக்க நான் ஒத்துக்கமாட்டன் தெரியும்லா?"

சங்கரபாண்டியனின் முகம் தொங்கிப் போனது. "எங்கிட்டயே இப்படிப் பேசறீயளே மொதலாளி! நான் எத்தன வருசமா எத்தன கூலிகளோட உங்க ஓட்டலுக்கு வந்திருப்பேன். எப்பவாவது பணம் குடுக்காம ஒரு ஒத்தாச கேட்டிருப்பனா?"

முதலாளி கெக்கெக்கெக் என்று சிரித்தான். "சும்மா ஒரு வெளாட்டு பண்ணினா இப்பிடி பயந்துட்டியே. நீ என்ன சொல்லச் சொல்லுதியோ அதத்தான் பெருமாள் சொல்லுவான் போதுமா?"

கருப்பன், வள்ளி உள்ளிட்ட கூலிகளுக்கு புட்டும் காபியும் வழங்கப்பட்டது. கூலிகள் எல்லோரும் கூச்சலும் கேலியும் கும்மாளமுமாக ஒரே உற்சாகத்துடன் விழா மனநிலையிலிருந்தனர். ஆனால் கணவன் மனைவிபோல் தோன்றிய இருவர் மட்டும் சுற்றி நடக்கும் எதிலும் சிரத்தையே இல்லாமல் எதையோ பறிகொடுத்தது போன்ற முகங்களுடன் ஒதுங்கி உட்கார்ந்திருந்தனர். புத்தம் புதிதாக உடையணிந்திருந்த மற்ற கூலிகளைப் போலல்லாமல் அவர்களது ஆடைகள் கந்தல் கந்தலாகக் கிழிந்து தொங்கிக் கொண்டிருந்தன.

அந்த ஆளின் உருவமே வித்தியாசமாகத் தோன்றியது. முகம் வெளுத்துப் போயிருந்தது. கைகால்கள் குச்சிகுச்சியாக வற்றிப் போயிருக்க வயிறு மட்டும் பானைபோல் வீங்கியிருந்தது.* அவர்கள் தங்களுக்குள் கூடப் பேசிக் கொள்ளவில்லை. அவர்களது இறுகிப் போன முகங்களையும் வெறித்த பார்வையும் பார்த்தால் பேசுவதையே மறந்து விட்டவர்கள் போல்தான் தோன்றியது.

கூட்டத்திலிருந்த ஓரிருவர் அந்த ஆளிடம் பேச்சுக் கொடுக்க முயன்று பார்த்தார்கள். அவன் வெறுமனே தலையை உலுக்கி ஆட்டிக் கொண்டானே தவிர ஒரு வார்த்தையும் பேசவில்லை.

இந்த இருவரும் முன்பே எஸ்டேட்டில் வேலை செய்து ஏராளமாகச் சம்பாதித்தவர்கள், அந்த ஆள் குடித்தும், சூதாடியும் எல்லாவற்றையும் தொலைத்து விட்டான். இப்போது சாப்பாட்டுக்கே வழியில்லாததால் சங்கரபாண்டியனிடம் கேட்டுக் கொண்டு திரும்பவும் மலைக்கு வருகிறார்கள் என்று வெள்ளையன் அவர்களது விசித்திரமான நடத்தைக்கு விளக்கமளித்தான்.

"இப்படி கைகால் அசைக்கவே முடியாத ஆளுகளைக் கூட்டிட்டுப் போய் என்ன செய்ய முடியும்?" யாரோ கேட்டார்கள்.

"தொரைகளைப் பத்தி ஒங்களுக்குத் தெரியாது. மலைல அவ்வளவு நல்ல ஆஸ்பத்திரி வெச்சிருக்காங்க. இந்த மாதிரி ஆளுகளையெல்லாம் மொதல்ல அங்கன கூட்டிட்டுப் போய் காசே இல்லாம வைத்தியம் பண்ணி அப்புறமா வேலைக்குச் சேர்த்துக்குவாங்க."

சுற்றி நின்று வெள்ளையன் உதிர்க்கும் ஒவ்வொரு சொல்லையும் ஆர்வத்துடன் கேட்டுக் கொண்டிருந்த கூலிகள் வெள்ளைத் துரைகளின்

இரக்க குணத்தை வியந்து வியந்து பாராட்டத் தொடங்கினார்கள்.

அந்த வாயே பேசாத மனிதன் இதைக் கேட்டு வழக்கம் போல் தலையைக் குலுக்கிக் கொண்டான். ஆனால் கண்களிலிருந்து கண்ணீர்த் துளிகள் உருண்டோடி ஒட்டிப் போயிருந்த கன்னங்களை நனைத்தன.

பார்த்துக்கொண்டிருந்தவர்கள் அவன் நன்றியுணர்ச்சியால் கண்ணீர் விடுவதாக நினைத்துக் கொண்டார்கள். வெள்ளையன் அவனருகே சென்றான். "ஏலே ரொம்ப முடியலயா. சரி வா. திங்கறதுக்கு இன்னும் ஏதாவது வாங்கித்தாரேன்" என்று அன்பொழுகப் பேசி அவனை நிலையத்திற்கு வெளியே அழைத்துச சென்றான்.

கூலிகளின் பார்வையிலிருந்து மறைந்ததும் வெள்ளையனின் முகத்தோற்றம் கடுமையாக மாறியது. அந்த ஆளின் கையை மூர்க்கமாகப் பற்றி ஒரு முறுக்கு முறுக்கியபடி அடித்தொண்டையில் உறுமினான்.

"எழவு வூட்டுல வெச்சுக்கற மாதிரி மூஞ்சிய தூக்கி வெச்சிட்டிருந்த தொலைச்சுபுடுவேன். யார்கிட்டயாவது ஏதாவது மூச்சு விட்ட எஸ்டேட்லயே கொன்னு பொதச்சுப்போடுவேன். புரியுதா?"

* (Pron bet ant)

வலியால் முகம் கோணிப்போயிருந்த அந்த ஆள் பரிதாபமாகத் தலையசைத்ததும் முதுகில் கை வைத்து ஒரு தள்ளு தள்ளினான். பின்பு பேயறைந்ததுபோல் விக்கித்து நின்ற அவன் மனைவியையும் கடுமையாக மிரட்டி பிளாட்பாரத்திற்குத் திரும்பியனுப்பினான்.

ரயில் வருவதை அறிவிக்கும் முதல் மணி அடித்தது. பழையபடி சாந்தமான முகத்துடன் வெள்ளையன் சுற்றிச் சுற்றி வந்து கூலிகளைத் தயார் படுத்தினான்.

"கொழந்தைங்கள இறுக்கமாக கைல புடுச்சுக்கோங்க. இல்லாட்டிக் கூட்டத்துல தொலஞ்சு போயிரும். நான் மொதல்ல ஒரு பெட்டில ஏறுவேன். பொம்பளைங்க பின்னால வரட்டும். பொறவு ஆம்பளைங்க.

கருப்பனும் வள்ளியும் அடக்க முடியாத ஆர்வத்தோடு காத்து நின்றனர். சங்கரபாண்டியனின் கூலிகளோடு வேறு பலரும் கூட்டத்திலிருந்ததாலும் எல்லோரும் முண்டியடித்துக் கொண்டிருந்ததாலும் யாராலும் ஒரே இடத்தில் நிற்க முடியவில்லை.

"தண்டவாளத்துக்குப் பக்கத்துல நிக்காதீக. வண்டி வரும்போது பயந்து போய் உள்ள வுழுந்திடுவீக." வெள்ளையன் விடாது கத்திக்

கொண்டேயிருந்தான்.

இரண்டாவது மணியடித்தது. தொலைவில் அடர்த்தியான கரும் பழுப்பு நிறத்தில் ஒரு புகைமண்டலம் தெரிந்தது. அது அவர்களை நெருங்கி நெருங்கி வந்தது. குப்குப்பென்று புகைவிட்டபடி ரயில் நிலையத்துக்குள் நுழைந்த ரயில் விநாடி நேரத்தில் பூமியதிர அவர்களைக் கடந்து சென்று நின்றது. ரயிலின் தோற்றம் அது எழுப்பிய பெருஞ்சத்தம் ஆகியவற்றால் அரண்டு போன பெண்கள் பெட்டியில் ஏறாமல் முரண்டு பிடித்தனர். வெள்ளையனும் மற்ற ஆட்களும் சேர்ந்து அவர்களைப் பலவந்தமாகப் பெட்டியில் திணித்து விட்டு தாங்களும் ஏறிக் கொண்டனர்.

சங்கரபாண்டியன் மனைவியைப் பத்திரமாக வேறொரு பெட்டியில் உட்கார வைத்துவிட்டு இங்கே வந்து தலைகளைத் தானே எண்ணிப் பார்த்துக் கொண்டான். பின்பு யாரையும் வெளியே விடக் கூடாது என்று வெள்ளையனுக்கு உத்திரவிட்டு விட்டு மனைவியுடன் போய்ச் சேர்ந்து கொண்டான்.

பெட்டியில் கூட்டம் நெரிந்தது. சிலருக்கு இடம் கிடைத்தது. மற்றவர்கள் மூட்டைகளைக் கீழே போட்டு அவற்றின் மீது உட்கார்ந்து கொண்டனர். சில நிமிடங்களில் திரும்பவும் மணியடித்தது. எங்கிருந்தோ கார்டு விசிலடிக்கும் ஓசை கேட்டது. என்ஜின் பலமாகச் சீழ்க்கை அடித்து அதற்குப் பதிலளித்துவிட்டு, ஒரு குலுக்கலுடன் கிளம்பியது. இதைக் கொஞ்சங்கூட எதிர்பார்க்காததால் எதிரெதிரே உட்கார்ந்திருந்தவர்கள் ஒருவர் மீது ஒருவர் மோதிக் கொண்டனர். எல்லாமே அவர்களுக்கு இன்பமாகவும் உற்சாகமூட்டுவதாகவுமே இருந்தது.

“டகா டக் டகா டக்” ரயில் நகரத் தொடங்கியது. பிளாட்பாரத்தில் நின்று கொண்டிருந்தவர்கள் தாங்களாகவே பின்னால் செல்வதைக் கண்டு ஜன்னலோரம் உட்கார்ந்திருந்தவர்களால் வியப்பால் திறந்த வாயை மூடவே முடியவில்லை. ரயில் வேகம் பிடித்தது. மரங்களும், வீடுகளும், எதிர்திசையில் பின்னோக்கிப் பாய்ந்து சென்றன. ஜன்னல் வழியே வெளியே எட்டிப் பார்க்க ஒரு பெரிய போராட்டமே நடந்தது.வெளியே வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த ஒரு சிறுமி திடீரென்று அலறினாள். “கண்ணுல ஏதோ விழுந்துட்டு”

“ஒண்ணுமில்ல ஒண்ணுமில்ல. கரித்தூள் விழுந்திருக்கும். ஊதிவிடுலே சரியாயிடும்” என்று வெள்ளையன் சிறுமியின் அப்பாவிடம் கூறிவிட்டு என்ஜின் இருக்கும் திசையில் பார்க்க வேண்டாம் என்று மற்றவர்களை எச்சரித்தான். கண்ணில் விழுந்த கரித்தூளை அப்பா ஊதிப் போக்கியதும் சிறுமி மீண்டும் உற்சாகத்துடன் வெளியே பார்க்கத்

தொடங்கி விட்டாள்.

கொஞ்சம் கொஞ்சமாக முதல் ரயில் பயணத்தால் ஏற்பட்டிருந்த பிரமிப்பு அடங்கிய பின்புதான் பெட்டிக்குள் குமைந்த வெக்கை அவர்களுக்கு உறைத்தது. ஆண்கள் முதலில் உருமாலைகளையும், பின்பு மேல் சட்டைகளையும் கழற்றி விட்டனர். பெண்களுக்கோ மௌனமாகச் சகித்தக் கொள்வதைத் தவிர வேறு வழியில்லை. ரயில் சாத்தூரில் நின்றது. ஆனால் இரண்டு நிமிடம்தான் நிற்கும். யாராவது இறங்கினால் விட்டு விட்டுப் போய்விடும் என்று வெள்ளையன் அச்சுறுத்தும் தொனியில் கூறி யாரையும் இறங்க விடவில்லை.

வண்டி ஓடிக் கொண்டிருக்கும்போது வெக்கையை ஓரளவுக்கு சகித்துக் கொள்ள முடிந்தது. ஆனால் சுட்டெரிக்கும் வெயிலில் வெட்ட வெளியில் வண்டி நிற்கும்போது மரங்களில் ஒரு இலைகூட அசையாதபோது, கடும் கோடை நாட்களில் வயல்களில் உழைத்துப் பழகிய அவர்களுக்கேக் கூட பெட்டிக்குள்ளிருப்பது நரகம் போலிருந்தது. ஒரு வழியாக வண்டி நகரத் தொடங்கியதும் நிம்மதிப் பெருமூச்சு விட்டனர். ஆனால் அது ஒன்றும் பெரிய விடுதலையைத் தரவில்லை. உள்ளிருந்த வெக்கை மூச்சுத் திணறச் செய்தது. குழந்தைகள் தண்ணீர் கேட்டு அழத் தொடங்கின. “இங்க எங்கயும் தண்ணி கெடைக்காது. விருதுபட்டி (விருதுநகர்) போன பொறவுதான் தண்ணி. நாலு மணிக்குள்ள போயிடலாம்” என்றான் வெள்ளையன். குழந்தைகள் அழுதழுது தூங்கத் தொடங்கின.

ரயில் விருதுபட்டியை வந்தடைந்ததும் பெட்டியிலிருந்த பயணிகள் சிலர் இறங்க வேண்டியிருந்தது. அவர்கள் மிகுந்த சிரமத்துடன் தங்கள் மூட்டைகளை எடுத்துக் கொண்டு கதவை அடைந்தனர். கதவு திறக்கப்பட்டது. கதவை அடைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தவர்கள் இறங்குபவர்களுக்கு வழிவிடுவதற்காக பிளாட்பாரத்தில் இறங்கினர்.

அடுத்த வினாடி வெளியே காத்துக் கொண்டிருந்த பயணிகள் கண்மூடித்தனமான வேகத்துடன் கதவின் மீது பாய்ந்து உள்ளே புகத் தொடங்கினார்கள். இறங்குபவர்கள் அவர்களைத் தள்ளி விட்டுவிட்டு இறங்க முயன்றனர். எந்த வரைமுறையுமில்லாமல் மனித உடல்கள் ஒன்றின்மீது ஒன்று மோதி நசுக்கவும் தள்ளவும் செய்ய சட்டைகள் கிழிபடுவதும் பொத்தான்கள் தெறிப்பதும் வசவுகள் தாராளமாகப் பரிமாறிக் கொள்ளப்படுவதுமாக ஒரு ஐந்து நிமிடம் கடும் போராட்டமே நடந்தது. இறுதியில் இறங்க விரும்பியவர்கள் இறங்கி விட்டனர். ஆனால் அவர்களைவிட அதிகமான நபர்கள் உள்ளே வந்து விட

நெரிசல் இன்னும் அதிகமானது. போதாக்குறைக்கு இன்னும் பலர் பெட்டியில் ஏற கடும் முயற்சி செய்து கொண்டிருந்தனர்.

பெட்டிக்குள் இருப்பவர்கள் கும்பலுக்கு மேல் எப்படியோ தலையை நீட்டி உள்ளே கொஞ்சம்கூட இடமில்லை என்று உள்ளே வரப் போராடிக் கொண்டிருப்பவர்களைப் பார்த்து தொண்டை கிழியக் கத்தினர். பெரும் சுவர்போல் மறித்து நின்ற மனித உடல்களுக்கு நடுவே இடைவெளிகளைக் கண்டுபிடித்து உள்ளே நுழைய முயன்று கொண்டிருந்தவர்களோ தாங்கள் அடுத்த நிலையத்தில் இறங்கி விடுவதாகவும் கால் வைப்பதற்குக் கொஞ்சம் இடம் கிடைத்தால் போதும் என்றும் ஒரே குரலில் பதிலுக்கு கூச்சலிட்டுக் கொண்டிருந்தனர்.

இத்தனை களேபரங்களுக்கும் காதைப் பிளக்கும் கூச்சலுக்கும் நடுவே எதைப் பற்றியும் துளிகூடக் கவலையே படாமல் கார்டும், பயணச்சீட்டுப் பரிசோதகர்களும், மற்ற ரயில் நிலைய ஊழியர்களும், ஏதோ மோனத்திலாழ்ந்தவர்கள் போல பிளாட்பாரத்தில் மேலும் கீழும் நடந்து கொண்டிருந்தனர்.இந்த அல்லோலகல்லோலங்கள் எல்லாம் கொஞ்சம் ஓய்ந்து ஒவ்வொருவரும் உட்காருவதற்கோ, நிற்பதற்கோ, தொங்குவதற்கோ இடம் தேடிக் கொண்டதும், கருப்பனும் அவனது புத்தம் புது நண்பர்களும் தாகத்தைத் தணித்துக் கொள்ளத் தங்களைக் கீழே இறங்க அனுமதிக்க வேண்டுமென்று வற்புறுத்தினர்.

“முடியவே முடியாது. வுடவே மாட்டேன். மேஸ்திரி சொல்லியிருக்குதாரு”

இதைக் கேட்டு ஏற்கனவே தேம்பிக் கொண்டிருந்த குழந்தைகள் வீறிட்டு அழத் தொடங்கின. வேறு சில பயணிகளும் கூலிகளுக்குப் பரிந்து வந்தனர். “என்னலே இது. கொழந்தைங்க தண்ணி வேணும்னு அழுகுது நீ இறங்க வுடமாட்டேங்குத?” என்றார் ஒரு முதியவர். கூலிகளுக்கு ஆதரவு கூடுவதைக் கண்ட வெள்ளையன் அக்கறையோடு பரிந்து பேசும் தோரணையை மேற்கொண்டான்.

“இவங்க எல்லாரும் மொதமொதலா ரயிலுல போறவுக. கீழிறங்கினா அங்கயிங்க சுத்தி காணாமப் போனாலும் போயிருவாங்க.”

“கால் மணிநேரம் வண்டி நிக்கும்லா போயிட்டு வரட்டும் வுடுலே!” பெரியவர் தொடர்ந்து வற்புறுத்தினார்.

வேறு வழியில்லாமல் வெள்ளையன் தானே அவர்களை அழைத்துச் செல்வதாகக் கூறி இறங்கினான். கூலிப்பட்டாளம் முழுக்க

வண்டியிலிருந்து இறங்கியது. பயணிகளுக்குத் தண்ணீர் கொடுக்க நிர்வாகம் நியமித்திருந்த சிப்பந்தி தண்ணீர் ஊற்ற இருகைகளாலும் ஏந்திக் குடித்ததும் தொண்டையை அறுத்துக் கொண்டிருந்த தாகம் தணிந்தது. பின்பு வெள்ளையன் அவர்களை ஆட்டு மந்தையைப் போல ஓட்டிச் சென்று பெட்டியில் அடைத்தான். மாலை மயங்கும் வேளையில் வண்டி மதுரையை அடைந்தது.

விருதுபட்டியில் நடந்த களேபரம் இம்மி பிசகாமல் திரும்பவும் அரங்கேறியது. ஏறுபவர்களுக்கும் இறங்குபவர்களுக்கும் இடையே தொடர்ந்து பதினைந்து நிமிடங்களுக்கு கடும்போர் நடைபெற்றது. பெண்களும் குழந்தைகளும், முதியவர்களும் மீண்டும் ஒருமுறை துவைத்தெடுக்கப்பட்டனர்.

“இட்லி வடை, காபி” பையன்கள் கத்திக் கொண்டே ஓடினர். வேறு சிலர் “தயிர்சாதம், சாம்பார் சாதம்” என்று கூச்சலிட்டனர். வெற்றிலை பாக்கு பீடிகளைக் கூவி விற்றனர் சிலர். சில பூ வியாபாரிகள் “மல்லிகைப்பூ, ரோசாப்பூ” என்று சினேகமாகப் பேசி விற்க முயன்றனர். பிளாட்பாரத்தில் கனமான பெட்டிகளைச் சுமந்து கொண்டிருந்த போர்ட்டர்கள் பின்தொடர சில பயணிகள் மேலும் கீழும் அலைந்து கொண்டிருந்தனர். சங்கரபாண்டியன் பெட்டிக்கு வந்து எல்லாம் சரியாக இருக்கிறதா என்று விசாரித்தான். எல்லோரும் நல்ல மனநிலையில் இருப்பதாக வெள்ளையன் பதிலளித்ததும் “சீக்கிரம் திண்டுக்கல் ஜங்ஷன் வந்து விடும்; அங்கே சாப்பிடலாம்” என்று சொல்லிவிட்டுக் கிளம்பினான். இவர்களது வண்டி அரை மணி நேரத்திற்கு மேலாக நின்று கொண்டிருந்தது.

அடுத்த பிளாட்பாரத்தில் இன்னொரு ரயில் நின்று கொண்டிருந்தது. அது விருதுபட்டிக்குப் போகிறது என்று வெள்ளையன் சொன்னான். திடீரென்று வண்டி குலுங்கியது. சிலர் உருண்டு விழுந்தனர். “ரயிலோட என்ஜினைக் கொண்டு வந்து சேக்கறாங்க. இப்ப கௌம்பிடும்”

திண்டுக்கல் வந்து சேரும்போது இரவு மணி ஒன்பதாகி விட்டிருந்தது. வெள்ளையன் வழக்கம் போல முதலில் பெண்களையும், குழந்தைகளையும், பின்பு ஆண்களையும் இறங்கச் செய்தான். பின்பு குழு ரயில் நிலையத்திற்கு வெளியே இருந்த ஒரு ஓட்டலுக்கு அழைத்துச் செல்லப்பட்டு சாப்பாடு வாங்கித் தரப்பட்டது. மேஸ்திரி வழக்கம் போல மனைவியுடன் வேறு ஓட்டலுக்குச் சென்று விட்டான். பின்பு குழு முழுவதும் திரும்பவும் பிளாட்பாரத்திற்கு அழைத்து வரப்பட்டது.

“தூக்கம் வந்தா இங்கனயே படுத்துத் தூங்குங்க. பொள்ளாச்சி வண்டி

வந்ததும் எழுப்புதேன்”

சிலர் துணிகளை தரையில் விரித்துத் தூங்கத் தொடங்கினர். வேறு சிலர் தங்களை மறந்து வேடிக்கை பார்த்துக் கொண்டேயிருந்தனர். பொள்ளாச்சி போகும் வண்டி காலியாக வந்து நின்றதும் வெள்ளையன் எல்லோரையும் எழுப்பி ஒரே பெட்டியில் ஏற்றி விட்டான். இந்த வண்டியில் மற்ற பயணிகள் மிகச் சிலரே இருந்ததால் கூலிகளுக்கு பெட்டி முழுவதும் தாங்களே இருப்பது போலத் தோன்றியது. பெட்டியில் இடமிருந்தும்கூட மேஸ்திரி வழக்கம் போல மனைவியோடு வேறு பெட்டியில் ஏறிக் கொண்டான்.

வெள்ளையன் பெட்டிகளை வைக்கும் பலகைகளைக் காட்டி அதன் மீது கூடப் படுத்துக் கொள்ளலாமென்றதும் சிலர் தாவி ஏறிப்படுத்து குறட்டை விடத் தொடங்கினர். பெண்களும் குழந்தைகளும் கிடைத்த இடங்களில் நீட்டிப் படுத்துக்கொண்டனர். எதையும் பார்க்காமல் அனுபவிக்காமல் விட்டு விடக்கூடாது என்ற உறுதியில் தூக்கம் வரவில்லையென்று சொல்லிவிட்டு விரைப்பாக உட்கார்ந்திருந்தவர்களைக் கூட சீக்கிரமே தூக்கம் ஆட்டத் தொடங்கியது. அவர்கள் தூங்கிப் பக்கத்திலிருந்தவர்கள் மேல் விழுந்து விட்டு பின்பு அசட்டுச் சிரிப்புடன் எழுந்து தாங்கள் தூங்கவே இல்லையென்று சாதித்தனர். பழனி ரயில் நிலையம் வந்ததும் வெள்ளையன் எல்லோரையும் எழுப்பிக் குன்றின் மீது தெரிந்த கோவிலைக் காட்டினான். அத்தனை பேரும் பய பக்தியுடன் கன்னத்தில் போட்டுக் கொண்டு கூப்பிய கைகளுடன் பழனியாண்டவரைத்தொழுதனர்.

விடியற்காலையில் ரயில் பொள்ளாச்சியை அடைந்தது. வெள்ளையன் தலைகளை எண்ணிச் சரிபார்த்த பின்பு ரயில் நிலையத்திற்கு முன்பிருந்த ஒரு முற்றத்திற்கு அழைத்துச் சென்றான். அங்கு பல் விளக்கி முகம் கழுவிக் கொள்ள ஒரு தண்ணீர்க் குழாயிருந்தது. ஓர் ஓட்டலில் காலையுணவு முடிந்தபின்பு எல்லோரும் ஒரே இடத்தில் குழுமியதும் வெள்ளையன் முன்னால் வந்து நின்று ஏதோ பொதுக் கூட்டத்தில் பேசுவது போல் உரத்துப் பேசத் தொடங்கினான்.

“இங்கன ஒரு கடைல சோறு பொங்க சட்டி பானையும் அரிசியும் வாங்கித் தாரேன். கொழந்தைகளுக்கு ஏதாவது வேணும்னாலும் இங்கனயே வாங்கிடுங்க. பொள்ளாச்சி தாண்டிட்டா நல்ல கடை எதுவுமே கெடயாது.”

கடையில் ஒவ்வொரு கூலிக்கும் ஒரு மண்பானையும், கொஞ்சம்

அரிசியும், உப்பும் மிளகாய்களும் வழங்கப்பட்டன. சிலர் குழந்தைகளுக்குக் கடலை பொரி வாங்கிக் கொண்டனர். உடல்நிலை சரியில்லாத ஆளும் அவன் மனைவியும் தேயிலைத் தோட்டங்களுக்கு சாமான் ஏற்றிச் செல்லும் மாட்டு வண்டிகளில் ஒன்றில் ஏற்றி விடப்பட்டனர்.

“மேஸ்திரி எங்கே காணமே?” என்றான் ஒரு கூலி.

“அவரு மாட்டு வண்டியில நமக்குப் பின்னாடியே வந்திட்டிருப்பாரு”

இறுதிகட்டமாக ஆனைமலைகளை நோக்கிய நெடிய பயணம் தொடங்கியது.

# 2

நான் சொல்லும் நடைக்கும் உடற்பயிற்சிக்கும் ஒரு சம்மந்தமும் இல்லை. உடற்பயிற்சிக்கான நடை என்பது ஒரு மருந்தைப் போல குறிப்பிட்ட நேரங்களில் நோயுற்றவர்கள் செய்வது; நான் சொல்லும் நடை உற்சாகமும், சாகசமும் நிறைந்தது.

-வாக்கிங் தோரு

வளமான எதிர்காலம் காத்திருக்கும் ஒரு புதிய இடத்திற்குப் போகிறோம் என்ற நம்பிக்கையோடு அவர்கள் உற்சாகமாக நடக்கத் தொடங்கினர். ரயில் பயணத்தின்போது ஒவ்வொருவரும் மற்றவர்களின் பெயரையும் ஊரையும் ஏன் குடும்பத்தின் சுருக்கமான பின்னணியையும்கூட தெரிந்து கொண்டிருந்தனர். எனவே வாழ்நாள் முழுவதும் தாங்கள் பழகி வந்திருப்பதாகவே அவர்களுக்குத் தோன்றியது. புதிய நட்பும் நம்பிக்கையும் தந்த இன்பமான மனநிலையில் அவர்கள் சிரித்துப் பேசியும் நையாண்டி செய்து கொண்டும் வாக்களிக்கப்பட்ட நிலத்தை நோக்கி முன்னேறிக் கொண்டிருந்தனர். சமத்தூர் என்ற கிராமத்தைக் கடந்து வேடசந்தூர் என்ற சின்னஞ் சிறிய கிராமத்துக்கு வந்து சேர்ந்ததும் வெள்ளையன் வெல்லம் வாங்கித் தந்தான். உணவருந்தி விட்டு கிராமக் கிணற்றில் இருந்து தண்ணீர் எடுத்து கைகால் கழுவிக் கொண்டு பயணத்தைத் தொடர்ந்தனர். அடுத்து பாலாறு என்ற ஒரு சிற்றாறு குறுக்கிட்டது. அதன் கரைகளில் சற்று தங்கி கண்ணாடி போன்ற தண்ணீரைக் குடித்து தாகத்தைத் தணித்துக் கொண்டதோடு நீரின் குளுமையில் மயங்கிப் பலர் திரும்பவும் முகம், கை, கால்களைக் கழுவிக் கொண்டனர். பெரியவர்கள் கரைகளில் ஓய்வெடுக்க குழந்தைகள் நீரில் இறங்கி விளையாடத் தொடங்கினர். மாலை நெருங்குகையில் ஐந்து மைல் தொலைவிலிருந்த அங்கலக்குறிச்சி என்ற கிராமத்துக்கு போய் சேர்ந்துவிட வேண்டும் என்று வெள்ளையன் அவசரப்படுத்தினான். அங்குதான் இரவு தங்க வேண்டியிருந்தது. பெரும்பாலான பெண்களும், குழந்தைகளும் நாள் முழுவதும் வெயிலில் நடந்து வந்ததால் மிகவும் களைத்துப் போயிருந்தனர். அவர்களை அடிக்கடி அவசரப்படுத்த வேண்டியிருந்தது. சாலையின் இருபுறத்திலும் வளர்ந்திருந்த ஒருவகைக் கள்ளிச் செடிகளில் கொத்துக் கொத்தாகச் சிவப்பு நிறப் பழங்கள் காணப்பட்டன. அது சாப்பிடுவதற்கு அற்புதமாக இருக்குமென்று வெள்ளையன் சொல்லவே அவர்கள் அந்தப்

பழங்களைப் பறித்துக் கொண்டனர். அந்தச் சுவை உண்மையாலுமே புத்துணர்வூட்டுவது போல் தோன்றியது.

இரவு கவியும் வேளையில் அங்கலக் குறிச்சி கண்ணுக்குத் தென்பட்டது. சாலை ஓரத்தில் ஒரு சிறிய கோவிலும் அதைச் சுற்றி ஒரு பெரிய திறந்தவெளியும் இருந்தது. பெண்கள் அருகே கிடந்த கற்களைக் கொண்டு சமையலுக்கு அடுப்பு மூட்டினர். ஆண்கள் காடுகளுக்குள் சென்று எரிப்பதற்கு விறகு கொண்டு வந்தனர். அருகில் இருந்த சிறிய கடையில் சிலர் சாமான்கள் வாங்கிக் கொண்டனர். பெண்கள் சமைக்கத் தொடங்கியதும் ஆண்கள் சிறு சிறு குழுக்களாக உட்கார்ந்து பேசத் தொடங்கினர். குழந்தைகள் அந்தக் குழுக்களைச் சுற்றி ஓடி விளையாடிக் கொண்டிருந்தன. உணவு தயாரானதும் அதில் பாதி காலை உணவுக்காக பத்திரப்படுத்தப்பட்டது. அந்த கிராமத்தின் வீடுகள் சாலையை ஒட்டியே கட்டப்பட்டிருந்ததால் பெண்கள் அந்த சுவர்களை ஒட்டி தங்களுக்கு படுக்கை விரித்துக் கொண்டனர். ஆண்கள் அவர்களை அடுத்து படுத்துக் கொண்டனர்.

திறந்த வெளிகளில் தூங்கிப் பழக்கப்படாத வள்ளி கொஞ்சம் பயந்தாள். ஆனால் தோளைச் சுற்றிக் கிடந்த கருப்பனின் கை ஒரு பாதுகாப்புணர்ச்சியைத் தர விரைவிலேயே உறக்கம் அவளைத் தழுவிக் கொண்டது. பொழுது புலர்வதற்கு முன்பே வெள்ளையன் அவர்களை எழுப்பினான். அவன் கொண்டு வந்திருந்த லாந்தர் விளக்கின் ஒளியில் அவர்கள் துணிமணிகளை மடித்துக்கொண்டு பயணத்தின் இறுதிக் கட்டத்தை தொடங்கினர். “போகும்போது பக்கத்துல ஒரு ஆறு இருக்கு அங்கபோய் சாப்புட்டுக்கலாம்” சில குழந்தைகள் இன்னும் எழுந்திருக்கவில்லை. பெற்றோர்கள் அவர்களைத் தூக்கித் தோளில் போட்டுக் கொண்டு நடக்கத் தொடங்கினர். நடக்க நடக்க காட்டிலிருந்து வந்த ‘கிறீச்’என்ற ஓசை பெண்களை பயமுறுத்தியது. அவை வேறொன்றுமில்லை மயில்கள்தான், காட்டில் ஒன்றை ஒன்று அழைத்துக் கொள்கின்றன என்று வெள்ளையன் ஆசுவாசப்படுத்தினான். விடியும் வேளையில் ஆறு தென்பட்டது. பல்தேய்த்து விட்டுச் சில்லென்று குளிர்ந்து போயிருந்த ஆற்றில் முகம் கழுவக் கை வைத்ததும் உடல் சிலிர்த்துப் போனது.

எதிர்கரையில் சில ஆட்கள் மாடுகளுக்குத் தண்ணீர் காட்டிக் கொண்டிருந்தனர். அது தேயிலை தோட்டத்திற்கு செல்லும் மாட்டு வண்டிகள் என்றும், பயணத்திற்கு முன்பு காளைகளுக்குத் தண்ணீர் காட்டிக் கொண்டிருக்கின்றனர் என்றும் வெள்ளையன் விளக்கினான். திரும்பவும் நடையைத் தொடர்ந்தபோது எதிர்க்கரையில் பத்து

பனிரெண்டு மூடிய மாட்டு வண்டிகள் தென்பட்டன. புறப்படத் தயாராக இருந்த ஒவ்வொரு வண்டியிலும் கூரை வரை சாக்கு மூட்டைகளும் சாமான்களும் நிறைந்திருந்தன. ஒவ்வொரு வண்டியிலும் நன்கு உடையணிந்த நான்கைந்து ஆட்கள் சாக்கு மூட்டைகளின் மீது படுத்திருந்ததைக் காண முடிந்தது. அவர்கள் தோட்டங்களில் வேலை செய்யும் எழுத்துப் பணியாளர்கள் மற்றும் பணக்கார மேஸ்திரிகள் என்றும், நடக்க விரும்பாதவர்கள் இப்படித்தான் எஸ்டேட்டுக்குப் போக வேண்டும் என்றும் வழக்கம் போல வெள்ளையன் விளக்கினான். வண்டிகளில் கூரை வரை சாமான்கள் நிறைந்திருந்ததால் அவர்கள் படுத்த நிலையிலேயே பயணம் செய்ய வேண்டியிருந்தது... வேட்டியும் சட்டையும் அணிந்திருந்த ஒரு வயதான ஆள் வண்டியில் ஏறுவதற்கு முன் வெள்ளையனைப் பார்த்து விட்டார். “ஏலே! வெள்ளையா, பெரிய பட்டாளத்தோட வரமாரி இருக்கு எத்தன கூலிகளப்பா கூட்டிக்கிட்டு வார?” என்றார்.

வெள்ளையன் திடீரென்று பணிவான தோற்றத்திற்கு மாறி குனிந்து வணங்கினான். “சலாம் ஐயா, முப்பது கூலிங்க வராங்க. எல்லாம் புது ஆளுங்க. இன்னொரு கூட்டம் இன்னும் ரெண்டு வாரத்தில வருது”

“சங்கரபாண்டியன் எப்போ வாரான்?”

“பொஞ்சாதியக் கூட்டிகிட்டு பொறவால வார வண்டில வாராரு.”

“எந்தப் பொஞ்சாதி? மூத்தவளா? இளையவளா?”

“சொத்துக்களைப் பாத்துகிடதுக்கு மூத்தவ ஊருலயே தங்கிட்டா. ரெண்டாங்குடிதான் கூட வாறா” என்று வெள்ளையன் சொன்னதும் விடைபெறும் விதத்தில் கையசைத்து விட்டு அந்த ஆள் வண்டிக்குள் தன்னைத் திணித்துக் கொண்டார்.

“சலாம் ஐயா” வெள்ளையன் மீண்டும் மிகுந்த பணிவுடன் வணக்கம் செலுத்தினான். வண்டித்தொடர் கடந்து போகும்வரை காத்திருந்து விட்டு கூலிகளிடம் திரும்பினான்.

“இவருதான் நம்ம தோட்டத்து பெரிய காட்டு ஐயா (Head field Writter). இங்க எல்லாமே இவருதான். பெரிய துரை (General Manager) இவர் என்ன சொன்னாலும் கேட்பாரு. நம்ம தலைவிதி இவரு கையில தான் இருக்கு. அவருக்கு கோவம் வராம பாத்துக்கணும். அப்புறம் பாருங்க தோட்டத்துல எழுத்து வேலை செய்யறவங்கள எப்பப் பாத்தாலும் ‘சலாம் ஐயா’ என்று வணக்கம் போடணும். துரையை (manager) பார்த்தா ‘சலாம் துரைகளே’ என்று சொல்லி வணக்கம் போடணும். இதை மட்டும்

மறந்திராதிங்க.” என்று வெள்ளையன் சொன்னான்.

கூட்டத்தில் இருந்த யாரோ ஒருவர்“எழுதறதுக்கு தோட்டத்துல நெறய ஆளு இருக்குமோ?” என்று கேட்டார்.

“ஆமா, காட்டுல பெரிய காட்டு ஐயாவும், சின்ன காட்டு ஐயாவும் இருப்பாக. ஆபீசில ஒரு பெரிய ஆபீசு ஐயாவும் இரண்டு சின்ன ஐயாவும் இருப்பாங்க. ஃபாக்டரியில பெரிய டீ மேக்கர் ஐயாவும், சின்ன டீ மேக்கர் ஐயாவும் இருப்பாங்க. ஆஸ்பத்திரியில டாக்டர் ஐயா இருப்பாரு.”

விரைவில் அவர்கள் குழு மலைகளுக்குள் நுழைந்தது. பாதை மேலேமேலே மேலே வளைந்து நெளிந்து சென்றது. சில இடங்களில் மேலே செல்லும் பாதை தங்களுக்கு இணையாக நெருக்கமாக வருவதையும், சில இடங்களில் விலகிச் செல்வதையும் அவர்கள் கண்டனர். இந்த வளைவுகளை கொண்டை ஊசி வளைவுகள் என்றும், இந்த மலைப் பாதையில் அவை நிறைய உள்ளன என்றும் வெள்ளையன் தெரிவித்தான். சாலைக்கு ஒருபுறம் மலை செங்குத்தாக உயர்ந்து நிற்க மறுபுறம் ஆழமான பள்ளத்தாக்குகளை நோக்கிச் சரிந்தது. அந்த ஆழங்காண முடியாத பள்ளத்தாக்குகளில் வளர்ந்திருந்த பெரும் பெரும் மரங்களின் உச்சிகளை மட்டுமே பாதையிலிருந்து பார்க்க முடிந்தது. கீழே எங்கோ தண்ணீர் சுழித்தோடும் ஓசை கேட்டது.

முதல் இரண்டு மைல் தூரத்திற்கு பாதை அவ்வளவு செங்குத்தாக இல்லை. இதமான சூரிய ஒளியில் நடப்பது இனிமையானதாகவும், உற்சாகமூட்டுவதாகவும் இருந்தது. அவர்களில் பெரும்பாலானவர்கள் ஒருநாளும் காடுகளுக்கு நடுவே வந்திராதவர்கள் என்பதால் இந்தப் புது அனுபவம் ஒரு உல்லாசமான மனநிலையைக் கொடுத்தது.

“காட்டுக்குள்ள மட்டும் போயிராதீங்க.” வெள்ளையன் முன்னாலிருந்து தொண்டை கிழியக் கத்திக் கொண்டேயிருந்தான். “காட்டுக்குள்ள சிறுத்தப் புலிகளும் நெறய மிருகங்களும் இருக்கும். கொன்னே போடும். தாகம் எடுத்தா எங்கிட்ட சொல்லுங்க. சில பத்திரமான எடங்க இருக்கு. அங்க நிக்கலாம்.”

காட்டு விலங்குகளைப்பற்றிக் கேட்டு பெண்களும், குழந்தைகளும் பீதியடைந்தனர். நிறைய மனிதர்கள் இருக்குமிடத்திற்குக் காட்டு மிருகங்கள் வராது என்று அவன் பெண்களுக்கு தைரியமூட்டினான்.

“குரங்கு” ஒரு இளைஞன் ஒரு மரத்தின் உச்சியைப் பார்த்துக் கத்தினான். சில குரங்குகள் கூட்டமாக மரத்துக்கு மரம் தாவிச் சென்று

கொண்டிருந்தன. "இன்னும் ஒசரத்துக்குப் போகும்போது இதைவிட பெரிய கருங்கொரங்குகளைப் பார்க்கலாம். அது ஆந்தை மாதிரி அலறும்."

"தோட்டத்துலயும் காட்டு மிருகங்கள் இருக்குமோ?" யாரோ ஒருவன் விசாரித்தான்.

"நெறய இருக்கு. சிறுத்தப்புலி, காட்டெருமை, காட்டுப் பன்னி யானைகூட காட்டச்சுத்தி இருக்கு. ராத்திரி நேரத்துல எஸ்டேட்டுக்கு உள்ளார கூட வந்துரும். தோட்டத்துல இருக்கும்போது காட்டுக்குள்ள எப்பவும் ரொம்ப தூரமா போயிரக் கூடாது. ஒரு வேளை மிருகங்கள் வந்தாலும் வரும். சாயந்தரத்துல கூட நாம குடியிருக்கிற லைன்ல இருந்து ரொம்ப தூரம் போயிரக்கூடாது."

"வெடியக் காலைல வேலைக்கு போம்போது நம்மள அடிச்சுப் போடாதோ?" ஒரு பெண் கேட்டாள்.

"நெறயப்பேரு ஒண்ணாத்தானே வேல பாப்பாக. கூட்டமா சனங்க இருந்தா மிருகங்கள் வராதுன்னு மொதல்லயே சொன்னமில்லா. அப்பறம் காட்டு மிருகங்கள் பகல்ல வெளிய வராது. காட்டுப்பன்னி மட்டும் பகல்ல வந்தாலும் வரும். அது ரொம்ப மோசமானது. மனுசன குத்திக் கிழிச்சுப் போட்டுரும். வேல செய்யற எடத்துலருந்து தனியாவோ ரொம்ப தூரமோ போகக்கூடாது, என்ன?"

"காட்டுப் பன்னி நம்ம ஊர் பன்னி மாதிரி இருக்குமா?"

"அதவிட ரொம்பப் பெருசா கொடூரமா இருக்கும். கோவம் வந்தா மனுசன தொரத்தி தொரத்திக் கொன்னு போட்டுடும்"

வெயில் அதிகரிக்க அதிகரிக்க செங்குத்தான மலைப் பாதையில் ஏறியதில் அவர்கள் களைத்துப் போய்விட்டனர். எனவே ஒரு ஓடைக்கருகே காட்டின் நடுவே இருந்த திறந்தவெளியில் குழு ஓய்வெடுத்துக் கொண்டது. குளிர்ந்த, தெளிந்த ஓடையில் முகம் கழுவி களைப்பைப் போக்கிக் கொண்டு நடையைத் தொடர்ந்ததில் மதிய வேளையில் அட்டகட்டி வந்தடைந்தனர். அங்கே ஐந்தாறு வீடுகளும் ஒரே ஒரு டீக்கடையும் இருந்தன. "இங்கனயே பொங்கி சாப்புட்டுட்டுப் பொறவு போலாம்." என்றான் வெள்ளையன். மேலிருந்து வருபவர்களும், கீழிருந்து மேலே போகின்றவர்களும் தங்கி ஓய்வெடுத்துச் செல்லுமிடம் அட்டகட்டி. பொள்ளாச்சிக்குப் போய்க்கொண்டிருந்த சில வியாபாரிகளும் அங்கே சமைத்துக் கொண்டிருந்தனர். சாப்பிட்டுவிட்டு, உணவில் ஒரு பகுதியை இரவுக்குப்

பத்திரப்படுத்திய பிறகு பயணம் தொடர்ந்தது.

“தோட்டத்துக்குப் போறதுக்கு இன்னும் 12 மைல் இருக்கு, இனி எறக்கந்தான். கடகடகடன்னு நடந்தா ராத்திரிக்கு முந்திச் சீக்கிரம் போய் சேர்ந்திரலாம்” வெள்ளையன் ஒரே நேரத்தில் உற்சாகமும், அவசரமும் படுத்தினான். மாலை நான்கு மணி சுமாருக்கு ஊமையாண்டி முடுகு என்ற இடத்திற்கு வந்து சேர்ந்தபோது தனியாக ஒரு கட்டடம் நிற்பதைக் கண்டனர். இந்தக் கட்டடத்தில் தோட்டங்களுக்குப் பயணம் செய்பவர்களின் வசதிக்காக வெள்ளைத் துரைகள் அமர்த்திய ஒரு டாக்டரும், ஒரு பியூனும் இருக்கிறார்கள் என்றான் வெள்ளையன். பியூன் வெளியே வந்து அவர்களை வரவேற்றான். வெள்ளையன் தான் கூலிகளை அழைத்துக் கொண்டு குமரிமலை எஸ்டேட்டுக்குப் போவதாகக் கூறினான்.

“சீக்கிரம் கூட்டிட்டுப் போ. இல்லேன்னா அய்யர்பாடியில் தங்க வேண்டிவரும்” என்றான் பியூன். அய்யர்பாடியில் கட்டடங்களே கிடையாது என்றும், இரவில் கடுங்குளிராக இருக்கும் என்றும் கூறி வெள்ளையன் இரவுக்கு முன் எஸ்டேட்டை அடைந்துவிட வேண்டுமென்று எல்லோரையும் விரைவாக நடக்கத் தூண்டினான்.

அய்யர்பாடியை அடையும்போது சூரியன் தொடுவானில் மறையத் தொடங்கியிருந்தது. “பக்கமா வந்துட்டோம். கொஞ்சம் வேகமா நடப்போம். இல்லேன்னா பொட்டக்காட்டுல ராத்திரி மாட்டிக்குவோம்.”

குழந்தைகளையும் தூக்கி நடந்து களைத்துப் போயிருந்த பெற்றோர்களால் நிற்கவே முடியவில்லை. இறுதியில் தேயிலைத் தோட்டம் வந்து சேர்ந்ததும் நேராக லைனுக்கு அழைத்துச் செல்லப்பட்டனர். அதில் ஆறு அறைகளிருந்தன. ஒன்றில் யாரோ இருந்தார்கள். மற்ற அறைகளில் வசதிப்படி இருந்து கொள்ளும்படி வெள்ளையன் அவர்களிடம் சொல்லி விட்டான்.

தரை, மண்ணால் பூசப்பட்டிருந்தது. முன்பிருந்தவர்கள் அவற்றைப் படுமோசமான, அழுக்கான நிலையில் விட்டுச் சென்றிருந்தனர். இவர்கள் தீமூட்டி அறைகளைச் சுத்தம் செய்தனர். அந்த இடம் முழுவதும் ஏதேதோ பூச்சிகள் ஊர்ந்து கொண்டிருந்தன. சில கைகால்களின் மீதேறின. ஆனால் நீண்ட நடைபயணத்தால் உடலின் கடைசி துளி சக்தியையும் இழந்து விட்டிருந்த அவர்கள் உண்டுமுடித்ததும் தரையில் படுத்து உடனே உறக்கத்தில் ஆழ்ந்து விட்டனர். மேலெங்கும் ஏறித் திரிந்த பூச்சிகளை யாரும் சட்டை செய்யும் நிலையிலேயே இல்லை.

# பாகம்- மூன்று

இங்கே கால் பதிக்குமுன் துறந்து விடுங்கள்
எல்லா நம்பிக்கைகளையும்

-இன்பர்னோ டேன்டே

# 1

எவ்வளவு அழகான முகமூடி பூண்டிருக்கிறது
இந்த நரகம்...

மர்செண்ட் ஆப் வெனிஸ்

-ஷேக்ஸ்பியர்

மூடுபனிப் படலங்களினூடே தொடுவானில் உதயமான சூரியன், குழு முழுவதும் இன்னும் அயர்ந்து உறங்கிக் கொண்டிருப்பதைக் கண்டது. “எந்திரிங்க இங்கன இதெல்லாம் உதவாது. பொழுது வெடியற முன்னமே வேலையில் இருக்கணும். எந்திரிச்சு ஆத்துக்குப் போய் முகம் கழுவிக்குங்க. ஒவ்வொரு குடும்பத்திலிருந்தும் ஒரு ஆளை எஸ்டேட் கடைக்குக் கூட்டிப் போய் அரிசியும், சாமான்களும் சமையல் பாத்திரங்களும் வாங்கித் தருதேன்.” உறக்கமே அறியாத வெள்ளையனின் குரல் வழக்கமான படபடப்புடனும் அவசரத்துடனும் அவர்களை எழுப்பியது. பழக்கப்படாத மலைப்பிரதேசக் குளிரில் நடுங்கிக் கொண்டே எழுந்து சென்று பனிபோல் குளிர்ந்திருந்த ஆற்றுநீரில் கைவைத்தபோது உடம்பெங்கும் வலியெடுத்தது. எதிர்க்கரையில் தேயிலைத் தோட்டத்தில் இதற்குள்ளாகவே பல பெண்கள் முதுகில் கூடைகளைத் தொங்கவிட்டுக்கொண்டு வேலையில் ஈடுபட்டிருந்தனர்.

ஆற்றிலிருந்து வந்ததும் வெள்ளையன் எஸ்டேட் கடைக்கு அவர்களை அழைத்துப் போனான். கடை முதலாளி காளி செட்டியார், “வெள்ளையா வந்துட்டயா, எத்தன கூலிகளைக் கூட்டிட்டு வந்த; சங்கரபாண்டி எப்ப வருவாரு” என்ற வழக்கமான கேள்விகளோடு வரவேற்றார். வெள்ளையன் பதிலளித்துவிட்டு ஒவ்வொரு கூலியின் பெயரி லும் ஒரு கணக்கு ஆரம்பித்து அவர்களுக்குத் தேவையானதைக் கொடுக்கும்படிக் கேட்டுக்கொண்டான். அரிசியும் மற்றவைகளும் வாங்கிக் கொண்டு லைனுக்கு திரும்பியதும் அவர்களுக்கு இருப்பிடங்கள் ஒதுக்கித் தரப்பட்டன. கருப்பனுக்கும் வள்ளிக்கும் மட்டும் அதே லைனில் ஒரு அறையின் ஒரு பகுதி ஒதுக்கப்பட்டது. மற்றவர்கள் வேறு லைன்களுக்கு அழைத்துச் செல்லப்பட்டனர். அந்தக் குழுவைச் சேர்ந்த எந்த இரண்டு குடும்பங்களும் ஒரே லைனில் அமர்த்தப்படவில்லை.

கருப்பன் அந்த அறையை இன்னொரு குடும்பத்தோடு பகிர்ந்து கொள்ள வேண்டியிருந்தது. அந்தக் குடும்பத் தலைவன் பெயர் முத்தையா, அவன்

மனைவி ராமாயி. அவர்களுக்கு நான்கு குழந்தைகள். மூத்தவனுக்கு ஏறக்குறைய வயது பதினான்கு இருக்கலாம். அடுத்த பெண்ணிற்கு வயது பனிரெண்டு. மற்ற இருவரும் எட்டு வயதும் ஐந்து வயதுமான பையன்கள். எஸ்டேட்டில் இது அவர்களுக்கு மூன்றாவது வருடமாம்.

முத்தையா மயிலோடைக்குப் பனிரெண்டு மைல் தொலைவிலுள்ள ஒரு கிராமத்திலிருந்து வந்தவன் என்பது தெரிய வந்தபோது கருப்பனும் வள்ளியும் மிகவும் மகிழ்ச்சியடைந்தனர். இருந்தாலும் இன்னொரு குடும்பத்துடன் இந்தச் சிறிய அறையைப் பகிர்ந்து கொள்ள வேண்டியிருந்தது ஏமாற்றமளித்தது.

முத்தையா குடும்பம் இருந்த பகுதி பழைய மண்ணெண்ணெய் டின் தகரங்களாலும் ஓடைக்குச்சிகளாலும் தடுக்கப்பட்டுப் பிரிக்கப்பட்டிருந்தது (ஓடைக் குச்சி என்பது எஸ்டேட்டில் எல்லா இடங்களிலும் வளர்ந்து கிடக்கும் ஒரு வகை நாணல்). கருப்பன் தனக்குத் தனியாக ஒரு அறை வேண்டுமென்ற கோரிக்கையோடு வெள்ளையனை அணுகியபோது கொஞ்சங்கூட எதிர்பாராத விதத்தில் அவன் சீறி விழுந்தான். "ஏலே தனியா ரூமு கேக்கறதுக்கு நீ என்ன ஜமீன்தாரா?" என்றவன் முத்தையாவிடம் திரும்பி "முத்தையா இந்த ஜமீன்தார் தொரைக்குச் சொல்லு. தோட்டத்துல எல்லாரும் ஒரே மாதிரிதான் இருக்கணும். யோகமிருந்தா இன்னொரு குடும்பம் இதே ரூமுக்கு வராம இருக்கும்."

முத்தையா, அதிர்ந்து போயிருந்த கருப்பனைச் சமாதானப்படுத்த முயன்றான். "தோட்டத்துல எந்தக் குடும்பத்துக்கும் தனி எடம் தர மாட்டாக. இவ்வளவு ஏ.. செல சமயத்துல மேஸ்திரி ரூமுலகூட வேற குடும்பத்தையும் தங்க வைக்க வேண்டிவரும். நாங்க வந்ததுலேர்ந்து இந்த அறையிலதான் இருக்கோம். எப்பவும் எங்கூட இன்னொரு குடும்பம் இருந்துட்டுதான் இருக்கும். சமையல் கட்டுல இருக்கறவங்களுக்கு வழிவிட்டு ஓம்பாகத்த பிரிக்கதுக்கு வழி பண்ணலாம். நான் இன்னைக்கு வேலைக்கு போவல. நம்ம ரெண்டுபேரும் காட்டுக்கு போவம். ஒரு கட்டு ஓடக் குச்சியும் கொஞ்சம் மரக் கம்புகளும் வெட்டிட்டு வந்தா அத வைச்சு எங்களுக்கு இருக்குற மாரி உன் அறையையும் பிரிச்சுத் தட்டி அடிச்சுரலாம். உனக்கும் சங்கடமா இருக்காது. உள்ளத வைச்சி நல்லாயிருக்கலாம்லா. கொஞ்ச நாள்ல எல்லாம் சரியாயிரும். உனக்கு என்ன தேவைன்னாலும் நான்கூட இருக்கன்டே."

அன்று பகல் பொழுதில் சங்கரபாண்டியன் மேஸ்திரியும் அவன்

மனைவியும் வந்து சேர்ந்தனர். வெள்ளையனும், முத்தையாவும் வேறு சில பழைய கூலிகளும் ஓடிச் சென்று வண்டியில வந்திருந்த பித்தளைப் பாத்திரங்களையும், மற்ற சாமான்களையும் அவனது அறைக்குத் தூக்கிச் சென்றனர். மேஸ்திரி அதை மேற்பார்வையிட்டு விட்டு எப்படி குழுவைச் சேர்ந்த குடும்பங்களுக்கு இடம் ஒதுக்கப்பட்டிருக்கிறது என்று பார்க்கக் கிளம்பினான். மேஸ்திரி தன்னிடம் கயத்தாறில் காட்டிய அன்பை நினைத்துக் கொண்டு கருப்பன் அவனிடம் அதே கோரிக்கையை வைத்தான்.

"உதவாக்கரப் பயலே" மேஸ்திரி சீறியெழுந்தான். "ஊர்ல சோத்துக்கு இல்லாம பட்டினி கெடந்தானேன்னு பாவப்பட்டுக் கூட்டிட்டு வந்தா குடியிருக்க பங்களா கேக்குதோ? இங்க இருக்கறவன் எல்லாம் மனுசன்மாரு இல்லியோ? எல்லாரையும் மாதிரிதான் நீயும் இருக்கணும். உனக்கு மட்டும் தலைல கொம்பா மொளைச்சிருக்கு?" அமிலம் போல் வார்த்தைகள் வந்து கொட்ட கருப்பன் விக்கித்து போனான். இந்த ஆள்தான் தந்தையைப் போலத் தன்னைப் பார்த்துக் கொள்வதாக வாக்களித்தவன் என்பதை அவனால் நம்பவே முடியவில்லை.

திரும்பவும் அவனைச் சமாதானப்படுத்த முத்தையா வரவேண்டியிருந்தது. "ஏ, கொஞ்ச நாளைக்கு பொறுத்துக்கப்பா. எங்களுக்கும் மொதல்ல சங்கடமாத்தான் இருந்துச்சு. நாளானாப் பழகிப் போயிரும்டே. மொதல்ல நாம காட்டுக்கு போயி ஆக வேண்டியத பார்க்கலாம் வா."

கருப்பன் இந்த உதவிக்கு மனமார நன்றி சொல்லிவிட்டு அவனைத் தொடர்ந்தான். வழியில் பெண்கள் தேயிலை பறித்துக் கொண்டிருந்த ஒரு இடத்தைக் கடக்க வேண்டியிருந்தது. ஒவ்வொரு பெண்ணும் உடலை ஒரு கம்பளியால் சுற்றியிருந்தாள். அது ஒரு கயிறால் இடுப்பைச் சுற்றிக் (நழுவி விடாமல் இருக்க) கட்டப்பட்டிருந்தது. தலையை மூடியிருந்த கம்பளியைச் சுற்றிக் கட்டப்பட்டிருந்த இன்னொரு கயிற்றிலிருந்து பின்புறமாக ஒரு கூடை தொங்கிக் கொண்டிருந்தது. பெண்கள் இரண்டு கைகளிலும் தேயிலைகளைப் பறித்து இயந்திரம் போல் முதுகுப்புறம் தொங்கிக் கொண்டிருந்த கூடைகளில் போட்டுக் கொண்டிருந்தனர். தேயிலைப் புதர்களின் மேல் அந்தப் பெண்களின் கரங்கள் இயங்கும் வேகத்தை கருப்பன் வியப்புடன் பார்த்துக் கொண்டிருந்தான்.

"எல்லாரும் குளிரெடுக்குமுன்னா கம்பளிய கட்டியிருக்காங்கண்ணே?"

"அப்படீன்னு இல்ல. குளிருக்கும் மழைக்கும் சேத்துதான் கட்டுவாக.

தேயில குச்சி குத்தி துணி கிழிஞ்சிடக் கூடாதுல்லா. அதுனால வெயில் காலத்துலயும் கட்டுவாக. மழக்காலம் தொடங்கிருச்சின்னா ஆம்பள, பொம்பள, குழந்தை குட்டி எல்லாத்துக்கும் கம்பளி இல்லாம இருக்க முடியாதுடே.”

“மீனெல முத்தெல பறிக்காதீங்க. எளம் கொழுந்து பறிக்காதீங்க”எங்கிருந்தோ ஒரு மேஸ்திரி கூச்சலிடுவது கேட்டது.

“அவன் என்ன சத்தம் போடுதான்?” கருப்பன் புரியாமல் கேட்டான்.

“கொழுந்து இலைகளத்தான் கிள்ளனும். நடுவுல ஒரு அரும்பு இருக்கணும் ரெண்டு பக்கமும் எலை இருக்கணும். அரும்பு ரொம்பக் கொழுந்தா இருக்கக் கூடாது. இலை ரொம்ப முத்தினதாகவும் இருக்கக் கூடாது. பழுத்த இலையைப் பறிச்சு பாக்டரிக்கு அனுப்புனா அது டீயோட தரத்தக் கெடுத்துருமாம். டீ மேக்கர் மேனேஜர்கிட்ட புகார் சொல்லிடுவான். மேனேஜர் காட்டுல இருக்கிற குமாஸ்தாவைப் புடிச்சுக்குவான். குமாஸ்தா மேஸ்திரிய தண்டிப்பான். அதனால தான் மேஸ்திரி இப்படிச் சத்தம் போடுதான். கொழுந்து கிள்ளி முடிச்சதும் எல்லாரும் பாக்டரிக்கு முன்னால உள்ள எடத்துல அத கொட்டிப் பரப்பி முத்துன எலய தனியா பொறுக்கி எடுத்துருவாக.” ஏறக்குறைய பாடமே எடுத்து விட்டான் முத்தைய்யா.

“வள்ளிக்கு இந்த மாதிரி எல்லாம் பாத்து பறிக்க முடியுமான்னு தெரியலண்ணே” கருப்பன் யோசனையுடன் சொன்னான்.

“பாக்க கஷ்டமாத்தான் இருக்கும்லே. ஆனா ஒண்ணு ரெண்டு நாள்ல பழகிர முடியும். ரெண்டே வாரம் போதும் ஒரு பொம்பள எல்லாத்தையும் பழகிறலாம். கொஞ்சம் சாமர்த்தியமும் வேணும். கொஞ்சவயசு பொம்பளைங்க மத்தவளுங்களவிட வேகமாப் பறிப்பாளுங்க. பொதுவா பொம்பளைங்கதான் ஆம்பளைங்களவிட வேகமாப் பறிப்பாங்க. அதனால ஆம்பளைங்கள கொழுந்து கிள்ள அனுப்பமாட்டாங்க. பெண்டுகளையும், புள்ளையங்களையும் பசங்களையும்தான் அனுப்புவாக. நெறய கிள்ளுனா நெறய சம்பளம் கெடைக்கும்.”

“அதெப்படி?” கருப்பனால் புரிந்து கொள்ள முடியவில்லை. “நாளொண்ணுக்கு ஒவ்வொருத்தரும் கிள்ளுன கொழுந்த எடை போட்டு அவங்கவங்க பேருல சின்னக் காட்டு அய்யா எழுதி வைப்பான். ஒரு பவுண்டுக்கு ரெண்டு பைசா சம்பளமுன்னு ஆபிசு கிளார்க்குக கணக்கு எழுதுவாக. இப்ப வெளங்குதா?”

“நமக்குப் புடிச்சமாரி எந்தச்செடில வேணும்னாலும் போயி

பறிக்கலாமோ?”

“அப்படி முடியாது, வரிச வரிசயா செடி நட்டுருக்காங்கல்ல. அதுக்குப் பேரு சால். காலைல வாரவங்கள வரிசையா நிக்க வைச்சு ஒவ்வொரு பொம்பளைக்கும் ஒரு சால்னு உட்ருவாங்க. அந்த சால்லதான் அவ பறிக்கணும்.”

கருப்பன் முத்தையாவோடு காட்டுக்குச் சென்று மரங்களிலிருந்து சில நேரான கொம்புகளையும் ஒரு கட்டு நாணல்களையும் வெட்டிக் கொண்டு திரும்பினான். முத்தையா அறையின் மண் தரையில் குழி தோண்டி வெட்டிக் கொண்டு வந்திருந்த கம்பங்களை நாட்டினான். அவற்றிற்கிடையே நாணல் புற்களைக் கொண்டு தட்டிபோல் அடைத்து கயிறுகளால் கட்டினான்.

“அப்புறமா நாணல் புல்லை வச்சு எப்படி தட்டி கட்டுறதுன்னு சொல்லித் தாறேன். நாணல் புல்ல நல்லாத் தட்டி பாய் முடையறமாதிரி முடைஞ்சு தட்டி செய்யணும். அது நல்ல தடுப்பாயிருக்கும்.”

சங்கனும் சுப்பியும், அவர்களது ஒரு வயதுக் குழந்தையும் சமையலறையில் குடியிருந்தனர். அவர்களுக்காக இரண்டு ‘அறைகளுக்கும் இடையே ஒரு சிறிய நடைபாதை விடப்பட்டிருந்தது. ஐந்தடி நீளமும் நான்கடி அகலமுமே கொண்டிருந்த அந்தச் சின்னஞ்சிறிய சமையலறையில்தான் அந்தக் குடும்பம் சமைக்கவும் படுத்துறங்கவும் வேண்டியிருந்தது.

காலையில் பதிவு செய்து கொள்ளத் தயாராக இருக்கும்படி வெள்ளையன் லைனிலிருந்த கூலிகளிடம் தெரிவித்தான். “காலைல நாம எல்லாரும் பெரியக் காட்டு அய்யாவப் பார்க்கப்போறோம், நீங்க எல்லாம் நல்ல வேலக்காரங்களா இல்லையான்னு அவருதான் முடிவெடுக்கணும். தோதானவங்கள ஆஸ்பத்திரிக்கு அனுப்புவாரு. ஆஸ்பத்திரில டாக்டர் அய்யா எல்லாரையும் சோதிப்பாரு. நீங்க எல்லாம் நல்லா வேல செய்யக் கூடியவங்கன்னு அவரு சொன்ன பொறவு ஆபிசுக்குப் போகணும். அங்க இருக்கிற பெரிய தொரைதான் ஒவ்வொரு ஆளுக்கும் எவ்வளவு சம்பளமுன்னு பதிவு செய்வாரு. ஆனா ஒரு விசயம், பெரியகாட்டு அய்யாவோ டாக்டர் அய்யாவோ வேல செய்ய இவரு லாயக்கில்லனனு யாரையாவது சொல்லிட்டா அவங்கள பதிவு செய்ய முடியாது.”

“அவங்க வேற என்ன செய்யறது?” கூட்டத்தில் யாரோ கவலையுடன் கேட்டார்.

“அவங்க வேறெதாவது தோட்டத்துல வேல தேடிக்க வேண்டியதுதான். இல்லாட்டி ஊருக்குத்தான் போகணும்” வெள்ளையன் அலட்சியமாகக் கூறினான்.

“அதுக்கான செலவ யார் தருவாங்க” இன்னொருவன் கேட்டான்.

வெள்ளையன் மர்மமான முகத் தோற்றத்தோடு அந்தக் கேள்வியைத் தவிர்த்து விட்டான்.

“அதப் பத்தி யாரும் வெசனப் பட வேண்டாம். நாங்க எத்தன வருசமா இங்கன இருக்கோம். எல்லாத்தையும் எப்படி சமாளிக்கனுமுன்னு எங்களுக்குத் தெரியாதா?” என்று மட்டும் சொல்லிவிட்டு வெளியேறினான்.

எவ்வளவு கூலிகளப் பதிவு செய்ய வேண்டுமோ அதற்குத் தக்கபடி பெரிய காட்டு ஐயாவுக்கும், டாக்டரய்யாவுக்கும் சங்கரபாண்டியன் மாமூல் கொடுத்து விடுவான். எனவே எல்லோரும் ஏற்றுக் கொள்ளப்படுவார்கள் என்று பின்பு முத்தையா கருப்பனிடம் கிசுகிசுத்தான்.

# 2

ஏழைகளின் விம்மல் கவனிக்கப்படுவதே இல்லை.
சர்வாதிகாரத்தின் ஒவ்வொரு மட்டத்திலுமுள்ள
விலங்குகளாலும் அவர்கள் வதைக்கப்படுகிறார்கள்.

ஏ சிட்டி நைட் பீஸ்
- ஆலிவர் கோல்ஸ்மித்

மறுநாள் விடியற்காலையில், வேலைக்குப் போகுமுன் கூலிகள் கூடும் மஸ்டர் கிரவுண்டில் நடக்கவிருந்த பெரிய காட்டு ஐயாவின் சோதனைக்கு வெள்ளையன் புதிதாக வந்தவர்களை அழைத்துச் சென்றான். மேஸ்திரியும் அன்று அவர்களோடு வந்திருந்தான். கருப்பனோடு வந்திருந்தவர்களையும் சேர்த்து மொத்தம் நாற்பது பேர் அங்கே இருந்தனர். ஏற்கனவே அங்கிருந்த ஏராளமான கூலிகளுக்குச் சின்னக் காட்டு ஐயா வேலைகளைப் பிரித்துக் கொடுத்துக் கொண்டிருந்தான். சிலர் விறகு வெட்ட அனுப்பப்பட்டனர். மற்றவர்கள் நாற்றுகளை நடுவதற்குக் குழி வெட்டவும், தண்ணீர் விடவும், பாக்டரிக்கும் அனுப்பப்பட்டனர். சிறுவர்களும் சிறுமிகளும் களைபிடுங்க அனுப்பப்பட்டனர். பத்து முதல் இருபது பேர் கொண்ட இந்தக் கூலிகளின் குழுக்கள் ஒவ்வொன்றும் ஒரு மேஸ்திரியின் பொறுப்பிலிருந்தது.

“பெரிய ஐயா வர்றார் ”என்று ஒரு கூலி கூவினான்.

உடனடியாக அத்தனை பேரும் ஒழுங்காக நின்று அவர் அருகில் வந்ததும் “சலாம் அய்யா” என்று வணக்கம் செலுத்தினர். சின்னக்காட்டு ஐயாவும் தொப்பியை எடுத்துவிட்டு வணங்கினான். தாங்கள் ஆற்றங்கரையில் பார்த்த மனிதர்தான் இவர் என்று கருப்பன் கண்டு கொண்டான். இப்போது அவர் காக்கியில் அரைக்கால் சட்டையும், அதே நிறத்தில் மேல் சட்டையும், சாக்ஸ்களும், பூட்ஸ்களும் அணிந்திருந்தார். தலையில் ஒரு காக்கித் தொப்பி வைத்திருந்தார். யாரையும் குறிப்பாகப் பார்க்காமல் “சலாம்” என்று பொதுவாகப் பதிலளித்துவிட்டு தன் பையிலிருந்த சாவியை எடுத்து ஒரு மேஸ்திரியிடம் கொடுத்தார். மேஸ்திரி அதைக் கொண்டு அருகிலிருந்த ஒற்றை அறை கொண்ட ஒரு கட்டடத்தைத் திறந்தான்.

அந்த அறை முழுவதும் கோடாலிகள் ,மண்வெட்டிகள், கத்திகள்

போன்ற கருவிகள் நிறைந்திருந்தன. கூடவே பெரிய காட்டு ஐயாவுக்கு ஒரு மேசையும் நாற்காலியும் போடப்பட்டிருந்தன. ஐயா நாற்காலியில் உட்கார்ந்து தன் உதவியாளரிடம் சில உத்தரவுகள் வழங்கிவிட்டுப் புதிய கூலிகளைப் பதிவுக்கு வரும்படி அழைத்தார்.

சங்கரபாண்டியன் முன்னால் வந்து “சலாமைய்யா” என்றான்.

“அட சங்கரபாண்டியனா? எப்ப வந்தே?” சங்கரபாண்டியன்தான் பெரியய்யாவுக்கு அதிக மாமூல் தருபவன் என்பதால் அவனை அவருக்கு மிகவும் பிடிக்கும்.

“ஏலே நீ ஒரு சின்னப் பெண்ணைக் கட்டியிருக்கேன்னு கேள்விப்பட்டேன். எனக்கும் ஒரு எளம் பொண்ணக் கூட்டிட்டு வந்திருக்கலாம்லா?” எல்லோரும் இந்தக் கிண்டலுக்குச் சிரித்தார்கள்.“சரி நீ கொண்டு வந்திருக்கிற உருப்படிகளைப் பார்க்கலாம்” என்றார் பெரிய ஐயா.

வெள்ளையன் ஆண்களையும், பெண்களையும், சிறுவர்களையும் தனித்தனி வரிசையில் நிற்க வைத்தான். “கிள்ளுறவங்க மொதல்ல வரட்டும்.” பெண்கள் முன்னால் வந்து வரிசையில் நின்றனர்.

“ஒவ்வொருத்தர் பேரா சொல்லு” வெள்ளையனிடம் சொன்னார்.

“முதல்ல நிக்கறவ பேர் கருப்பாத்தாள்” என்றான் வெள்ளையன்.

“இதுக்கு முன்னால ஏதாவது தோட்டத்துல வேல பார்த்திருக்கியா?”

“ஆமாய்யா மூணார்ல ரெண்டு வருசம் வேல பார்த்திருக்கேன்.”

“வீட்டுக்காரன் பேர் என்னா?” பெண்கள் கணவன் பேர் சொல்வதில்லை என்று தெரிந்தே கேட்டுவிட்டு தனக்குத்தானே சிரித்துக் கொண்டார்.

அந்தப் பெண் கணவனை அழைத்தாள்.

“மாமா மாமா பெரிய அய்யாக்கிட்ட உம்பேர் சொல்லு!”

“ஓஹோ இதுதான் உன் மாமாவா? பரவால்ல. வயசென்ன சொல்லு”

“உங்களுக்கு தோணுற மாரி எழுதிக்குங்கய்யா”

“ஒரு அம்பது எழுதிக்கலாமா?”

“நான் ஒண்ணும் கெழவி இல்ல. இருபது எழுதிக்குங்க”

“உனக்கு எத்தன கொழந்தைங்க? அதாவது தெரியுமா?”

“நாலு”

“பெரிசுக்கு என்ன வயது?”

“இவ்வளவு உயரம் இருப்பான்” அந்தப் பெண் தன் தோள் உயரத்திற்கு கைகளை உயர்த்திக் காட்டினாள். பின்பு பதிவுக்கு நின்று கொண்டிருந்த பையன்களில் ஒருவனைக் காட்டினாள் “இதுதான் என் மூத்த மவன்”

“இவனுக்குப் பன்னெண்டு வயசு இருக்கும்லா?”

“ஆமாய்யா”

“ஓ சரியான பொம்பளதான் போ. எட்டு வயசுல புள்ள பெத்துட்டியோ” என்று கூறிவிட்டு சிரித்தார். அந்தப் பெண் உட்பட எல்லோரும் மீண்டும் சிரித்தார்கள்.

வள்ளி அடுத்து நின்றிருந்தாள். ஐயா அவளை நோக்கி “முன்னால வந்து பேர் சொல்லு” என்றார்.

வள்ளி குழப்பமடைந்து முந்தானையால் முகத்தை மறைத்துக் கொள்ள முயன்றாள்.

“அட வாம்மா என் அழகுக் கிளியே. வந்து பேர் சொல்லு” வள்ளி நகரவில்லை.

“முன்னால வா. நானொன்றும் தூக்கிட்டுப் போயிட மாட்டேன்”

தாங்க முடியாமல் கருப்பன் முன்னால் வந்தான். “அய்யா அவ எம் பொஞ்சாதிங்க. பேரு வள்ளி.”

“யாரிந்த நாய்?” அய்யா வெடித்துச் சீறி எழுந்தார்.

“கழுதைக்குப் பொறந்த பயலே. நாசமாப்போன வாய வெச்சுட்டுச் சும்மா இரு. கேட்டா மட்டும்தான் பேசனும்” வெள்ளையன் கருப்பனை மீண்டும் வரிசைக்குத் தள்ளிக் கொண்டே இரைந்தான். அதே நேரம் சங்கரபாண்டியன் முன்னால் வந்த நிற்கும்படி வள்ளியிடம் கூச்சலிட்டான். மற்ற பெண்கள் வள்ளியை முன்னே தள்ளி விட்டனர்.

“அட யாரவ? தூக்கிட்டுப் போயிடுவாங்கன்னு நெனச்சிட்டு அழகு மொகத்தைக் காட்ட வெக்கப்படறா போலிருக்கு” என்றார் ஐயா.

கோபத்தில் கொதித்துப் போய் முன்னால் பாயத்துடித்த கருப்பனை மற்ற கூலிகள் தடுத்துப் பிடித்துக் கொண்டனர். “சத்தம் போடாத. ஒம் பொஞ்சாதிக்கு ஒண்ணும் ஆயிடாது. இந்த மாதிரி கேலி கிண்டலெல்லாம் இங்க வழக்கமா இருக்கறதுதான். ஏதாவது பிரச்சன பண்ணுனா அய்யா உன்ன பதிவு செய்ய மாட்டேனுடுவார். அப்புறம் திரும்பி லைனுக்குப் போனா மேஸ்திரி எலும்ப எண்ணிடுவான்” என்று

எச்சரித்தனர்.

“பேர் சொல்லு அழகுக் கிளி கேக்கலாம்” அய்யா வற்புறுத்தினார்.

“வள்ளி” அவள் சொன்னது அவளுக்கே கேட்கவில்லை.

“வேற ஏதாவது எஸ்டேட்ல வேல செஞ்சிருக்கறயா?”

“இல்ல”

“அதான் என்னோட அழகுப் பெண்ணுக்கு இவ்வளவு வெக்கம். இந்த வெக்கத்த உட்டுறு. மாமனைப் பத்திக் கவலப்படாத. நான் உன்னய தூக்கிட்டுப் போயிட்டாக்கூட அவன் கடித்துத் தின்னுட மாட்டான்.” திரும்பவும் சிரிப்பொலி எழுந்தது.

“கேங்க்ல வேற ஏதாவது வள்ளி இருக்காளா?” ஐயா மேஸ்திரியிடம் கேட்டார்.

“ஒரு பெரிய வள்ளியும், சின்ன வள்ளியும் இருக்காங்க.”

“சரி அப்ப இவபேர் சீதான்னு வெச்சுக்கலாம்”

பெரிய அய்யா ஒவ்வொரு கூலியையும் இதைப் போலவே விசாரித்தார். பின்பு கூலிகளின் பட்டியலை வெள்ளையனிடம் கொடுத்து அவர்களை மருத்துவப் பரிசோதனைக்கு மருத்துவமனைக்கு அழைத்துப் போகச் சொன்னார்.

அவர்கள் அழைத்துச் செல்லப்பட்ட இடம் மருத்துவமனை என்று அழைக்கப்பட்டாலும் மாட்டுத் தொழுவத்தைப் போல் தானிருந்தது. அந்தக் கட்டடத்திற்குத் தளம் போடப்படவே இல்லை. துருப்பிடித்த இரும்புத் தகடுகளைக் கொண்டு தாழ்வாகக் கூரை வேயப்பட்டிருந்தது. சுவர்களுக்கு உள்ளும் புறமும் நான்கடி உயரத்திற்குத் தார் பூசப்பட்டிருந்தது. கட்டடம் முழுமைக்குமே ஒரு இருண்டு போன வெறுமையூட்டும் தோற்றத்தைக் கொடுத்தது. வெள்ளையன் டாக்டரைப் பார்க்கப் போனான். ‘டாக்டர்’ என்றழைக்கப்பட்டவர் அதற்கான எந்தத் தகுதியும் பெற்றவரல்ல. சொல்லப்போனால் அவர் ஒரு கம்பௌண்டர் கூட அல்ல. ‘டாக்டர்’ சிறுவனாக இருந்தபோது சமவெளிகளில் ஒரு மருத்துவமனையில் வார்டுபாயாக இருந்தார். அப்போது மருந்துகளைப் பற்றி ஏதோ கொஞ்சம் கற்றுக் கொண்டிருந்தார். அவருக்கும் மருத்துவத்துக்கும் உள்ள தொடர்பு அவ்வளவுதான். ஆனால் இங்கே இந்தத் தேயிலைத் தோட்டத்தில் டாக்டர் குரூப் மிகவும் முக்கியமான ஒரு நபராவார். தோட்டத்தில் இருந்த மருத்துவமனையே அவர் பொறுப்பில்தான் இருந்தது. கூலிகளின் சிறிய ஊர்வலம்

முன்னாலிருந்து முற்றத்தை அடைந்ததும் உள்ளே போன வெள்ளையன் சில நிமிடம் கழித்து வந்து டாக்டர் ஐயா ஒவ்வொருவராகப் பார்ப்பார் என்றான்.

டாக்டர் குரூப்புக்கு நாற்பத்தைந்து வயது இருக்கும். அவர் தன் தாய்மொழியான மலையாள வாடையோடு வினோதமாகத் தமிழ் பேசினார். அவரும் பெரியய்யா போலவே காக்கி அரைக்கால் சட்டையும், மேற்சட்டையும் அணிந்திருந்தார். தற்போது ஏற்றிருந்த பாத்திரத்திற்கு ஏற்ப அவரது கழுத்தைச் சுற்றி ஒரு ஸ்டெதஸ்கோப் தொங்கிக் கொண்டிருந்தது. கூலிகள் ஒவ்வொருவராக அழைத்து மார்பில் ஸ்டெதஸ் கோப்பை வைத்துப் பார்த்தும் கண்களையும் நாக்கையும் சோதித்தும் பெரியய்யா அனுப்பியிருந்த காகிதங்களில் தனது குறிப்புகளை எழுதினார். சோதனைகள் முடிந்தவுடன் குறிப்புகளை வெள்ளையனிடம் ஒப்படைத்தார். “இத பாரு இந்த தடவை நின்ட கூலிகள் அப்படி யொண்ணும் செரியாயிட்டில்லா. கொறைய ஆள்காரர ரிஜெக்ட் செய்யணும். சங்கர பாண்டியண்டே ஆளாயது கொண்டு ஞான் அது செய்யில்லா. டிரீட்மென்ட் கொடுக்கணும்னு ஞான் ஆயாளுகள பி குரூப்பில் சேர்த்திட்டிட்டுண்டு. ரெஜிஸ்டர் பண்ணிய பின்னிட்டு ஈயாளுகளொக்க கொக்கிப்புழு ட்ரீட்மெண்ட்க்கு விளிச்சிட்டு வரணும், கேட்டோ! ”

“ஆவட்டுங்கைய்யா மேஸ்திரி சாயங்காலம் உங்களைப் பார்க்க வாரேன்னாரு”

“ரைட்” குரூப் விடையளித்தார்.

வெள்ளையன் கூலிகளை திரும்பவும் லைனுக்கு அழைத்துவந்து விட்டுவிட்டு இரண்டு மணிக்கு அலுவலகத்திற்கு போகத் தயாராக இருக்கும்படி சொல்லிவிட்டுச் சென்றான்.

சொன்னபடி மதிய உணவுக்குப் பிறகு அவர்கள் அலுவலகத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டனர். ஒரு பிரம்மாண்டமான கட்டடத்தை எதிர்பார்த்திருந்த கருப்பன் மூன்றே மூன்று சிறு அறைகளையும் பின்புறம் ஒரு திண்ணையையும் மட்டும் கொண்ட அலுவலகத்தைப் பார்த்து வியப்படைந்தான். இந்த முறை சங்கரபாண்டியனும் அவர்களோடு வந்திருந்தான். பெரியய்யா வெளியே வந்து வெள்ளையனிடம் கூலிகளை வழக்கம்போல் மூன்று வரிசைகளில் பெண்கள் முதலிலும் ஆண்கள் இரண்டாவதாகவும் சிறுவர் சிறுமிகள் மூன்றாவது வரிசையிலும் நிற்கச் செய்யும்படி கூறினார். பின்பு பொது மேலாளர் வரப்போகிறார் கூச்சல் போடக்கூடாது என்று எச்சரிக்கை

செய்தார். வராண்டாவில் ஒரு நாற்காலியும் மேசையும் போடப்பட்டது. பொது மேலாளர் வருவதற்கு முன்பு பெரியய்யா கூலிகளின் பெயர், வயது, ஆணா, பெண்ணா, வீட்டு முகவரி போன்ற விவரங்களை ஒரு பதிவேட்டில் குறித்துக் கொண்டார். கடிகாரம் மூன்றடித்ததும் மேலாளர் வந்து தனது அறைக்குச் சென்றுவிட்டுச் சில நிமிடங்கள் கழித்து தலைமை எழுத்தருடன் வராண்டாவுக்கு வந்தார். அங்கிருந்த அத்தனை பேரும் "சலாம் துரைகளே!" என்று வணக்கம் செலுத்தினர்.

பொது மேலாளரான திரு. வொய்ட்டுக்குச் சுமார் ஐம்பது வயதிருக்கலாம். நல்ல உயரம் அதற்கேற்ற உடலமைப்பு. காக்கி அரைக்கால் சட்டையும் வெள்ளை மேல்சட்டையும் அணிந்திருந்தார். துரை உட்கார்ந்ததும் சங்கரபாண்டியன் முன்னே வந்து தாழக்குனிந்து வணங்கி "சலாம்
துரைகளே" என்றான்.

"சலாம் சங்கரபாண்டி" துரை தமிழில் பதிலளித்தார். "எத்தன கூலிகளைக் கொண்டு வந்திருக்க"

"நாற்பது துரைகளே. இன்னும் முப்பது பேர் அடுத்த மாதம் வருவாங்க"

பெண்களின் வரிசை மீது கண்களை ஓடவிட்ட துரை தான் தேடியவளைக் கண்டு கொண்டார். செல்லம்மாள் ஓர் அழகான இளம்பெண். முன்பே எஸ்டேட்டில் வேலை செய்தவள். சுமார் பதினெட்டு வயதிருக்கலாம். சிவந்த நிறமும், நேர்த்தியான உடல்வாகும் அவளைத் தனித்துக் காட்டின.

"வா வா இங்கே வா" வொயிட் அவளை அழைத்தார். செல்லம்மாள் கிளுகிளுத்துச் சிரித்தபடி அவரை நெருங்கினாள்.

"ஊரிலே போயி ரொம்ப தடி மனுசி ஆயிட்டே" வொயிட் அவள் மூக்கைப் பிடித்து ஆட்டிவிட்டுக் கன்னங்களைக் கிள்ளினார்.

"வயிறு பெரிசாயி விட்டது." வயிற்றில் செல்லமாகக் குத்தி அக்குளில் கிச்சுகிச்சு மூட்டினார். அவள் உடலின் மற்ற பகுதிகளுக்கு துரையின் விரல்கள் மேலும்மேலும் முன்னேற அவள் சிரித்துக் கொண்டே நெளிந்தாள்.

முன்பே எஸ்டேட்டில் வேலை செய்து அனுபவமுள்ள பெண் கூலிகள் "தொர வெளயாடுறாரு" என்று சிரித்தனர். புதிய பெண்கள் திகைப்புடன் விழிகள் விரியப் பார்த்துக் கொண்டிருந்தனர். ஆண்கள் மௌன சாட்சிகளாக விலகி நின்று எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டிருந்தனர். அந்தப் பெண்ணின் அம்மாவும் அப்பாவும்

அங்கேயே இருந்தாலும்கூட யாரும் வாயைத் திறக்கத் துணியவில்லை.

இந்த விளையாட்டு ஐந்து நிமிடம் தொடர்ந்தது. பின்பு வொயிட் அவளது சம்பளத்தைப் பதிவேட்டில் எழுதிவிட்டு திரும்பவும் அவள் வயிற்றில் ஒரு செல்லக் குத்து விட்டுவிட்டு அடுத்தவளின் பக்கம் திரும்பினார். சில கேள்விகளுக்குப் பிறகு அவளது சம்பளம் பதிவு செய்யப்பட்டது. இறுதியில் வள்ளியின் பெயர் அழைக்கப்பட்டது. வொய்ட் அவள் தலையிலிருந்து கால்வரை கண்களை ஓட்டினார். வள்ளியின் அடக்கமான அழகு துரையைக் கவர்ந்துவிட்டது போலத் தோன்றியது.

“உன் பேர் என்னா?”

“சீதா”

“கல்யாணம் ஆச்சுது?”

வள்ளி முணுமுணுத்தது யார் காதிலும் விழவில்லை.

“இங்க வா” என்றார் துரை. “என்னா கீழ பாக்குற” என்றவர் அவளருகே சென்று தாடையைப் பிடித்து முகத்தை உயர்த்தினார்.

கருப்பனால் அதற்கு மேல் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. துரை இவளிடமும் விளையாடத் தொடங்கி விடுவாரோ என்று தவித்துப் போய் முன்னே பாய்ந்தான். “என்ன தொரைகளே.”

வொய்ட்டுக்கு வந்த ரௌத்திரகாரமான கோபத்தில் அவர் முகம் ரத்தச் சிவப்பாக மாறியது. “நீ யார்? சக்லி நாய். பீ தின்னி நாய், கூட்டிக் குடுத்த நாய்...” வசவுகள் துரையின் வாயிலிருந்து மழையெனப் பொழிந்தன.

சங்கரபாண்டியன் முன்னே ஓடிவந்து கருப்பனுக்கு ஒரு அறை விட்டுக் கழுத்தைப் பிடித்து தள்ளிவிட்டான். வொய்ட்டின் கோபம் சங்கரபாண்டியனிடம் திரும்பியதும், “நல்ல கூலிகளைக் கூட்டிட்டு வந்திருக்கே. உன்னோட ஆளு எனக்கு வேண்டாம். கூட்டிட்டுப் போ கூட்டிட்டுப் போ” கர்ஜித்துவிட்டு தன் அறைக்குள் போய்விட்டார். கோபத்தில் அவர் உடல் முழுவதும் நடுங்கிக் கொண்டிருந்தது.

“சங்கரபாண்டியன், பெரிய தொரை ரொம்பக் கோபமா இருக்கார். இப்பக் கெஞ்சிப் பிரயோசனமில்ல. அப்புறமா நான் பேசிட்டு உனக்குச் சொல்லியனுப்பறேன்” தலைமை எழுத்தரும் வொய்ட்டைத் தொடர்ந்து அலுவலகத்துக்குள் புகுந்தார்.

சங்கரபாண்டியன் கூலிகளைத் திரும்பவும் லைனுக்கு அழைத்து

வந்தான். லைனுக்கு வந்ததும் வராததுமே திடீரென்று திரும்பிய மேஸ்திரி கருப்பன் மேல் பாய்ந்து முஷ்டியால் சரமாரியாகக் குத்தத் தொடங்கினான். கருப்பனால் எளிதாக அவனைத் தூக்கி எறிந்திருக்க முடிந்திருக்கும்தான். ஆனால் அடுத்தடுத்து ஏற்பட்ட அதிர்ச்சிகளில் செயலிழந்து போயிருந்ததால் அவன் எந்த எதிர்ப்பும் காட்டவில்லை. வள்ளி கதறி அழத் தொடங்கினாள்.

“நாய்க்குப் பொறந்தவனே, உன் வேலையெல்லாம் இங்க வெச்சுக்காத. உனக்கு மட்டும் என்ன கொம்பா மொளச்சிருக்கு? உம் பொஞ்சாதி மத்த கூலிகளோட பொஞ்சாதிகளவிட அப்படியென்ன ஒசத்தி? தொர கூலிகளை பதிவு பண்ணுவானா மாட்டானான்னு தெரியல. எத்தன செலவு பண்ணியிருக்கேன். பதிவு மட்டும் பண்ணலேன்னா...தேவடியா மவனே உன்னக் கொன்னு இங்கயே பொதச்சிடுவேன்.”

கேங்கிலிருந்த வயதில் மூத்த கூலிகள் மேஸ்திரியை அமைதிப்படுத்தி அப்பால் அழைத்துச் சென்றனர். கருப்பன் அறைக்குள் போய் தரையில் விழுந்து விம்மத் தொடங்கினான். வள்ளி பக்கத்தில் உட்கார்ந்து சமாதானப்படுத்த முயன்றாள். “முருகா காப்பாத்து. எத்தனை ஆசையோட நம்பிக்கையோட இங்கன வந்தோம். மொத நாளே எல்லா நாசமாப் போச்சே! கடவுளே. ஏந்தான் ஊரவிட்டு வந்தமோ?” சொல்ல முடியாத வேதனையிலும் பயத்திலும் வள்ளியாலும் அழுகையை அடக்கிக் கொள்ள முடியவில்லை.

முத்தையாவும் அவன் மனைவியும் வேலையிலிருந்து வந்ததும் கருப்பனுக்கும் வள்ளிக்கும் நேர்ந்ததை அறிந்து கொண்டனர். முத்தையாவும், அடுப்படியில் குடியிருக்கும் சங்கனும் கருப்பனைத் தேற்ற முயன்றனர். தைரியத்தோடு எல்லாவற்றையும் சகித்துக் கொள்ள வேண்டுமென்று உணர்த்த அவர்கள் விரும்பியது போலத் தெரிந்தது.

“ஒண்ணு ரெண்டு மாசத்துல இந்த வாழ்க்கைக்கு பழகிப் போயிருவ. அப்புறம் இத்தன வெசனம் இருக்காது” என்றான் முத்தையா. “எங்களுக்கு இந்த எடம் புடிக்கல. ராத்திரி குளிர்ல தூக்கமே வர மாட்டேங்குது. தண்ணிகூட ஜில்லுன்னு இருக்குது. கை கழுவினா வலிக்குது. இங்க எல்லாமே பயங்கரமா இருக்கு. வெள்ளத் தொரைங்க தங்கமானவங்க, அன்பானவங்கன்னு மேஸ்திரி சொன்னான். ஆனா நான் பாத்தவரைக்கும் அந்த மாதிரி தெரியல. மேஸ்திரிகூட இங்க வந்த பின்னாடி ஆளே மாறிட்டான். ஒரு வருசம் முழுக்க இவங்கிட்ட வேல செய்யவே முடியாது. எங்களுக்கு இந்த எடம் புடிக்கல. ஊருக்குப் போறோம்னு நாளைக்கு சொல்லப் போறேன்.”

“ஊர விட்டு வரும்போது மேஸ்திரிகிட்ட பணம் ஏதாவது வாங்கினியா” சங்கன் கேட்டான்.

“மேஸ்திரி பணம் கொடுக்கல. ஆனா வெள்ளத் தொரையோட ஏஜெண்ட்டுன்னு ஒருத்தங்கிட்ட நாற்பது ரூபாய் வாங்கினேன்”

“அப்ப உன்னப் போக விடமாட்டாங்க. மொதல்ல பணத்தக் குடுத்துட்டுப் போன்னுதான் மேஸ்திரி சொல்லுவான். அதோட திரும்பப் போகப் பணத்துக்கு என்ன பண்ணுவ?” சங்கன்.

“நாங்க நடந்தே போயிருவோம். மூணு நாள்ல ஊருக்குப் போய் சேர்ந்திடுவோம்னு நெனக்கேன்.”

“புதுசா வர்றவங்க ஒவ்வொருத்தரும் இதே தப்பைத்தான் செய்யறாங்க” என்றான் சங்கன்.

“ரயில்ல இங்க வர இரண்டு நாளாச்சுங்கறதால மூணு நாள்ல திரும்ப நடந்து போயிருலாம்னு நெனைக்காத. எவ்வளவு தூரம் ரயில்ல வந்திருக்கேன்னு உனக்குத் தெரியாது. உங்க ஊருக்கு இங்கிருந்தது 200 மைலுக்கு மேல இருக்கும். இவ்வளவு தூரத்த நீங்க நடந்தே போனாலும் ஊடு போய்ச் சேர குறைஞ்சது ரெண்டு வாரமாவது ஆகும்.”

“பரவால்ல. நான் போறதுன்னு முடிவு பண்ணிட்டேன். நாங்க எவ்வளவு தூரமா இருந்தாலும் நடப்போம். சாப்பாட்டுக்கு வழியில பிச்சை எடுத்துக்குவோம்” கருப்பன் தளராமல் சொன்னான்.

“இந்த மாதிரி பேசி பிரயோசனமேயில்ல. நாற்பது ரூபாயத் திருப்பித் தராம மேஸ்திரி உன்னப் போக விடவே மாட்டான்.”

“அப்படியே ஒருவேள இந்த எஸ்டேட்டிலிருந்து தப்பிச்சு போனாலும் பொள்ளாச்சி போய் சேரவே மாட்ட” முத்தையா தீர்மானமாகக் கூறினான். “பொள்ளாச்சி தாண்டி வரும்போது ஊமையாண்டி முடகு என்ற இடத்த தாண்டி வந்தது ஞாபகமிருக்கா. அங்க ரோட்டுக்குப் பக்கத்துல ஒரு கட்டடத்துல ஒரு டாக்டரும், ஒரு ப்யூனும் இருக்கிறதப் பாத்திருப்பே. கூலிக்காரங்க தப்பி ஓடிரக் கூடாதுன்னுதான் அவங்கள வெள்ளைத் தொரமாரு அங்கன வைச்சிருக்காக. அது பக்கத்துல ரோட்டோரமா ஆளுக ஏற முடியாத மல ஒன்னு இருக்கு. இன்னொரு பக்கம் பயங்கரமான பள்ளம். இந்த எடத்தத் தாண்டாம நீ போக முடியாது. பாஸ் இல்லாம உன்ன தாண்டிப் போக விடவும் மாட்டாக. எஸ்டேட்டுல இருந்து பாஸ் இல்லாம வாரவங்களப் புடிச்சு வேற ஆளுங்க பாதுகாப்போட திரும்பவும் எஸ்டேட்டுக்கே அனுப்பிடுவாக. அப்படி பிடிபட்டா உனக்கு நரகம்தான். இதுக்கு முன்னால ஓடிப்போன

எத்தனயோ கூலிக்காரங்கள மேஸ்திரிங்க அடிச்சே கொன்னிருக்காவ தெரியுமா? தயவு செஞ்சு இங்கேருந்து ஓடிப் போணும்முன்னு மட்டும் நெனைக்காத. தைரியமா இரு. ஒரு மாசம் தாக்குப் புடிச்சேன்னா இடமும், குளிரும் பழகிரும். பொறவு இவ்வளவு வருத்தம் இருக்காது. சங்கரபாண்டியன் மேஸ்திரியோட வந்தது உன்னோட யோகமுன்னு தெரிஞ்சிக்க. மத்த மேஸ்திரிங்கள விட அவன் பரவாயில்ல. இதே கம்பெனிக்கு சொந்தமான இன்னொரு எஸ்டேட் பக்கத்துல இருக்கு. அதில யூசுப்புன்னு ஒரு மாப்ளா மேஸ்திரி இருக்குதான். அவன் கூலி ஆளுகள ஆடுமாடு மாதிரிதான் கேவலமா நடத்துவான். ராத்திரி நேரத்துல எல்லாக் கூலிகளையும் லைனுக்கு உள்ளே அடைச்சு கதவுகள வெளியே பூட்டிடுவான். பகல் நேரத்துல கூட யாரும் ஓடாம பார்த்துக்கறதுக்கு காவல்காரங்க இருப்பாக. யாராவது கிறுக்குத்தனமா தப்பிச்சு ஓடினா அவன அடிச்சே கொன்னுடுவாக. இந்த மாதிரி யூசுப் நிறைய கூலிகளைக் கொன்னிருக்கான். இந்தத் தோட்டத்திலயாவது நாம நம்ம குடும்பத்தோட இருக்கலாம். யூசுப் மேஸ்திரி குடும்பமா இருக்கிற யாரையும் வேலைக்கு சேர்க்க மாட்டான். அவனோட கூலிங்க பெரும்பாலும் ஆம்பிளைங்க தான். கூலிகளுக்கு சமைச்சுப் போடதுக்கு ஆம்பள சமையல்காரனதான் வச்சிருப்பான். அவங்களுக்கு காலையிலும் கஞ்சிதான் ராத்திரியும் கஞ்சிதான். கூலிகளக் கவனிக்கிறதுக்குன்னே நெறய ரவுடிகள வச்சிருக்கான். ஒரு சின்னப் பிரச்சனன்னாக்கூட ரவுடிகள உட்டு அடிச்சு நொறுக் கிடுவான். நெறய கூலிங்க செத்துப் போயிருக்காவ. கொலகார யூசுப் மேஸ்திரிக்கு அதப்பத்தியெல்லாம் கவலையே இல்ல. துரைங்களுக்கு அவங்க வேல நடந்தா போதும். மத்ததப்பத்தி அவங்க கண்டுக்கவே மாட்டாங்க. இதையெல்லாம் கணக்கு போட்டா சங்கரபாண்டியன் கிட்ட எவ்வளவோ நல்லாயிருக்கலாம் தெரிஞ்சுக்கோ.”

“கயத்தாறுல ஏஜண்டு குடுத்தப் பணம் துரைங்க சும்மா கொடுத்ததுன்னும், நமக்கு இந்த எடம் புடிக்கலன்னா தாராள மனசுள்ள தொரைங்க அவங்க செலவுலேயே திருப்பி அனுப்பிடுவாங்கன்னும் மேஸ்திரி எங்கிட்டே சொன்னானே?” கருப்பன் அப்பாவித் தனமாகக் கேட்டான்.

“எல்லா மேஸ்திரியும் மொதல்ல அப்படித்தான் சொல்லுவாக. உண்மையிலே தொரைங்க குடுக்கிற பணத்த வாங்கிதான் மேஸ்திரிங்க கூலிகளுக்குக் குடுக்குதாங்க. பின்னாடி இந்தப் பணத்த கூலிங்களோட சம்பளத்துல புடிச்சுக்குவாங்க. கூலிங்களால தர முடியலேன்னா அந்தப் பணத்த மேஸ்திரிகளோட கமிஷன்ல இருந்து புடிச்சுக்குவாக. இப்ப நீ

நாப்பது ரூவா வாங்கியிருக்கில்லா, நீ ஓடிட்டா சங்கரபாண்டியனுக்குச் சேர வேண்டிய கமிஷன்ல இருந்துதான் அந்தப் பணத்த எடுத்துக்குவாக. அதனாலதான் கூலிங்க ஓடிப் போகாம இருக்க மேஸ்திரிங்க அத்தன வேல செய்யறானுக."

"மேஸ்திரி கமிசன்னா என்ன?"

"ஒரு கூலியாளு நூறு ரூவாக்கு வேல பாத்தா மேஸ்திரிக்கு பத்து ரூவா உண்டு. நாம எவ்வளவுக்கு எவ்வளவு கூடுதலா சம்பாதிக்கோமோ அத ஒட்டி மேஸ்திரிக்கு கமிசனும் கூடும். அதுக்காகத்தானே நாம காய்ச்ச, கீய்ச்சன்னு முடியாம கெடயில கெடந்தாலும் விடாம வந்து வெரட்டி வேலய வாங்குதான் மேஸ்திரி. நீ ஊருக்குப் போறேன்னு அவங்கிட்ட சொல்லிப்பாரு. நீ கை நீட்டி வாங்கினது, உன்ன கூட்டி வரதுக்கான மொத்த செலவு எல்லாத்தையும் ஒரு பைசா பாக்கி இல்லாம எண்ணி வச்சிட்டுப் போன்னு சொல்லுவான். நீ எத எண்ணிக் குடுப்ப? பேசாம எஸ்டேட்ட விட்டுப் போற நெனப்ப ஒடப்புலப் போட்டுட்டு கஷ்டப்பட்டுக் கடன அடைக்க வழியப் பாரு. வருசக் கடைசியானா ஊருக்குப் போக அவங்களே விடுவாங்க. அதுவரைக்கும் பொறுமையாயிருலே. எப்படியாவது கண்ண மூடிட்டு ஒரு மாசத்த ஓட்டிட்டேன்னா இந்த அளவுக்கு கஷ்டம் தெரியாது. எல்லாம் பழகிப் போயிரும். மொதமொதலா வந் தப்போ எங்களுக்கும் இப்படித்தான் இருந்தது. இப்போ எல்லாமே பழகிப் போச்சுல்லா" முத்தையா நீளமாக, நிதானமாகப் பேசினான். கொஞ்சம் கொஞ்சமாக அவர்கள் கருப்பனைத் தேற்றி விட்டனர்.

அது சனவரி மாதம். கடும் குளிர் ஊசியாகக் குத்தியது. தூங்கவே முடியவில்லை. குளிர்ந்து போன இருப்புக் கூரைத் தகடுகளின் உட்புறம் உருவான பனித்துளிகள், கீழே தூங்குபவர்களின் மேல் மழைபோல் பொழிந்தன. வெளியில் வீசிய கடுங்குளிரும், மனதுக்குள் குமைந்து கொண்டிருந்த விரக்தியும் ஒன்றாகச் சேர்ந்து அவர்களைத் தூங்கவே விடவில்லை. வள்ளி அதிகாலையிலேயே எழுந்து அடுப்பு பற்ற வைத்தாள். சாப்பாடு தயாராகிக் கொண்டிருக்கும்போது அவர்கள் அடுப்பருகே உட்கார்ந்து குளிர் காய்ந்தனர். சூரியன் உதிக்கும் முன்பே மற்ற கூலிகள் வேலைக்குச் சென்றுவிட்டனர். காட்டுக்குப் போய் அடுப்பெரிப்பதற்கு விறகு வெட்டி சேர்த்து வைத்துக் கொள்ளும் படியும், வேலை நாட்களில் அதற்கெல்லாம் நேரமிருக்காது என்றும் முத்தையா கூறியிருந்தான். அதே நேரத்தில் காட்டுக்குள் ரொம்ப தூரம் போய்விட வேண்டாம் என்றும், மிருகங்கள் வரலாம் என்று எச்சரித்துமிருந்தான். சூரியன் உயரத்திற்கு வந்ததும் காலை நேரக் கடுங்குளிர் மெல்ல

விலகியது. கருப்பன் வள்ளியை அழைத்துக் கொண்டு ஒரு கோடாலியுடன் காட்டுக்குள் சென்றான். வழியில் சில குழந்தைகள் களை பறித்துக் கொண்டிருந்தனர். அவற்றில் சில குழந்தைகளுக்கு எட்டு வயதுதான் இருக்கும். கையில் பிரம்புடன் ஒரு மேஸ்திரி அவர்களை வேலை வாங்கிக் கொண்டிருந்தான். குழந்தைகள் கந்தல்களை உடுத்தி, பழைய நைந்துபோன கம்பளிகளை மேலே சுற்றிக் கொண்டிருந்தன.

“பாவம் பிள்ளைங்க ஊர்லயின்னா இந்த பச்ச மண்ணுகள வேல செய்ய உடுவாங்களா? வீட்டுல கைக்கொழந்தகள பாத்துக்கவோ, சமயலுக்கு ஒத்தாச பண்ணவோ செய்யும். இங்க பெரிய ஆளுகள மாதிரியில்லா வேல வாங்குறானுவோ. இந்த மோசமான எடத்துக்கு எங்களயும் ஏமாத்திக் கூட்டிட்டு வந்துட்டியளே பாவிமக்கா. வருசம் ஒன்னு முடியாம திரும்பியும் போக முடியாதுன்னு சொல்லுதாவளே...” எங்கோ ஆரம்பித்த வள்ளி தங்கள் தலைவிதியை நொந்து கொண்டு விம்மத் தொடங்கினாள்.

“ரெண்டு மூணு மாசத்துக்குள்ள கஷ்டப்பட்டு வேல செஞ்சு கொஞ்சம் பணம் சம்பாதிச்சுட்டு ஓடிப் போயிறனும். எனக்கு இந்த எடமே புடிக்கல. பெரியய்யாவையும் புடிக்கல, வெள்ளத் தொரையையும் புடிக்கல. நாம நெனச்சதுக்கும் இங்கன நடக்கறதுக்கும் எத்தன வெத்தியாசம். நம்ம ஊர் வைரமுத்துகூட உண்மையைச் சொல்லாம உட்டுட்டானே. நான் தனியா இங்க வந்திருக்கணும். உன்னையும் இழுத்துட்டு வந்து கஷ்டப்பட வச்சிட்டேனே.” கருப்பன் புலம்பினான்.

“இல்ல மாமா நானும் உங்கூட வந்ததுதான் நல்லதுன்னு படுது. நீ மட்டும் தனியா வந்திருந்தா நான் உன்ன நெனச்சே எப்பவும் கவலையோட கெடப்பேன். இப்ப ரெண்டு பேரும் ஒண்ணா இருக்கறதால அந்தக் கவலயாவது இல்ல. ஒருத்தருக்கு ஒருத்தர் ஆறுதலா இருக்க முடியுதே!”

அவர்கள் இதற்குள் காட்டினுள் நுழைந்து விட்டிருந்தனர். கருப்பன் விறகு வெட்டத் தொடங்கினான். ஹூட் ஹூட் ஹூட் என்று கூச்சல் கேட்டது. ஏராளமான கருங்குரங்குள் மரங்களின் உச்சியில் அமர்ந்து ஏதோ பழங்களைத் தின்று கொண்டிருந்தன. சமவெளிகளில் இருக்கும் குரங்குகளைவிட அவை மிகவும் பெரியவையாகத் தோன்றின. இருவரும் அவற்றையே கொஞ்சநேரம் கண் கொட்டாது பார்த்துக் கொண்டிருந்தனர்.

திடீரென்று எதையோ நினைத்துக் கொண்டு கருப்பன் கண்கள் சுடர்விடக் கேட்டான். “இப்பவே எனக்கு ஓடிப்போகணும்

போலிருக்கு””முத்தையா அண்ணாச்சிதான் ஓடிப்போனா எத்தன பிரச்சன வரும்னு சொல்லியிருக்காருல்லா. இருக்குற கஷ்டத்தோட இன்னமும் கஷ்டப்படணும்னு நெனக்கியா?”

“அதுவும் சரிதான்” கருப்பன் அந்த ஒரு நிமிட உற்சாகம் வடிந்துபோக வருத்தத்துடன் ஒப்புக் கொண்டான். தன் ஊராரையும், குடிசையையும், அம்மாவையும் பற்றிய நினைப்பை ஒதுக்கித் தள்ளும் உத்வேகத்தோடு கோடாலியால் மரத்தைத் தாக்கத் தொடங்கினான். ஒரு வாரத்திற்குத் தேவையான விறகு வெட்டப்பட்டவுடன் அவர்கள் அவற்றை இரண்டு சுமைகளாகக் கட்டித் தூக்கிக் கொண்டு சோர்வுடன் லைனை நோக்கி நடக்கத் தொடங்கினர்.

# 3

மனிதனிடம் மனிதன் காட்டும் மிருகத்தனம்
ஆயிரமாயிரம் பேரை வாட்டி வதைக்கிறது.

மேன் வாஸ் மேடு மௌர்ன்
-பர்ன்ஸ்

குமரிமலை டீ எஸ்டேட்ஸ் லிமிடெடின் சர்வ வல்லமை பொருந்திய பொது மேலாளரன திருவாளர். வொய்ட் புகைபிடித்தபடி அஞ்சலில் வந்திருந்த கடிதங்களைப் பார்வையிட்டுக் கொண்டிருந்தார். அவரது தலைமை குமாஸ்தா ஜான்சன் மெல்ல அறைக்குள் எட்டிப் பார்த்தான் “என்ன வேணும் ஜான்சன்?”

“மாஸ்டர் சங்கரபாண்டியன் மேஸ்திரி வந்திருக்கான்?”

“எதுக்கு?”

“எசமான் அவன் மேல கோவப்பட்டு அவன் கூலிகள பதிவு பண்ணல. எசமான் மாப்புக்காக மன்றாடிக் கேட்க வந்திருக்கான்.”

“இந்த மாதிரி அதிகப்பிரசங்கித்தனமான பிச்சைக்கார நாய்கள எவ்வளவு தைரியமிருந்தா அந்தக் கீழ்சாதிநாய் என்னோட எஸ்டேட்டுக்குள்ள கொண்டு வந்திருக்கும்.”

“மாஸ்டர் சங்கரபாண்டியன்தான் நம்மோட மேஸ்திரிங்கள்யே பெரிய மேஸ்திரி. நம்ம மேஸ்திரிகளிலேயே உங்ககிட்ட ரொம்ப விசுவாசமா இருக்கறவனும் அவன்தான். உங்ககிட்ட தப்பா நடந்துகிட்டவன் புதுக்கூலி. ஏதோ பயத்துல அப்படி பண்ணிட்டான்.”

“எதுக்கு பயப்படணும்? நான் என்ன அவன் பொஞ்சாதிய கடிச்சா தின்னுடுவேன்?”

“எசமான் தங்கமானவரு, அன்பானவரு, வாரிக் குடுப்பாருன்னு எங்களுக்குத் தெரியும். ஆனா புதுக் கூலிங்க மொத மொதலா வெள்ளைக்கார எசமானருங்களப் பாக்கறாங்க, அதனால பயப்படுறாங்க.”

“இந்த மேஸ்திரிப் பயலுக்கு என்னைப் பத்தித் தெரியும்ல. அவனோட பிளடி கூலிகளுக்கு சொல்லிக் குடுத்து கூட்டிட்டு வரவேண்டியதுதானே.”

“பாண்டி எசமான்கிட்ட மன்னிப்பு கேட்கிறான். எஸ்டேட்டுக்கு நல்ல கூலிகளைப் பிடிச்சுட்டு வர்றது கஷ்டமாயிருக்காம். கீழே நல்ல மழை பெஞ்சிருக்கறதால கூலிங்க இங்க வர மாட்டேங்கறாங்களாம்.

“அப்படின்னா பழனியிலிருந்து, ஈரோட்டிலிருந்து கூலிகளக் கூட்டிட்டு வரவேண்டியதுதானே? நாடு முழுக்க மழை பெய்யுதா என்ன?”

“எசமானுக்கு தெரியாததில்ல. திருநெல்வேலிக் கூலிங்கதான் கடினமா உழைப்பாங்க. மத்தவங்க மழைக்காலம் வந்தா ஓடிப் போயிடு வாங்க.”

“ஆல்ரைட் அந்த பிச்சைக்கார நாய்கிட்ட அவனோட பிளடி கூலிகளை நாளைக்கு மத்தியானம் பதிவு பண்ண கூட்டிட்டு வரச்சொல்லு.”

“எசமானருக்கு ரொம்ப தாராள மனசு” என்று சொல்லிவிட்டு ஜான்சன் வெளியே வந்து அங்கே காத்துக் கொண்டிருந்த சங்கரபாண்டியனை அழைத்துக் காதில் கிசுகிசுத்தான். “பெரிய தொர ரொம்பக் கோபமாயிருக்காரு. உன் கூலிகளப் பதிவு பண்ண அவருக்கு இஷ்டமேயில்லல்லா. நான் ரொம்ப கெஞ்சிக் கேட்டுக்கிட்டதால பதிவு பண்ண ஒத்துக்கிட்டாரு. நாளைக்கு மூணு மணிக்கு அவங்களக் கூட்டிகிட்டு வாலே. அந்தப் பயலுவ வாய வச்சிட்டு ஒழுங்கா இருக்காங்களான்னு கவனமா பாத்துக்கோ.”

“ஐயா, இந்த ஒத்தாசய மறக்கவே மாட்டேன். ராத்திரி வீட்டுக்கு வந்து பாக்கேன்” என்றான் மேஸ்திரி.

“ஆல்ரைட்”

பின்பு, வெள்ளையன் லைனுக்கு வந்து கருப்பனிடமும், மற்ற கூலிகளிடமும் தலைமை எழுத்தர் அன்புகூர்ந்து அவர்களுக்காகத் தலையிட்டதன் காரணமாகப் பொதுமேலாளர் கருப்பனின் முரட்டுத்தனமான நடத்தையை தாராளமனம் கொண்டு மறக்க ஒப்புக் கொண்டார் என்றும் நாளை அவர்களைப் பதிவு செய்யப் போகிறார்கள் என்றும் கூறினான். பின்பு கருப்பனை நேராகப் பார்த்தான் “டேய் கருப்பா உனக்கு ஒரு விசயம் சொல்லுதேன். நீ வாயைத் திறந்தேன்னு வையி. இனி ஜென்மத்துக்கும் வாயே திறக்காத மாதிரி பண்ணிடுவோம்” பின்பு வள்ளியிடம் திரும்பி “இதபாரு புதுப்பொண்ணு மாதிரி நடந்துக்காதே. பெரிய தொர ஒண்ணும் உன்னை முழுங்கிர மாட்டாரு” என்று கடுமையாக எச்சரித்து விட்டுச் சென்றான்.

அடுத்தநாள் மதியம் சங்கரபாண்டியனும் வெள்ளையனும் கருப்பன்,

வள்ளி மற்றும் ஏனைய கூலிகளை அலுவலகத்துக்கு அழைத்துச் சென்றனர். திருவாளர் வொயிட் ஆபிஸில் இன்னொரு வெள்ளைத் துரையுடன் பேசிக் கொண்டிருந்தார். அந்த ஆள் இதே கம்பெனிக்குச் சொந்தமான கழுகுமலை எஸ்டேட்டின் மேனேஜர் என்று வெள்ளையன் அறிவித்தான். சில நிமிடங்கள் கழித்து தலைமை எழுத்தர் வெளியே வந்து பொது மேலாளர் வேலையாய் இருப்பதால் அவரது உதவியாளர் பதிவு செய்யும் பணியைச் செய்வார் என்று கூறினார். உதவி மேலாளரான திருவாளர் ஈஸ்டுக்கு, வொய்ட் அளவுக்குத் தமிழ் வரவில்லை. அவன் வயதிலும் மிக இளையவன். ஒவ்வொரு கூலியின் பெயரும் அழைக்கப் பட்டதும் ஈஸ்ட் அவனை மேலும், கீழும் பார்த்துவிட்டுப் பதிவேட்டில் அவனுக்கான சம்பளத்தைக் குறிப்பான். குழு முழுவதும் பதிவு செய்யப்பட்டதும், அடுத்த வாரத்திற்கான உணவுப் பொருட்களையும், கம்பளிகளையும் பெற்றுக் கொள்வதற்காக வெள்ளையன் அவர்களை எஸ்டேட் ஸ்டோருக்கு அழைத்துச் சென்றான்.

கடை தாழ்வான கூரைகொண்ட ஒரு நீண்ட கட்டிடத்தில் அமைந்திருந்தது. அதற்குச் சன்னல்களே இல்லை. முன்புறம் இருந்த ஒரே ஒரு கதவு திறந்திருந்தது. அதன் அருகே அரிசிக்கடை ஐயா என்று கூலி களால் அழைக்கப்பட்ட கடைக்காரன் உட்கார்ந்திருந்தான். அலுவலகத்தில் இருந்து சில நிமிடம் கழித்து வந்த சங்கரபாண்டியன் உத்தரவை நீட்டினான். ஒவ்வொரு கூலிக்கும் ஒரு கம்பளி வழங்கப்படும் என்றும், ஆண்களுக்கு ஏழு படி அரிசியும், பெண்களுக்கு ஐந்து படி அரிசியும் வழங்கப்படும் என்றும் வெள்ளையன் குறிப்பிட்டான். பெரிய குழந்தைகளுக்கு இரண்டு படியும், சிறிய குழந்தைகளுக்கு ஒரு படியும் வழங்கப்படும். அவற்றைவிட சிறிய குழந்தைகளுக்கு எந்தப் பொருளும் வழங்கப்படாது. “ஏலே எல்லாப் பயலுகளும் வாரந்தோறும் சனிக்கிழம வேல முடிஞ்சப்புறம் கடைக்கு வந்து அவங்கவங்களுக்கு சேர வேண்டிய சாமான்களை வாங்கிக்கங்க. ஆனா வாரம் முழுக்க வேல செஞ்சாத்தான் முழு ரேசன் கிடைக்கும். யாராவது ஒருநாள், இரண்டு நாள் வரலேன்னா காட்டு ஐயா அவர் இஷ்டப்படி ரேசனைக் குறைச்சிடுவாரு. மூணு நாளைக்கு மேலே வேலைக்கு வராதவங்களுக்கு ரேசனே கிடைக்காது. புரிஞ்சுதா?”

“நாங்க எப்போ வேலைக்குப் போகணும்?” யாரோ ஒருவன் கேட்டான்.

“நாளைக்கு வெடியக் காலைல நான் வந்து கூட்டிட்டு போறேன்”வெள்ளையன் பதிலளித்தான். வந்து சேர்ந்த நான்காவது நாள் இருள் விலகுவதற்கு முன்பே அவர்கள் பணிக்குத் தயாராயினர்.

முத்தையாவின் மனைவி ராமாயி முழங்காலுக்குக் கீழே வராமல் எப்படி சேலை கட்டுவது என்றும், எப்படிக் கம்பளியைச் சுற்றி அணிந்து கொள்வது என்றும், தலையிலிருந்து கயிறு மூலம் எப்படி கூடையைத் தொங்கவிடுவது என்றும் வள்ளிக்குச் சொல்லிக் கொடுத்தாள். புதியதாகச் சேர்ந்த கொழுந்து கிள்ளுபவர்கள் எல்லோரும் ஒரே காட்டுக்கு அனுப்பப்பட்டனர். தேயிலை பறிக்கும் கலையைச் சொல்லிக்கொடுக்க ஒரு சில பழைய கொழுந்து கிள்ளுபவர்களும் அவர்களோடு அனுப்பப்பட்டனர். அவர்களில் ஒருத்தியான ராமாயி வள்ளியின் அருகே வந்தாள். “ஒரு கொழுந்தும் ரெண்டு இலையும் ஒன்னா இருக்கறத மட்டுந்தான் பறிக்கணும். கொழுந்து ரொம்பவும் சிறியதாக இருக்கக் கூடாது.” கற்றுக் கொடுப்பதிலும், கற்றுக் கொள்வதிலும் அவர்கள் மூழ்கிப் போயிருந்தபோது “சின்ன ஐயா வர்றார்”என்ற வெள்ளையனின் குரல் கேட்டது. “முத்தின இலைகள பறிக்காதீங்க. இளம் கொழுந்துகளையும் பறிக்காதீங்க என்று கத்தத் தொடங்கியவன், உதவி எழுத்தர் அருகில் வந்ததும் “சலாம் ஐயா” என்றான்.

அந்த உதவி எழுத்தர் மாத்யூஸுக்கு சுமார் இருபத்தி இரண்டு வயது இருக்கலாம். மற்ற எழுத்தர்களைப் போலவே காக்கி உடை அணிந்திருந்தாலும் காக்கி தொப்பிக்கு பதில் ஒரு சேவல் கொண்டை தொப்பியை அணிந்திருந்தான். அது உல்லாசமாக, ஒருபுறமாகச் சரிந்திருந்தது.

“சலாம் வெள்ளையன், கூட்டத்தில எத்தன பேர் புதுசா கிள்றவங்க இருக்கிறாங்க?”

“இருபது பேர் இருக்காவ. சொல்லித் தருவதற்கு பழைய ஆளுங்க நாலுபேரப் போட்டிருக்கேன்.”

“புது ஆளுக பேரைச் சொல்லு” வெள்ளையன் ஒவ்வொருவராக சுட்டிக் காட்டி அவர்களின் பெயரையும் கூறிக் கொண்டே வந்தான்.

“அவ பேரு என்ன? இன்னொரு தடவை சொல்லு” மாத்யூஸ் வள்ளியைக் காட்டி கேட்டான்.

“அவளோட நிஜப்பேரு வள்ளி. ஆனா ஏற்கெனவே ரெண்டு வள்ளி இருக்கிறதால பெரிய ஐயா அவ பேர சீதான்னு எழுதிட்டாரு.”

“ஹலோ சீதா, எஸ்டேட் பிடிச்சிருக்கா.” மாத்யூஸின் கேள்விக்கு வள்ளி பதிலளிக்கவில்லை.

“ஏய், சின்ன ஐயா கேட்கிறது காதுல விழலையா?” வெள்ளையன்

உதவிக்கு வந்தான்.

“பரவாயில்ல. அவளைத் தொல்லை பண்ண வேண்டாம். அவளைப் பார்த்தால் எஸ்டேட்டுக்கு ரொம்பப் புதுசாத் தெரியுது. அதுதான் வெட்கப்படறா. கொஞ்ச நாள்ல சரியாகிடுவா இல்லையா?” மாத்யூஸ் அவளைப் பார்த்து இளித்துக் கொண்டே சொன்னான்.

“ஆமா ஐயா, சீக்கிரம் சரியாகிடுவா” வெள்ளையனும் பல்லைக் காட்டினான்.

“நேத்து பதிவு பண்ணும்போது வந்த எல்லாப் பிரச்சினைகளுக்கு இவதான் காரணம் இல்லையா.”

“ஆமா சின்னய்யா இவதான்.”

“ஓஹோ, அப்ப நாம ரொம்ப ஜாக்கிரதையா இருக்கணும். என்னைப் பத்தி உன் வீட்டுக்காரன் கிட்ட புகார் சொல்லிட மாட்டாயே சீதா.”

“நேத்தே அந்தப் பயலுக்கு ஒரு நல்ல பாடம் கத்துக் கொடுத்துட்டோம்” என்று வெள்ளையன் கூறியதைப் பொருட்படுத்தாமல், “ஆல் ரைட், நான் போறேன். எடை போடறதுக்கு எல்லாக் கொழுந்து கிள்ளுறவங்களையும், பதினொன்னாம் நம்பர் காட்டுக்கு கூட்டிக்கிட்டு வந்திடு”என்று கையிலிருந்த பிரம்பை வீசி ஆட்டியபடி மாத்யூஸ் நடக்கத் தொடங்கினான். எஸ்டேட்டில் வள்ளியின் முதல்நாள் தொடங்கியது.

அடுப்பெரிப்பதற்கான விறகு வெட்டுவதற்காக கருப்பன் ஏராளமான ஆட்களுடன் காட்டுக்கு அனுப்பப்பட்டான். ஒவ்வொருவரும் ஒரு குறிப்பிட்ட அளவு விறகு வெட்டியே ஆக வேண்டும். ஒருவனது வேலை முடிந்துவிட்டால் ஒரு சிறிய பதிவேட்டில் அவன் பெயர் பதிவு செய்யப்பட்ட பின்பு அது அலுவலகத்திற்கு அனுப்பப்படும். அங்கே குமாஸ்தாக்கள் அதைப் பெரிய பதிவேட்டிற்கு மாற்றுவார்கள். மாத இறுதியில் ஒருநாள் வேலைக்கு நான்கணா வீதம் சம்பளம் கணக்கிடப்படும். கொழுந்து கிள்ளுபவர்களைப் பொருத்தவரை அவர்கள் எவ்வளவு பறிக்கிறார்களோ அவ்வளவுதான் கூலி என்பதால் அளவு நிர்ணயிக்கப்படவில்லை. ஒவ்வொரு நாள் முடியும்போதும் பறிக்கப்பட்ட இலைகள் எடை போடப்பட்டு குறித்துக் கொள்ளப்படும். அலுவலகத்தில் மாதம் முழுவதும் கிள்ளப்பட்ட இலைகள் கணக்கிடப்பட்டு ஒவ்வொரு பவுண்டுக்கும் இரண்டு பைசா வீதம் சம்பளம் கணக்கிடப்படும்.

விறகு வெட்டுவது கருப்பனுக்குப் பழக்கமானதுதான் என்பதால் பழைய

கூலிகளுடனேயே அவனும் தனக்கு நிர்ணயிக்கப்பட்ட வேலையைச் செய்து முடித்து விட்டான். அறைக்குத் திரும்பி வந்தபோது முத்தையா ஏற்கெனவே அங்கிருப்பதைக் கண்டான். அடுப்பில் அரிசி பொங்கிக் கொண்டிருந்த முத்தையா கருப்பனைத் தோழமையான புன்னகையுடன் வரவேற்று ஆற்றிலிருந்து தண்ணீர் கொண்டு வந்து சமையலைத் தொடங்கச் சொன்னான்.

“எப்பவுமே பொம்பளைகளுக்கு முன்னாடி ஆம்பளைங்க வேலை முடிச்சிட்டு வந்துருவாக. பேக்டரிக்குப் போயி இலய எட போட்டுட்டு அவங்க வர்றதுக்குள்ள இருட்டிப் போயிரும். அதனால ஆம்பளைங்க சோறு பொங்கிருவாங்க. பொம்பளைங்க வந்த பின்னாடி ஏதாவது பொரியல், இல்லாட்டி கொழம்பு வைப்பாங்க.”

கருப்பன் ஆற்றிலிருந்து தண்ணீர் கொண்டு வந்து அடுப்பு பற்ற வைத்து சமையலைத் தொடங்கினான். உலை கொதிக்கையில் அவர்கள் இருவரும் வெளியே உட்கார்ந்து பேசத் தொடங்கினார்கள். கருப்பன் முத்தையாவிடம் தனது முதல் நாள் அனுபவங்களைக் கூறினான். சற்று நேரத்தில் வள்ளியும், ராமாயியும் வந்து விட்டார்கள். முதல் நாள் வேலை எப்படியிருந்தது என்று கருப்பன் ஆவலுடன் வள்ளியிடம் கேட்டான்.

“நான் இப்பத்தான் கிள்ளத் தொடங்கியிருக்கேன். முதல்ல ரொம்ப கஷ்டமாத்தான் தெரிஞ்சிது. ஆனால் பொழுது ஆக ஆக அவ்வளவு மோசமா இல்ல. ஒரு வாரம் போனா நல்லாப் பழகிடுவேன்னு நெனைக்கேன்” என்றாள் வள்ளி.

“ரெண்டு பவுண்டு கொழுந்து இன்னைக்கு கிள்ளிட்டோம்”ராமாயி சிரித்துக் கொண்டே கூறினாள்.

“நல்லாப் பறிக்கிறவங்க எத்தன பறிப்பாங்க” கருப்பன் கேட்டான்.

“நல்லா கொழுந்து இருக்கும் காலத்தில அம்பது அறுபது பவுண்டு பறிப்பாங்க. நிறைய மழை இல்லாதப்போ எவ்வளவு நல்லாப் பறிக்கிறவளா இருந்தாக்கூட ஒரு நாளைக்கு அஞ்சாறு பவுண்டுக்கு மேல கிள்ள முடியாது.” முத்தையா பதிலளித்தான்.ஒரு மூடியில்லாத குடுகு விளக்கின் மங்கலான ஒளியில் இரவுணவு முடிந்தது. நாள் முழுவதும் வேலை செய்து களைத்துப் போயிருந்ததால் உடனே படுத்துக் கொண்டனர். கண்ணயர்ந்து சில நிமிடம் கூட ஆகியிருக்காது. பக்கத்தில் யாரையோ யாரோ அடித்து உதைக்கும் சத்தமும், யாரோ விம்மியழுவதும், ஒரே நேரத்தில் பலர் பேசும் இரைச்சலும் கேட்டு திடுக்கிட்டு எழுந்த கருப்பனும் வள்ளியும் வாரிச் சுருட்டிக் கொண்டு

வெளியே ஓடிவந்தனர்.

அவர்களோடு ரயிலில் வாயே திறக்காமல் வந்த நோயாளி மனிதனைத்தான் சங்கரபாண்டியன் மூர்க்கமாக அடித்து நொறுக்கிக் கொண்டிருந்தான்.

“ச்சீ தெண்டத்துக்கு பொறந்த தேவடியா மவன. நீயும் ஒம் பொண்டாட்டி தேவிடியாளும் நாளைக்கு வேலைக்கு வரல... உங்க தோல உரிச்சி போட்டுருவேன்.” மேஸ்திரி அடிக்குரலில் உறுமினான்.

“ஈவிரக்கமில்லாம பேசாதீங்க சாமி; சத்தியமா அவருக்கு காய்ச்சலடிக்குது. மனுசனால நிக்கவே முடியல. எப்படிய்யா வேலைக்கு போக முடியும்?” அந்தப் பெண் கண்ணீர் மல்கக் கெஞ்சிக் கொண்டிருந்தாள். மேஸ்திரி அவள் வாயைக் குறிவைத்து ஒரு குத்து விட்டான்.

“எதுத்தா பேசுத நாயி? வேல செய்ய வக்கில்லைன்னா எம் பணத்த எண்ணி வச்சிட்டு எந்த நரகத்துக்காவது போய் தொலைங்க.”“நாளைக்கு நான் வேலைக்குப் போறேன். என் வூட்டுக்காரர ஆஸ்பத்திரிக்கு அனுப்புங்கய்யா” மனைவி தொடர்ந்து கெஞ்சினாள்.

“முடியவே முடியாது” மேஸ்திரி உச்சஸ்தாயியில் முழங்கினான்.
“காலைல வேலைக்கு வந்துட்டு பொழுதோட அவன் ஆஸ்பத்திரிக்குப் போகட்டும் மருந்து வாங்கட்டும். இப்ப ஒழிஞ்சுபோ.” மேஸ்திரி விட்ட உதையில் அவன் சுருண்டு விழுந்தான். மனைவி கணவனை எழுப்பிக் கைத்தாங்கலாக அழுதபடி நடத்திச் சென்றாள். சங்கரபாண்டியன் இருவர் மீதும் வசைமாரி பொழிந்தபடி அங்கேயே நின்று கொண்டிருந்தான்.

“ஐயோ சாமி ரொம்ப அநியாயமா இருக்கே. மேஸ்திரி இப்படிப்பட்ட ஆளா இருப்பான்னு நான் நெனச்சே பார்க்கலயே. கயத்தாறுல பார்த்தப்ப சர்க்கரையாய் பேசினானே?” கருப்பன் அடக்கமாட்டாமல் புலம்பினான்.

“உஷ் சத்தமாப் பேசாதே. யார் காதுலயாவது விழுந்து மேஸ்திரிகிட்ட சொல்லிட்டா அப்புறம் உம்பாடு அவ்வளவுதான். கீழ பொழைக்கிறதுக்கு வேற வழியில்லாமத்தானே இங்கன வந்தோம். எத்தன கஷ்டம் வந்தாலும் எல்லாத்தையும் தாங்கித்தான் தீரணும்.”

“யாரு இந்த அப்பிராணிங்க? அடி வாங்கிச் சாவுதுங்களே!”

“பாவம் மூணு வருசத்துக்கு முன்னால ராசபாளையத்துக்குப் பக்கத்துல இருக்கற ஒரு ஊர்ல இருந்து வந்தவங்க. நல்ல வேலக்காரங்கதான். அதுங்க நேரந்தான் சரியில்ல. ரெண்டாவது வருசத்துலயே முத்து லட்சுமிக்கு ரெண்டுதடவ கருக்கலஞ்சு போயி ஆஸ்பத்திரில ரொம்ப நாள் கெடப்பில கெடந்தா. அந்தாள் பேர் சின்னராமன். அவனுக்கு திரும்பத் திரும்ப வயித்தால போகவும் அரிசியும் சாமான்களும் வாங்க மேஸ்திரிகிட்ட கடன்மேல கடன் வாங்கிட்டாக. செட்டில்மென்ட் பண்ணும்போது கடனை அடைக்க முடியல. மூணாவது வருசத்துல எல்லாக் கடனையும் அடச்சாங்க. ஆனா ஊருக்குப் போகத்தான் சல்லிக்காசில்ல. நேரம் பார்த்து மேஸ்திரி இன்னொரு வருஷம் வேல செய்யணும்னு எழுதி வாங்கிட்டு இருபது ரூபாய் அட்வான்ஸ் கொடுத்தான். பணத்த வாங்கிட்டு ஊருக்கு போனவங்க திரும்பி வரல. மேஸ்திரி பெரிய தொரைக்கிட்டேயிருந்து லெட்டர் வாங்கிட்டு அவங்க ஊரு போலீசுகிட்ட போனான். எப்பிடியும் மேஸ்திரி தேடி வருவான்னு நெனைச்சி இவங்க சொந்த ஊர்ல தங்காம தெங்காசிப் பக்கம் போயிருந்தாங்க. போலிசு எப்படியோ கண்டு பிடிச்சு அங்கேயே போயி அதுகள கைது பண்ணி திரும்பவும் சங்கரபாண்டியன்கிட்ட ஒப்படைச்சிருச்சி. பாவிப்பய கூட்டியாந்து பாடாப்படுத்துறான்.”

“நம்ம ஊருலகூட பத்தரமா இருக்க முடியாதா” கருப்பன் பயத்துடன் கேட்டான்.

“முடியாது. வெள்ளைத் தொரைங்ககிட்ட எல்லா பலமும் இருக்கு. அவங்கதானே நாட்டையே ஆளுதாங்க. போலிசே துரைகளோட இஷ்டத்துக்குதானே வேல செய்யுது. ஒரு தொழிலாளி ஒரு தடவ எஸ்டேட்டுக்குள்ள கால வச்சிட்டா அவ்வளவுதான். மேஸ்திரிங்ககிட்ட யிருந்தும், தொரைங்ககிட்டயிருந்தும் லேசுல தப்ப முடியாது. வேலைக்கு வரும்போது தாரானே அட்வான்ஸ் பணம், அதுதான் நமக்கு விலங்கு. எப்பேர்பட்ட கூலிக்காரனும் மொத வருசத்துல அத திருப்பி அடைக்க முடியாது. நீ கடன அடைக்க முடியாதபடிக்கும், இன்னொரு வருசமும் இங்கயே இருக்குற மாதிரியும் மேஸ்திரி ஏதாவது பண்ணுவான். வருசத்துக்கு ஒருக்கதான் கணக்கு முடிப்பானுவன்னு ஒனக்குத் தெரியும்லா. அப்போ எல்லாத்தையும் புடிப்பானுவ. கம்பளி, வாரா வாரம் வாங்குற ரேசனுக்கான பணம், வாரந்தோறும் வாங்குற செலவுக் (கைச்செலவுப் பணம்) காசு* எல்லாத்தையும் சல்லி பைசா பாக்கியில்லாம புடிப்பானுவ.

இதுல வேற இங்க எல்லாருக்கும் மலக் காய்ச்சல் (மலேரியா) வரும். இன்னும் ரெண்டு மாசத்துல அந்த காய்ச்ச காலம் தொடங்கிடும். நெறய

கூலியாளுங்க வருசத்துல ரெண்டு மூணு தடவையாவது அந்த காய்ச்சலில் உளுந்து அவஸ்தபடுவாங்க. உனக்கு காய்ச்ச வந்தா வேலைக்கு போக முடியாதுல்லா. வேலைக்கு போக முடியாதவனுக்கு *ஒவ்வொரு வாரமும் ஆண்களுக்கு ஆறு அணாவும், பெண்களுக்கு நான்கு அணாவும் வீட்டுக்குத் தேவையான பொருட்கள் வாங்குவதற்குக் கொடுக்கப்படும் இந்தப் பணம் “செலவு கேஷ்”' எனப்பட்டது.

கொஞ்சம் ரேசன் கொடுக்கலாம்கிறதோ, வேண்டாங்கிறதோ பெரிய காட்டு அய்யா கையிலதான் இருக்கு. ரேசன் கெடைக்கலைன்னா என்ன செய்வ? மேஸ்திரிகிட்டதான கடன் வாங்கணும். இல்லேன்னா காளிச் செட்டி யார்ட்ட கடன் வாங்கணும். எங்க வாங்குனாலும் வருசக் கடசில வந்து நிப்பானுவ. அவனுவ காட்டுத கணக்க பாத்தா நீ வாயப் பொளந்து மயங்கி விழுந்துருவ. கணக்கு வழக்கப் பத்தி ஏதாவது கணக்கு கேட்டா அவ்வளவுதான். உன்ன நன்றிகெட்ட நாயே, பேயேன்னு திட்டி அடிக்கவும் செய்வானுவ. என்ன செய்யதுடே பட்டினி கெடந்து சாவவா முடியும்? கடன்தான் வாங்கனும். வேற வழியே கெடையாது.”

“ஒத்த ஆளு வேல செஞ்சு மொத்தக் கடனயும் அடைக்க முடியும்னா நெனைக்க? முடியவே முடியாது. இந்த கடன் சங்கிலியாலே உன்ன அடுத்த வருசத்துக்கும் எஸ்டேட்டுல கட்டிப் போட்டுருவானுக.”

“புருசனும், பொஞ்சாதியும் சேர்ந்து பாடுபட்டு காய்ச்சலோ கருமாதியோ வராம இருந்தா ஒரு வருசத்துல முழுக் கடனையும் அடைக்கலாம். அதுக்கு கொடுப்பின இருக்கனுமே. இங்கன காய்ச்சலும், கடனும் எல்லாரையுந்தான புடிச்சிக்குது. குடும்பத்துல ரெண்டு மூனு கொழந்தைங்க இருக்கறவங்க பாடு பரவாயில்ல. அதுங்களும் சேர்ந்து வேல பாக்கதால கடனையும் அடைச்சிட்டு நாலு காசோட ஊரப் பார்த்து போக முடியும். சின்னப் பிள்ளைங்ககூட வேல செய்யத பாத்தேல்லா.”

“என்னையே எடுத்துக்கேயன். ஐம்பது ரூவா அட்வான்ஸ் வாங்கிருந்தேன். வந்த மொத வருசமே புள்ளைங்களுக்கு காய்ச்சலாப் போச்சு. முப்பது ரூபா கடன் இருந்துச்சி. எப்படியோ வம்பாடுபட்டு ரெண்டாவது வருசத்துல கடன அடைச்சேன். ஆனா ஊருக்கு போக பத்து பைசா இல்ல. இந்த வருசமாவது ஊருக்கு போயிரலாமுன்னு நம்பிகிட்டு கெடக்கேன்.”

“வருசக் கடசியிலதான் கூலி கொடுப்பாங்கன்னா, எடையில கிடையில ஏதாவது நமக்கு பணம் தேவைப்பட்டா என்ன பண்ணறது?” கருப்பன்

கேட்டான்.

“ஒவ்வொரு மாசமும் ஒரு நாள்ல கூலிங்க தங்களுக்கு தேவைப்படற பணத்தை அவங்க கணக்கிலிருந்து ஏதாவது மீதியிருந்தா வாங்கிக்கலாம். உனக்குப் பணம் தேவைப்பட்டா நீ பெரியய்யாவ பார்க்கனும். அவர் விருப்பப்பட்டா ஒரு சீட்டு எழுதி கொடுப்பாரு. அதை ஆபிசுல கொண்டு போய் கொடுத்தா ஆபிசய்யா பணம் கொடுப்பாரு. ஆனா புதுசா வந்த கூலிங்களுக்கு அவங்க கணக்கில பணம் எதுவும் இருக்காதுல்லா. அவங்க கடனாத்தான் வாங்கணும்.”

“ஒருத்தனுக்கு அவன் கணக்கில பணம் இருக்குதா இல்லையான்னு எப்படிண்ணே தெரியும்?” “ஒவ்வொரு மாசம் தொடங்கும் போதும் ஒவ்வொரு கூலியும் எவ்வளவு சம்பாதிச்சான், எவ்வளவு பணம் கழிச்சிட்டாங்க, மீதி ஏதாவது இருக்குதா என்கிறதை ஒரு காகிதத்தில் எழுதி மேஸ்திரிகிட்ட குடுத்துருவாக. உன் கணக்கில எத்தன இருக்குதுன்னு தெரிஞ்சிக்கணுமின்னா உன் மேஸ்திரியைக் கேட்டா அவன் சொல்லுவான். சின்ன ராமன் மேஸ்திரிகிட்ட வாங்கின பணத்தை திருப்பித் தர முடியலை, எல்லாரையும் போலத்தான், ஆனா அவன் ஒரு மடையன். பக்கத்து ஊருக்குப் போயிட்டா தப்பிச்சுக்கலாமின்னு நினைச்சிட்டான். நாட்டையே வெள்ளைக்காரங்கதான் ஆட்சி பண்ணுதாங்க. அவங்ககிட்டிருந்து எங்க போனாலும் தப்பிக்க முடியாது” இன்று இந்த விளக்கம் போதும் என்ற நினைப்பில் முத்தையா விடைபெற்றுச் சென்றான்.

கனத்த இதயத்தோடு கருப்பன் வள்ளியிடம் தான் கேள்விப்பட்டதையெல்லாம் சொன்னான். “சங்கரபாண்டியனை நான் கயத்தாறுல பார்த்தது ஒரு சாபக்கேடான நாள். இங்கே வரணுமின்னு முடிவு பண்ணின நாள் இன்னும் சாபக்கேடான நாள்.” கருப்பனின் குரல் உள்ளத்திலிருந்த கொதிப்பை வெளிப்படுத்தியது.

“ஆனா சகுனமெல்லாம் நல்லாத்தான இருந்தது.” வள்ளி குழப்பத்துடன் கேட்டாள். “சகுனம் கூடத் தப்பாத்தான் இருக்கும் போலிருக்கு”

# 4

நரி ஆட்டுக்குட்டியை நக்கிக் கொடுப்பதைக்
காண்பது ஒரு கெட்ட அறிகுறி

- பழமொழி

இரண்டாவது நாளும் கருப்பன் விறகு வெட்ட அனுப்பப்பட்டான். வள்ளி தனக்கே மிகவும் திருப்தியளிக்கும் அளவுக்கு கொழுந்து கிள்ளும் பணியில் முன்னேறிவிட்டாள். மூன்றாவது நாள் வழக்கம் போல் அதிகாலையில் அவர்கள் வேலைக்குச் சென்றனர். கருப்பன் மாலையில் திரும்பி வந்தபோது வள்ளி ஏற்கெனவே வந்திருப்பதையும்; அவள் கண்கள் அழுது சிவந்திருப்பதையும் கண்டு பதறிப் போனான்.

“ஏன்? என்னாச்சு வள்ளி?”

கணவனைக் கண்டதும் விம்மத் தொடங்கிய வள்ளியால் நீண்ட நேரம் பேசவே முடியவில்லை. பின்பு மெல்ல மெல்ல தட்டுத் தடுமாறி காலையில் நடந்தவற்றைப் பற்றிக் கூறத் தொடங்கினாள். “மாமா நான் சால்ல கிள்ளிட்டு இருக்கும்போது எங்க காட்டு சின்ன ஐயா வந்து எப்படி பறிக்கிறேன்னு கேட்டான். நான் கிள்ளுனதக் காட்டச் சொன்னான். அதைப் பார்த்திட்டு நான் முத்தின இலை பறிச்சிட்டேன்னும், அப்படி செய்யக் கூடாதுன்னும், பெரிய ஐயா பாத்தா வீட்டுக்கு அனுப்பிடுவான்னும் மிரட்டினான். அப்புறம் என் கன்னத்தத் தடவ வந்தான். நான் கையைத் தள்ளி விட்டவுடனே அவனுக்கு ரொம்பக் கோபம் வந்துட்டு வெள்ளையனைக் கூப்பிட்டு நான் மோசமான இலைகளப் புடுங்குறேன்னும், என்மேல ஒரு கண்ணு வெச்சிக்கோன்னும் சொல்லிட்டு போயிட்டான். நான் திரும்பவும் கிள்ளத் தொடங்கறேன். வெள்ளையன் மேஸ்திரி சுளீர்ன்னு பிரம்பால என் கையில அடிச்சிட்டான். அழுகையை அடக்கிட்டு திரும்பவும் செடியில கை வெக்கறேன். திரும்பவும் என் கையில சுளீர் சுளீர்ன்னு அடிச்சிட்டு “காட்டை விட்டு வெளியே போ, நீ பழகவே போறதில்ல, உனக்கு இன்னைக்குப் பேர் கிடையாது’ அப்படின்னு தொரத்தி விட்டுட்டான்.” என்று சொல்லிவிட்டு வள்ளி கதறி அழத் தொடங்கினாள். வீங்கியிருந்த அவள் விரல்களைப் பார்த்து தவித்துப் போன கருப்பன் தன்னால் முடிந்தவரை அவளை சமாதானப்படுத்த முயன்றான். முத்தையா திரும்பி வந்ததும் கருப்பன் நடந்தது அனைத்தையும் அவனிடம் சொல்லி வெள்ளையனை உதைத்தே

தீருவது என்று தான் முடிவு செய்திருப்பதைக் கூறினான்.

“அப்படிகிப்படி எதுவும் பண்ணிடாதடே. அவன்கிட்ட இந்தப் பேச்சே எடுத்திராத. உங்க ரெண்டு பேரோட நல்லதக்குத்தான் சொல்றேன். இங்க நாம பதிலுக்கு ஒண்ணுமே செய்ய முடியாது. வெள்ளையனை அடிக்கப் பார்த்தேனா சங்கரபாண்டியனோட ஆளுக உன் எலும்ப எண்ணிடுவாக. உன்னை நல்லா அடிச்சு நொறுக்கிக்கிட்டு உன் பொஞ்சாதி வேலை சரியில்லைன்னு சொன்னதினால நீ வெள்ளையனை உதைச்சேன்னு மேஸ்திரி பெரிய ஐயாகிட்ட வேற புகார் சொல்லிருவான். பெரிய ஐயா, பெரிய தொரைக்குப் புகார் கொடுப்பாரு. தொரை உன்ன போலீசுக்கு அனுப்பிருவான். அப்புறம் கடவுள்தான் காப்பாத்தணும். தொரைங்க சொன்னபடி செய்யறதுக்கு இருக்கிறவங்கதான் இந்த மேஸ்திரிங்க. மேஸ்திரிகளோட அதிகாரத்துக்குக் கேடு வராம பாத்துக்கிறதுக்கு தொரைங்க முடிஞ்சதெல்லாம் செய்வாங்க.”

வள்ளியும் கெஞ்சிக் கேட்டுக் கொண்டதால் கருப்பன் தன் விதியைச் சபித்துக் கொண்டு படுக்கையில் படுத்து தனது பயம், தவிப்பு, கோபம் எல்லாவற்றையும் தூக்கத்தில் மறக்க முயன்றான்.

# 5

*வாரத்தில் உள்ள அத்தனை நாட்களிலும்
சனிக்கிழமைக்கும், திங்கட்கிழமைக்கும்
இடையில்வரும் அந்த நாளைத்தான் நான்
மிகவும் நேசிக்கிறேன்.*

*சாலி ஈஸ் அவர் அலய்*

*ஹென்றி கேரே*

பருவ காலங்கள் தவிர்த்த மற்ற நாட்களில் தேயிலைத் தோட்டங்களில் ஞாயிற்றுக்கிழமை விடுமுறை நாள். அந்த நாட்களில் கூலிகள் தங்களது சொந்த வேலைகளையும், வீட்டு வேலைகளையும் கவனிப்பார்கள். விடியற்காலையில் பெரும்பாலான பெண்கள் ஆற்றுக்குச் சென்று அங்கே கிடக்கின்ற கற்களைக் கொண்டு அடுப்பு மூட்டி கணவன்மார்கள் எண்ணெய் தேய்த்து குளிப்பதற்குத் தண்ணீர் காய வைப்பார்கள். மற்ற பெண்கள் அழுக்குத் துணிகளை மூட்டையாகக் கட்டிக் கொண்டு ஆற்றுக்குப்போய்த் துவைத்து அருகில் உள்ள பாறைகளில் காயப் போடுவார்கள். ஆண்கள் பெரும்பாலும் காட்டுக்குச் சென்று அந்த வாரம் முழுமைக்குமான விறகு வெட்டிக் கொண்டு வருவார்கள். பணம் இருப்பவர்கள் வால்பாறையில் உள்ள சந்தைக்குப் போய் உணவுப் பொருட்கள் அல்லது எஸ்டேட் கடைகளைவிடக் குறைவான விலையில் கிடைக்கும் பழைய துணிகளை வாங்கி வருவார்கள்.

ஞாயிற்றுக்கிழமைதான் ஆடு,மாடு வெட்டும் தினமும்கூட. கூலிகளுக்கு வாராவாரம் வழங்கப்படும் மாட்டுக்கறி அன்று வழங்கப்படும். முதல் விடுமுறை தினத்தில் கருப்பன் முத்தையாவோடு காட்டுக்கு சென்று விறகுவெட்டி வந்தான். பின்பு முத்தையா கருப்பனை மாட்டுக்கறிக் கடைக்கு அழைத்துச் சென்று அதன் முதலாளியிடம் அறிமுகப்படுத்தினான். அந்த அழுக்கடைந்த கடை காட்டோரத்தில் இருந்தது. வெட்டப்பட்ட இரண்டு மாடுகள், ஒரு சட்டத்தில் தொங்கிக் கொண்டிருந்தன. முதலாளி பரபரப்பாக வாடிக்கையாளர்களுக்கு இறைச்சியை எடை போட்டு கொடுத்துக் கொண்டிருந்தான். சிலர் மட்டுமே பணம் கொடுத்து வாங்கினார்கள்.

“முடிந்தவரை வாரவாரம் கிடைக்கிற செலவுக்காசுலதான் நான்

மாட்டுக்கறி வாங்குவேன். நீயும் அதே மாதிரி பண்ணு. நிறையபேர் கடனுக்கு வாங்குறாங்க. அது சரியில்ல. இங்குள்ள எல்லா வியாபாரிங்களும் பொய்க் கணக்கு எழுதவே பெறப்பெடுத்தவனுங்க.”

“சரிண்ணே!” நானும் கடன் வாங்காம இருந்துக்கணும்னுதான் நெனக்கேன். அப்பதான் வருசக் கடைசில ஊருக்குப் போகற அளவுக்குப் பணம் சேர்க்க முடியும்.”

“நம்ம ஊர்ல ரொம்ப ரகசியமாத்தான் பசுமாட்ட வெட்ட வேண்டியிருக்கும். இல்லாட்டி செத்த மாடுதான் திங்க வேண்டியிருக்கும். இங்க வெள்ளத் தொரைங்க மாடு திங்கறதுனால ஒவ்வொரு வாரமும் நல்லாக் கொழுத்த பசுமாடுகள வெட்டறாங்க. நான் இந்த எஸ்டேட் வாழ்க்கையைச் சகிச்சுக்கிறதுக்கு இதுவும் ஒரு காரணம்” முத்தையா பேசும் போதே அவன் மனம் கறி வேகும் மணத்தை நுகர்ந்து கொண்டிருந்ததுபோலிருந்தது.

“கறிய ஒரு வாரத்துக்கு வெச்சுக்கணும்லே. தீக்குமேல தொங்க விட்டுட்டா காஞ்சு போயிரும் (வத்தலாயிடும்). எஸ்டேட்ல கருவாடும், கறி வத்தலும்தான் நமக்குச் சாப்பாடு. காய்கறில நம்மால கத்திரிக்காய்தான் வாங்க முடியும்.”

“எஸ்டேட்ல சந்தையில்லியாண்ணே?”

“இல்லலே. ஆனா ஒவ்வொரு வியாழக்கிழமையும் பொள்ளாச்சியில ஒரு பெரிய சந்தை கூடும். எல்லா எஸ்டேட்டிலிருந்தும் அன்னைக்கு வியாபாரிக பொள்ளாச்சிக்குப் போயி அங்க கிடைக்கிறதிலேயே விலை கம்மியான சாமான்கள வாங்கிட்டு வந்து இங்கே நமக்கு கொள்ளை விலைக்கு விப்பானுக. நம்ம ஊரில ஒரு கடைல விலை அதிகமின்னா இன்னொரு கடைக்கு போயிருவோம்லா. இங்கே ஒரே ஒரு கடைதான். காளிசெட்டியார் சொல்றதுதான் விலை.”

“பக்கத்து இடத்தில எல்லாம் வேற கடையே இல்லையா?”

“இந்தக் கம்பெனியோட வேற ரெண்டு எஸ்டேட் இருக்குது. ஒவ்வொண்ணுலயும் ஒரு கட இருக்குது. ஆனா அதுவும் காளிச் செட்டியாரோடதுதான். அய்யர்பாடியில மத்தவங்களோட கட இருக்குது. ஆனா எல்லாம் ஒரேமாதிரிதான்.” முத்தைய்யா சலித்துக் கொண்டான். அன்று மதியம் அற்புதமாக இருந்தது. பெண்கள் சாப்பிட்டு முடித்துவிட்டு பேசி சிரித்தபடி பேன் பார்த்துக் கொண்டிருந்தனர். ராமாயி வள்ளியை லைனில் உள்ள மற்ற அறைகளுக்கு அழைத்துச் சென்று அறிமுகப்படுத்தினாள். அவர்கள்

பக்கத்து லைனுக்குச் சென்ற போது வள்ளி தன்னோடு எஸ்டேட்டுக்கு வந்த சிலரைப் பார்த்தாள். புதிதாக வந்த அத்தனை பேருமே வெறுத்துப் போயிருந்தனர். ராமாயி தொலைவிலிருந்த ஒரு லைனைக் காட்டி அதில் ஈரோட்டிலிருந்து வந்த ஆதி திராவிடர்கள் இருக்கிறார்கள் என்றாள். ஒரே சாதிக்காரர்கள் என்றாலும் ஈரோட்டிலிருந்து வந்தவர்களுக்கும் பழனிக்காரர்களுக்கும், திருநெல்வேலியிலிருந்து வந்தவர்களுக்கும் இடையே கொள்வினை கொடுப்பினை கிடையாது என்று ராமாயி சொல்லி வள்ளி தெரிந்து கொண்டாள்.

“எஸ்டேட்டில ரெண்டு சக்கிலிய மேஸ்திரிங்க இருக்கிறாக. அவங்க கூலிகளும் சக்கிலியருங்கதான்.”

“எஸ்டேட்டில எத்தன கூலிங்க இருப்பாக?” என்று வள்ளி கேட்டாள்.

“எஸ்டேட்டில ரெண்டு டிவிசன் இருக்கு. நம்ம தெக்கால டிவிசனில் இருக்கோம். ரெண்டு டிவிசனிலும் முன்னூறு கூலிங்க இருப்பாக. சின்ன தொர வடக்கால டிவிசனில் இருக்கான். அதுக்கு இன்னொரு பெரிய காட்டு ஐயாவும் உண்டு. ஆஸ்பத்திரியும், டீ கம்பெனி யும், ஆபீஸும் நம்ம டிவிஷனில்தான் இருக்கு.”

“மேல்சாதிக்காரங்க யாராவது எஸ்டேட்டில கூலிக்காரங்களா இருக்கிறாங்களாக்கா?”

“நிறைய இல்ல. ஒரு மேஸ்திரி தேவரு. அவன் கூலிக்காரங்க கொஞ்சம் பேரு தேவமாரு.”

“அக்கா ஒரு நாளு மலையாளம் பேசுத ரெண்டு பேரப் பாத்தேன். நல்லாத் துணிமணி போட்டிருந்தாக அவங்க யாருக்கா?”

“ஆசாரிகளா இருக்கும். எல்லா ஆசாரிகளும், கொல்லன்களும் மலையாளத்துக்காரங்கதான். இங்கே வீடுகளும், பாடிகளும் கட்டறவங்க போயருங்க. அவங்க தெலுங்க பேசுதாக”

கருப்பன் தன் மாமனாருக்கு ஒரு கடிதம் எழுத விரும்பினான். அவனுக்குச் சுத்தமாக எழுதப் படிக்கத் தெரியாது என்பதால், முத்தையாவிடம் தனக்கு கடிதம் எழுதி தரக்கூடியவர்கள் யாரையாவது தெரியுமா என்று கேட்டான்.

“வீட்டுக்கு, சொந்தக்காரங்களுக்கு கடுதாசி எழுதணுன்னு நெனைக்க போலிருக்கு.”

“ஆமா, மாமாவுக்கு லெட்டர் எழுதி நல்லபடியா வந்து சேர்ந்துட்டோம். தினமும் வேலை கிடைக்குதுன்னு சொல்லணும். இந்த

சீரழிவையெல்லாம் சொல்லி மாமாவையும் அம்மையையும் சங்கடப்படுத்த வேண்டான்னு பாக்கேன். அக்கா மகளைத்தான் கண்ணாலம் கட்டியிருக்கேன். எங்கம்மாவும் அவர் கூடத்தான் இருக்கு” என்றான் கருபபன்.

“வெள்ளையன் மேஸ்திரியத்தான் கடுதாசி எழுதித்தர சொல்லி கேக்கணும். இங்கே எஸ்டேட்டுல ஒண்ணு ரெண்டு மேஸ்திரிகளுக்கு தான் எழுதப் படிக்கத் தெரியும். வெள்ளையன் மேஸ்திரிகிட்ட எழுதச் சொன்னா நீ இஷ்டப்பட்டாலும், படாட்டியும் இங்கே நடக்கிற விசயங்களப் பத்தி எழுத முடியாது, புரியுதா?”

“அது சரிதான்.”

இருவரும் வெள்ளையனிடம் சென்று மாமனாருக்குக் கடிதம் எழுத வேண்டும் என்று சொன்னபோது அவன் என்ன எழுத வேண்டுமென்று சொல்லிவிட்டு முகவரி கொடுத்துவிட்டுப் போகும்படியும்தான் கடிதம் எழுதித் தபாலில் போட்டு விடுவதாகவும் கூறினான்.

“நாங்க எஸ்டேட்டுக்கு நல்லபடியா வந்து சேர்ந்தோம். ரெண்டு பேரும் தினம் வேலைக்குப் போறோம். நல்லா இருக்கிறோம்ன்னு எழுதிருங்க. அவங்க எப்படி இருக்கிறாங்கன்னும், எங்கம்மாவுக்கு உடம்பு எப்படி இருக்குன்னும் எழுதச் சொல்லுங்க.”

“எழுதிடலாம். பதில் போடச் சொல்லுதேன். வந்தவுடனே உனக்குப் படிச்சுக் காட்டுதேன்.”

அறைக்குத் திரும்பியதும் ஒருவனுக்கு எழுதப் படிக்கத் தெரிந்தாலும்கூட கடிதம் எழுதி அனுப்புவது சாத்தியமே இல்லை என்று முத்தையா கூறினான். காரணம் கடிதங்கள் வால்பாறை தபால் நிலையத்துக்கு அனுப்பப்பட வேண்டும். மேஸ்திரிகள் மூலமாக அல்லது ஆபீஸ் மூலமாக எழுதப்படாத கடிதங்களை கொண்டு செல்லக்கூடாது என்று எஸ்டேட் பியூனுக்கு வெள்ளைத்தொர கண்டிப்பான உத்தரவு பிறப்பித்திருந்தார். கடிதத்தில் என்ன எழுதியிருக்கிறது என்று தெரியாமல் மேஸ்திரிகள் கடிதங்களை அனுப்ப மாட்டார்கள். அதேபோல கூலிகளுக்கு எழுதப்படும் எல்லாக் கடிதங்களும், மேஸ்திரிகளிடமே வழங்கப்படும். அவர்கள் அந்தக் கடிதங்களைப் பிரித்துப் படித்துவிட்டு தங்களை பாதிக்காத தகவல்களை மட்டுமே சொல்லுவார்கள். யாராவது நெருங்கின சொந்தக்காரங்களுக்கு உடம்பு சரியில்லாம இருந்தாலோ, செத்துப் போய் விட்டாலோ கூட அந்தத் தகவலை மேஸ்திரிகள் சொல்ல மாட்டார்கள். “ஒரு ஆளு

எஸ்டேட்டுக்குள்ள வந்திட்டா அவன் ஜெயில்ல இருக்கிற மாதிரிதான். ஊர்க்காரங்களுக்கு, சொந்தக்காரங்களுக்கு அவன் எந்தத் தகவலும் அனுப்ப முடியாது. அங்கிருக்கிறவங்களும் இவனுக்கு ஒண்ணும் தெரிவிக்க முடியாது. வெள்ளையன் ஒருவேளை உன் மாமனாருக்கு லெட்டர் எழுதினாலும் எழுதுவான். அப்படி எழுதினா இங்கே வந்த தில உனக்குத் தலைகால் புரியாத சந்தோசமுன்னும், எக்கச்சக்கமாச் சம்பாதிக்கிறேன்னும், வருசக் கடைசியில பணத்தை மூட்டை கட்டிட்டு வருவேன்னும் அவனா சேர்த்தி எழுதிடுவான். ஒரு மாசம் கழிச்சு அவன் உன் மாமனார் உனக்கு பதில் எழுதி இருக்காரு, அவங்க நல்லாயிருக்கிறாங்க, சந்தோசமா இருக்கிறாங்க அவங்க வருமானத்தி லேயே சமாளிக்கிறதால பணம் எதுவும் அனுப்ப வேண்டியதில்ல, இந்த மாதிரி விசயங்கள பதிலா எழுதியிருக்காங்கன்னு உங்கிட்ட வந்து சொல்லுவான். உன் இடத்தில நான் இருந்தா அவன் சொல்றதப் பத்தி யெல்லாம் கவலையேபடமாட்டேன்.”

பல நாட்கள் கடந்தன. ஒரு இரவு கருப்பன் முத்தையாவிடம் அவனோடு வேலைக்கு சேர்ந்த மற்ற கூலிகளுக்கு எளிதான வேலைகள் கொடுக்கப்படும்போது தன்னை மட்டும் ஏன் தினமும் விறகுவெட்ட அனுப்புகிறார்கள் என்று கேட்டான்.

“பெரிய ஐயாவுக்கு சந்தோஷம் குடுத்தேனா உனக்கும் கஷ்டமில்லாத வேலை தருவாரு” முத்தையா அலட்சியமாக பதிலளித்தான்.

“சந்தோசமா?” கருப்பனுக்குப் புரியவில்லை.

“பெரிய ஐயாவுக்கு விஸ்கி பாட்டிலோ, நல்ல கொழுத்த கோழி வறுவலோ வாங்கிக் கொடுத்தேனா, இல்லாட்டி பத்து ரூபா நோட்டு குடுத்தா உனக்கு கஷ்டமில்லாத வேலை கொடுப்பாரு. சிலபேர் அப்படித்தான் கஷ்டமில்லாத சில்லறை வேலைகள வாங்கிக்கிறாங்க.”

“ஆனா எல்லாரும் சந்தோசம் கொடுத்து கஷ்டமில்லாத வேலைகள வாங்கிட்டாங்கன்னா அந்த மாதிரி வேலைகள யார் செய்வாங்க?”

“ஆளுக்கா பஞ்சம்? உன்னை மாதிரி சந்தோசம் கொடுக்க வழியில்லாதவங்கதான்.”

# 6

மக்கள் நோய்வாய்ப்பட்டால் என்னிடம் வருகிறார்கள்
நான் சிகிச்சை அளிக்கிறேன், இரத்தம் வடிக்கிறேன்
வியர்க்க வைக்கிறேன். சில நேரங்களில்
அவர்கள் வாழ்கிறார்கள். சில நேரங்களில்
இறந்து போகிறார்கள். எனக்கென்ன,
நான் செய்ய வேண்டியதை செய்துவிட்டேன்.

ஆன் ஹிம்செல்ஃப்
டாக்டர் ஜே.சி. லெட்சாம்.

சனவரி முடிந்து பிப்ரவரி மாதம் வந்ததும் குளிரைத் தாங்கிக் கொள்ள முடிந்தது. மார்ச் மாதத்தில் பகலில் வெக்கைகூட அடித்தது. ஒருநாள் கருப்பன் வேலையிலிருந்து திரும்பி வரும்போது உடம்பு சரியில்லாதது போல் உணர்ந்தான். சற்றுநேரம் கழித்து வந்த வள்ளி கருப்பன் பாயில் படுத்து தலையோடு காலாக கம்பளி போர்த்திக் கொண்டு இருப்பதைக் கண்டாள். “எனக்கு ரொம்பக் குளிரடிக்குது. மண்டை வெடிச்சுப் போயிரும் போல இருக்கு” என்றவன் சீக்கிரத்தில் நடுங்கத் தொடங்கினான். “குளிர் தாங்க முடியல. எதிலாவது என்னைப் போர்த்து வள்ளி” வள்ளி தன்னுடைய கம்பளியையும் கொண்டு வந்து போர்த்தினாள். ஆனால் அவன் இன்னும் அதிகமாக நடுங்கத் தொடங்கினான். ஏதாவது பேய் பிடித்துவிட்டதோ என்று வள்ளி பீதியடைந்தாள்.

ஓடிப்போய் முத்தையாவை அழைத்து வந்தாள். முத்தையா பார்த்துவிட்டு “அட இது மலேரியா காய்ச்சல்தான், பயப்பட ஒண்ணுமில்ல. காய்ச்சல்காலம் தொடங்கிட்டு. இனி எல்லோருக்கும் காய்ச்சல் வரும்.”

கருப்பனுக்குச் சூடான காப்பி தயாரிக்கும்படி சொல்லிவிட்டு பக்கத்தில் உட்கார்ந்து கொண்டான். வலிப்பு வந்தவனைப் போல குளிரில் நடுங்கிய கருப்பனை அழுத்திப் பிடித்துக் கொள்ள வேண்டியிருந்தது. கொஞ்ச நேரத்தில் குளிர் நின்று ‘கொதிக்கிறது’ என்று கத்தி கருப்பன் கம்பளிகளைத் தூக்கியெறிந்து விட்டான்.

“பயப்படாதேப்பா, மலேரியாக் காய்ச்சல்தான் வந்திருக்கு. நாளைக்கு ஆஸ்பத்திரிக்கு கூட்டிட்டு போயி மருந்து வாங்கித்தாரேன்.”

இரவெல்லாம் கருப்பன் முனகிக் கொண்டிருந்தான். வள்ளியும் தூங்காமல் அவனருகிலேயே உட்கார்ந்திருந்தாள். காலையில் கருப்பனுக்கு மலேரியா வந்திருக்கிறது என்று முத்தையா வெள்ளையனிடம் தெரிவித்து அவனை மருத்துவமனைக்கு அழைத்துச் செல்ல அனுமதி கேட்டான்.

“அவனே போயிக்க மாட்டானா?”

“அவனால நிக்கவே முடியல.”

“சரிசரி, டாக்டர் ஐயாகிட்ட சொல்லுதேன். ரவுண்ட்ஸ் வரும் போது பார்த்து மருந்து கொடுப்பாரு” என்று சொல்லிவிட்டு வள்ளியைப் பார்த்து “நீ ஒண்ணும் இங்கனயே சுத்திகிட்டு இருக்க வேண்டியதில்ல. வேலைக்குப் போகணும்” என்றான்.

‘அதுக்கு நெனவே இல்லைங்க. தண்ணி கேட்டா குடுக்கறதுக்குக் கூட யாரும் இல்ல. ஒருநாள்கூட இருந்துக்குதேன்” வள்ளி கெஞ்சினாள்.

“ஒண்ணும் ஆயிடாது. அவன் என்ன சமீன்தாரா, பக்கத்துல உட்கார்ந்து நீ விசிறி வீசணுமா?” ஆனால் முத்தையாவும் அவளுக்காகக் கெஞ்சிக் கேட்டுக் கொண்டதால், வெள்ளையன் வேண்டா வெறுப்புடன் வள்ளி ஒருநாள் மட்டும் வீட்டிலிருக்கச் சம்மதித்தான்.

“ஆனா ஞாபகம் வெச்சுக்க நாளைக்கு நீ வேலைக்கு வந்துரணும் இந்த மாதிரி காய்ச்சல் வந்த ஒவ்வொருத்தனையும் கவனிக்கணுமின்னு நெனைச்சாக் கொழுந்து கிள்ள யாருமே இருக்க மாட்டாங்க. இப்படி வேலைக்கு போகாம ஊட்டுலேயே உக்காந்துட்டிருந்தா பணம் செலவு பண்ணி ஆட்கள இங்க கொண்டு வந்து என்ன பிரயோசனம்?”

மதியம் பதினோரு மணிக்கு நிறைய பாட்டில்கள் இருந்த ஒரு பெட்டியைத் தூக்கிக் கொண்டு ஒரு கூலி கருப்பனின் அறைக்குள் நுழைந்தான். அவனைத் தொடர்ந்து டாக்டர் குரூப்பும் வந்து என்ன நடந்தது என்று வள்ளியிடம் கேட்டுத் தெரிந்து கொண்டார். பின்பு கருப்பனின் மார்பில் ஸ்டெத்தாஸ்கோப் வைத்துப் பார்த்துவிட்டு தன்னுடன் வந்திருந்த கூலியிடம் காய்ச்சலுக்கான குயினைன் மருந்தை அவன் வாயில் ஊற்றும்படி கட்டளையிட்டார். டாக்டரின் கட்டளையைக் கூலி நிறைவேற்றிய அடுத்தகணமே கருப்பன் மருந்தின் கசப்பு தாங்காமல் ‘புளிச்’ சென்று அதைத் துப்பிவிட்டான். குரூப் அவனுக்கு ஓங்கி ஒரு அறை கொடுத்து “துப்பானா ஞான் கொடுக்குன்னு? இன்னும் ஒரு தடவை ஞான் மருந்து தரான். அதையும் துப்பியால் நின்ற பல்லை தட்டி பொட்டிக்கும்” திரும்பவும் மருத்துவக்

கூலிக்கு கருப்பனின் வாயில் மருந்து ஊற்ற கட்டளையிட்டார். கூலி மருந்தை ஊற்றிக் கொண்டே வள்ளியிடம் “கொஞ்சம் வெல்லம் கொண்டு வந்து கொடு. மருந்து குடிச்சப்பறம் வாயில வெக்கட்டும்”என்றான்.

“இவிட மருந்தை விட்டுட்டு போயி எந்த பிரயோசனம் இல்ல. ஈயாளு ஒருக்கிலும் அதத் தொடில்லா. ஞான் நாளை வராம்” என்று சொல்லிவிட்டு கூலி பின்தொடர குரூப் வெளியேறினார். கருப்பன் ஐந்து நாள் படுக்கையில் கிடந்தான். காய்ச்சல் குணமானதும் ஒருநாள் மட்டுமே ஓய்வெடுக்க அனுமதிக்கப்பட்டான்.

“காட்டு ஐயாகிட்ட சொல்லி ரெண்டு நாளைக்குக் களைபுடுங்கிற வேலை கொடுக்கச் சொல்லுதேன்” என்று சொல்லி வெள்ளையன் கருப்பன் இன்னும் பலவீனமாக இருக்கும்போதே வேலைக்கு விரட்டி விட்டான்.

ஒரு வாரம் கழித்து வள்ளி காய்ச்சலில் விழுந்தாள். காய்ச்சலால் ஏற்பட்ட உக்கிரமான வலிப்புகளினால் அவளுக்கு கருச்சிதைவு ஏற்பட்டு விட்டது. முத்தையா சங்கரபாண்டியன் மேஸ்திரியிடம் பேச விஷயம் குரூப்பின் காதுக்கு கொண்டு செல்லப்பட்டது. குரூப் வள்ளியை மருத்துவமனையில் அனுமதிக்க வேண்டும் என்று உத்தரவிட்டார். முத்தையா ஒரு கம்பத்தைக் கொண்டுவர அதில் தொட்டில் போல் ஒரு கம்பளியைக் கட்டி வள்ளியை ஆஸ்பத்திரிக்குக் கொண்டு சென்றனர். மருத்துவமனையில் இரண்டு வார்டுகள் இருந்தன. ஒன்றில் எட்டு படுக்கைகளும், மற்றதில் ஆறு படுக்கைகளும் போடப்பட்டிருந்தன. பெரும்பாலும் எட்டு படுக்கைகள் கொண்ட வார்டில் பெண்களும், குழந்தைகளும் அனுமதிக்கப்பட்டனர். ஆனால் அது பெண்களுக்காக ஒதுக்கப்பட்டதல்ல. ஆண்கள் வார்டில் இடமில்லாமல் போகும்போது இங்கே படுக்கைகள் காலி இருந்தால் ஆண் நோயாளிகளும் இங்கே அனுமதிக்கப்பட்டனர். அதோடு பெண் நோயாளிகளின் கணவர்களும் அங்கேயே தங்கி மனைவியரை கவனித்துக் கொண்டனர்.

மரத்தால் செய்யப்பட்ட கட்டில்களில் படுக்க பாயோ, தலையணையோ, கொடுக்கப்படுவதில்லை. ஒவ்வொரு நோயாளியும் தன்னுடைய சொந்தக் கம்பளியைத்தான் கொண்டு வரவேண்டும். முத்தையாவும் கருப்பனும் தாங்கள் கொண்டு வந்திருந்த கம்பளியை மரக்கட்டிலில் விரித்து வள்ளியை அதில் படுக்கச் செய்தனர். டாக்டர் குரூப்பின் அறிவுரைப்படி சங்கரபாண்டியன் கருப்பனை மருத்துவமனையில் தங்க அனுமதித்தான். மருத்துவமனையின் இரண்டு வார்டுகளுமே அழுக்குப்

பிடித்து நாற்றம் அடித்துக் கொண்டிருந்தன. மேடும் பள்ளமுமான தரையில் ஆங்காங்கே தண்ணீர் தேங்கியிருந்தது. சுவர்களில் ஆங்காங்கே கற்கள் வெளியே நீட்டிக் கொண்டு மேடும் பள்ளமுமாகக் காட்சியளித்தன. நோயாளிகள் தரையிலும், சுவர்களிலும் துப்பி வைத்தனர். கட்டில்களைப் பார்க்கச் சகிக்க முடியவில்லை. சிறுவர்களும் குழந்தைகளும் அவற்றின் மேலேயே சிறுநீரும், மலமும் கழித்து வைத்தனர். அவை கழுவப்படக் கூட இல்லை. சமவெளிகளில் இருக்கும் கால்நடை மருத்துவமனைகளை விட அந்த மருத்துவமனை படுமோசமாகவும், அலங்கோலமாகவும் காட்சியளித்தது.

அங்கே டாக்டர் என்று சொல்லிக் கொண்ட குரூப்பையும், நோயாளிகளுக்கு உணவு சமைத்த கூலியையும் தவிர வேறு யாரும் பணிபுரியவில்லை. பெரும்பாலான நோயாளிகளுக்கு மருத்துவமனையில் உணவு தரும் வழக்கமேயில்லை. அவர்கள் தங்கள் உணவைத் தாங்களே கொண்டுவந்து கொள்ளவேண்டியதுதான். ரொம்பவும் மோசமாக பாதிக்கப்பட்டிருந்த நோயாளிகளுக்கு மட்டும் உணவு வழங்கப்பட்டது. அது வேறொன்றுமில்லை. காலை பத்து மணிக்கும் மாலை ஆறு மணிக்கும் வழங்கப்படும் கஞ்சிதான்.

ஒரு நிரந்தரமான துப்புரவுத் தொழிலாளி கூட அங்கே இல்லை. ஒவ்வொரு நாள் காலையும் டாக்டர் குரூப் மற்றும் ஏனையோரது வீடுகளைக் கூட்டும் வேலையாள்தான் இங்கே வந்து இந்த அறைகளைக் கூட்டுவாள். மற்ற நேரங்களில் வார்டுகள் மிகவும் அழுக்கடைந்து போய்விட்டால், கணவனுக்குத் துணையாக மருத்துவமனையில் தங்கியிருக்கும் யாராவது பெண்ணைக் கொண்டு மெடிக்கல் கூலி சுத்தம் செய்யச் செய்வான். நிறைய நோயாளிகள் இருக்கும்போது டாக்டர் குரூப் ரவுண்ட்ஸ் போகும்போது உடன்வரும் மெடிக்கல் கூலி மருத்துவமனைக்கு வந்து உதவி செய்வான்.

எஸ்டேட் கூலிகளில் பாதிப்பேர் பெண்களாக இருந்தாலும் பெண் நோயாளிகளின் தேவைகளைப் பூர்த்தி செய்ய ஒரு வார்டு ஆயாகூட இல்லை. இரவு நேரங்களில் ஒவ்வொரு வார்டிலும் ஒரே ஒரு அரிக்கேன் விளக்கு மட்டுமே எரிந்து கொண்டிருந்தது. அங்கே இரவுக் காவலாளியும் கிடையாது. இரவு நேரத்தில் யாராவது நோயாளிக்கு டாக்டரின் உதவி தேவைப்பட்டால் அந்த நோயாளிக்குத் துணையாக இருப்பவர் அதே காம்பவுண்டில் குடியிருக்கும் மெடிக்கல் கூலியிடம் முதலில் சொல்ல வேண்டும். டாக்டருக்கு உடனடியாகத் தெரிவிக்கப்பட வேண்டும் என்று அவன் கருதினால் மட்டுமே மருத்துவமனைக்கு அருகே உள்ள டாக்டர் வீட்டுக்குச் சென்று தகவல் தெரிவிப்பான்.

ஒவ்வொரு வாரமும் முடீஸில் உள்ள தனது தலைமையகத்தில் இருக்கும் ஐரோப்பியத் தலைமை மருத்துவ அதிகாரி அங்கிருந்து பதினைந்து மைல் தொலைவில் உள்ள இந்த மருத்துவமனைக்குக் கடனுக்கு வந்து செல்வார். யாராவது மேலாளரோ, துணை மேலாளரோ நோய்வாய்ப்பட்டால் அந்த வெள்ளைக்கார டாக்டர்தான் அவர்களுக்கு சிகிச்சை அளிப்பார். எழுத்தர் பணியிலுள்ள யாராவது கடுமையாக நோய்வாய்ப்பட்டால் டாக்டர் குரூப்பின் பரிந்துரையின் பேரில் அவர்கள் சிகிச்சைக்கு முடீஸுக்கு அனுப்பப்பட்டனர்.

இங்கிலாந்தில் பதிவு செய்யப்பட்ட அலுவலகத்தைக் கொண்டுள்ள குமரிமலை டீ எஸ்டேட் லிமிடெட் ஆனது தங்களது இந்திய எழுத்தர்கள் மற்றும் தொழிலாளிகளின் வசதிக்காக இத்தகைய மருத்துவ வசதிகளைச் செய்து கொடுத்திருந்தது.

வள்ளி மிக மோசமான நிலையிலேயே இங்கே கொண்டுவரப்பட்டிருந்தாள். பல நேரங்களில் அவளுக்கு சுயநினைவே இருக்கவில்லை. மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டு இரண்டு நாட்கள் கழித்து தலைமை மருத்துவ அதிகாரி அங்கே வந்தபோது குரூப் அவரிடம் வள்ளி விசயமாக ஆலோசனை கேட்டார். அவரது அறிவுரைப்படி குரூப் ஏராளமான ஊசிகள் போட நான்கு நாள் சிகிச்சைக்குப் பிறகு வள்ளி மெதுவாக குணமடைந்தாள். ஒவ்வொரு நாள் மாலையும் முத்தையாவும் அவன் மனைவியும் வந்து வள்ளியுடன் சற்றுநேரம் இருந்துவிட்டுச் சென்றனர். சங்கனும் அவன் மனைவியும் கூட வந்தனர். வள்ளி எப்படி இருக்கிறாள் என்றும் கருப்பனால் எப்போது வேலைக்குப் போக முடியும் என்றும் விசாரிக்க வெள்ளையனும் தினமும் வந்து விடுவான். ஆறாவது நாள் சங்கரபாண்டியன் வந்தான். “ஏலே பொஞ்சாதிக்குத்தான் இப்ப பரவாயில்லையே நாளையிலிருந்து வேலைக்கு வாடே.”

“நாளைக்குச் சனிக்கிழமை. திங்கக் கெழம வேலைக்கு வாரேன்”கருப்பன் கெஞ்சிக் கேட்டுக் கொண்டான். டாக்டரைக் கேட்டுவிட்டு முடிவு சொல்வதாகச் சொல்லி அவரைப் பார்ப்பதற்கு மேஸ்திரி சென்றான்.

ஐந்து நிமிடம் கழித்துத் திரும்ப வந்து “வள்ளி நல்லாயிருக்கா. அவகூட யாரும் இருக்க வேண்டியதில்லன்னு டாக்டர் சொல்லுதாரு. அதனால நாளையிலிருந்து நீ கண்டிப்பா வேலைக்கு போகணும். ராவுக்கு வேணுமானா இங்க இருந்துக்க” என்றான். என்ன சொல்லியும் பயனில்லை என்பதையுணர்ந்து கருப்பன் வாயே திறக்கவில்லை.

அடுத்த நாள் விடியற்காலையில வேலைக்குப் புறப்படுவதற்கு முன்பு கருப்பன் மருத்துவக் கூலியைப் பார்த்து வள்ளி நடக்கவே முடியாத அளவுக்கு பலவீனமாக இருப்பதால் கஞ்சியை அவளிடம் கொண்டு போய் கொடுக்கும்படி கேட்டுக் கொண்டான்.

கூலி முறைத்தான். "நான் என்ன ஒம்பொஞ்சாதிக்கு வேலைக்காரனா? இங்க வந்தான்னா சாப்பாடு கிடைக்கும். இல்லைனா சாயந்திரம் நீ வந்து குடுத்துக்கோ."

"இத பாருங்கண்ணே! கொஞ்சம் உதவி பண்ணுங்க. சாயந்திரம் செலவுக்காசு கிடைத்ததும் அத உங்களுக்கே கொடுத்திருதேன்."

"அதுக்கென்ன பண்ணிடறேன், அதுக்குத்தானே சம்பளம் தர்றாங்க" அடுத்த வினாடி மெடிக்கல் கூலி வேறு தொனியில் பேசினான். கருப்பன் வேலைக்குச் சென்றுவிட்டு மாலையில் செலவுக்காசை மெடிக்கல் கூலியிடம் கொண்டு வந்து கொடுத்துத் தன் வாக்கை மறக்காமல் நிறைவேற்றினான். கூடவே கொஞ்சம் கடலை பொரியும் வாங்கிக் கொண்டு வந்திருந்தான். வள்ளி அதை ஆவலுடன் வாங்கிக் கொண்டாள்.

மறுநாள் ஞாயிறு மருத்துவமனைக்குக் கூட அது விடுமுறை தினம். டாக்டர் வரவில்லை. மெடிக்கல் கூலி ரவுண்ட்ஸ் சென்று முந்தைய தினம் டாக்டர் கூறிய மருந்துகளைக் கொடுத்துவிட்டு வந்தான். வார்டு முழுவதும் பார்வையாளர்கள் நிறைந்திருந்தனர். கழுகுமலை, குரங்கு மலை எஸ்டேட்டுகளில் வேலை செய்துவந்த உறவினர்கள் நோயாளிகளைப் பார்க்கத் திரண்டு வந்திருந்தனர். இந்த இரண்டு எஸ்டேட்டுகளும் குமரிமலை எஸ்டேட்டின் நிர்வாகத்தைச் சேர்ந்தவை. பார்வையாளர்கள் வடை, வறுத்த நிலக்கடலை, கடலை பொரி போன்ற எல்லா வகையான உணவுப் பொருட்களையும், நோயாளிகளுக்குக் கொடுக்க கொண்டு வந்தி ருந்தனர். அவர்களைத் தடுக்க அங்கு ஆளே இல்லை.

வெள்ளையன் ஞாயிறு மாலை வந்து கருப்பனின் மாமனாரிடமிருந்து தகவல் வந்திருப்பதாகக் கூறினான். "அவுரு பொஞ்சாதியும் குழந்தைகளும், உங்கம்மையும் ரொம்ப நல்லாயிருக்காங்களாமா, நீ வந்தபின்னாடி பத்து பதினஞ்சு நாளைக்கு உங்கம்மைக்கு மனசு சரியில்லாம கெடைலயே கிடந்தாளாம். அப்புறம் நீயில்லாம இருக்கிறதுக்குப் பழகிப் போய் பேரப் பிள்ளைங்களோடு சந்தோஷமாக இருக்காளாம். அடிக்கடி உங்க குடிசைக்குப் போயி அதை கூட்டித் துடைத்து நீ வந்தவுடன் இருக்க வசதியாக வெச்சிருக்காளாம். உன்

மாமனாரு அவருடைய சம்பளத்துலயே எல்லாத்தையும் சமாளிக்க முடியுது. நீ எதுக்கும் கவலைப்பட வேண்டா, கஷ்டப்பட்டு வேலை செஞ்சு முடிஞ்சவரைக்கும் சம்பாதிச்சிட்டு வான்னு யோசன சொல்லியிருக்காரு. கடுதாசியைக் கொண்டு வந்து படிச்சுக் காட்டணுமின்னுதான் இருந்தேன். ஆனால் தபால்கூலி ராத்திரி லெட்டரைக் கொண்டு வந்து குடுத்தான். பெட்டியில வெச்சிருந்தேன். எங்கேயோ காணாமப் போச்சு. எலி கடிச்சு இழுத்திட்டு போயிருக்குமின்னு நெனக்கேன்.”

தன் அப்பாவிடமிருந்து தகவல் வந்தது வள்ளிக்கு மிகுந்த மகிழ்ச்சி அளித்தது. அம்மா நன்றாகவும் மகிழ்ச்சியாகவும் இருக்கிறாள் என்ற செய்தி அறிந்த கருப்பனுக்கு தலைகால் புரியவில்லை. அந்த நேரத்தில் முத்தையாவும் ராமாயியும் கூட அங்கே இருந்தனர். இந்த மகிழ்ச்சியான செய்திதான் வள்ளிக்கு நல்ல மருந்து. இனி அவள் விரைவாக குணமடைந்து விடுவாள் என்று சொல்லி விட்டு முத்தையா ராமாயியை அழைத்துக் கொண்டு கிளம்பினான். சற்றுதூரம் சென்றதும் முத்தையா தன் மனைவியிடம் முக்கால்வாசி செய்தி வெள்ளையன் தானே இட்டுக் கட்டியதாக இருக்கும். அவன் கருப்பனின் மாமனாருக்கு கடிதம் கூட எழுதியிருக்க மாட்டான் என்றான்.

“கருப்பனோட அம்மா குடிசைக்கு தெனமும் போயிட்டிருக்கான்னு கடுதாசி வராம அவனுக்கு எப்படித் தெரியும்?” ராமாயி இடைமறித்தாள்.

“ஏய் மேஸ்திரி மாருவ எப்படியெல்லாம் உளவு பாக்குதாங்கன்னு உனக்கு இன்னுமாத் தெரியலெ? கூலிங்களையும் ஊர்ல இருக்கிற அவங்க சொந்தக்காரவகளையும் பத்தி எல்லாத்தையும் அவங்க முழுசாத் தெரிஞ்சு வெச்சிருப்பானுவ. கருப்பன் எப்பயாவது சிநேகிதமாரு கிட்ட தன்னோட குடிசையைப்பத்தியும், அம்மாவப்பத்தியும் அவ மாமனார் வீட்டுல இருக்கதப்பத்தியும் சொல்லியிருப்பான்லா. அதுல யாராவது ஒருத்தன் வெள்ளையனுக்குப் போட்டுக் கொடுத்திருப்பான். கொஞ்சம் தெரிஞ்சிட்டா மீதிய கூட்டி, கொறச்சி சொல்றதில என்ன கஷ்டம்? ஆனா இதை வள்ளிகிட்ட சொல்லிராதே. ரெண்டும் ஏதோ கொஞ்சம் சந்தோசமா இருக்கு. அதக் கெடுக்க வேண்டாம்”.

வேலையிலிருந்து வந்ததும் கருப்பன் டாக்டர் குரூப்பை சந்தித்தபோது வள்ளியை இரண்டு நாளில் வீட்டுக்கு அனுப்பி விடுவார்கள் என்பதைத் தெரிந்து கொண்டான். அன்று கருப்பனோடு முத்தையாவும், ராமாயியும் வந்து வள்ளியை வீட்டுக்கு அழைத்துச் சென்றனர். வள்ளி உடல்நலம் இல்லாமல் ஆஸ்பத்திரியில் இருந்தாள் என்றும், அவளுக்கு ஒரு

வாரத்திற்கான உணவுப் பொருட்கள் வழங்கப்பட வேண்டும் என்றும் டாக்டர், தலைமை எழுத்தருக்கு ஒரு கடிதம் எழுதிக் கொடுத்திருந்தார்.

தலைமை எழுத்தர் உதவி எழுத்தர் மாத்யூஸைப் பார்க்கும்படி கூறினார்.

“ஓம் பொஞ்சாதிக்கு உடம்பு சரியில்லையா? அதான் ரெண்டு வாரமா வேலைக்கே வாராம இருக்கா. முழு ரேசன் கொடுத்தா அவ கடன்தான் அதிகமாகும். அதனால பாதி ரேசன் தாரேன்” என்றான் மேத்யூஸ்.

இந்த விசயத்தை முத்தையாவிடம் சொல்லித் தலைமை எழுத்தரிடம் சொல்லலாமா என்று கேட்டபோது “அதனால என்னலே ஆகப்போகுது. அவன் உட்டுக் குடுத்திடவா போறான்? சின்னய்யாவுக்கு உங்க மேல இருக்கிற கோபம்தான்லே கூடும். வாயே தெறக்காதடே. இருக்கிறத வெச்சுச் சமாளிச்சுக்கோ.”

அவர்கள் தூங்கப்போகும் நேரம் வெள்ளையன் வந்து வள்ளி எப்போது வேலைக்கு வருவாள் என்று விசாரித்தான் “இப்பத்தாய்யா வீட்டுக்குக் கூட்டிட்டு வந்துருக்கேன். அவ இன்னும் குளிக்கக்கூட இல்ல. நடக்கவே முடியாம இருக்கா.” கருப்பன் தயக்கத்துடன் கூறினான்.

“பரவாயில்ல. நாளைக்குக் குளிச்சிட்டு நாளானைக்கு வேலைக்கு வந்திடணும். ரெண்டு வாரமா வேலைக்கு வரல. இப்படி போச்சுன்னா வாங்கின அட்வான்ஸை எப்பிடிலே திருப்பித் தருவே? ஞாபகம் வெச்சுக்கோ, நாளை கழிச்சு மறுநாள் வேலைக்கு வந்துரணும்.”

மிகவும் பலவீனமாக உணர்ந்தாலும் வேறு வழியில்லாமல் வள்ளி வேலைக்குப் போக வேண்டி வந்தது. அவள் கொழுந்து கிள்ளிக் கொண்டிருக்கும்போது மாத்யூஸ் வந்தான். “அலோ சீதா, ஆஸ்பத்திரியிலிருந்து எப்ப வந்தே? பார்த்தாலே ரொம்ப மோசமாத் தெரியுதே.”

“முந்தாநேத்து” வள்ளி சுருக்கமாக பதிலளித்தாள்.

“இது ரொம்ப மோசமாச்சே. இன்னைக்கு வேணுமானா வீட்டுக்கு போயிக்கிறியா? சொன்னதோடு மாத்யூஸ் உடனே வெள்ளையனை அழைத்து வள்ளியை வீட்டுக்குப் போக அனுமதிக்கும்படியும் மாலையில் அவள் பேரைக் கொடுக்க தனக்கு நினைவுபடுத்தும்படியும் கூறினான்.

“சரிங்க ஐயா, வள்ளி நீ கிளம்பு, சின்ன ஐயா இன்னைக்கு ஒனக்கு முழுப் பேரு குடுத்துருவாரு.”

இந்த திடீர்க் கரிசனத்தால் வள்ளி பதட்டமடைந்தாள். தலையசைத்து

மறுத்துவிட்டு தன்னால் வேலை செய்ய முடியுமென்று பொத்தாம் பொதுவாகச் சொன்னாள்.

“அப்ப சரி, உன்னிஷ்டம்” மாத்யூஸ் விலகிச் சென்றான். மாலை ஃபாக்டரி முன்பு கிள்ளிய இலைகளைப் பரப்பி முற்றிய இலைகளைத் தேடி எடுத்துக் கொண்டிருந்தபோது சோதிப்பதற்கு மாத்யூஸ் வந்து சேர்ந்தான். பலவீனம் காரணமாக மிகக் குறைவாகவே வள்ளி கிள்ளியிருந்தாள். தற்செயலாக வருவதுபோல் அவளருகே வந்தவன் திடீரென்று கூச்சலிடத் தொடங்கினான்.

“வெள்ளையா, உன் கூலியை வந்து பாரு. குழந்தை கூட அதிகமா கிள்ளியிருக்கும். அதுலயும் பாதி முத்தெல மீனெல. இந்த மாதிரி இலையை ஃபாக்டரிக்கு அனுப்பினா டீ மேக்கர் கம்ளெயின்ட் பண்ணிருவான். என்னை வேலையவிட்டே தூக்கறதுக்கா வழி பண்ணுற? இன்னைக்கு இவளுக்கு பேர் குடுக்கமாட்டேன். அவளப் போகச் சொல்லு.”

வள்ளி தள்ளாடியபடி எழுந்து கண்ணீரை அடக்கிக் கொண்டு வீடு நோக்கி நடந்தாள். ராமாயியைக் கண்டதும் அடக்கி வைத்திருந்த கண்ணீர் கரகரவென்று வழிய அவள் தோளில் தலையைச் சாய்த்துக் கொண்டு விம்மத் தொடங்கினாள். என்ன நடந்திருக்குமென்று புரிந்து கொண்ட ராமாயி அவள் முதுகைத் தடவிக் கொடுத்தபடி காதில் கிசுகிசுத்தாள்.

“கொஞ்ச நாளைக்குப் பொறுத்துக்கோ அந்தப் பாழாப் போனவன் சீக்கிரம் உன்ன மறந்திருவான். எப்பக் கூப்பிட்டாலும் வாரதுக்கு வேற புள்ளைங்களா இல்ல. வெட்டியா ஒம்பின்னாடி ரொம்ப நாள் சுத்தமாட்டான்.”

“எல்லாரும் கிள்ற அளவுக்குத்தா நானும் கிள்ளினக்கா. நிக்கவே முடியாம அத்தன கஷ்டப்பட்டு கிள்ளின எல.” “எஸ்டேட்னா இப்பிடித்தா வள்ளி இருக்கும். நாமதான் எல்லாத்தையும் பொறுத்துட்டுப் போகணும். நீ கிள்ளின கொழுந்த அந்தப் படுபாவி வெப்பாட்டி கணக்கில எழுதியிருப்பான். அந்தப் புள்ளய நீ கூடப் பாத்திருப்பே. பேரு லட்சுமி. அடுத்த பாடிலதான் அப்பா அம்மா கூட இருக்கா. நீ உசுரக் குடுத்துக் கிள்ளுன. அவ நோகாம சம்பாதிக்கா. முக்காவாசி நாள் அவ வேலைக்கு வரமாட்டா. ஆனா சின்ன ஐயா மத்தவங்க கிள்ளுன இலையிலிருந்து எடுத்து அவளுக்கு கொடுப்பான்.”

“அதெப்படி”

“நீ அம்பது பவுண்ட் கொழுந்து கிள்ளுனேன்னு வச்சிக்கோ. சுப்பி அறுபது பவுண்டும், நான் அம்பது பவுண்ட் கிள்ளியிருக்கோம்னு வச்சிக்கோ, சின்ன ஐயா மூணு பேரோட இலையிலிருந்தும் அஞ்சஞ்சு பவுண்டு குறைச்சிருவான். இந்த மாதிரி பத்து பேர்கிட்ட குறைச்சா அம்பது பவுண்ட் ஆச்சு. அத அவன் இஷ்டப்படற பொண்ணு பேரில எழுதிக்குவான்.”

“யாரும் கண்டுபிடிக்க மாட்டாங்களா?”

“அவன் ஒண்ணும் வீட்டுக்கு எடுத்திட்டு போகறதில்லையே. எடை குறையாது. நம்ம பேரில என்ன எழுதியிருக்கான்னு நமக்குத் தெரியவா போவுது?”

“ஐயோ இங்கன வந்து மாட்டிக்கிட்டோமே?”

இரவின் அமைதியில் வள்ளியின் விசும்பல் வெகுநேரம் வரை விட்டு விட்டுக் கேட்டுக் கொண்டேயிருந்தது.

# 7

கண்ணில் படுகின்ற அனைத்தையும்
கட்டியாள்பவன் நான்;
எல்லா விழிகளும் என்முன்னே நிலமே பார்க்கும்
திசாலிடியூட் ஆப் அலெக்ஸாண்டர் செல்கிர்க்

-கௌபர்

ஒருநாள் கடைக்கு அப்பால் சாலையோரம் நிழலுக்கு வளர்க்கப்பட்டிருந்த ஒரு மரத்தை வெட்டும்படி கருப்பனும், முத்தையாவும் இன்னும் அரை டஜன் கூலிகளும் பணிக்கப்பட்டனர். அன்று சனிக்கிழமை. பொள்ளாச்சியிலிருந்து எஸ்டேட் கடைக்குப் பொருட்களை ஏற்றி வந்து கொண்டிருந்த ஒரு மாட்டுவண்டி வெட்டப்பட்ட மரம் சாலையில் விழுந்திருந்ததால் போக முடியாமல் நின்று கொண்டிருந்தது. காளிமுத்து என்ற மேஸ்திரி மேற்பார்வை பார்த்துக் கொண்டிருந்தான்.

கூலிகள் சற்றே ஓய்வெடுத்துக் கொண்டிருந்தபோது திடீரென்று மேஸ்திரி கூச்சலிட்டான். “பெரியதொர வர்றாரு, மரத்தை வெட்டி குதிரைக்கு வழிபண்ணி கொடுங்க” பெரிய துரை தொலைவில் குதிரையில் வந்து கொண்டிருப்பது தெரிந்தது. ஜுர வேகத்தில் அவர்கள் கிளைகளை வெட்டத் தொடங்கினர். துரை வந்து சேர்வதற்கும் அவர்கள் மரத்தை அகற்றுவதற்கும் சரியாக இருந்தது. மாட்டுவண்டி முதலாளி கீழே துள்ளிப் பாய்ந்து திருவாளர் வொய்ட்டுக்கு தாழக் குனிந்து வணக்கம் செலுத்தினான். “சலாம் தொரைகளே.”

அதே வண்டியில் வந்திருந்த வேட்டியும் கோட்டும் அணிந்திருந்த ஒரு இளைஞனும் கீழே குதித்து துரையை வணங்கினான். விருட்டென்று கீழிறங்கிய வொய்ட் கடுங்கோபத்துடன் இளைஞனைக் கழுத்தைப் பிடித்து கீழே தள்ளி தடியால் கண்மூடித்தனமாக விளாசத் தொடங்கினார். “சக்கிலி நாய், பீ தின்னி நாய், கூட்டிக்குடுத்த நாய்” அட்சரசுத்தமான தமிழில் வசவுகள் துரையின் வாயிலிருந்து மழைபோல் பொழிந்தன.

“ஹுயூ” இடையிடையே துரை ஆங்கிலத்திலும் கத்திக் கொண்டிருந்தார். அவர் முகம் கோபத்தில் இரத்தச் சிவப்பாக மாறி விட்டது.

“எசமானே, எசமானே, நான் அடிமை ஏழை எசமான்கிட்ட வேலைக்கு வந்திருக்கேன்” அந்த பாவப்பட்ட இளைஞன் தரையில் ஊர்ந்து கொண்டே ஊளையிட்டான்.

“பிளடி பாஸ்டர்ட் ! செருப்புக் காலோட எம்முன்னாடி நிக்கிற அளவுக்கு தைரியம் வந்திருச்சா. என் எஸ்டேட்டை விட்டு ஓடிப்போ”வொய்ட் உச்சஸ்தாயில் அலறினார். காளிமுத்து மேஸ்திரி ஓடிவந்து இளைஞனை முழுபலத்துடன் நெட்டித் தள்ளியபடியே கிசுகிசுத்தான். “ஓடிப் போ, நிக்காதே. உனக்குப் புண்ணியமா போகட்டும். இங்கே நிக்காதே. ஓடிப்போ”

“இந்த பாஸ்டர்ட்டை உதச்சுத் துரத்து காளிமுத்து. எஸ்டேட்டை விட்டுத் துரத்து” துரை கர்ஜித்தார். இளைஞன் ஓடிமறைந்தான். இன்னும் கோபம் அடங்காத திருவாளர் வொய்ட் குதிரையில் ஏறி அதை நாலுகால் பாய்ச்சலில் விட்டுக் கொண்டு சென்றார்.

கருப்பன் விக்கித்துப் போனான். கண்ணிமைக்கும் நேரத்தில் நடந்து முடிந்த நிகழ்ச்சி அவன் பேசும் சக்தியையே பறித்து விட்டிருந்தது. திரும்ப வரும்போது துரைக்கு ஏன் அப்படியொரு கோபம் வந்ததென்று கேட்டான் “துரை முன்னாடி யாரும் செருப்புப் போடக்கூடாதுல்லா. பெரியக்காட்டு ஐயாகூட ஞாயித்துக்கிழமை வேட்டி கட்டிட்டு செருப்புப் போட்டுட்டு வரும்போது துரையைப் பார்த்தா ஒடனே செருப்பைக் கழட்டி உட்டுருவாரு. அதேமாதிரி எந்தத் தொர முன்னாடியும் யாரும் தொப்பி போட்டுட்டோ, குடை பிடிச்சுட்டோ நிற்கக் கூடாது.”

“மழை கிழ பெஞ்சா?”

“அப்பவும்தான். பலதடவ மழை காலத்துல தொர வரும்போது பெரிய காட்டுஐயா கொடைய மடக்கறதப் பார்த்திருக்கேன். ஆனா தொர குடையப் பிடிச்சுக்கச் சொல்வாரு. அப்புறம்தான் ஐயா குடையை விரிப்பாரு. சின்னய்யாவா இருந்தா தொர குடையப் பிடிக்கச் சொல்லவே மாட்டாரு. அவன் தொர போற வரைக்கும் மழைல நனைஞ்சுட்டே இருக்க வேண்டியதுதான். நமக்கென்னடே அதப்பத்தி? நமக்குத்தான் குடையுமில்ல செருப்புமில்லையே!”

சிலநாட்கள் கழித்து இன்னும் ஆச்சரியம் அளித்த இன்னொரு சம்பவமும் நடந்தது. ஒருநாள் இரவு வடக்கு டிவிஷன் பெரிய காட்டு ஐயாவை வேலையை விட்டு நீக்கி விட்டார்கள். அவர் ஏற்கெனவே எஸ்டேட்டை விட்டுப் போய்விட்டார் என்று முத்தையா சொன்னான்.

“காலைல கூட அவுரு வேலைக்குப் போயிட்டிருக்கறதப் பாத்தேனே?”

கருப்பன் நம்பமுடியாமல் கேட்டான்.

“ஆமா வேலைக்குத்தான் போனான். ஆனா கொஞ்ச நேரத்துல தொரத்திட்டாங்க. அவனோட சின்ன குமாஸ்தா கோபாலன்தான் சதி பண்ணி இப்படிப் பண்ணிட்டான்னு எல்லோரும் சொல்லிக்குதாங்க. எல்லா குமாஸ்த்தாக்களும் சொந்த வேலைக்கு எஸ்டேட் கூலிகளை வெச்சுக்குவாங்க. எல்லாப் பெரிய காட்டு ஐயா வீட்டிலும் ஒண்ணு ரெண்டு எஸ்டேட் கூலிங்க எப்பவும் வேல செஞ்சுட்டிருப்பாக. கோபாலனுக்குச் சொந்தக்காரன் ஒருத்தன் பெரிய தொரகிட்ட சோக்ராவா இருக்கான். அவன் மூலம் கோபாலன் பெரியைய்யா குணசேகரனைப் பத்தி கதகதையா அவுத்து உட்ருக்கான். பெரிய தொரைக்கு சரியான கோபம் வந்துருச்சு. ஒருநாள் தொரை வடக்கு தோட்டத்துக்குப் போனாரு. அங்க இருக்க வேண்டிய பன்னெண்டு கூலிகளுக்குப் பதிலா ஆறு பேர்தான் வேல பார்த்துட்டிருந்தாக. அது மத்தியான நேரம். கூலிங்க சாப்பிடக் கூட பாடிக்கும் போயிருக்கலாம். கோபாலன் கூலிகளை குணசேகரன்தான் சொந்த வேலையா தன்னோட வீட்டுக்கு அனுப்பியிருக்கார்னு சொல்லிட்டான்.

பெரிய தொரை ஆபீஸ் ஐயாவைக் கையோட கூட்டிட்டு நேரா அந்த வீட்டுக்குப் போனார். அங்க தோட்டத்துல ரெண்டு கூலிங்க வேல செஞ்சுட்டு இருந்தாக. கேட்டப்ப குணசேகரன் சொல்லித்தான் அங்க வேல செய்யறதாச் சொல்லிட்டாக. அப்புறம் தொரை வீட்டுக் கதவை உடைச்சுத் தெறந்து சாமான்களை எடுத்து வெளில வீசிட்டு பூட்டுப் போடச் சொல்லி உத்தரவு போட்டுட்டார். அதேமாதிரி செஞ்சுட்டாக. பொறவு குணசேகரனைக் கூட்டிட்டு வரச் சொன்னாக. அவர் வந்தப்ப எல்லாச் சாமான்களும் வெளிய எறஞ்சு கெடந்தது. இரண்டு மணிக்கு ஆபீஸ் போயி வரவேண்டிய பணத்தை வாங்கிட்டு போகச் சொல்லி பெரிய தொர உத்தரவு போட்டதா ஆபீசைய்யா சொன்னார். சம்பளம் கொடுத்த பிறகு உடனே எஸ்டேட்டை விட்டுப்போகச் சொல்லிட்டாக. ஐந்து மணிக்கெல்லாம் அவர் போயிட்டாரு.”

“ஏண்ணே இந்தாளுக நமக்கு உத்தரவு போடறதையும் தடியால நம்மை அடிக்கறதையும் பார்த்து அவங்களுக்கு ரொம்ப மரியாதை இருக்கும்னுல்லா நெனச்சேன்.”

“மரியாத இருக்கத்தான் செய்யுதுலே. ஆனா பெரிய தொரைதான் இந்த எடத்துக்கே ராஜா. யாரையாவது புடிக்கலைன்னா அப்பவே உதச்சுத் தொரத்திருவாரு. வேலைல இருக்கறவரைக்கும்தான்டே அவங்களுக்கு மரியாதை இருக்கும்.”

“இந்த ராவுல குணசேகரன் எங்க போவாரு? கண்டிப்பா கீழ போக முடியாது. நம்ம பெரியய்யாவும் அவரும் ரொம்ப சினேகிதக்காரங்கதான. அவரு ராவு தங்க எடங் கொடுக்க மாட்டாரா?”

“சினேகிதக்காரங்கறது சரிதான். ஆனா பெரியதுரை சொல்லிட்டா யாருக்கும் அதமீறி எடங்கொடுக்கற துணிச்சல் வராது. இருந்தாலும் நம்ம பெரியய்யா ரெண்டு கூலிங்களைக் கொடுத்து அடுத்த எஸ்டேட் வரை அவரோட சாமான்களைத் தூக்கிட்டுப் போய் கொடுத்துட்டு வரச் சொன்னாராமா. வேற ஏதாவது எஸ்டேட்ல வேல கெடக்கற வரைக்கும் வெளிய யாராவது சினேகிதகாரங்களோட தங்கிக்குவார்.”

“ரெண்டு பேரு எல்லா சாமான்களையும் தூக்கிட்டுப் போயிட முடியுமா?” கருப்பனுக்கு அடுத்தடுத்து சந்தேகம் வந்து கொண்டே இருந்தது.

“அதொண்ணும் கஷ்டமில்ல. இங்கெல்லாம் நெனச்சா வேலைய விட்டுத் தொரத்திடுவாங்கல்லா. யாருக்கும் அடுத்தநாள் இங்கயே வேலக்கு இருப்போம்ங்கற நிச்சயம் கெடையாது. அதனால எல்லா ஐயாக்களும் சொன்னா அடுத்த நிமிசம் சட்டி தூக்கத் தயாராத்தான் இருப்பாங்க. அதனால பெரிய சாமானங்க ஒன்னும் இருக்காது. ரெண்டு மூணு பொட்டிங்கள்ள துணிகளும், வேற சில்லரை சாமானங்களும் தான் இருக்கும். பெறவு சமைக்கறதுக்குப் பானைகளும், தண்ணி காய வெக்க டிரம்மும் இருக்கும். அதப் போற எடத்துல வாங்கிக்குவாங்க.”

“உடனே வேற வேல கெடச்சுடுமாண்ணே?”

“எல்லா எஸ்டேட்லயும் இந்த மாதிரிதான்லே. எப்பவும் வேலைக்கு ஆள் வேண்டித்தான் இருந்ததுட்டிருக்கும். அவனுக்கு இப்ப நாப்பத்தஞ்சு வயசிருக்கும். இதுவரைககும் பத்துப் பன்னன்டு எடத்துல வேல செஞ்சிருப்பான்.”

“அவங்களுக்கும் நமக்குப் பெரிய வித்தியாசம் இல்லை போலிருக்கு.”

“வித்தியாசம் இருக்குலே கருப்பா. ஒரு எஸ்டேட்டில எந்த ஐயாவுக்கும் காலைல வேலைக்குப் போனா ராவுல அங்க தூங்கு வாங்கிறது நிச்சயமிருக்காது. ஆனா கூலிகளுக்கு ஒரு தடவை எஸ்டேட்டுக்குள்ள போனா எப்ப வெளிய வருவோங்கிறதே தெரியாதுல்லா.”

“அப்புறம் ஏன் அவங்க இங்கன வேலைக்கு வாராங்க. அவங்களையும் நம்மை மாதிரி ஏமாத்திதான் கூட்டிட்டு வருவாங்களா?”

“இல்லை. அவங்களே இஷ்டப்பட்டுதான் வாராங்க. கீழே அவங்களுக்கு

வேலை குடுக்க யாரு இருக்காவோ. நம்ம பெரிய ஐயா இருக்காருல்லா அவரு ஒண்ணும் ரொம்ப படிச்சவரு இல்லையாம். சின்னப் பையனா இருக்கும்போது பள்ளிக்கூடத்திற்குப் போறேன்னு சொல்லிட்டுக் காட்டுல போய் பசங்களோட விளையாடிட்டு பள்ளிக்கூடம் விடும் நேரம் பார்த்து வீட்டுக்குப் போயிருவாராம். பரிட்சையிலயும் தோத்துப் போயிட்டாராம். அவங்கப்பா நல்லா சாத்திருப்பாரு போல இருக்கு. சிலோனுக்கு ஓடிப்போய் அங்க ஒரு எஸ்டேட்டுல வேலை பார்த்திட்டிருந்தாரு. இந்த எஸ்டேட்டுக்கு வந்து பத்து வருசந்தான் ஆவுது. எல்லா ஐயா மாருகளும் இவங்கள மாதிரிதான்."

"இதெல்லாம் உனக்கெப்படிண்ணே தெரிஞ்சுது?"

"அவருக்கு பீத்திக்கிறதுல ரொம்ப இஷ்டம். ஒருநாள் பெரிய தொர இல்லாத சமயத்துல தன்னப் பத்தின பழய கதையெல்லாம் பெரட்டுக்களத்துக் கிரவுண்டுல வச்சு மேஸ்திரிமாருககிட்ட சொல்லி சிரிச்சிக்கிட்டிருந்தாரு. அப்ப நானும் பக்கத்துல இருந்து கேட்டேன்."

"இவரு மட்டும் எப்படி பத்து வருசமா இங்கயே இருக்காரு."

"குமாஸ்தாக்கள் கொஞ்சம்பேரு வேலையில ரொம்ப திறமையா இருப்பாங்க. மத்தவங்க தொரைங்ககிட்ட நல்லபேரு வாங்கறதில திறமையா இருப்பாங்க. கீழே ஒரு பயலும் இவங்கள வேலைக்கு வெச்சுக்க மாட்டாங்கங்கிறது இவங்களுக்கே நல்லாத் தெரியும். அதனால எசமானங்கள சந்தோசப்படுத்தி வேலைய காப்பாத்திக்க என்னென்ன செய்யணுமோ எல்லாத்தையும் செய்வாங்க. நம்ம பெரிய ஐயா ரொம்ப நல்ல வேலைக்காரரு. பெரிய தொரைக்கு அவர ரொம்பப் புடிக்கும்."

"மேஸ்திரிங்க எப்படி?"

"அவனுக நிலைமை இவனுவளவிட ரொம்ப மோசம். குமாஸ்தாவைத் தொரத்தினா வேலை மட்டும்தான் போகும். மேஸ்திரியைத் தொரத்தினா வேலையும் போய், கூலிகளுக்குக் கொடுத்த அட்வான்ஸ் பணமும் போயிரும். அதனாலதான் அவங்க மேனேஜ ருங்ககிட்டயும், ஐயாங்ககிட்டயும் காலைக் கழுவி குடிச்சிக்கிட்டு கெடக்கானுவ. பெரிய ஐயாவுக்கு மேஸ்திரியப் புடிக்கலைன்னா அவர வேலய விட்டுத் தூக்கச் சொல்லி மேனேஜரைத் தூண்டி விடுவார். மேஸ்திரியை வேலையை விட்டுத் தூக்கினா அவன் கூலிகளுக்கும் கணக்குத் தீர்த்திருவாக. இல்லைன்னா இன்னொரு மேஸ்திரிகிட்ட வேலையைக் குடுத்துட்டு வெரட்டி விட்டுருவாக. எப்படிப் பார்த்தாலும் மேஸ்திரிக்கு அவன்

பணம் திருப்பிக் கெடைக்காது. போன வருசம் கூட நம்ம டிவிசன்ல விசுவாசம்ங்கற மேஸ்திரியை பாதி வருசத்திலேயே தூக்கிட்டாக. கூலிகளை வேற மேஸ்திரிகிட்ட மாத்திட்டாக. அதான். மேஸ்திரிங்க பெரிய ஐயாக்களப் பார்த்தா பயந்து நடுங்குதானுவ.”

“வடக்கால டிவிஷனுக்கு யாரைப் பெரிய குமாஸ்தாவாப் போடுவாங்க?”

“சின்ன ஐயா கோபாலுக்குத்தான் கெடைக்கும்னு பேசுகிறாங்க. அவன்தான் குணசேகராவைத் தூக்க வைச்சவன். அப்பத்தானே அவன் அந்த இடத்துக்கு வரமுடியும். பெரிய தொரைகூட இருக்கற சோக்ரா கிருஷ்ணன், கோபாலனுக்கு சொந்தக்காரன். சோக்ராவை தொரைக்கு ரொம்பப் பிடிக்கும். அவன்தான் எல்லா ஐயாக்களைப் பத்தியும் துரைகிட்ட போட்டுக்குடுக்கிறான்னு ஒரு பேச்சு இருக்கு. ஹெட் ரைட்டரையும், ஹெட் கிளார்க்கையும் தவிர எல்லாருக்கும் அவனப் பாத்தா பயம். அந்த இடத்தைக் கண்டிப்பா வாங்கித் தர்றதா கிருஷ்ணன், கோபாலன்கிட்ட சத்தியம் பண்ணியிருக்கானாம். எப்படியும் வாங்கித் தந்துருவான்.”

மறுநாள் கோபாலன் முகமெல்லாம் சிரிப்பாக வளைய வந்தான். குணசேகராவின் இடத்திற்கு அவன்தான் வரப்போகிறான் என்று நினைத்ததால் டிவிசனில் இருந்த மேஸ்திரிகள் அவனுக்கு கூழைக்கும்பிடு போட்டனர். கோபாலனே கூட எப்போது வேண்டுமானாலும் உத்தரவு வரும் என்று சொல்லிக் கொண்டிருந்தான். ஒருநாள் கழிந்தது. அடுத்த நாள்... துரையிடமிருந்து எந்த உத்தரவும் வரவில்லை. திருவாளர் வொயிட்டிடம் பேசச்சொல்லி கோபாலன் கிருஷ்ணனை நச்சி எடுத்து விட்டான். கிருஷ்ணன் பேசத்தான் செய்தான்.

ஆனால் பார்க்கலாம் என்று வொய்ட் அலட்சியமாகக் கூறி விட்டார். விரைவில் ஹெட் கிளார்க்கின் உறவினரும் நீலகிரியில் ஒரு எஸ்டேட்டில் உதவி எழுத்தராக வேலை செய்து வருபவருமான ஒருவர் அந்த இடத்திற்கு நியமிக்கப்பட்டிருக்கிறார் என்பதும், அவர் எந்த நேரத்திலும் வந்து சேரலாம் என்பதும் தெரிய வந்தது. ஒரு வாரத்திற்குள் சுமார் நாற்பது வயது மதிக்கத்தக்க புதிய தலைமை எழுத்தர் ரத்தினம், மனைவியுடன் வந்து சேர்ந்தார். கோபாலன்தான் தலையைத் தொங்கப் போட்டுக்கொண்டு அவருக்கு எஸ்டேட்டைச் சுற்றிக் காட்டி பொறுப்புகளை ஒப்படைத்தான்.

# 8

உயிரியல் ரீதியாகப் பார்த்தால் விலங்குகளிலேயே வேட்டையாடுவதில் மிகவும் திறமைவாய்ந்தவன் மனிதன்தான். திட்டமிட்டுத் தனது சொந்த இனத்தையே வேட்டையாடும் ஒரே விலங்கும் மனிதன்தான்.

மெமரீஸ் அன்டு ஸ்டடீஸ்
- வில்லியம் ஜேம்ஸ்

கருப்பனுக்கு இன்னொரு முறை காய்ச்சல் வந்தது. இந்த முறை அவன் தானே மருத்துவமனைக்குச் சென்றுவிட்டான். அவன் பின்புறத்தில் குரூப் ஒரு ஊசி போட்டதும் காய்ச்சல் சரியாகிவிட்டது. ஆனால் ஊசி போட்ட இடம் வீங்கிப் போய் நடக்கவே முடியாத அளவுக்கு விண்விண் என்று வலித்தது. ஒவ்வொரு இரவும் வெள்ளையன் வந்து மறுநாள் வேலைக்குப் போகாவிட்டால் தலைமை எழுத்தரிடம் சொல்லி வார ரேசனை நிறுத்திவிடப் போவதாக மிரட்டிவிட்டுப் போவான். இறுதியில் காலையே தூக்கி வைக்க முடியாவிட்டாலும்கூட கருப்பன் வேலைக்குப் போயே ஆகவேண்டிய நிலை வந்தது.

மார்ச் மற்றும் ஏப்ரல் மாதங்கள் மலேரியா மாதங்கள். எஸ்டேட்டிலிருந்த அத்தனை பேரும் ஒரு முறையாவது காய்ச்சலில் விழுந்தனர். குரூப்பும் மெடிக்கல் கூலியும் பரபரப்பாக லைன்களில் சுற்றி சிகிச்சையளித்துக் கொண்டிருந்தனர். ஒரு சமயம் ஒரே நேரத்தில் பாதிக்கும் மேற்பட்ட தொழிலாளர்களைப் படுக்கையில் கிடத்துமளவிற்கு குளிர்ஜுரம் (மலேரியா) தாண்டவமாடியது.

அந்த ஆண்டு எஸ்டேட்டில் ஏராளமானவர்களை மலேரியா பலி கொண்டது. ஒருநாள் மாலை வேலையிலிருந்து திரும்பிய வள்ளி பக்கத்து அறையில் அழுகுரல் கேட்டு ஓடினாள். அங்கே ஒரு பனிரெண்டு வயதுச் சிறுமி இறந்து போயிருந்தாள். அவளுக்கு ஒரு வாரத்திற்கு மேலாகக் காய்ச் சல் அடித்துக் கொண்டிருந்தது. குரூப் சிலமுறை ஊசி போட்டும்கூட அவளது நிலைமை சரியாகவே இல்லை. கொஞ்சம் கொஞ்சமாக உடல் நிலை மோசமடைந்து கடைசியில் இன்று காலை உயிரை விட்டு விட்டாள்.

காலையில் மகள் உயிருக்குப் போராடிக்கொண்டிருந்த நேரத்திலும்கூட வெள்ளையனின் வற்புறுத்தலின் காரணமாக அவளது அம்மாவும்

அப்பாவும் வேலைக்குப் போக வேண்டி வந்தது. அந்தச் சிறுமியின் தம்பியான பத்து வயதுப்பையன் தான் நோய்வாய்ப்பட்ட அக்காவோடு, கைக்குழந்தையாக இருந்த தன் தம்பியையும் பார்த்துக் கொண்டான். தகப்பன் மாலையில் வேலையிலிருந்து திரும்பியபோது தன் மகள் விரைத்துப் பிணமாகக் கிடப்பதையும், மகன் குளிர்காய்ச்சலில் நடுங்கிக் கொண்டிருப்பதையும், குழந்தை இறந்துபோன அக்காவின் பிணத்தோடு விளையாடிக் கொண்டிருப்பதையும் கண்டான்.

முத்தையாவும், சங்கனும், கருப்பனும் குழிவெட்டச் செல்ல, ஒரு பக்கத்து வீட்டுக்காரன் அடக்கத்துக்குத் தேவையான புதுத்துணிகளும், மற்ற பொருட்களும் வாங்கி வந்தான். குழி தயாரானதும் அவர்கள் சிறுமியின் உடலை புதுத்துணி கொண்டு போர்த்தினர். அவள் அன்றிரவே தகப்பனால் குழிக்குத் தூக்கிச் செல்லப்பட்டு புதைக்கப்பட்டாள். மறுநாள் அதிகாலையில் மேஸ்திரியின் அடி உதைக்கு பயந்து தகப்பன் தானாகவே வேலைக்குத் திரும்பினான். சுயநினைவையே இழந்து மரத்துப்போய் உட்கார்ந்திருந்த சிறுமியின் அம்மாவை சங்கரபாண்டியன் இரக்கமின்றி உதைத்து வேலைக்கு அனுப்பினான்.

“இத்தன கொடுமையாக்கூட இருப்பாகளா மனுசங்க?” வள்ளி கணவனிடம் கிசுகிசுத்தாள்.

மலேரியா பலரைப் பலிகொண்டதோடு மேலும் பலரை முடக்கிப் போட்டது. மரணத்துக்குத் தப்பிய பலர் வாழ்நாள் முழுவதும் எழுந்து நடமாட முடியாத நிலையை அடைந்தனர். கருப்பனின் லைனி லேயே பல குழந்தைகள் நோயில் விழுந்தன. மலேரியாவால் பாதிக்கப்பட்ட குழந்தைகளின் வயிறுகள் வீங்கிப் போயிருக்க உடலின் மற்ற பகுதிகள் குச்சிக்குச்சியாக மெலிந்து வற்றி போயிருந்தன. அந்தக் குழந்தைகள் ரத்தமே இல்லாமல் வெளுத்துப் போய் நகர முடியாமல் உணர்ச்சியற்ற முகங்களோடு காலையிலிருந்து மாலைவரை ஒரே இடத்தில் அசைவற்று உட்கார்ந்திருந்தன. இதேபோல் பல பெரியவர் களும் லைன்களில் கிடத்தி வைக்கப்பட்டிருந்தனர். அடிக்கடி காய்ச்சலால் தாக்கப்பட்டவர்களுக்கு வயிற்றுக்குள் கட்டி வளரும் என்று கருப்பன் கேள்விப்பட்டான் (கணையமும், ஈரலும் வீங்கிப் போவது). ஒருவனுக்கு ஒருமுறை இது போன்ற ஒரு கட்டி வந்துவிட்டால் வருடக் கணக்கில் அவன் எதற்கும் உதவாதவனாகப் படுத்துக்கிடக்க வேண்டியதுதான். இப்படி பாதிக்கப்பட்ட குழந்தைகள் பெரும்பாலும் மீண்டு வருவதே இல்லை. அவை மெல்ல மெல்ல பலவீனமடைந்து மரணத்தைத் தழுவின.

கருப்பனைப் பலமுறை காய்ச்சல் தாக்கினாலும் வள்ளி அதிர்ஷ்டவசமாக ஒரே தாக்குதலோடு தப்பித்துக் கொண்டாள். மொத்தம் அறுநூறு பேர் இருந்த டிவிசனில் சுமார் எழுபத்தைந்து பேர் காய்ச்சலுக்குப் பலியாகினர். அவர்களில் பாதிப்பேர் குழந்தைகள். ஒவ்வொரு நாளும் ஒரு மரணமவது நிகழாமல் டிவிஷனில் பொழுது விடிவதே இல்லை. அந்த மலைகள் அனைத்தையுமே மரணம் ஒரு போர்வை போலப் போர்த்தியிருப்பது போலத் தோன்றியது.

எழுத்துப் பணியாளர்களும் காய்ச்சலுக்குத் தப்பவில்லை. தலைமை எழுத்தரும் அவரது உதவியாளரும் காய்ச்சலால் பாதிக்கப் பட்டிருந்த நாட்களில் மேஸ்திரிகளும் உதவி மேலாளர்களுமே பணிகளை மேற்பார்வையிட்டனர். தலைமை டீ மேக்கரின் குழந்தைகூட காய்ச்சலுக்கு பலியானது. கருப்பனுக்கும் வள்ளிக்கும் அறிமுகமான ஒரு கூலியும் அதே வாரத்தில் மலேரியாவால் இறந்து போனான். அவர்களோடு பயணம் செய்து எஸ்டேட்டுக்கு வந்த நோயாளி சின்னராமன் தான் அவன். அவனை அடுத்தடுத்து மூன்றுமுறை காய்ச்சல் தாக்கியது. நடக்கவே முடியாத அளவுக்கு பலவீனமாய் இருந்த அவன் மருத்துவமனைக்குத் தூக்கிச் செல்லப்பட்டு உள்நோயாளியாக அனுமதிக்கப்பட்டான். அரைகுறை நினைவுடன் முனகிக் கொண்டிருந்த நிலையிலும்கூட அவன் மனைவி அருகிலிருக்க அனுமதிக்கப்படவில்லை.

“ஒனக்கும் ஒம் புருசனுக்கும் எத்தினி கடனிருக்கு. அந்தப் பய முப்பதுநா கூட வேல செய்யல. இப்ப நீயும் அவங்கூட ஆஸ்பத்திரியில உக்காந்தா யாருல எம் பணத்தை திருப்பித் தருவா? விடிஞ்சதும் வேலைக்குப் போ. ராவுல வந்து இவனத் தொட்டில்ல போட்டு ராராட்டு,” சங்கரபாண்டியன் உறுமலோடு அவளின் வேண்டுகோளை நிராகரித்து விட்டான்.

அவள் தினமும் வேலைக்குச் சென்றாள். சின்னராமனின் உடல் நிலை மேலும் மேலும் மோசமடைந்தது. முடிவு நெருங்கிக் கொண்டிருப்பதை எல்லோரும் புரிந்து கொண்டனர். ஒருநாள் முத்துலட்சுமி கொழுந்து கிள்ளிக் கொண்டிருக்கும்போது அவன் நினைவிழந்து வருகிறான் என்று தெரிவிக்கப்பட்டது. அவள் மருத்துவமனையை அடைவதற்கு முன்பே சின்னராமனின் வேதனை மிகுந்த வாழ்க்கை முடிவடைந்து விட்டது. சின்னராமனும், முத்துலட்சுமியும் எதற்குமே வழியில்லாத கொடும் வறுமையில் இருப்பவர்கள் என்பதால் லைனில் இருந்த சில கூலிகள் தங்களுக்குள் கொஞ்சம் பணம் புரட்டி அவனைப் புதைத்தனர். கணவனை நினைத்து அழுது புலம்புவதற்கு முத்துலட்சுமி ஒருநாள்

அனுமதிக்கப்பட்டாள். மறுநாள் தேயிலைக் காட்டுக்கு விரட்டி அடிக்கப்பட்டாள்.

ஆனைமலைகளில் உள்ள வேறு சில தேயிலைத் தோட்டங்களோடு ஒப்பிட்டுப் பார்த்தால் தங்களுடைய எஸ்டேட்டை ஆரோக்கியமானது என்று சொல்லலாம் என்று முத்தையா சொன்னபோது அவனுக்கு மூளை பிசகி விட்டதோ என்று கருப்பனுக்குத் தோன்றியது. ஆனால் முத்தையா தெளிவாகத்தான் பேசினான். கருங்குண்டு என்றழைக்கப்பட்ட எஸ்டேட்டில் இரண்டு ஆண்டுகளில் இந்த காய்ச்சலின் காரணமாக பாதிப்பேருக்கு மேல் இறந்து போய்விட்டார்களாம். ஒரு கூலி கூட புதிதாக அங்கே வேலை செய்ய முன்வராத அளவிற்கு அந்த எஸ்டேட்டில் நிலைமை மோசமாம், கல்யாணப் பந்தல் எஸ்டேட்டைப் போன்ற வேறு சில எஸ்டேட்டுகளிலும் சாவு விகிதம் மிக மிக அதிகம் என்று அவன் சொன்னதைக் கேட்டு கருப்பனுக்கு அழுவதா சிரிப்பதா என்றே புரியவில்லை.

“காச்ச காலத்துலதா இந்த எஸ்டேட்டுகள்ளேர்ந்து கூலிக தப்பியோடப் பாப்பாக. காவக்காரங்களும் காச்ச வந்து உழுந்து கெடக்கும் போது கூலிகளக் கங்காணிக்க யாரும் இருக்க மாட்டாக. யார் யாருக்கெல்லாம் முடியுமோ அவுகெல்லாம் ஓடிருவாக. ஆனா நூத்துக்கு ஒண்ணு ரெண்டு பேர்கூட பொள்ளாச்சி போய் சேர மாட்டாக. காச்ச, களப்பு குளிரால வழியிலேயே நெறய பேரு செத்துப் போவாக. ரெண்டு வருசத்துக்கு முந்தி பொள்ளாச்சி போற வழியில அங்கங்க குமிஞ்சு கெடந்த பொணங்களைப் பொதைக்க கம்பெனிங்க எக்கச்சக்கமான சக்கிலிக் கூலிகள வேலைக்குச் சேக்க வேண்டி வந்திச்சி. ஆனா எத்தினி நடந்தாலும், காச்ச வந்தவுகளுக்கும், கஷ்டப்படுறவுகளுக்கும் ஏதாவது செய்யணுமுன்னு மட்டும் நெனைக்க மாட்டாக. தப்பிச்சோடிப் போய் மாட்டிக்கிட்ட கூலிங்கள எஸ்டேட்டுக்குத் திருப்பிக் கொண்டாந்து அவகள்ல பல பேர மேஸ்திரிக கொடூரமா அடிச்சிக் கொன்னே போட்டுட்டாங்க. கம்பெனிங்க செய்றதெல்லாம் எத்தன பேரு செத்தாங்கங்கிறதை கீழ இருக்கிறவங்களுக்குத் தெரியாம மறைக்கிறதுதான். அப்படி தெரிஞ்சா யாரும் மலைக்கு வேலைக்கு வரமாட்டங்கல்லா.”

சுற்றி நடப்பவைகளால் பயந்து நடுங்கி விதிர்விதித்துப் போயிருந்த கருப்பனும் வள்ளியும் கட்டாயம் ஓடிப்போக முடிவு செய்திருப்பார்கள். ஆனால் முத்தையா மேலும் மேலும் வற்புறுத்தி அந்த எண்ணத்தைக் கைவிடச் செய்தான்.

“ஏப்ரல் மாசத்துல பாதி தாண்டிருச்சு. இந்த மாசம் முடியறதுக்கு முன்னாலயே மழை வந்துரும். அப்புறமா காச்ச வராது. ஓடிப்போனா ஒரு வேள மாட்டிக்காமத் தப்பிச்சாக்கூட கண்டிப்பா வழியில செத்துப் போவீக. எப்படியாவது தாக்குப் புடிச்சு இருங்க. கஷ்டமெல்லாம் தீருவதற்கு வழி பொறக்கும்.”

# 9

பகல் குளிர்ந்திருந்தது, இருண்டிருந்தது,
வெறுமையை விதைத்தது, மழை கொட்டியது,
காற்று ஓய்வின்றி சுழன்றடித்தது.

திரெய்னி டே
-லாங்பெல்லோ

இரண்டு வாரங்களில் முத்தையா சொல்லியது போலவே பருவ மழை தொடங்கியது. என்ன ஒரு மழை! கொட்டியது, கொட்டியது, கொட்டிக் கொண்டே இருந்தது. நிமிட நேரமும் மழை நிற்கவேயில்லை. வானம் பொத்துக் கொண்டது போல் மழை கொட்டும். பின்பு சில நிமிடங்கள் சாரல் விழும். பின்பு ஒரு மணிநேரம் கனமழை பொழியும். பிறகு சில நிமிடம் சாரல். ஒரு சில நிமிடங்கள்கூட முழுமையாக மழை நிற்கவேயில்லை.

தொடர்ந்து பல நாட்களுக்கு அவர்கள் சூரியனைப் பார்க்கவேயில்லை. இரவு நேரங்களில் கூரையாகப் போடப்பட்டிருந்த இரும்புத் தகடுகளை உக்கிரமாகத் தாக்கிய மழைத்துளிகள் எழுப்பிய பேரிரைச்சல் காதையே செவிடாக்கி விடும் போலத் தோன்றியது. குளிர் எலும்புவரை ஊடுருவிப் பாய்ந்தது. கருப்பனும் வள்ளியும் விடாது பெய்த மழையால் மிகுந்த மனச்சோர்வும், உடல் சோர்வுமடைந்தனர்.

வேலை செய்யும்போது கம்பளியைச் சுற்றிக் கொண்டாலும்கூட சில நிமிடங்களில் உடல் முழுவதும் மழையில் நனைந்து ஊறிப் போனது. மழைக்காலம் இன்னொரு தொல்லையையும் கொண்டுவந்து சேர்த்தது. அதுவரை கண்ணிலேயே படாமலிருந்த அட்டைகள் எங்கிருந்தோ கூட்டம் கூட்டமாகப் படையெடுத்து வந்து, கால்களிலும் உடல் முழுவதிலும் பரவி ரத்தத்தை உறிஞ்சியெடுக்கத் தொடங்கின. அட்டைக்கடி வலிக்கவில்லை என்றாலும் அது கடித்த இடத்திலிருந்து தொடர்ந்து அட்டை விட்ட பின்பும் பல மணிநேரத்திற்கு ரத்தம் வடிந்து கொண்டிருந்தது.

புகையிலை, எலுமிச்சை, சோப்பு கலந்து ஒரு பசை தயாரித்து வேலைக்குப் போவதற்கு முன்பு கால்களில் தடவிக் கொள்ள வேண்டும் என்று ராமாயி வள்ளிக்குச் சொல்லிக் கொடுத்தாள். அது ஓரளவுக்கு அட்டைகளைத் தடுத்தது என்றாலும் இரண்டு மூன்று அட்டைக்கடி

இல்லாமல் ஒருநாள் கூடக் கழியவில்லை. ஆண்களும், பெண்களும், குழந்தைகளும் கோடுகோடாகக் கால்களில் ரத்தம் ஒழுகத் தெருவில் நடந்துச் செல்வதை சர்வசாதாரணமாகப் பார்க்க முடிந்தது.

ரத்தம் வழிவதைத் தடுக்க அவர்கள் கொழுந்துஇலைகளையோ, மெல்லிய காகிதத் துண்டுகளையோ அட்டை கடித்த இடத்தில் ஒட்டிக் கொண்டனர். இரத்தம் உறைந்ததும் அது வழிவது நின்றுவிடும். ஆனால் ஓய்வேயில்லாமல் வானத்திலிருந்து சரம் சரமாக விழுந்து கொண்டிருந்த மழைத்துளிகள் நிமிட நேரத்தில் உறைந்த ரத்தத்தை கழுவிப் போக்கிவிடக் கடிவாயிலிருந்து திரும்பவும் ரத்தம் வழியத் தொடங்கிவிடும்.

வள்ளிக்கு அட்டைகளைப் பார்த்தால் பைத்தியமே பிடித்து விடும் போலாகியது. காலில் அட்டை ஏறுவதைப் பார்த்துக் கொண்டே இருந்தாலும்கூட அதைத் தட்டி விடும் துணிச்சல் அவளுக்கு வரவில்லை. ஆனால் பக்கத்தில் வேலை செய்து கொண்டிருந்த மற்ற பெண்கள் அவளுக்கு உதவினர். பல மாதங்கள் கழித்துதான் அவளால் அட்டை பயத்திலிருந்து விடுபட முடிந்தது. விடாது கொட்டிய மழையில் ஊறிக் குளிரில் விறைத்துப் போயிருந்த கை, கால்கள் இயல்பாக இயங்க மறுத்தன. மரத்துப்போன கைகளைக் கொண்டு அவளால் இலைகளைப் பறிக்கவே முடியவில்லை. சுற்றியிருந்த கம்பளியால் ஒரு உபயோகமுமில்லை. மழையிலும், குளிரிலும், காற்றிலும் பற்கள் கிடுகிடுக்க உடல் தன்போக்கில் நடுங்கிக் கொண்டிருந்தது. அரிசியைத் தண்ணீரில் ஊறவைத்து வாயில் மென்று கொண்டிருக்க அவள் ராமாயியிடமிருந்து கற்றுக் கொண்டாள். நடுக்கத்தைச் சமாளிக்க அதை அசை போடுவது ரொம்பவும் உதவியாயிருந்தது.

வேலை முடிந்தபிறகு அறைக்குச் சென்றால் கம்பளியிலிருந்து சொட்டிய நீர் ஒரு நொடியில் தரை முழுவதையும் ஈரமாக்கி விடும். கொட்டிக் கொண்டிருக்கும் மழையிலிருந்து நேராக அறைக்குள் கால் வைத்ததும் முதல் வேலையாக அடுப்புத் தீயில் கம்பளியை உலர வைப்பார்கள். அந்த கம்பளியைத்தான் இரவில் அவர்கள் போர்த்திக் கொள்ள வேண்டியதாயிருந்தது. ஏற்கெனவே ஈரமாகிக் குளிர்ந்து போயிருந்த தரை வேறு தன் பங்குக்குச் சித்திரவதை செய்தது.

இப்போது இன்னொரு வகையான காய்ச்சல் தலைதூக்கியது. இந்தக் காய்ச்சலோடு கடுமையான இருமலும், பல நேரங்களில் இரத்தம் கக்குவதும் சேர்ந்து வந்தது. * வாணலியில் வறுபட்டுக் கொண்டிருப்பதற்கு பதிலாக நேரடியாக நெருப்பிலேயே

விழுந்துவிட்டது போலக் கருப்பனுக்கும் வள்ளிக்கும் தோன்றியது.

அந்த நாட்களில், முக்கியமாக கடுமையாக மழை பெய்த நாட்களில் வேலைக்குப் போகாமல் வீட்டிலேயே இருக்க வள்ளி விரும்பியிருப்பாள். ஆனால் வெள்ளையன் அவளையும் மற்ற அத்தனை பேரையும் தேயிலைக் காட்டுக்கு விரட்டியடித்தான். அதைவிட மோசமானது என்னவென்றால் இவ்வளவு பயங்கரமான சூழ்நிலைகளில் வேலை செய்தாலும்கூட அவர்களால் ஒரு நாளைக்கு ஒரு அணாகூட சம்பாதிக்க முடியவில்லை. பயங்கரமான மழை, குளிரின் காரணமாக தேயிலைப் புதர்களில் மிகச் சொற்ப இலைகளே இருந்தன. மிகத் திறமையான கொழுந்து கிள்ளுபவர்களாலேயே கூட நான்கைந்து பவுண்டுக்கு மேல் இலை பறிக்கவே முடியவில்லை.

*தொழிலாளர்களில் கால்வாசி பேர் இந்தக் காய்ச்சலால் பாதிக்கப்பட்டனர். ஏதாவது குழந்தைக்கு இந்தக் காய்ச்சல் வந்துவிட்டால் அதை மரணத்தின் பிடியிலிருந்து காப்பாற்றவே முடியாது. பாதிக்கப்பட்டவர்களில் மூன்றில் ஒரு பங்கினர் மரணமடைந்தனர்.

ஜூன் ஜூலை மாதங்கள் முழுவதும் நிமிட நேர இடைவேளையின்றி மழை கொட்டித் தீர்த்தது. ஒருநாள் கூட சூரியன் இருண்ட மேகக் கூட்டங்களுக்கு பின்னிருந்து வெளியே வரவேயில்லை. பழனி, ஈரோடு கூலிகளுக்கு ஜூன் மாதத் தொடக்கத்தில் கணக்குத் தீர்க்கப்பட்டது. திருநெல்வேலிக் கூலிகள் மட்டுமே எஸ்டேட்டில் மீதி இருந்தனர்.

ஜூன் மாதத்தில் தேயிலைப் புதர்களைக் கத்தரித்து சமப்படுத்தும் கவாத்து வேலை நடக்கும். எஸ்டேட்டில் தேயிலை வளரும் பகுதியில் கால்பங்கு வெட்டி சீர்படுத்தப்பட்டது. ஒவ்வொரு நான்காண்டுகளுக்கும் ஒருமுறை எஸ்டேட் முழுவதும் சீர்படுத்தப்படும் விதத்தில் இந்த கணக்குக் கடைபிடிக்கப்பட்டது. தேயிலை பறிப்பவர்களுக்கு எளிதாக எட்டும் விதத்தில் தேயிலைப் புதர்களை மூன்று நான்கடி உயரத்தில் தொடர்ந்து வைத்திருக்கவே அவை வெட்டி வெட்டி விடப்படுகின்றன. வெட்டிச் சீர்படுத்துபோது புதர்களின் உயரம் ஒன்றரை அடியாகக் குறைக்கப்படும். வெட்டப்பட்ட ஒரு புதரில் பறிப்பதற்கு ஏதுவான இலைகள் வளர ஆறுமாதங்கள் ஆகும்.

ஆகஸ்டு மாதம் வந்ததும் பருவ மழையின் சீற்றம் சற்றே தணிந்தது. கார்மேகக் கூட்டங்களுக்குப் பின்னிருந்து சூரியன் மெதுவாக எட்டிப் பார்க்கத் தொடங்கியது. முதலில் சில நிமிடங்களும், போகப் போக சிலமணி நேரங்களும் சூரிய ஒளி தேயிலைப் புதர்களையும் குளிரில்

வாடி விரைத்துப் போயிருந்த மனித உடல்களையும் வருடிக் கொடுக்கத் தொடங்கியது. முதல்நாள் சூரியனைக் கண்டதும் வள்ளிக்கு ஆனந்தத்தில் கத்திக் கூச்சலிட வேண்டும் போல் தோன்றியது. ஒவ்வொருவரும் மாற்றத்தை உணர்ந்தனர். காலை நேரங்களில் கதகதப்பான சூரிய ஒளியில் முதியவர்களும், பெண்களும், குழந்தைகளும் தங்களை சூடுபடுத்திக் கொண்டனர். இருந்தாலும் ஒருநாளைக்கு ஒரு முறையாவது மழை கொட்டித் தீர்த்தது.

“இன்னொரு பதினைந்து நாளைக்கு இதே மாதிரி வெயில் அடிச்சா நல்லா துளிர்த்து வந்திடும்.” ராமாயி வள்ளியிடம் சொன்னாள். “இனியும் மழை பெய்யுமா?” மழையை நினைத்தாலே வள்ளிக்கு அடிவயிறு கலங்கியது.

“ஆமா, அடுத்த மழைக்காலம் இனிமேதான வரும். ஆனா அது புரட்டாசி, ஐப்பசி மாசந்தான் வரும்.”

“அந்த மழைக்காலம் எத்தனை நாளைக்கு இருக்கும்கா?”

“அக்டோபர் மாசம் முழுக்க மழை கொட்டித்தள்ளும். நவம்பர் மாசம் தொடங்கிட்டா மழை கொறைஞ்சுடும். முணாவது வாரத்தில மழை கொஞ்சங் கொஞ்சந்தா பெய்யும்” ராமாயி கூந்தலை அள்ளி முடிந்து கொண்டே பதிலளித்தாள்.

# 10

உண்மையான விருந்தோம்பல் எது? ஐயோ! என் நண்பர்களே, சகோதரர் ஸ்னாப்ஸ் அவர்களே! அதுதான் பெரும்பாலும் நமக்கு கிடைப்பதே இல்லையே.

புக் ஆஃப் ஸ்னாப்ஸ்
-தாக்கரே

மகிழ்ச்சியும் கும்மாளமுமாக பெரிய காட்டு ஐயா அப்பாவுவின் வீடு களைகட்டி இருந்தது. அது ஒரு சனிக்கிழமை இரவு. அப்பாவுவின் மனைவி திருநெல்வேலியிலிருந்த அவர்களின் கிராமத்துக்குப் போயிருந்தாள். எனவே பெரியய்யா களியாட்டத்தில் இறங்கிவிட்டார். டேபிளைச் சுற்றித் தலைமை குமாஸ்தா ஜான்சன், டாக்டர் குரூப், குரங்கு மலை தலைமை குமாஸ்தா சாமிதாஸ், கழுகுமலையின் தலைமை எழுத்தர் மாணிக்கம் என அவரது நண்பர்கள் உட்கார்ந்திருந்தனர். இரண்டு வறுத்த கோழிகளும், ஏராளமான ரொட்டித் துண்டுகளும் ஒரு பாட்டில் விஸ்கியும், நான்கு பாட்டில்கள் பீரும் மேசை மீது பரப்பி வைக்கப்பட்டிருந்தன.

மனைவி ஊரில் இல்லாதபோது பாட்டிலோடு உட்கார்ந்து விட்டால் அப்பாவு சுவாரசியமான மனிதர் ஆகிவிடுவார். அவர் ஆனை மலைக்கு வருவதற்கு முன் சிலோனின் தேயிலைத் தோட்டங்களில் கொஞ்ச காலம் இருந்திருந்தார். போதை தலைக்கு ஏறும்போதெல்லாம் அங்கு தான் நடத்திய திருவிளையாடல்களைப் பற்றிய கதைகளை மூட்டை மூட்டையாக அவிழ்த்து விடத் தொடங்கி விடுவார். சில உண்மையானவை. பெரும்பாலானவை அந்த குறிப்பிட்ட சந்தர்ப்பத்துக்காக கற்பனையில் உருவாக்கப்பட்டவை.

“இந்த ஊருல பிராண்டியும், பீரும் நல்லாவே இல்லை. அட்டகாசமான சீமைச் சரக்குக்கு சிலோனை விட்டா வேற எடமே கிடையாது. அதுவும் கம்மி விலைக்கு கெடைக்கும். ஒவ்வொரு நாளும் சனிக்கிழமை ஒரு வொய்ட் ஹவுஸ் பாட்டிலை முடிப்பேன். கூட துணைக்கு யார் இருப்பாங்க தெரியுமா? உங்கள மாதிரி கிழடு கட்டைங்க கிடையாது. ஹா.. ஹா.. ஹா.. அழகான சிங்களப் பொண்ணுங்க ஹா... ஹா... ஓ.. ஓ.. ஓ...”

“இப்போ என்ன ஆச்சு? இவிடயும் நல்ல குட்டிகளு உண்டில்லே.

ஆரயிங்கிலும் பிடிக்க வேண்டியதுதானே?”

“என்ன டாக்டர் இப்படி கேக்கறீய? இது இந்தியா, சிலோன் இல்ல தெரியுமில்ல. அங்க என்ன வேணுமானாலும் செய்யலாம். வேவு பாக்கதுக்கு ஊர்க்காரப் பய ஒருத்தனும் இருக்க மாட்டான். இது நம்ம ஊரு. பொறகு கமாண்டர் இன் சீஃப்பும் என்னோட அஞ்சு குழந்தைகளும் வீட்டில இருக்கிறாங்கங்கிறதை மறந்திடாதீங்க”

“அடி சக்கை அதுக்குள்ள அஞ்சாவது தயாராகிடுச்சா” ஜான்சன் கேட்டார்.

“ஆமா நேத்துதான் நான் அஞ்சாவது கொழந்தைக்கு அப்பாவாகிட்டேன்னு செய்தி வந்திச்சு.”

“அப்ப இது பர்த்டே பார்ட்டி. ஹா.. ஹா.. ஹா..” குரூப் சிரித்தது விக்கல் எடுததது போல் கேட்டது.

“இத பாருங்க சிலோனில நான் பெத்துப் போட்ட குழந்தைகளக் கணக்குப் போட்டா ஒரு டஜன் இல்ல. ஏழெட்டு டஜன் இருக்கும்” அப்பாவு பீற்றிக் கொண்டார். அத்தனை பேரும் விழுந்து விழுந்து சிரித்தனர்.

“எத்தனை பொஞ்சாதிங்க இருந்தாங்க” சாமிதாஸ் கேட்க திரும்பவும் வெடிச் சிரிப்பு எழுந்தது.

“முட்டாள், முட்டாள், நிறைய குழந்தைங்க இருக்கணுமின்னா நிறைய பொஞ்சாதிங்க இருக்கணுமா என்ன? அங்க ஒரு பெரிய மேஸ்திரிக்கு மூணு பொஞ்சாதி. ஒவ்வொரு வாரக் கடைசியிலும் எனக்குத் துணையா அவன் இளைய சம்சாரத்தை, வறுத்த கோழிக்கறி, ஒரு பிராந்தி பாட்டிலோட அனுப்புவான். இன்னொரு மேஸ்திரியோட பொண்ணு இருக்கா. நா எப்ப கூப்பிட்டு அனுப்பினாலும் உடனே வருவா. அவ எப்படிச் சமைப்பா தெரியுமா? எவ்வளவு சந்தோசமா இருக்கும் தெரியுமா? சாப்பிட்டுட்டு, குடிச்சிட்டு, ஆடிட்டு...” அப்பாவு விக்கலுக் கிடையே திக்கித்திக்கிப் பேசினார்.

“அந்த மாதிரி ஒரு சொர்க்கத்தை விட்டுட்டு ஏன் இங்கே வந்தீங்கண்ணே?” சாமிதாஸ் கேட்டார்.

“மூணு வருசம் கழித்து லீவுல இந்தியா வந்தேன். எங்கப்பன் ஒரு முட்டாப்பய, அம்ம ஒரு மடச்சி. இவங்க இரண்டு பேரும் சேர்ந்து எனக்குக் கல்யாணம் பண்ணி வைக்க ஆசைப்பட்டாங்க. ஒரு முழு மூடனை மாதிரி நானும் ஒத்துக்கிட்டேன். ஆனா நான் சிலோனில

வேலைல இருக்கேன்றதால ஒரு பயலும் எனக்குப் பொண்ணு தர மாட்டேன்னுட்டான். நான் ஒரு அறிவு கெட்டவன். கல்யாணத்துக்காக அந்த வேலையை விட்டுட்டேன். ஒருநாள்கூட சிலோன் வேலையை விட்டதுக்காக என்னை நானே சபிச்சுக்காம இருந்ததில்ல. சந்தோசமா வாழறதுக்கு, நல்லா வாழறதுக்கு, வாழ்க்கையை அனுபவிக்கிறதுக்கு இந்த பூமியில சிலோன் மாதிரி வேற இடமே கிடையாது." அப்பாவு நீளமாகப் பெருமூச்சு விட்டார்.

"டாக்டர் நீங்க பார்ட்டி குடுத்து ரொம்ப நாளாச்சு" அப்பாவுவின் கவலையைப் போக்கும் நோக்கில் ஜான்சன் பேச்சை குரூப்பை நோக்கித் திருப்பினார். "அவரோட கவர்னர் வீட்டிலிருக்கும்போது எப்படி பார்ட்டி குடுப்பாரு?" சொல்லிவிட்டு அப்பாவு சிரித்தார். மனைவிக்குத்தான் பயப்படுவது கோடிட்டுக் காட்டப்படுவதைக் கேட்டு குரூப்புக்கு கோபம் தலைக்கேறியது. அவர் விக்கினார்.

"டிசம்பர் மாசம் 15ம் தேதி சனி ஆழ்ச்ச என்ட வீட்டில பார்ட்டி அவிட வந்து பாருங்க. யார் கவர்னருன்னு நோக்காம்."

"வீட்டுக்கு வந்தா ஆன்மீக விருந்து ஒண்ணும் வெச்சிரமாட்டீங்கல்ல" ஜான்சன் கிண்டலாகக் கேட்டான்.

"அதென்னது ஆன்மீக விருந்து?" என்றான் மாணிக்கம். "எங்க ஊர்ல எனக்கு ஒரு நண்பன் இருந்தான். சிநேகிதகாரங்ககிட்டயும், பக்கத்து வீட்டுக்காரங்ககிட்டயும் குறும்பு பண்றதுக்கு பேர் போனவன். ஒருநாள் பக்கத்து வீட்டுக்காரங்களை எல்லாம் விருந்துக்கு வாங்கன்னு அந்தப் பய வீட்டுக்குக் கூப்பிட்டிருந்தான். அவனைப் பத்தி நல்லாத் தெரிஞ்சவங்க போகலை. மத்தவங்க போனாங்க. வீட்டுக்காரன் ரொம்ப நேரத்துக்கு தமாஷ் கதைகளைச் சொல்லி ஆபாசப் பாட்டுகளைப் பாடி சிரிக்க வெச்சுட்டே இருந்தான். அப்புறம் இப்ப விருந்துன்னு சொல்லிட்டு பைபிளை எடுத்து விரிச்சு ஒரு முழு சேப்டர் படிச்சான். "மனுஷன் ரொட்டியினால மட்டும் வாழ்ந்தர முடியாது" அப்படீங்கற வாசகத்தை எடுத்துட்டு அதைப் பத்தி நீளமா ஒரு பிரசங்கம் வேற பண்ணினான். டின்னருக்கு முன்னாடி ப்ரேயர் பண்ணறாங்கன்னு நினைச்சுட்டு விருந்தாளிங்க பொறுமையாக் காத்திட்டிருந்தாங்க. விருந்தாளிகளுக்கு எரிச்சல் வர்றதைப் பார்த்த உடனே 'இப்ப பிரார்த்தனை பண்ணலாம்'என்று முட்டிபோட்டு உட்கார்ந்து ரொம்ப நேரம் ஜபம் பண்ணத் தொடங்கிட்டான். கொஞ்சம் விருந்தாளிங்க கடுப்பாகி போயிட்டாங்க. இவன் கடைசியில ஒரு வழியா 'ஆ.....மெ.....ன்'ன்னு நீளமா சொன்னான். 'நண்பர்களே நான்

உங்களுக்குப் படைத்த இந்த அற்புதமான ஆன்மீக விருந்தை நீங்கள் மிகவும் ரசித்திருப்பீர்கள் எனறு நம்புகிறேன். இனி மேலும் நான் உங்களை காக்க வைக்கப் போவதில்லை. நீங்கள் உங்கள் வீடுகளுக்குத் திரும்பலாம். போகிற வழியில் மனிதன் ரொட்டியைக் கொண்டு மட்டும் வாழ முடியாது என்ற அற்புதமான வாசகத்தைப்பற்றி நீங்கள் ஆழமாகச் சிந்திக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்..” ஜான்சன் முடிப்பதற்கு முன்பே வெடிச்சிரிப்பு, கிளம்பியது.

அப்பாவு குலுங்கிக் குலுங்கி சிரித்தபடி “நம்ப டாக்டர் இந்த மாதிரி விருந்தெல்லாம் கொடுக்க மாட்டாரு. வறுத்த மாட்டுக்கறியும், தீயில வாட்டின பன்னிக்கறியும் தருவாரு. இல்லையா டாக்டர்” என்றார்.

“டாக்டரை வீட்டை விட்டுத் தொரத்தணுமின்னு நினைக்கிறீயளா?” ஜான்ஸன் கேட்டான்.

“ஏன் திருமதி குரூப் இவ்வளவு ஆச்சாரத்தோடு இருக்கிறாங்க?” மாணிக்கம் இந்த கேள்வியைக் கேட்கும்போது முகத்தை மிகவும் அப்பாவித்தனமாக வைத்துக் கொண்டிருந்தான்.

“யேய் ஆச்சாரமோ கீச்சாரமோ ஒன்னுமில்லா. எண்ட வீட்டுக்கு டின்னருக்கு வரணும். வந்து பின்னீடு யார் கவர்னருன்னு நோக்கிக்கோ”கேலி கிண்டலைப் பொருட்படுத்தாது தீவிரமாக பதிலளித்தார் குரூப்.

“சரி பதினெஞ்சாம் தேதி சனிக்கிழமை அண்ணன் குரூப் வீட்டுல நாமெல்லாம் சந்திக்கிறோம்.” அப்பாவு விவாதத்தை முடித்து வைத்தார்.

“ரைட்டோ.”

“உன்னோட மருமகனுக்கு உதவி குமாஸ்தா வேலை வாங்கிக் குடுத்திட்டியா?” மாணிக்கம் சாமிதாஸிடம் கேட்டான்.

“இல்ல, திரு.புல் (Mணூ.ஆதடீடு) என்னை ஏமாத்திட்டான். எம் மருமகனுக்குத்தான் அந்த வேலையைக் கொடுப்பேன்னு சொல்லியிருந்தான். ஆனா அந்தப் பசுமாடு இடையில புகுந்து காளையை மடக்கிருச்சு. இப்போ பசுமாட்டோட சொந்தக்காரன் யாரோ ஒருத்தனுக்கு அந்த வேலை கிடைக்கும் போலிருக்கு.”

“எந்தப் பசுமாடு” அப்பாவு கேட்டார்.

“வேற யாரு, ஜார்ஜ் பொஞ்சாதி அம்மிணிதான்.” சாமிதாஸ் குரலில் கசப்பு வழிந்தது.

“ஓ.. பசுமாட்டுக்குக் காளை மேல அத்தன செல்வாக்கு இருக்கா?”

“அதே. அவளாணு இப்போ இ எஸ்டேட்டுக்கே ராணி” குரூப் ஆமோதித்தார்.

பின்பு போனவாரம் நடந்த ஒரு வேடிக்கைக் கதையைச் சொல்ல ஆரம்பித்தார். திருவாளர் புல் அம்மிணியிடம் ஒரேயடியாய் மோகித்துப் போய் தோட்டத்தை மேற்பார்வையிடக் கூட செல்வதில்லையாம். இது எப்படியோ வொயிட்டுக்குத் தெரிந்து விட்டதாம். எனவே சென்ற வாரத்தில் ஒருநாள் வொய்ட் எஸ்டேட்டுக்கு சென்று திருவாளர் புல்லைத் தேடினார். அவன் பங்களாவில் இருப்பதாகக் கேள்விப்பட்டு நேராக அங்கே சென்றார். புல்லும் அம்மிணியும் படுக்கையறையில் ஒன்றாக டீ அருந்திக் கொண்டிருந்தபோது வொய்ட் குதிரையில் வருவதைப் பார்த்த சோக்ரா பாய்ந்து சென்று தனது எசமானை எச்சரித்தானாம். பைஜாமாவில் இருந்த புல் துள்ளியெழுந்து அம்மணியை அலமாரிக்குள் தள்ளிப் பூட்டி விட்டுப் படுக்கையில் படுத்து போர்வையைப் போர்த்துக் கொண்டு தனக்கு உடம்பு சரியில்லை என்பதால் படுக்கையில் இருப்பதாக வொயிட்டிடம் சொல்லிவிடும்படி பணியாளுக்கு உத்தரவிட்டு விட்டானாம். சோக்ரா உத்தரவை நிறைவேற்றினான். வொயிட் நேராகப் படுக்கையறைக்குச் சென்று புல் படுக்கையில் இருப்பதைப் பார்த்துவிட்டு குரூப்பிடம் வந்து அவனைச் சென்று பார்க்கும்படியும், முடீஸில் இருக்கும் தலைமை மருத்துவ அதிகாரியை அழைப்பது அவசியமா என்பது குறித்து தன்னிடம் தெரிவிக்கும்படியும் கூறினாராம். குரூப் புல்-ஐ சந்திக்கச் சென்றபோது அவன் தனக்குக் காலையில் கடும் வயிற்றுவலி என்று, ஈனஸ்வரத்தில் முனகினானாம். வொயிட் கூறியதை அவரிடம் கூறிய போது.

“ஓ ஓ வேண்டா குரூப். அவரைத் தொல்லை பண்ண வேண்டாம். நாளைக்குச் சரியாகிவிடும். வேலைக்கு வந்துவிடுவேன் என்று வொய்ட்டிடம் சொல்லி விடுங்க” என்று பதட்டத்துடன் மறுத்து விட்டானாம். குரூப்பும் அதுபோலவே வொயிட்டிடம் சொல்லி விட்டாராம். மறுநாள் மருத்துவமனைக்கு வந்த சோக்ராவிடம் புல்-ஐ பற்றி குரூப் கேட்டபோது அவன் சிரித்துக் கொண்டே முழுக் கதையும் சொன்னானாம்.

“அந்தத் தேவடியா முண்டை அலமாரிக்குள்ளயே மூச்சு முட்டிச் செத்துப் போயிருந்தா எவ்வளவு நல்லா இருந்திருக்கும்” சாமிதாஸின் குரலில் கோபம் கொப்பளித்தது.

“அவ புருஷன் ஜார்ஜ் சூடு சொரணையில்லாம பெரிய பண்ணையார்

மாதிரி சுத்தி வரான்.”

“ஏன் வரக்கூடாது? எஜமானனை அவம்பொஞ்சாதி ஆட்டி வெக்கா. அது ஜார்ஜே எஸ்டேட்ட ஆட்சி பண்ற மாதிரிதானே?” என்றார் அப்பாவு.

“நாசமாப் போன முண்டை” சாமிதாஸ் சிரிக்கவேயில்லை “ஹாஹா.. ஹா.. எஸ்டேட்டுல தம்பி சாமிதாஸ் இப்ப ஒண்ணுமில்லாமப் போயிட்டாரு. மாமூல்ல வர காசுல பெரும்பகுதி ஜார்ஜுக்குப் போயிரும். அதுதான் தம்பிக்கு இவ்வளவு கோபம்” அப்பாவு சிரித்தார்.

“நான் இல்லாம இந்த எஸ்டேட்ட நடத்த முடியாதுன்னு அந்தக் காளைப் பயலுக்குக் காட்டறேன். அந்தப் பொட்டப்பய ஜார்ஜுக்கும் நல்ல பாடம் கத்துக்குடுக்கப் போறேன்” சாமிதாஸின் கண்களில் பொறி பறந்தது.

“போதும் தம்பி. கொஞ்சம் பொறுமையாயிரு. கோபத்துல மூளையே வேல செய்ய மாட்டேங்குது போலிருக்கு. நேத்து நீ எஸ்டேட்டுக்கு வந்தவனில்ல. புல் அம்மணிகிட்ட மயங்கிக் கிடக்கிற வரைக்கும் ஜார்ஜ்தான் எஸ்டேட்ல எல்லாங்கறது உனக்கும் தெரியும். எனக்கும் தெரியும். அவனுக்குப் பாடம் கத்துக் கொடுக்கப் போய் உனக்குக் கத்துக் குடுத்துடப் போறாங்க. இப்ப நீ ஒண்ணுமே செய்யவே முடியாது. காத்திட்டிரு. பொறுமையாயிரு.”

இரவு நெடுநேரம் வரை அவர்கள் தின்று கொண்டும், குடித்துக் கொண்டும் இருந்தார்கள். எல்லோரும் வீட்டுக்குப் போகவே முடியாத அளவுக்குப் போதையிலிருந்ததால் அப்பாவு அவர்கள் அங்கேயே படுக்க ஏற்பாடு செய்தார். காலையில் மூடுபனிப் படலங்களுக்குப் பின்னிருந்து சோம்பலாகத் தலைகாட்டிய சூரியன் அவர்கள் அப்பாவுவின் வீட்டில் குறட்டை விட்டு உறங்கிக் கொண்டிருப்பதைக் கண்டது.

# 11

வெட்கப்படும் ஒரே மிருகம் மனிதன்தான்
அல்லது வெட்கப்பட வேண்டிய தேவை உள்ள
ஒரே மிருகம் மனிதன்தான்.

-மார்க் ட்வைன்

ஒரு வழியாக டிசம்பர் மாதம் வந்தது. இனி மழையும் அட்டைகளும் சில மாதங்களுக்கு வராது என்று வள்ளி நிம்மதிப் பெருமூச்சு விட்டாள். மழைக்காலம் கடந்துவிட்டதும் பண்டிகை (Christmas) நெருங்கிக் கொண்டிருப்பதும் எல்லோருக்குமே மகிழ்ச்சியை அளித்தது. மலைகளே பொங்கி வருவதுபோலத் தேயிலைச் செடிகளிலிருந்து இலைகள் துளிர்த்தெழுந்தன. அவர்கள் காலையில் வெகு சீக்கிரமே வேலைக்குப் போக வேண்டி இருந்தது. தேயிலைச் செடிகள் முழுவதும் துளிர்த்தெழுந்த ஏராளமான கொழுந்துகளைப் பெண்கூலிகளால் மட்டும் பறிக்க முடியவில்லை என்பதால் ஆண் கூலி ஆட்களும் கூடக் கொழுந்து கிள்ள அனுப்பப்பட்டனர். ஆனால் பதினைந்து நாட்களுக்குப் பிறகு பனிபொழியத் தொடங்கியது. பனித்துளிகளின் காரணமாக இலைகள் கணிச மாகக் குறைந்து போயின.

“இன்னும் ஒரு வாரத்துக்குத்தான் கொழுந்து துளிர்த்து வரும். பண்டியல் நெருங்கியாச்சுன்னா எதுத்தாப்ல என்ன இருக்குதுன்னு தெரியாத அளவுக்குப் பனி பெய்யும். செடியிலிருக்கிற இலைகளெல்லாம் கருகிப் போயிரும். தினமும் காலையில எண்ணெய் தேய்க்கலன்னா உதடுகை எல்லாம் பனியில வெடிச்சுப் போயிரும். பண்டியலுக்குப் பொறவு திருநவேலி கூலியாளுகளுக்குக் கணக்குத் தீர்த்துடுவாக. இந்த வருசம் நாங்க ஊருக்குப் போற அளவுக்குப் பணம் கிடைச்சுருமின்னு எங்க வீட்டுக்காரர் சொல்றாக. எஸ்டேட்டுக்கு வந்து மூணு வருசம் ஆச்சு. இப்பத்தான் மொதமொதலா ஊருக்குப் போறோம்.” ராமாயி எங்கோ ஆரம்பித்து எங்கோ முடித்தாள். ஊரைப் பற்றிய நினைவில் அவள் இப்போதே மிதக்கத் தொடங்கியதை தொலைவில் நிலைகுத்தி இருந்த கண்கள் காட்டிக் கொடுத்தன.

“எங்களால போக முடியுமான்னு தெரியலக்கா. இங்க வந்து ஒரு வருசமாச்சு. அப்பா அம்மாவப் பாக்கணும் போல இருக்கு” வள்ளி ஏக்கத்துடன் கூறினாள்.

“அந்த மாதிரி ஆசையை எல்லாம் வளர்த்து வைக்காத. நிறைய பணம் அட்வான்ஸா வாங்கியிருக்கீக. கூட ரயில் செலவு கம்பளின்னு கணக்கு இருக்கு. எல்லாத்தையும் சேர்த்தாத் தொகை பெருசா இருக்கும். ஒடம்பு சுகமில்லாம வேற ரொம்ப நாள் படுக்கையில கிடந்திருக்கே. இதெல்லாம் பார்த்தா உங்ககடன் தீர்ந்திருக்காதுன்னு நெனக்கேன். இந்த மாதிரி ஆசையெல்லாம் வெச்சிட்டேன்னா கடைசியில ரொம்ப ஏமாந்து போயிருவே. அதைத் தாங்கிக்கவே முடியாது.” ராமாயியின் குரலில் இருந்தது அன்பா? கண்டிப்பா? கசப்பா என்று வள்ளிக்குப் புரிந்து கொள்ளவே முடியவில்லை. வள்ளியின் பழைய உடல்நலம் திரும்ப வந்துவிட்டது. சொல்லப் போனால் இந்த ஓராண்டில் குளிரிலும், பனியிலும் உழைத்து, உழைத்து அவள் இன்னும் உரமேறிப் போயிருந் தாள். மிகவும் திறமை வாய்ந்த கொழுந்து கிள்ளுபவர்களோடு போட்டி போடும் அளவுக்கு அவள் முன்னேறி இருந்தாள். ஒருநாள் அவர்கள் பறித்துக் கொண்டிருந்த போது வெள்ளையன் சீனியம்மா என்ற வயதான பெண்ணை அழைத்தான்.“பண்டியல் வருதுல்லா. சின்ன அய்யா வீட்டுக்கு சாணி போட்டு மெழுகுணுமாம். யாரையாவது கூட்டிட்டு போயி அந்த வேலையை செஞ்சு முடிச்சிரு. வீட்டுல யாரும் இருக்க மாட்டாக. சமையக்கட்டு தொறந்து கெடக்கும். அது வழியா கூட்டிட்டுப்போ. மணி மூணு ஆவுது. எடை போடணும்னு நின்னுட்டிருக்காதே ரெண்டு பேருக்கும் நான் பேர் குடுத்துருதேன்.”

“யாரைக் கூட்டிட்டு போட்டும்”

“யாரையாவது” வெள்ளையன் அலட்சியமாக சொன்னான்.

வள்ளி அவளுக்கடுத்து கிள்ளிக் கொண்டிருந்தாள். “வள்ளியக் கூட்டிட்டு போட்டுமா?”

“சரி, கூட்டிட்டு போ”

சீனியம்மா வள்ளியை அழைத்தாள். “வா வள்ளி, சட்டுபுட்டுன்னு வேலைய முடிச்சுட்டு சீக்கிரம் வீட்டுக்கு போயிரலாம்.” வீட்டு வேலைக்கு அழைக்கப்படுவது அதுதான் முதல்முறை என்பதால் வள்ளி தயங்கினாள். பின்பு இன்னொரு பெண்ணும்கூட இருக்கிறாளென்ற தைரியத்தில் ஒப்புக் கொண்டாள்.

அவர்கள் பத்து நிமிடம் ஒத்தையடிப் பாதையில் நடந்து ஒரு தனித்திருந்த வீட்டிற்கு வந்து சேர்ந்தனர். அருகில் உள்ள பாடியே ஒரு பர்லாங் தொலைவில் இருந்தது. சுற்றிலும் மனித சஞ்சாரமே இல்லை. சீனியம் மாவுக்கு அந்த வீடு பழக்கமானது போல் தோன்றியது. அவள் நேராக

சமையலறைக்குச் சென்று கதவைத் தள்ளினாள். அந்த வீடு அளவில் சிறியதாக இருந்ததும், மிகக் குறைவான சாமான்களே காணப்பட்டதும் வள்ளிக்கு ஆச்சர்யமாக இருந்தது. சமையலறையைத் தவிர ஒரு அறையும், குளியலறையோடு இணைந்திருந்த ஒரு படுக்கை அறையும் தான் அந்த வீடு. படுக்கை அறையில் ஒரு மரக்கட்டிலும் ஒரு சிறிய மேசையும், நாற்காலியும் போடபப்பட்டிருந்தன. நடு அறை சாப்பிடும் அறையாகவும் பயன்படுத்தப்பட்டது. அங்கேயும் ஒரு மேசையையும், மூன்று முக்காலி களையும் தவிர வேறு ஒரு சாமானும் இல்லை. படுக்கையறையில் இரண்டு ட்ரங்க் பெட்டிகளும், சமையலறையில் சில மண் பானைகளும் இருந்தன. தரை முழுவதும் மண்ணைக் கொண்டே பூசப் பட்டிருந்தது. ஒரு பித்தளைப் பாத்திரம் கூடஇல்லாதது கண்டு வள்ளி தன் வியப்பை சீனியம் மாளிடம் வெளியிட்ட போது, "கல்யாணம் ஆகாத ஆள் தான. கல்யாணம் ஆச்சுன்னா பாத்திரம் பண்டமெல்லாம் பொண்டாட்டி கொண்டு வருவால்லா"

"வேலைக்கு ஒரு ஆள்கூட இல்ல போலருக்கு?"

"தனிக்கட்ட. வேலைக்காரன் எதுக்கு? யாராவது எஸ்டேட் கூலி வேலைய முடிச்சிட்டு அப்புறமா வந்து அவனுக்கு சமைச்சு தருவாங்க. ஏதாவது நல்ல நாளானா, அவனுக்கு மாட்டுக்கறி வேணும். நா வந்து ஆக்கித் தருவேன். உன்னோட பாடிக்கு அடுத்த பாடில இருக்கால்ல லட்சுமி அவளும் வந்து அடிக்கடி மாட்டுக்கறி ஆக்கித் தருவா. முதல்ல நம்ம வேலைய முடிச்சிட்டு கிளம்பலாம்." சொல்லிவிட்டு சீனியம்மா தான் கொண்டு வந்திருந்த சாணியை தண்ணீரில் கலக்கி மெழுகத் தொடங்கினாள். விரைவில் வேலையை முடித்துவிட்டு கிளம்ப வேண்டும் என்ற விருப்பத்துடன் வள்ளி அவளுக்கு உதவினாலும்கூட இங்கே வந்தது தவறோ என்ற எண்ணம் துளிர்விடத் தொடங்கியிருந்தது.

வேலை முடிக்கும் நேரத்தில் ஒரு ஆண் கூலி வந்து, வழக்கமாக சின்ன ஐயாவுக்கு சமைப்பவனுக்கு உடம்பு சரியில்லை; அவன் வரமாட்டான். அதனால இருவரும் இருந்து சமைத்துக் கொடுக்க வேண்டும் என்று சின்ன ஐயா விரும்புகிறார் என்று சீனியம்மாளிடம் சொன்னான். அதோடு சாமான் வைத்திருந்த பெட்டியின் சாவியையும் அவளிடம் கொடுத்துவிட்டு கிளம்பி போய் விட்டான். சீனியம்மா வள்ளியைப் பார்த்தாள்.

"என்னால முடியாது. நா ஒண்ணும் யாருக்கும் பொங்கிப் போட மாட்டேன்" வள்ளி அவசரமாக மறுத்தாள்.

“இதுக்கு எதுக்கு கோவப்படுத. நானும் உங்கூடதானே இருக்கேன். ரெண்டு பேரும் சேர்ந்து செஞ்சா ராவுக்கு முன்னாடி வேலைய முடிச்சிட்டு வீட்டுக்குப் போயிரலாம்லா.”

“நா மாட்டேன். எனக்கு பயமாயிருக்கு. நான் இருக்கமாட்டேன்.” ஜுர வேகத்தில் வள்ளி அதையே திரும்பத் திரும்ப சொல்லிக் கொண்டிருந்தாள்.”

“சின்ன ஐயா ஒண்ணும் உன்னக் கடிச்சு தின்னுற மாட்டான். அந்தப்புள்ள லட்சுமியப் பாரு. அவ காதுல கெடக்குல்லா கம்மலு. அது சொக்கத்தங்கம் தெரியுமா? எல்லாம் சின்ன ஐயா கொடுத்ததுதான். உங்கால்ல கொலுசு கூட இல்ல. லட்சுமி மாதிரி வெவரமா இருந்தா உனக்கும் தங்கத்தில் நகை கிடைக்கும்” சீனியம்மாள் எல்லாப் பாசாங்கையும் விட்டு விட்டு நேரடியாகப் பேசி வள்ளியைக் கரைக்க முயன்றாள்.

“லட்சுமி மாதிரி வெவரமான புள்ளங்களே எல்லா தங்கத்தையும் வெச்சுக்கிடட்டும். எனக்கு வேண்டா”

“இத பாரு. கிறுக்குத்தனமா பேசாதே. சின்ன ஐயாவுக்குக் கோவம் வந்தா அது உனக்கு நல்லதில்ல. மாடு மாதிரி வேல வாங்குவான். உன்னால சகிக்கவே முடியாத அளவுக்குத் தொல்ல வரும். சங்கரபாண்டியனும், வெள்ளையனும்கூட சேர்ந்துகிட்டு உன்ன ஒரு வழி பண்ணிடுவாக. நான் பத்து வருசமா எஸ்டேட்டுல இருக்கன். மேல இருக்கிறவங்க சொன்னபடி கேட்காத பொட்டபுள்ளங்க என்ன கதி ஆனாங்கன்னு எனக்குத் தெரியும்.” ஆசைகாட்டியது பலிக்காமல் போகவே சீனியம்மா மிரட்டலில் இறங்கினாள்.

“முருகன் காப்பாத்துவான்” சொல்லிவிட்டு வள்ளி சிட்டாகப் பாய்ந்தோடிப் போய்விட்டாள்.ராமாயி வேலை முடித்து வந்ததும் நடந்ததனைத்தையும் சொல்லி முடிக்கும்வரை அவளுக்குப் பதட்டம் தணியவில்லை.

“வெள்ளையன் உன்னை சீனியம்மாகூட அனுப்புனதப் பார்த்தப்பவே இந்த மாதிரி ஏதோ நடக்கப் போகுதுன்னு நெனச்சேன். சின்ன ஐயாவுக்கு இந்த மாதிரி காரியத்துக்கெல்லாம் அவதான் எடுபிடி. அந்த நேரத்துல என்னால ஒண்ணுமே செய்ய முடியல. சாக்கிரதையா இருன்னுகூடச் சொல்ல முடியல.” என்றாள் ராமாயி.

“இப்ப நா என்ன பண்றது? ஐயோ முருகா இந்த மாதிரி ஒரு எடத்துல வந்து மாட்டிட்டமே” வள்ளி கலங்கினாள்.

“உம்புருசன் வந்ததும் அவங்கிட்ட சொல்லிடு. ஆனா அவன் முரட்டுத்தனமா எதுவும் பண்ணிடாமப் பார்த்துக்கோ. எம்புருசன் கிட்டையும் சொல்லுதேன். அது நல்லபடியா ஏதாவது சொல்லும்.”

செய்தி கேள்விப்பட்டு கருப்பன் உடனே சென்று வெள்ளையனை உதைக்க வேண்டுமென்று துடித்தான். வள்ளியும் முத்தையாவும் சிரமப்பட்டு அவனைத் தடுத்து நிறுத்தினார்கள்.

“ஏலே கருப்பா உன் தலையில நீயே மண்ணை வாரி போட்டுக்காத. வெள்ளையனை அடிச்சிரலாம்னா நினைக்குதே. அப்படியே அவன் அசந்து மறந்திருக்கிறப்ப உதைச்சாலும் அடுத்த நிமிசம் என்ன ஆகும் தெரியுமா? கங்காணியோட ஆளுங்க கண்ணமூடி கண்ணத் தெறக்குறதுக்குள்ள உன்னோட எலும்ப எண்ணிடுவாங்க. மொதல்லேயே சொல்லியிருக்கேன். இங்க அவங்கபக்கம்தான் பலமிருக்குது. உன்னால ஒண்ணுமே செய்ய முடியாது. ஒண்ணும் தெரியாத மாதிரி நடந்துக்கோ. அதுதான் நல்லது. ஆனா சின்ன ஐயாவும், வெள்ளையனும் சில்லறைத் தொந்தரவு குடுத்துட்டுத்தான் இருப்பானுவ. வள்ளி எப்பவும் கவனமா இருக்கணும். வள்ளியைச் சீண்டிகிட்டு இருக்கதுல எந்த பிரயோசனம் இல்லன்னு இப்ப அந்த சின்ன ஐயாவுக்குத் தெரிஞ்சிருக்கும். கொஞ்ச நாளுல அவனே சலிச்சுப் போயி இவளத் தொல்ல பன்றத நிறுத்திருவான்.”

வள்ளியும் தொடர்ந்து கெஞ்சினாள். “இப்பத்தான் அவன் எதுக்கு அடி போடுதான்னு எனக்கு தெரிஞ்சு போச்சில்ல மாமா. இனி இந்த மாதிரி கோக்குமாக்குன்னு எடம் கொடுக்காம சாக்கிரதையா இருந்துக்குதேன்.”

தான் நினைப்பது நடக்காது என்று தெரிந்து கொண்டதும் கருப்பன் வாயே திறக்கவில்லை. முத்தையா எதிர்பார்த்தபடியே வெள்ளையனின் கோபம் வள்ளி மீது முழுவேகத்துடன் பாய்ந்தது. அவன் கையிலிருந்த தடி பலமுறை வள்ளியின் விரல்களை பதம் பார்த்தது. காரணமின்றி வள்ளி மீது வசைமாரி வேறு பொழிந்தான். பொங்கி வந்த கண்ணீரை அடக்கிக் கொண்டு அவள் அனைத்தையும் பொறுமையுடன் சகித்துக் கொண்டாள். உச்சகட்டமாக, மாலையில் சின்ன ஐயா அவளது இலைகளை தூக்கி எறிந்துவிட்டு பெயர் கொடுக்காமல் வீட்டுக்கு அனுப்பி விட்டான். வள்ளி எதுவுமே நடக்காதது போல வீட்டுக்குச் சென்றாள். நடந்ததைப் பற்றி கருப்பனிடம் மூச்சு விடவே இல்லை. அதிர்ஷ்டவசமாகச் சின்ன ஐயாவுக்கு உடம்பு சரியில்லாமல் போய் முடீஸுக்கு கொண்டு போகும்படி குரூப் உத்தரவிடும் அளவுக்கு நிலைமை மோசமானது. மேத்யூஸின் தாக்குதல்களிலிருந்து வள்ளிக்குக்

கொஞ்ச நாட்களுக்கு விடுதலை கிடைத்தது.

# 12

நான் தூங்காமல் விழித்திருக்கும்போது சில நேரங்களில் இந்தப் பிரம்மாண்டமான இடத்தின் தொலைதூர மூலைகளிலிருந்து வினோதமான ஓலங்களும் கூக்குரல்களும் ஒலிப்பதைக் கேட்கிறேன். அவை என்னவென்று எனக்குத் தெரியாது...

பிக்விக் பேப்பர்ஸ்
-சார்லஸ் டிக்கன்ஸ்

டிசம்பர் மாதம் பதினைந்தாம் தேதி சொன்னபடியே குரூப் தனது வீட்டில் விருந்து ஏற்பாடு செய்து விட்டிருந்தார். முதல்முதலாக வந்த அப்பாவு ‘தோத்தரம் அம்மா’ என்று திருமதி குரூப்பிற்கு மிகுந்த பணிவுடன் வணக்கம் செலுத்தினார்.

“உங்கள ஒண்ணும் நாங்க தொந்தரவு பண்ணலயே.”

“பார்ட்டின்னு குரூப் பறைஞ்சது. அதனால ஞான் எல்லா ஏற்பாடும் கரெக்ட்டா செஞ்சு வெச்சிருக்கு. நிங்களுக்கு ஒரு பெண் குட்டி பிறந்திருக்குன்னு ஞான் அறிஞ்சு நல்லாயிருக்கணும்” என்றாள் திருமதி குரூப். அவளொன்றும் அதிகம் படித்தவளல்ல என்றாலும் இனிமையாக உரையாடுவதில் தனித்தேர்ச்சி பெற்றிருந்தாள். அடுத்து ஹெட் கிளார்க் ஜான்சனும், பின்பு சாமிதாஸூம், மாணிக்கமும் வந்து சேர்ந்தார்கள். கடைசியில் குமரிமலை எஸ்டேட்டின் தலைமை டீ மேக்கர் மாசிலாமணியும், கழுகுமலை எஸ்டேட்டின் தலைமை குமாஸ்தா ஆறுமுகமும் வந்து சேர்ந்தார்கள்.

குரூப் முன்வந்து “பாரியா போறதுக்கு பர்மிஷன் தரணும்? திருமதி ஜான்சன் வீட்டிலும் பார்டியுண்டு” என்று விருந்தினர்களிடம் அனுமதி கேட்டார்.

அவள் சென்றதும் “இப்ப புரிஞ்சாச்சா ஈ வீட்டுக்கு ஆராணு முதலாளின்னு” என்று வெற்றிப் பெருமிதத்துடன் கேட்டார்.

“இதுல சந்தேகம் என்ன, நீங்கதான்.” அப்பாவு சிரித்துக் கொண்டே கூறினார். “டாக்டர் பொஞ்சாதியக் கூப்பிட்டதுக்கு ஜான்சன் பொஞ்சாதிக்கும் நன்றி சொல்லணும். இல்லாட்டி நாமெல்லாம் ஒழுங்கு மரியாதையா நடந்துக்க வேண்டியிருக்குமில்லா. கட்டுப்பெட்டியா இருந்தா எப்படி முழு சந்தோசம் கெடைக்கும்.”

“அப்படீன்னா எனக்கும் நன்றி சொல்லுங்க அண்ணே. என் வீட்டுக்கும் நான்தான் எசமானன். குரூப் சொன்னதுக்காக அவரு பொண்டாட்டிய என் வீட்டுக்கு விருந்துக்குக் கூப்பிட சொல்லி எம் பொஞ்சாதிக்கு நான்தான் உத்தரவு போட்டேன்.”

“இருக்கட்டும். டைம் வேஸ்ட் பண்ணண்டா, எல்லாரும் இருக்கி. யூ ஆர் ஆல் வெல்கம். நீங்கள் இவிட வந்ததில எனிக்கு வளர சந்தோஷமாணு. இப்ப ஆரம்பிக்கலாம். ராத்திரி முழுவனும் இருக்கு” என்று வரவேற்புரை வழங்கிவிட்டு குரூப் வேலைக்காரனை அழைத்து டேபிள் போடச் சொன்னார். அவர் தன் வாக்கை உண்மையிலேயே காப்பாற்றியிருந்தார். கடும் முயற்சி எடுத்து ஒரு அற்புதமான மாலை விருந்தைத் தயார் செய்திருந்தார். வறுத்த மாட்டுக்கறி, வேகவைத்த கோழிக்கறி, வறுத்த மீன் துண்டுகள், பிராந்தி மற்றும் பீர் பாட்டில்கள் அனைத்தும் மேஜை மீது பரப் வைக்கப்பட்டிருந்தன. “முதலில் பீர் குடிப்போம்” என்று வீட்டுக்காரர் சொல்லிவிட்டு வேலையாளின் உதவியோடு பாட்டில்களைத் திறந்தார்.

“அற்புதம் டாக்டர், அற்புதம்.” அப்பாவு உற்சாகமாக குரூப்பின் முதுகில் தட்டினார். சிரிப்பும் கும்மாளமுமாக விருந்து சூடு பிடித்தது.

“இவிட வரு. சிலோன் விவகாரத்தை எல்லாம் பறையணும்.” குரூப் அப்பாவுவிடம் சொல்லிவிட்டு மற்றவர்களைப் பார்த்து கண்ணடித்தார்.

“நா சொல்லப்போற கதையக் கேட்டு உங்க முடி நட்டுகிட்டு நிற்கப் போகுது பாருங்க.”

“ரைட்டோ” மற்றவர்கள் கோரஸாக உற்சாகப்படுத்தினார்கள்.

அப்பாவு ஒரு பெக் பிராந்தியால் தனது மூளையை கூர்மைப்படுத்திக் கொண்டு தனது வீரசாகசக் கதையைச் சொல்லத் தொடங்கினார். “அப்ப நான் சிலோனில பிரைட் ஃபீல்ட் எஸ்டேட்டில தலைமை குமாஸ்தாவா இருந்தேன். அது எண்ணூறு ஏக்கர் இருக்கும்.

மேனேஜர் பேரு பிளாக்கி. முப்பது வயசு. கல்யாணம் ஆகாதபய. அஸிஸ்டண்ட் மேனேஜர் இருக்க வேண்டிய பங்களாவிலதான் அவன் இருந்தான்.

மேனேஜருக்குன்னே ஒரு பெரிய பங்களா சுத்தி நிறைய இடத்தோட இருந்தது. ஆனா அது அஞ்சு வருசமா மூடிக்கிடந்தது. ஆறு வருசத்துக்கு முன்னாடி அந்த பங்களாவில ஒரு கெட்ட சம்பவம் நடந்து போச்சு. அப்ப இருந்த மேனேஜர் பிரௌனை இன்னொரு வெள்ளைக்கார மேனேஜர் சுட்டுக் கொன்னுட்டான். ஹன்டர் தன்னோட மனைவி பிரௌனோட

படுக்கைல இருக்கிறதப் பார்த்ததினால இந்த மாதிரி பண்ணிட்டான். அதுக்கப்புறம் ஆறு மாசமா பங்களா பூட்டி தான் கிடந்தது. அப்புறம் புது மேனேஜர் பிளாக் ஸ்மித் அங்கன குடி வந்தார். ஒரே மாசத்துல படுக்கையில அவர் செத்துக் கிடந்தாரு. வேலக்காரங்க கொஞ்ச நாளா யாரோ புலம்பற மாதிரியும், விம்மி அழுகிற மாதிரியும் ராத்திரி நேரங்களில் விசித்திரமான சத்தம் கேக்குதுன்னு சொல்லிட்டே இருந்தாங்க. சீக்கிரத்திலயே பிரௌனோட ஆவிதான் பிளாக் ஸ்மித்தை கொன்னுருச்சின்னு வதந்தி பரவிடுச்சு. அடுத்து வந்த மேனேஜரோட பொஞ்சாதி அங்க குடியேற மாட்டவே மாட்டேன்னுட்டதால பங்களாவை இழுத்துப் பூட்டிட்டாங்க. மானேஜரும், அவர் பொஞ்சாதியும் அங்கிருந்த வரைக்கும், அஸிஸ்டென்டோட சின்ன பங்களாவிலதான் இருந்தாங்க. அதுக்கப்புறம் வந்த மேனேஜர் பிளாக்கிக்கு அந்த சின்ன பங்களா புடிக்கவேயில்ல. ஒருநாள் அவன் என்னக் கூப்பிட்டு “இந்தாப்பா அப்பாவு, இந்த பங்களா எனக்கு ரொம்பச் சின்னதா இருக்கு. சீக்கிரத்தில எனக்குக் கல்யாணம் ஆயிடும். அப்புறம் இங்கே இருக்கவே முடியாது. பூட்டிக் கிடக்கிற மேனேஜர் பங்களா ரொம்பப் பெரிசா விசாலமான இடத்தோட இருக்கு. அங்க போயிடலாம்னு நான் ஆசப் படறேன். ஆனா என்னோட வேலைக்காரங்க அங்க வரவே மாட்டேங்கிறாங்க. அங்க ஏதோ பேயிருக்குங்கிறாங்க. எனக்கு அதில எல்லாம் நம்பிக்கை இல்ல. அங்க போயி ஒரு நாலஞ்சு ராத்திரிக்கு தூங்கலாமின்னு நினைக்கிறேன். அப்பத்தான் பேய், பிசாசு எதுவும் இல்லைன்னு அவங்களுக்குக் காட்ட முடியும். நீ எங்கூட வர்றியா? ஜெயதிலகாவையும் கூட்டிட்டு போலாம். அவன் நல்ல வேட்டைக்காரன் தெரியுமா? மனுஷனுக்கும் பயப்பட மாட்டான். சாத்தானுக்கும் பயப்பட மாட்டான். துப்பாக்கிகளையும் எடுத்திட்டு போலாம். பயமில்லைன்னா என்னோட வா என்ன சொல்ற?” என்று கேட்டான். நான் கண்டிப்பா வரேன்னு சொல்லிட்டேன்.

சனிக்கிழமை ராத்திரி பிளாக்கி கூட பங்களாவுக்கு ஜெயதில காவும் நானும் போனோம். காலையில ஆளுகள வெச்சு பங்களாவ நல்லா கழுவித் துடைச்சு வெச்சிருந்தேன். நடு அறையில உட்கார்ந்து கவனிக்கணுமின்னு பிளாக்கி சொல்லியிருந்தான். பிளாக்கிக்குத் தூக்கம் வந்தாதூங்கறக்காக ஒரு பெட்டையும் அங்கே கொண்டு வந்து போட்டிருந்தேன். நானும் ஜெயதிலகாவும் ஆளுக்கொரு சோஃபால உட்கார்ந்திருந்தோம். எல்லா கரண்ட் லைட்டுகளையும் போட்டு வெச்சிருந்தோம். துப்பாக்கி களையும் குண்டு போட்டு பக்கத்திலயே வெச்சிருந்தோம். நிறைய சாண்ட் விச் பீர், பிராந்தின்னு எல்லா

ஏற்பாடும் சரியா இருந்துச்சு. நடு ராத்திரி ஆச்சு. ஒண்ணுமே நடக்கல. இன்னும் ஒரு மணி நேரமாச்சு. அப்பவும் ஒண்ணும் நடக்கல.

பெக் பெக்கா உள்ள தள்ளிட்டிருந்த பிளாக்கி தூங்கி விழத்தொடங்கினான். அவனைத் தூங்கச் சொல்லிட்டு நாங்க கண்காணிச்சிட்டு இருந்தோம். ரெண்டு மணி ஆயிருச்சி. பிளாக்கி தூங்கின உடனே தைரியமா பிராந்தியை ஒரு பிடிபிடிச்சிட்டு இருந்த ஜெயதிலகாவும் குறட்டைவிடத் தொடங்கிட்டான். திடீருன்னு... இரத்தத்தையே உறைய வெக்கிறமாதிரி ஒரு ஓலம்... பங்களாவுக்குள்ள எங்கிருந்தோ வருது. யாரோ கதவை இடிச்சு உதைக்கிற மாதிரி சத்தம் வேற கேட்க அந்த நிமிசம் எந்திரிச்சிட் டேன். பிளாக்கியும்தான். நாங்க மூணு பேரும் எங்க துப்பாக்கிகளோட அடுத்த ரூமுக்குப் போய்ப் பார்த்தோம். ஒண்ணையும் காணோம். "ஒவ்வொரு அறையாப் போய்த்தேடலாம்" என்றான் பிளாக்கி. நாங்க எல்லா ரூமையும் திறந்து உள்ளே தேடிப் பார்த்துட்டோம். ஆனா அங்கே ஒண்ணையும் கண்டுபிடிக்க முடியல. என்னோட வாழ்க்கையில இப்படி ஒரு பயங்கரமான ஓலத்தை கேட்டதேயில்லைன்னு ஜெயதிலகாவே சொல்லிட்டான்.

நாங்க கேட்ட சத்தம் பயந்து அலர்ற சத்தமா, கோபத்துல போட்ட பேய்க் கூச்சலான்னு என்னால புரிஞ்சுக்கவே முடியல. ஆனா ஜெயதிலகா சொன்னதைப் போல பயங்கரமான சத்தம்தான். "நானும் அதை நம்பறேன்" என்றான் பிளாக்கி, "அவ்வளவு நல்லாத் தூங்கிட்டு இருக்கும் போதுகூட அந்த சத்தம் என்னை எழுப்பிடுச்சு". வெளியே போய் பங்களாவை சுத்திப் பார்க்கலாம்னான். நாங்க எல்லாரும் வெளியே போனோம். பங்களாவ ரெண்டு தடவை சுத்தி வந்துட்டோம். மூணு மணிக்குத் திரும்பவும் அந்த அறைக்கு வந்து அஞ்சு மணி வரைக்கும் உட்கார்ந்திட்டு இருந்தோம். கண்ணில இருந்த தூக்கமெல்லாம் மாயமா மறைஞ்சு போச்சு. ஒருவேளை இங்க பேய் இருந்துச்சுன்னா அது இப்ப ஓய்வெடுக்க போயிருக்கும். நாமும் நம்ம வீட்டுக்குப் போய் ஏதாவது தூக்கம் வருதான்னு பார்க்கலாம். திரும்பவும் ராத்திரி பத்து மணிக்கு வந்து என்ன ஆகுதுன்னு பாக்கலாம்னு பிளாக்கி சொன்னதால நாங்க கௌம்பிட்டோம். அடுத்த நாள் ராவுல நாங்க மூணு பேரும் திருப்பியும் உட்கார்ந்து பேய் வருதான்னு காத்திட்டிருந்தோம். ஒரு மணிக்கு பிளாக்கிக்கு தூக்கம் ஆட்டத்தொடங்கிடுச்சு. 'ஏதாவது சத்தம் வந்தா, ஏடா கூடமா நடந்தா மரியாதை எதுவும் பார்க்க வேண்டாம். சும்மா ஒரு தட்டு தட்டி உடனே என்னை எழுப்பு' என்று சொல்லிவிட்டுப் படுக்கப் போனான். பிளாக்கி படுத்ததும் ஜெயதிலகா

பிராந்தி பாட்டில் மேல பாஞ்சுட்டான். அது காலியானதும்குறட்டை விடத் தொடங்கினான். திடீரென்று எல்லா லைட்டும் போயிடுச்சு. கும்மிருட்டு. ஒண்ணுமே தெரியல. ‘எந்திரிங்க’ நான் கத்தினேன். பிளாக்கியும் ஜெயதிலகாவும் துள்ளி எழுந்திரிச்சாங்க. என்னோ டார்ச் லைட் அடிச்சேன். திடீரென்று சாப்பாட்டு அறைக்குப் பக்கத்தில எங்கிருந்தோ பயங்கரமான ஒரு பேய்க் கூச்சல். டார்ச் லைட் அடிச்சிட்டு அங்கே ஓடினோம். அந்த டைனிங் ரூம் கதவைத் திறக்கமுடியல. திறக்க முயற்சி பண்ணும் போது திடீரென்று துப்பாக்கி சுடுற சத்தமும் ஐயோன்னு வேதனையோட முனகற சத்தமும் தெளிவாகக் கேட்டுச்சு. ஒரு நிமிஷம் ஊசி விழுந்தாக்கூட கேக்கற அமைதி. திரும்பவும் அதே முனகல். ‘ஐயோ’ அப்புறம் மரணம் மாதிரி திரும்பவும் அமைதி. எங்க முடியெல்லாம் சிலுத்துக்கிட்டு நிக்குது. பிளாக்கிகூட ஆடிப் போயிட்டான். அப்புறம் சுதாரிச்சிட்டு வெளியே போய், பங்களாவை சுத்தி வந்து ‘டைனிங் ரூமுக்குள்ள நுழையப் பார்க்கலாம்’ என்று கத்தினான். நாங்க எங்க டார்ச் லைட்டுகளால இருட்டைக் குத்திக் கிழிச்சுட்டு ஓடினோம். ஒண்ணையும் கண்டுபிடிக்க முடியல. அப்புறம் பிளாக்கி துப்பாக்கியோட கைப்பிடியினால அந்த ரூம் சன்னலை உடைச்சு ரெண்டு தடவை சுட்டுட்டு உள்ளே குதிச்சான். நாங்களும் பின்னாடியே குதிச்சு ஒவ்வொரு ரூமாத் தேடினோம்.

துப்பாக்கி சுடறதையும் ரகளையும் கேட்டு ஏதோ பிரச்சினை என்று நினைச்சிட்டு பக்கத்துக் கூலி லைனுக்குப் போயி கொஞ்சம் பேரைக் கூட்டிட்டு வந்திருக்கான். நாங்க மயக்கமாகக் கிடந்தோம். அப்படி இப்படின்னு நெறய கதைக பரவிடுச்சு.

‘நம்ம நிலைமை மோசமாகிடுச்சு இனிமே ஒரு வேலக்காரனும் இங்க வேல செய்ய வரமாட்டான். கொஞ்ச நாளைக்கு இதைப் பூட்டி வெச்சிட்டு திரும்பவும் முயற்சி பண்ணிப் பார்க்கலாம்னு சொல்லிட்டான் பிளாக்கி. அப்புறம் அந்த பங்களாவை இழுத்துப் பூட்டிட்டாங்க. நா இந்தியா வரவரைக்கும் அது பூட்டியே கிடந்தது.’ என்று அப்பாவு தன் நீண்ட கதையை முடித்தார்.

“நீங்க ஒண்ணும் கயிறு திரிக்கலையே” அவநம்பிக்கையுடன் கேட்டார் குரூப். “சத்தியமா சொல்லுதேன். இது உண்மையிலேயே நடந்ததுதான்”

“எனக்குப் பேய் பிசாசுகளில நம்பிக்கை இல்லை.” என்றான் ஜான்சன்.

“எனக்குந்தான்.” சாமிதாஸ் வழிமொழிந்தான்.

“இந்த மாதிரி ஒரு கதையை இன்னிக்கு நாம கேட்டது ஆச்சரியந்தான்.

நேத்து நம்ம எஸ்டேட்டில என்ன நடந்திச்சுன்னு சொல்லட்டுமா?" என்று குரூப் தொடங்கினார்.

"நம்ம எஸ்டேட்டிலையா?" கேட்டான் ஜான்சன்.

"ஆமா நேத்து ஏழு மணியிருக்கும். அப்பத்தான் ஒரு பேஷன்ட நோக்கனும்னு மெடிக்கல் கூலி கூப்பிட்டது. ஆயாளுக்கு கொஞ்சம் மருந்தைக் கொடுத்திட்டு திரும்பறேன். ஸ்டோர் கீப்பர் ரொஸாரியோ தலைதெறிக்க ஓடிவந்து என் கால்கிட்ட விழுந்துச்சு. படுக்கையில் படுக்க வெச்சு ஒரு ஊசி போட்டு கஷ்டப்பட்டு கொஞ்சம் பிராந்திய வாயில ஊத்திவிட்டது. அப்புறம்தான் அவனுக்கு சுயநினைவு வந்துச்சு. பயங்கரமா பெருமூச்சு விட்டிட்டிருந்தான். கண்ணு மட்டும் பயத்துல ரூமைச் சுத்திச்சுத்தி பாக்குது. இன்னும் கொஞ்சம் பிராந்தி குடுத்த பின்னாடி உளறி உளறி பறஞ்சது" என்று கூறிவிட்டு அவன் சொன்னதை குரூப் விவரித்தார்.

அவன் மாலையில் வேலை முடிந்த பின்பு காலாறக் கொஞ்சம் நடக்கலாமென்று கிளம்பினானாம். கடை, லைன்கள், சுடுகாடு எல்லாவற்றையும் கடந்து மலைப்பாதைக்கே சென்று விட்டானாம். அப்போது காட்டிலிருந்து நிறையக் கூலிகள் விறகு வெட்டிக் கொண்டு திரும்பிக் கொண்டிருந்தார்களாம். அப்போது நல்ல வெளிச்சம் இருந்ததாம். ஏதோ விசித்திரமான சத்தம் கேட்டு நிமிர்ந்து பார்த்தால் கழுகு அளவிற்குப் பெரிய பறவை ஒன்று பிரம்மாண்டமான மஞ்சள் நிற அலகோடு ஒரு மரத்தின் மேல் உட்கார்ந்திருந்ததாம். அது அலகைத் திறந்து திறந்து மூடும் போதுதான் அந்த விசித்திரமான சத்தம் வந்து கொண்டிருந்ததாம். அந்தப் பறவையை அதற்கு முன்பு அவன் பார்த்ததேயில்லை என்பதால் ஆச்சரியமடைந்து அதைப் பார்த்துக் கொண்டே நின்று விட்டானாம். திடீரென்று அந்தப் பறவை படபடவெனச் சிறகடித்துப் பறந்து சுமார் ஒரு பர்லாங் தூரம் சென்று இன்னொரு மரத்தின்மேல் உட்கார்ந்து கொண்டதாம். இவனும் பிரம்மித்துப் போய் ஏதோ மந்திரத்தால் இழுக்கப்பட்டவன்போல் அதன் பின்னாலேயே போனானாம். அதுவும் ஓரிடத்தில் நிற்காமல் கிளைக்குக் கிளை தாவிப் போய்க்கொண்டே இருந்ததாம். திடீரென்று அது அவன் பார்வையிலிருந்து மறைந்து விட்டதாம். அப்போதுதான் சூரியன் மறைந்து விட்டதென்பதும், இருட்டாகி விட்டிருக்கிறதென்பதும் அவனுக்கு உறைத்ததாம். தன்னந்தனியாகத் தான் மலைப்பாதையில் நின்று கொண்டிருப்பதை உணர்ந்து பயந்து போய் திரும்பி ஓடிவரத் தொடங்கினானாம். சுடுகாட்டுக்குப் பக்கத்தில் வரும்போது நாலைந்தடி தொலைவில் என்ன இருக்கிறதென்றே தெரியாத அளவிற்கு

மையிருட்டாகி விட்டதாம். இரண்டு பக்கமும் வரிசை வரிசையாகப் புதை குழிகள். எங்கும் மனித சஞ்சாரமேயில்லை. அவனுக்குப் பயத்தில் நெஞ்சே வெடித்துவிடும் போலாகி விட்டதாம். பாதைக்கு வெகு அருகே ஒரு புத்தம் புதிய புதைகுழி தெரிந்ததாம். ஏதோவொரு உந்துதலில் பக்கத்தில் போய்ப் பார்த்தானாம். அதன்மீது ஒரு பிணம் கிடத்தப்பட்டிருந்ததாம். முகத்தைத் தவிர அதன் உடல் முழுவதும் ஒரு வெள்ளை வெளேரென்ற துணியால் போர்த்தப்பட்டிருந்ததாம். பிணம் ஒரு மஞ்சள் நிற மாலை வேறு அணிந்திருந்ததாம். அவ்வளவுதான். அதற்கப்புறம் என்ன நடந்ததென்பதே அவனுக்குத் தெரியாதாம். எதுவுமே அவனுக்கு நினைவில்லையாம். குரூப் மெடிக்கல் கூலியின் துணையோடு அவனை வீட்டுக்கு அனுப்பி வைத்தாராம். மறுநாள் அவனுக்கு பயங்கரக் காய்ச்சல் வந்துவிட்டதாம். இரவெல்லாம் தூங்கவேயில்லையாம். உளறிக் கொண்டேயிருந்தானாம்.

“அந்த எடத்தில ஏதாவது கல்லறை இருக்குதா?” சாமிதாஸ் கேட்டான்.

“போனவாரம் சுப்பையான்னு ஒருத்தன் நிமோனியாவால செத்தான். அது அவனோட கல்லறையாத்தான் இருக்கணும்.”

“ஆமா, அப்படித்தான் இருக்கும்” என்றார் அப்பாவு. “ரோட்டுக்கு ரொம்பப் பக்கத்தில அவனை அடக்கம் பண்ணியிருக்காங்க. நான் இன்னைக்குக் காலைல அந்த வழியாப் போகும்போது அந்தக் கல்லறை மேல மாலைகள் இருந்ததைப் பார்த்தேன்.”

“அப்போ அவன் மாலையைப் பத்திச் சொன்னது கற்பனை இல்லை” என்றான் ஜான்சன், “மீதியெல்லாம் அவனோட கற்பனையாத்தான் இருக்கும்.”

“யாருக்குத் தெரியும்” என்றார் குரூப்.

“ஆ! இந்த மாட்டுக்கறி நிஜமாவே ரொம்ப நல்லாயிருக்கு.” சாமிதாஸ் பேச்சை மாற்ற விரும்பியது தெரிந்தது.

“டாக்டர் மாட்டுக்கறி சமைக்க உங்க பொஞ்சாதி எதுவும் சொல்லலையா? மாணிக்கம் கேட்டான்.

“நான்தான் இந்த வீட்டோட எசமானன் என்று அப்பவே பறஞ்ஞில்லே.” குரூப் கம்பீரத்துடன் மொழிந்தார்.

“ஆனா நா அப்படியில்லப்பா. நான் மாட்டுக்கறி திங்கற விசயமெல்லாம் எம் பொஞ்சாதிக்குத் தெரியாது. தெரிஞ்சா அவ்வளவு தான்.” அப்பாவு போதையில் உண்மையை ஒப்புக் கொண்டார்.

“சைவம் சாப்பிடறவங்க மாட்டுக்கறியை வெறுத்தாங்கன்னா அதை என்னால புரிஞ்சுக்க முடியுது. ஆனா அசைவம் சாப்பிடறவங்க மாட்டுக்கறியை ஒதுக்கறதைத்தான் என்னால புரிஞ்சுக்கவே முடியல.”

“சைவம் சாப்பிடறவங்க எல்லா வகையான பழங்களையும், கீரைகளையும் சாப்பிடறதில்லை. குறிப்பிட்ட பழங்களையும், கீரைகளையும் மட்டும்தான் சாப்பிடறாங்க. அதேபோல அசைவம் சாப்பிடறவங்க குறிப்பிட்ட சில வகைக் கறிகளை மட்டுமே சாப்பிடறாங்க. எந்த வகைக்குப் பழக்கப்பட்டிருக்காங்களோ அதை மட்டுமே சாப்பிடறாங்க. சிலோனிலதான் நான் மாட்டுக்கறி சாப்பிடப் பழகினேன். அங்க போற துக்கு முன்னாடி வரைக்கும் நான் அதைத் தொட்டதே இல்லை. எங்க கிராமத்தில யாருமே மாட்டுக்கறி சாப்பிட மாட்டாங்க அதனால லீவுல ஊருக்குப் போகும் போதெல்லாம் நானும் மாட்டுக்கறியை வெறுக்கற மாதிரி நடிச்சிருவேன்” என்றார் அப்பாவு.

“வடக்கு டிவிசனில் இருக்கிற கோபாலனைத் தெரியுமா” அந்தப் பிச்சைக்காரப் பய கல்யாணம் ஆகிற வரைக்கும், தான் சைவம்னே நடிச்சிருக்கான். கல்யாணம் ஆனப்பறம் நான் அவனையும், அவன் பொஞ்சாதியையும் விருந்துக்குக் கூப்பிடலாம்னு ஆசைப்பட்டேன். ஆனா அவன் வேண்டாம் என்று கெஞ்ச ஆரம்பிச்சுட்டான். ஏன்னா அவனுடைய பொஞ்சாதி ரொம்ப வைதீகமானவங்கிறதால கறி சமைக்கிற வீட்டில சாப்பிடமாட்டாளாம்” ஜான்சன் சொன்னான்.

“அந்தப் பிச்சைக்காரன் கல்யாணத்துக்கு முன்னாடி ஒரு சக்கிலிப் பொம்பளைய வச்சிட்டிருந்ததையும், அவ கருவாட்டுக் குழம்பும், மாட்டுக்கறியுமா அவனுக்குப் பொங்கிப்போட்டதையும் அவன் பொஞ்சாதிகிட்ட சொல்லலையா?” மாசிலாமணி கேட்டான்.

“இப்ப எதுக்கு அது? அது சரியில்லேல்லா” உன் பொஞ்சாதிகிட்ட நீ கல்யாணத்துக்கு முன்னாடி பண்ணின அக்கிரமங்களைப் பத்தி யாராவது சொன்னா உனக்கு எப்படியிருக்கும்? அவங்க குடும்ப சந்தோஷத்தை நாம ஏன் கெடுக்கணும்?” என்றார் அப்பாவு.

“கரெக்டா பிரதர். அதுதான் சரி” என்றார் குரூப். “அப்புறம் அந்த பொம்பளையோட பேர மறந்திட்டேன்.”

“அன்னத்தாய்.”

“எந்தூர்க்காரி?”

“தெல்லிசேரிக்குப் பக்கத்தில ஒரு கிராமம். எனக்கு அவளுடைய குடும்பத்தைப் பற்றி தெரியும்” என்றார் குரூப்.

“அவளைப் பத்தி இன்னொரு வேடிக்கையான விஷயம் கேள்விப்பட்டேன்” அப்பாவு தொடங்கினார். “அவன் பொஞ்சாதியோட ஊரிலிருந்து திரும்பி வந்தவுடனே சில மேஸ்திரிங்க பரிசுப் பொருளெல்லாம் வாங்கிட்டு பார்க்கப் போனாங்களாம். அவனோட பொஞ்சாதி மண் சொம்பில காப்பியும், கொஞ்சம் தேங்காய்த் தொட்டிகளையும் கொண்டு வந்து தரையில வெச்சுட்டு போயிட்டாளாம்.”

“அவங்க என்ன பண்ணினாங்க?” மாசிலாமணி கேட்டான்.

“அவங்க தேங்காய்த் தொட்டிகளை விட்டுட்டு காப்பியைக் குடிச்சிட்டாங்க”

“அவங்க அந்த காப்பியையும், சொம்பையும் அவ முகத்தில விட்டெறிஞ்சிருக்கணும்” வெறுப்புடன் சொன்னான் ஆறுமுகம்.

“இதபாரு அவ கிராமத்துப் பழக்கத்ததான் செஞ்சிருக்கா. அங்கே கீழ் சாதிக்காரங்களை இப்படித்தான் நடத்துவாங்க.”

“அம்மணியையும் அவளோட புல்-ஐயும் பத்தி ஏதாவது செய்தி இருக்கா?” அப்பாவுக்குப் போதையேறிக் கொண்டிருப்பது தெரிந்தது. “அம்மிணியும் காளையும் பின்னிப்பிணைஞ்சு இருந்தப்போ, வொய்ட் வந்ததினாலே எப்படிக் காளை அம்மணியை அலமாரிக்குள்ள தள்ளி பூட்டினாருங்கிறதான் எஸ்டேட் முழுக்கப் பேச்சா இருக்கு...”

“தலையைத் தொங்கப் போட்டுட்டு சுத்திகிட்டு இருக்காளா?”

“இந்த மாதிரி பொம்பளைங்க இதுக்கெல்லாம் வெட்கப்படமாட்டாங்க. பணத்தைப் பத்தி மட்டும்தான் கவலைப்படுவாங்க. புல்லோட தனக்கு இருக்கிற தொடர்பு எல்லாருக்கும் தெரிஞ்சிருச்சுன்னு அவ சந்தோசப்பட்டாலும் படுவா. அப்பத்தானே காரியம் ஆகணுமின்னு நினைக்கிறவங்க பணம், பரிசுகளோட அவளைப் போய் பார்ப்பாங்க. நல்லா சம்பாதிக்கலாம். ஆனா சொந்த ஊருக்குப் போகும்போது பார்க்கணுமே. அப்படியே பத்தி மயமா பாசமான புருஷனோட தவறாம சர்ச்சுக்குப் போயி, வீட்டில் ஜெபக்கூட்டம் நடத்திப் பாவத்தைக் கழுவுறதுக்கு சர்ச்சுக்குக் கொஞ்சம் பணமும் கொடுத்துட்டாப் போதும். தங்கமான கற்புக்கரசின்னு எல்லாரும் சொல்லிருவாங்கல்லா” என்றான் சாமிதாஸ்.

“சர்ச்சுக்குப் போறதைப்பத்தித் தம்பிக்கு எல்லாமே தெரியும் போல இருக்கு. சொந்த அனுபவத்திலிருந்து பேசறார் போல” மாணிக்கம் கிண்டலாகச் சொன்னான்.

“பாருங்க. நா எப்பவாவதுதான் சர்ச்சுக்குப் போவேன். எனக்கு அதற்குத் தகுதியில்லைன்னு தெரியும். அதனால பெருசா அலட்டிக்கிறதில்ல. உங்கள மாதிரி இல்ல. டாக்டர், உங்களுக்குத் தெரியுமா? மாணிக்கம் அண்ணாச்சி ஒவ்வொரு கிறிஸ்மஸுக்கும் கரோல் பார்ட்டியும், தீப்பந்த ஊர்வலமும் நடத்திட்டிருக்காரு.”

“இல்லையே, தெரியாதே” என்றார் குரூப். “சரி, இந்த கிறிஸ்மஸுக்கு அவரோட எஸ்டேட்டுக்குப் போய்ப் பாருங்க. மாணிக்க அண்ணாச்சி கரோல் பாட்டுப் பாடிட்டு தீப்பந்த ஊர்வலத்துக்கு முன்னாடி போயிட்டிருப்பாரு. பின்னாடி போய் பார்த்தீங்கன்னா அண்ணாச்சி மேடை மேல நின்னு உள்ளத்தை உருக்குற மாதிரி பிரசங்கம் பண்ணுவார். பக்கத்துல போய் பார்த்தாத்தான் அண்ணாச்சி மூக்குமுட்டக் குடிச்சிருக்கறது தெரியும்.” சாமிதாஸ் விழுந்து விழுந்து சிரித்தான்.

குரூப் அதை ரசிக்கவில்லை. “பேச்சை வளர்த்தண்டா, அப்பாவு அண்ணாச்சி ஒரு பாட்டு பாடட்டே.”

“கூச்சப்படாதேங்கண்ணே, பாடுங்க, பாடுங்க” என்று எல்லோரும் உற்சாகப்படுத்தினார்கள்.

அப்பாவு தள்ளாடி எழுந்து ஒரு கையில் பாட்டிலைப் பிடித்துக் கொண்டே பாடினார்.

“சீமைக்குப் போகிறேன் அன்பே மீனாட்சி,
போனாலோ வரமாட்டேன்”
அவ பார்த்தா, பெருமூச்சு விட்டா,
குனிஞ்சு பதில் சொன்னா.
“துரை, நான் செத்துப்போவேன்”
“சீமைக்குப் போனாலோ அன்பே
மீனாட்சி நான் உன்னை ஆதரிப்பேன்”
அவபார்த்தா, பெருமூச்சு விட்டா,
குனிஞ்சு சொன்னா
“தொரை, நான் செத்துப்போவேன்”

அப்பாவு முடிப்பதற்கு முன்பே இடிமுழக்கம் போல கைத் தட்டல் எழுந்தது.

“அழ்புதம், அழ்புத் அள்ளாச்சி,” குரூப் குளறி குளறிக் கொஞ்சினார்.

“வெள்ளக்கார துரைங்க எப்படி டான்ஸ் ஆடுதாங்கன்னு உங்களுக்குக் காட்டுதேன்” அப்பாவு மாசிலாமணியைப் பிடித்து இழுத்து இடுப்பைச்

சுற்றி கைபோட்டுக் கொண்டு அறை முழுக்கவும் சுற்றி வந்தார். மற்றவர்கள் கைதட்டலுக்கு ஏற்றவகையில் காலால் தாளம் போட்டார்.

“அழ்புத், எக்ஜலண்ட், தங்கமான அண்ணாச்சி, உடம்பு நல்லா இருக்கணுங்கிறதுக்காகக் குடிக்கிறேன்.” குரூப் இன்னொரு டம்ளரை எடுக்க முயன்று தவறிக் கீழே விழுந்துவிட்டார்.

“எங்கூடவும் டான்ஸ் ஆடு அன்பே” குரூப் தடுமாறி எழுந்து அப்பாவுவைக் கட்டிப் பிடித்துக் கொண்டு பின்பு தொப்பென்று விழுந்தார்.

அப்பாவுவும் சாமிதாஸும் அவரை எழுப்பி ஒரு நாற்காலியில் உட்காரச் செய்தனர்.

“குரூப் அண்ணாச்சியைப் படுக்க வெச்சிட்டு கிளம்பிடலாம்”சொல்லிவிட்டு ஜான்ஸன், ஆறுமுகத்தோடு சேர்ந்து குரூப்பைப் படுக்கை அறைக்கு அழைத்துச் சென்றான். குடிபோதையில் இருந்த மாசிலாமணி “டான்ஸ் புரூடர் பார் வெரிகுட் டின்னர்” என்றான். உளறிக்கொண்டே குரூப் தூங்கிவிட்டார்.

மற்றவர்கள் அப்பாவுவின் வீட்டில் தூங்குவது என்று முடிவு செய்ததால் ஒருவர் கையை ஒருவர் பிடித்துக் கொண்டு உல்லாசமாக நடந்து சென்றனர்.

அப்பாவு பாடினார், “ஜான் பிரௌனோட விஸ்கி பாட்டில் காலியாயிருக்கு செல்ஃபில ஜான் பிரௌனோட விஸ்கி பாட்டில் காலியாயிருக்கு செல்ஃபில..., அவ ஆத்மா முன்னேறி முன்னேறிப் போயிட்டிருக்கு குளோரி குளோரி அல்லேலூயா குளோரி குளோரி அல்லேலூயா.” “அவன் ஆத்துமா முன்னேறி முன்னேறிப் போயி ட்டிருக்கு”

பார்ட்டிக்கு மறுநாள் மாலை அப்பாவுவை ஜான்சன் சந்தித்து அவர் சொன்ன பேய்க் கதையைப் பற்றி விசாரித்தான். “எல்லாம் நீங்க திரிச்ச சரடுதானே.”

“இல்லில்லை நெசக்கதைதான்.”

“பொய் சொல்லாதீங்க அண்ணாச்சி. கதை தானே?”

“கதை உண்மைதான். ஆனா பேய் மட்டும் எப்படி வந்திச்சுங்கிறதுலதான் விஷயமே இருக்கு. என்னைக் காட்டித் தரமாட்டேன்னு சத்தியம் பண்ணினா சொல்றேன்.”

“ஆண்டவன் மேல சத்தியமா யார்கிட்டயும் சொல்ல மாட்டேன்.”

“பேய் வீடு, நாங்க அங்கே போனது எல்லாமே நெசந்தான். ஆனா ஓலம் போட்டதும், பயமுறுத்தினதும் பேயில்லை. என்னோட நண்பன் ஃபிலிப் குணவர்த்தனே. அவந்தான் அந்த பங்களா இருந்த டிவிசனுக்கு ஹெட் கிளார்க்கா இருந்தான். ராத்திரி நேரத்துல பொம்பளைப் புள்ளைங்களக் கூட்டிட்டு போறதுக்கு அவனுக்கு அந்த பங்களாதான் வசதியா இருந்தது. அதனால இந்த இடத்தை இழக்கறதுக்கு அவன் விரும்பல. எனக்கும் இது தெரியும். பேயோட்டறதுக்கு என்னையும் வரச்சொல்லி பிளாக்கி சொன்னதுமே நான் அவன்கிட்ட சொல்லிட்டேன். அவன்தான் சமையல்ரூம் பக்கமா பங்களாக்குள்ள வந்து எல்லா ரகளையும் பண்ணினது. அப்புறம் என்ன நடக்குதுன்னு கூலிகளுக்கும் தெரியட்டும் மின்னு அவனே போயி எல்லாரையும் எழுப்பிக் கூட்டிட்டு வந்திட்டான். நாங்க நினைச்சே பார்க்காத அளவுக்கு இது வேலை செஞ்சுது”

“ஹா ஹா ஹா நல்ல வேளைதான், பிளாக்கிக்கு மட்டும் உண்மை தெரிஞ்சிருந்தா உங்க ரெண்டு பேரையும் ஒழிச்சுக் கட்டிருப்பான்.”

“அந்த மாதிரி ஆபத்துக்கு வழியே இல்லை. பிளாக்கியும், ஜெயதிலகாவும் கண்ணுமண்ணு தெரியாத போதையில இருக்கும்போது தான் பேய் வரணும்னு நான் ஏற்பாடு பண்ணியிருந்தேன். அப்படியே உண்மை தெரிஞ்சிட்டாலும் கூட ஃபிலிப் எல்லாப் பழியையும் தானே ஏத்துக்கிட்டு என்னைக் காப்பாத்துறதுக்குத் தயாரா இருந்தான். அந்த பங்களா தனக்கே வேணுங்கிறதுல அவனுக்கு அவ்வளவு ஒரு வெறி.”

# 13

கிறிஸ்துமஸிற்காக பெருங்குரலெடுத்து நான் பாடும்
இந்தப் பாட்டு கொழுத்தவர்களுக்கும், களி துள்ளுபவர்
களுக்கும் நேர்மையும் துணிச்சலும் மிகுந்தவர்களுக்கும்
கூட... இதோ என் மதுக்கோப்பையை உறுதியுடன்
உயர்த்திப் பிடிக்கிறேன். வழக்கமாக வரும் கிறிஸ்துமஸிற்கு
வாழ்த்துச் சொல்லி வாருங்கள் காலி செய்வோம்!

தி பிக்விக் பேப்பர்ஸ்
சார்லஸ் டிக்கன்ஸ்

அது கிறிஸ்துமஸ் பண்டிகைக் காலம். வருடத்தில் அந்த நேரத்தில் மட்டும்தான் எல்லோருக்கும் அடுத்தடுத்த இரண்டு நாட்கள் விடுமுறை கிடைக்கும். 25ஆம் தேதி சம்பளத்துடன் கூடிய விடுமுறை தினம். 24ஆம் தேதி சம்பளமில்லாத விடுமுறை தினம். ஒவ்வொருவரும் விழா மனநிலையில் மகிழ்ந்து போயிருந்தனர். எஸ்டேட்டுகளில் கிறிஸ்துவர்களும், இந்துக்களும் இணைந்தே கிறிஸ்துமஸைக் கொண்டாடினார்கள்.

“யாருக்கு வேணும்னாலும் இப்போ சும்மாவே பீர் கிடைக்கும்” முத்தையா கருப்பனிடம் சொன்னான்.

“பாத்துட்டுதான இருக்க. எஸ்டேட்டில கள்ளுக் கடையே கெடையாது, அதனால நம்பளமாதிரிப் பஞ்சப்பரதேசிங்க குடிக்கறதப் பத்தி நெனச்சே பாக்க முடியாது. ஆனா பண்டிகை வந்தா போதும் காசில்லாமையே குடிக்கறதுக்கு கிடைக்கும்.

“ஏண்ணே எஸ்டேட்டுல கள்ளுக்கடை வைக்கல?”

“வால்பாறை பட்டணத்தோடு சேர்த்து இங்க இருக்கிற எல்லா நிலமும் வெள்ளைக்கார தொரைகளுக்குத்தான் சொந்தம். இந்த வட்டாரத்துல எங்கனவும் கள்ளுக்கடை வெக்கறதுக்கு தொரைங்க விட மாட்டாங்க. கள்ளுக்கடை வைச்சிருந்தா கூலிங்க குடிச்சிட்டு ஆளாளுக்கு அடிச்சுக்குவானுங்கள்லா. மேஸ்திரி மாருகள வம்புக்கு இழுப்பானுகள்லா. எல்லாத்தையும் விட ஒழுங்கா வேலைக்குப் போக மாட்டானுவ. அதான் கள்ளுக்கடைகள வைக்க உடுறதில்ல.”

“ஆனா பெரிய ஐயாவும், மத்த ஐயாக்களும் ஞாயித்துகிழமை தோறும்

குடிக்கிறத நான் பாத்திருக்கேனே. எம்பொஞ்சாதி ஆசுபத்திரில இருக்கும்போது ஞாயித்துகிழமை டாக்டர் ஐயா வீட்டுல கூட்டமா சேர்ந்து குடிச்சிட்டு இருக்கிறதப் பாத்தன்லா?"

"ஆமா வால்பாறை ஸ்பென்சர் கம்பெனியில சீமைச் சாராயம் கெடைக்குதாம், மேஸ்திரிகள உட்டு வங்கிட்டு வர சொல்லுவாக. சங்கரபாண்டியன் மாதிரி பெரிய பெரிய மேஸ்திரிகளும் சில சமயம் வாங்கிக் குடிப்பானுவ. நாம எல்லாம் அதுக்கு பக்கத்துல கூட போக முடியாதுடே.

"கீழே இருக்கிற மாதிரி பண்டிகையப்ப சந்தை இருக்குமா?"

"வால்பாறைல ஒண்ணு இருக்கு, நிறைய கடை போட்டிருப்பாங்க. வேணுங்கிறது எல்லாம் வாங்கலாம். பழைய துணி, புதுத்துணி இரண்டும் விப்பாங்க. வளையல், பாசிமணி, ரிப்பன், பிள்ளைகளுக்கு பொம்மை, எல்லாம் கிடைக்கும். சாப்பிடறதுக்கு எல்லாம் கிடைக்கும். ராட்டினம் இருக்கும். சர்க்கஸ், மாயாஜாலம், பறக்கிற வண்டி, எல்லாருக்கும் சந்தோஷப்படுற மாதிரி இன்னும் என்னென்னமோ இருக்கும். எஸ்டேட்டுகள்ல கூட கீழிருந்து டிராமா கம்பெனிக்காரங்க வந்து நாடகம் போடுவாங்க. எஸ்டேட் காசு குடுத்துரும். நாம சும்மா பாத்துக்கலாம். எல்லாக் கூலிகளும், அவங்க குடும்பமும் உட்கார்ற மாதிரி நம்ம எஸ்டேட்டுல மஸ்டூல் கிரௌண்டில மேடை போடுவாங்க. மத்த எஸ்டேட்டுகளிலிருந்துகூட இதைப் பாக்குறதுக்கு வருவாங்க. நம்மளும்கூட வேற எஸ்டேட்டுக்கு போறதாயிருந்தாப் போகலாம். ஐயாமார்களுக்கும் அவங்க குடும்பத்துக்கும், மேடைக்குப் பக்கத்தில ஒரு சின்னப்பந்தல் போட்டிருப்பாங்க. ஆனா பெரும்பாலும் ஐயாமாருங்க பொஞ்சாதிங்க வரமாட்டாங்க. ஐயாமாருங்க பண்ணற கூத்து நாடகத்தைவிட நல்லாயிருக்கும். போன வருஷம் நம்ம பெரிய காட்டு ஐயா மேடைமேல ஏறி நாடகக்காரியோட நாட்டியமாடணு மின்னிட்டாரு. தலைமை டீ மேக்கரு கோமாளி தலையிலிருந்த தொப்பியைப் புடுங்கி ஹெட்கிளார்க் தலையில வெக்கப் பாத்தாரு. எல்லாரும் உழுந்து உழுந்து சிரிச்சாங்க. மொத்தத்துல எல்லாமே நல்லாயிருக்கும். அதே மாதிரி செலவுக்கும் எல்லா கூலிககிட்டேயும் காசு இருக்கும். சில எஸ்டேட்டுகளில பண்டிகைக்கு முன்னாடி கணக்குத் தீர்ப்பாங்க. ஆனா பெரும்பாலான எஸ்டேட்டில எந்தெந்த கூலிகளுக்கு அக்கவுண்டில பணம் இருக்குதோ அவர்களுக்குக் கொஞ்சம் அட்வான்ஸ் தருவாங்க. நம்ம எஸ்டேட்டுல நாளைக்கு ஆபிஸ் இருக்கும். யார் யாருக்கெல்லாம் கணக்கில பணம் இருக்குதோ அவங்களுக்கெல்லாம் அஞ்சுரூபா வரைக்கும் தருவாங்க. பண்டிகைக்கு

அப்புறம் நமக்குக் கணக்கு தீர்ப்பாங்க. இந்த வருஷம் நாங்க வீட்டுக்குப் போறோம்.”

“திரும்பவும் வருவீங்களாண்ணே.”

“வருவோம், ஆனா கையில எவ்வளவு பணம் இருக்குது, கீழே என்ன வேலை கிடைக்குதுங்கறதைப் பொறுத்துதான். வேலை கிடைச்சுதுன்னா ஊர்ல ரெண்டு மாசமாவது தங்கிட்டு அப்புறம்தான் வருவோம்.”

“ஒவ்வொரு தடவை வரும்போதும் ஒரு ஆளுக்கு அட்வான்ஸ் குடுப்பாங்களா?”

“ஓ... கண்டிப்பா தருவாக. மேஸ்திரிகளுக்கு என்ன சந்தோஷமாத் தருவானுவ. பணத்த வாங்கிட்டாலே கூலி ரெண்டு வருஷத்துக்கு சிக்கிட்டான்னுதானே அர்த்தம். ஆனா இந்த தடவை நான் அட்வான்ஸ் வாங்க மாட்டேன். சுதந்திரமா இருக்கணுமின்னு நெனைக்கேன். இப்ப மூணு மாசமா சங்கரபாண்டியன் கங்காணி எங்ககிட்ட தேனொழுகப் பேசிட்டிருக்கான். ஊருக்கு போற அளவுக்கு எங்ககிட்ட பணம் இருக்குதுன்னு அவனுக்குத் தெரியும். அதனால நாங்க திரும்பி வரணும்னும் அவன் கேங்கிலயே, வேல பாக்கனும்னும் ஆசைப்படுதான்.”

“திரும்பி வந்தா நம்ம இஷ்டப்படி வேற மேஸ்திரிங்ககிட்ட சேர்ந்துக்கலாமா?”

“ஆமா பழைய மேஸ்திரியோட கடனைத் தீர்த்திட்டா எந்த மேஸ்திரிகிட்ட வேணுமின்னாலும் பதிவு பண்ணிக்கலாமில்லா. மேஸ்திரிக நிறையப்பணம் குடுப்பானுவ. ஆனா ரொம்ப கொடுமைப்படுத்தாத மேஸ்திரிங்ககிட்ட சேரத்தான் கூலிங்க நெனைப்பாங்க. நாங்க திரும்பவும் வந்தா சங்கரபாண்டியன் கேங்குக்குத்தான் வருவோம். பாத்தேல்லா. இங்கன இருக்க மேஸ்திரிகள்ல அவன்தான் பரவாயில்ல.” முத்தையா சொன்னான்.

நீண்ட நாட்களாக எதிர்பார்த்திருந்த பண்டிகை வந்தது. முடிந்தவர்கள் எல்லாம் கிறிஸ்துமஸுக்குப் புத்தாடைகள் அணிந்தனர். குழந்தைகள் பட்டாசு வெடித்தனர். எல்லா எழுத்தர்களின் வீடுகளிலும் சில லைன்களிலும் கூட கிறிஸ்துமஸ் விளக்குகள் தொங்கின. கிறிஸ்துமஸ் அன்று விடியற்காலை எஸ்டேட் சர்ச்சில் பிரார்த்தனை நடந்தது. அற்புதமாக அலங்கரிக்கப்பட்டிருந்த சர்ச்சில் அத்தனை பேரும் கூடியிருந்தனர். பகலில் சிறுமிகள் ஒன்றாகச் சேர்ந்து வீடுகளுக்கும்

லைன்களுக்கும் சென்று கும்மியடித்தனர். அதற்கு அவர்களுக்கு பெரியவர்கள் காசு கொடுத்தனர். பெரியவர்களும் கூட கொரில்லாக் குரங்குகள் போலவும், மயில்கள், குதிரைகள் போலவும் வேடமிட்டு வாத்திய இசையோடு சுற்றிச் சுற்றி வந்து நடனமாடினர். பலருக்கு விருந்தும், குடியுமே விழாவின் முக்கியமான பங்காக இருந்தன. மேஸ்திரிகள் மூத்த எழுத்தர்களின் வீட்டுக்கு பரிசுப் பொருட்களுடன் சென்று தங்கள் மரியாதையையும், வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொண்டனர். எழுத்துப் பணியாளர்கள், மேஸ்திரிகள், கூலிகள் உண்டனர், குடித்தனர், மகிழ்ச்சிக் கூத்தாடினர். ஆனால் அவர்கள் யாருடைய பிறந்தநாளைக் கொண்டாடிக் கொண்டு இருந்தார்களோ அந்த அமைதியின் இளவரசனை, மக்கள் அனைவருக்கும் நல்லெண்ணத்தையும், அமைதியையும் கொண்டுவரப் பிறந்தவரை கிறிஸ்துவர்கள் உள்ளிட்ட பெரும் பாலானவர்கள் துளிக்கூட நினைத்துப் பார்க்கவில்லை.

கிறிஸ்துமஸ் இரவில் குமரிமலை எஸ்டேட்டில் நாடகம் நடத்தப்பட்டது. கருப்பனும், வள்ளியும் முத்தையாவும், ராமாயியும் அவர்களது குழந்தைகளும் பக்கத்திலிருந்து எல்லாவற்றையும் பார்ப்பதற்கு ஏதுவாக முதல் வரிசையில் இடம் பிடிப்பதற்கு விரைவிலேயே சென்று கடும் குளிருக்கும், மழையாய் பொழிந்த பனித்துளிகளுக்கும், பாதுகாப்பாக கம்பளிகளைத் தலையோடு காலாக சுற்றிக் கொண்டு தரையில் உட்கார்ந்து கொண்டனர். பத்து மணிக்கு உதவி மேலாளர் வந்து நாடகத்தைத் துவக்கி வைத்தான். ஒரு மேஸ்திரி அவனை வரவேற்று மாலை அணிவித்தான். அவன் ஆங்கிலத்தில் சில வார்த்தைகள் பேச ஹெட்கிளார்க் அதை தமிழில் மொழிபெயர்த்தார். அவன் அரைமணிநேரம் நாடகத்தைப் பார்த்துவிட்டுக் கிளம்பிச் சென்றான். நாடகம் விடியற்காலை வரை தொடர்ந்தது. அங்கே எழும்பிய கூச்சல் மற்றும் விசில் சத்தத்தை வைத்துப் பார்த்தால் பார்வையாளர்கள் முழுமையாக நாடகத்தில் மூழ்கி ரசித்துக்கொண்டு இருப்பதைப் புரிந்துகொள்ள முடிந்தது. மூன்று எஸ்டேட்டுகளையும் சேர்ந்த எல்லா மூத்த, இளைய எழுத்தர்களும் நாடகம் முடியும்வரை அங்கேயே இருந்தனர். நாடகம் முடிந்து ஆண்களும், பெண்களும் வீடு திரும்பியபோது நான்கு மணி ஆகிவிட்டது. மறுநாள் விடுமுறை தினம். மதியம் விழித்தெழுந்தபோது பண்டிகை முடிந்துவிட்டது என்ற வருத்தமும் இப்படி ஒரு மகிழ்ச்சிக்கு இன்னொரு வருடம் காத்திருக்க வேண்டுமே என்ற ஏக்கமும் சேர்ந்து அழுத்த, உடலும் உள்ளமும் சோர்ந்து கனத்துப் போயிருந்தன.

# 14

மாலையானதும் திராட்சைத் தோட்ட உரிமையாளர் தம் மேற்பார்வையாளரிடம் வேலையாட்களை அழைத்துக் கடைசியில் வந்தவர் தொடங்கி முதலில் வந்தவர் வரை அவர்களுக்குரிய கூலி கொடும் என்றார்.

பைபிள்
மத்தேயு- 20

விடுமுறை நாட்கள் கழிந்து கணக்குத் தீர்க்கும் நாள் வந்தது. சங்கரபாண்டியன் தனது கூலிகளுக்கு அடுத்தநாள் மதியம் 2 மணிக்கு சம்பளம் கொடுப்பதாகச் சொன்னான். எனவே எல்லோரும் சொன்ன நேரத்திற்கு அரைமணிநேரம் முன்னதாகவே ஆபீஸில் குவிந்து விட்டிருந்தனர். வராந்தாவில் ஒரு மேஜையும், நாற்காலியும் பொது மேலாளருக்காகப் போடப்பட்டிருந்தன. கொஞ்சதூரம் தள்ளி இன்னொரு மேஜையில் ஒரு பெரிய நோட்டு வைக்கப்பட்டிருந்தது. அதில் எஸ்டேட் கூலிகளின் பெயர்களும், அவர்களுடைய சம்பளம் மற்றும் கடன்கள் பற்றிய கணக்குகளும் அடங்கியிருந்தன. தலைமை குமாஸ்தா ரூபாய் நோட்டுகளையும், நாணயங்களையும் கொண்டு வந்து பொது மேலாளரின் மேசையின் மீது வைத்தான். எல்லாம் தயாரான பின்பு மிஸ்டர் வொய்ட் வெளியே வந்து தனது நாற்காலியில் அமர்ந்தபோது அங்கிருந்த எல்லோரும் சேர்ந்து 'சலாம் தொரைகளே' என்று ஒருமித்துக் குரல் எழுப்பினர். தலைமை குமாஸ்தா மிஸ்டர் வொய்ட்டுக்குப் பக்கத்திலும் தலைமை எழுத்தரும், செக்ரோல் கிளார்க்கும் ரெஜிஸ்டருக்கு முன்னும் நின்று கொண்டனர். ஒரு எழுத்துப் பணியாளர் ஒவ்வொரு கூலியின் பெயர், அவன் சம்பாதித்த மொத்தக் கூலிப்பணம், அந்த வருடத்தில் அவன் வாங்கிய மொத்தக் கடன், மீதிப்பணம் ஏதாவது இருப்பின் அந்தத் தொகை ஆகியவற்றை படித்துச் சொல்வார். பொது மேலாளர் தலைமை எழுத்தரின் உதவியுடன் அந்தக் கூலிக்கு சேர வேண்டிய தொகையை எண்ணி அவரிடம் கொடுக்க, அவர் அந்தக் கூலியிடம் வழங்குவார். முதலில் சங்கரபாண்டியனின் கேங்-தான் அழைக்கப்பட்டது.

"அருணாச்சலம், வரவு பதினைந்து ரூபாய், மனைவி முத்துக்கருப்பி, வரவு பதினாறு ரூபாய் ஆறு அணா, மகள் சிவனம்மா வரவு மூன்று ரூபாய் நாலு அணா மொத்தம் முப்பத்தி நான்கு ரூபாய் பத்து அணா"

குமாஸ்தா வாசித்தார். கூலிகள் அவர்களது பெயர்களைக் கூப்பிட்டவுடன் வரிசையிலிருந்து விலகி முன்புறம் போய் நின்று கொண்டனர். மிஸ்டர் வொயிட் மூன்று பத்து ரூபாய் நோட்டுகள், இரண்டு இரண்டு ரூபாய் நோட்டுகள், ஒரு எட்டணா நாணயம், ஒரு இரண்டு அணா நாணயம் ஆகியவற்றை எண்ணி எடுத்து தலைமை எழுத்தரிடம் கொடுத்தார். அவர் அத்தொகையை அருணாச்சலத்திடம் கொடுக்க உடனே அவனும், அவனது குடும்பமும் அந்த இடத்திலிருந்து நகர்ந்தனர். இரண்டாவது, மூன்றாவது என ஒவ்வொரு குடும்பமும் வரிசையாக அழைக்கப்பட்டன. கருப்பனின் இதயம் படபடவென அடிக்கத் தொடங்கியது. எத்தனைப் பணம் கிடைக்கும் என்று அறிய மிகுந்த ஆவலுடன் துடித்துக் கொண்டிருந்தான். இறுதியில் அவன் முறை வந்தது. அவனது பெயர் அழைக்கப்பட்டவுடன் அவனும், அவனது மனைவியும் முன்னாடி வந்து நின்று கொண்டனர். கருப்பன், வரவு பத்தொன்பது ரூபாய், மனைவி சீதா, கடன் ஐந்து ரூபாய் நான்கு அணா மீதி பதிமூன்று ரூபாய் பன்னிரண்டு அணா என்று குமாஸ்தா வாசித்தான். கருப்பன் தொகையைப் பெற்றுக் கொண்டு வள்ளியுடன் சேர்ந்து அந்த இடத்திலிருந்து விலகினான். “நிச்சயமா இந்தப் பணம் நாம வீட்டுக்குப் போறதுக்குப் போதும்” சந்தோசத்தில் வெடித்து சிரித்தாள் வள்ளி.

“காளிச்செட்டியாருக்கும், கடனா வாங்கின மாட்டுக்கறிக்கும் பணம் கொடுக்கணுமிங்கிறதை மறந்திடாதே” கருப்பன் பதிலளித்தான்.

“அது எவ்வளவு ஆயிடப் போகுது? காளிச் செட்டியார்கிட்ட நிறைய ஒண்ணும் கடன் வாங்கலியே. அதேபோலதான மாட்டுக்கறியும் எப்பவாவதுதான் கடனா வாங்கியிருக்கோம்” ஆர்வத்துடன் வள்ளி சொன்னாள்.

“நான் போயி பாத்துட்டு வாரேன். ஆனா பெருசா மிச்சமாகும்னு எனக்குத் தோணல” என்றான் கருப்பன்.

ஆபிஸ் வளாகத்தைக் கடந்து ரோட்டுக்கு வந்தபோது அங்கே ஒரு கடைவீதியே ஏதோ மாயாஜாலம் போல திடீரென்று முளைத்திருந்தது. ரோட்டின் இரு புறத்திலும் தாங்கள் கொண்டு வந்திருந்த பொருட்களை போட்டு வைத்திருந்த வியாபாரிகள், சம்பளம் வாங்கிக் கொண்டு வரும் கூலிகளை பொருட்களை வாங்கிச் செல்லும்படி கூவிக் கூவி அழைத்தனர். பெரும்பாலும் இனிப்புகளும் தின்பண்டங்களும் விற்கப்பட்டன. மற்றவர்கள் கண்ணாடி வளையல்கள், பாசிமணிகள், ரிப்பன் போன்றவற்றை விற்றனர். அங்கே தொளதொளவென்ற

கால்சட்டைகளும் பெரிய தலைப்பாகைகளும் அணிந்திருந்த இரண்டு சிவப்பான உயரமான ஆட்கள் நின்றிருந்தனர். “அவங்கதான் ஈட்டிக்காரங்க,” கருப்பன் வள்ளிடம் சொன்னான். “ஒரு ரூபாய்க்கு மாசம் ஒரு அணா வட்டின்னு கடன் குடுப்பாங்க. சம்பளம் கொடுக்கிற சமயம் அசலையும் வட்டியையும் சேத்து வசூலிப்பாங்க. கூலிங்ககிட்ட அடிக்கடி கத்தியைக் காட்டி மிரட்டி மாச வட்டியை வாங்கிடுவாங்க” வியாபாரிகள் கருப்பனையும் வள்ளியையும் தங்கள் பொருட்களை வாங்க அழைத்தனர். ஆனால் அவர்கள் கடனை அடைத்த பின்பு கையில் எவ்வளவு பணம் மீதம் இருக்கும் என்பதை அறியும் ஆவலில் யாரையும் பொருட்படுத்தவில்லை. வள்ளி அவர்களது அறைக்குச் செல்ல கருப்பன் காளிச்செட்டியின் கடைக்குவிரைந்தான்.

கடனை செலுத்த வந்திருந்த கூலிகளால் கடை நிறைந்திருந்தது. சில கூலிகள் காளிச்செட்டி காட்டிய கணக்குப் புத்தகத்தில் உள்ள அளவுக்கு தாம் அதிக கடன் வாங்கவில்லை என்று சண்டையிட்டுக் கொண்டிருந்தனர். ஆனால் செட்டியார், ஒவ்வொரு முறையும் தனது இறுதி அஸ்திரத்தைப் பிரயோகித்தார். யார் யார் எந்தெந்த தேதியில் என்னென்ன பொருட்கள் வாங்கினர் என்பதை பட்டியலிட்டுக் கூற, தங்கள் கணக்கு வழக்குகளை நிர்வகிக்கத் தெரியாத படிப்பறிவற்ற பாமர மக்களால் எதிர்த்து எதுவும் பேச முடியவில்லை. கடைசியில் கூட்டம் எல்லாம் கலைந்தபிறகு கருப்பன் தான் எத்தனை கொடுக்க வேண்டும் என்று கேட்டான். காளிச்செட்டியார் ஒரு பதிவேட்டைப் பார்த்துவிட்டு “பதினோரு ரூபாய் பன்னெண்டு அணா” என்றார். ஐந்து ரூபாய்க்கு அதிகமாக கொடுக்க வேண்டியதில்லை என்று நினைத்திருந்த கருப்பன் திடுக்கிட்டுப் போனான். சில நிமிடங்கள் அவனால் பேசக் கூட முடியவில்லை. “அது எப்படி? அடிக்கடி கடன் வாங்கின மாதிரி எனக்குத் தோணலை. எம் பொஞ்சாதி உடம்புக்கு முடியாம படுத்திருந்தப்ப மட்டும்தான் கடனுக்கு வாங்கினேன். தயவுசெய்து இன்னொரு தடவை கணக்கைப் பாருங்க.”

“நீ எஸ்டேட்டுக்கு வந்த முதல்நாள் உனக்கு நான் கொடுத்த பானைங்க, அரிசி, சாமான்களெல்லாம் மறந்துபோச்சா?”

“ஆமா, அதுக்கெல்லாம் சேர்த்து ஒரு ரூபா இருக்குமா?” கருப்பன் கேட்டான்.

“ஒரு ரூபாய்க்கு உன் பாட்டன் தருவான். இந்த எஸ்டேட்டில, என் கடையில அதோட விலை மூன்று ரூபாய் எட்டணா. இங்க பாரு நீ எப்பப்ப அரிசி, மத்த சாமான்களெல்லாம் வாங்கியிருக்கேன்னும்,

எவ்வளவு கொடுக்க வேண்டியிருக்கன்னும் இதில இருக்கு” காளிச்செட்டியார் பதினைந்தாவது முறையாகத் திரும்பவும் கூறினார்.

“அஞ்சாறு தடவைக்கு மேல உங்ககிட்ட கடன் வாங்கியதா எனக்கு ஞாபகமே இல்ல.”

“ஓகோ உனக்கு ரொம்ப வெவரமான மூளைதான்” ஏளனமாகக் கூறினார் காளிச்செட்டி. “நான் பேப்பர்ல விலாவாரியா எழுதி வெச்சிருக்கேன். அத்தாச்சி என் கையில இருக்கு. இவனுக்கு ஞாபகம் வரலையாம். உனக்கு ஞாபகத்தில இருக்கா இல்லையாங்கிறதைப் பத்தி எல்லாம் எனக்குக் கவலையில்லை. எங்கிட்ட வாங்கினதுக்கு பணத்தக் குடுத்துட்டுபோ. அப்புறம் இனிமே ஒரு பைசாவுக்குக் கூட கடனா எதையும் உனக்குத் தரமாட்டேன்.”

“வாங்காத பொருளுக்கு எதுக்கு நான் காசு தரணும்?” கருப்பன் கேட்டதும் காளிச்செட்டியார் கடுங்கோபம் அடைந்தார்.

“அயோக்கியநாயே! தெருவோட போனவனுக்குப் பிறந்தவனே. எம்பணத்தைக் குடுப்பியா மாட்டியா? நன்றிகெட்ட நாயே, அவசர ஆத்திரத்துக்கு உதவினதுக்கு இப்படியா பழிபோடுவே. எஸ்டேட்டில குடுக்காதப்பக்கூட நான் உனக்கு சாமான் குடுத்தனில்ல. நான் குடுக்காட்டி என்ன பண்ணியிருப்பே, பட்டினி கிடந்து செத்துப் போயிருப்பேல்ல. ஒரு வருசமா பணத்துக்காக காத்திட்டுருக்கேன். ஒரு பைசா கூட வட்டி கேக்கல. பட்டாணிக்காரங்க செய்யறமாதிரி செஞ்சிருக்கணும். ஒரு ரூபாய்க்கு மாசத்துக்கு ஒரு அணா வட்டி வாங்கியிருக்கணும். கத்தியக் காட்டி மிரட்டியிருக்கணும். அப்பக் குடுப்பே நீ. சங்கர பாண்டியன் மேஸ்திரிகிட்ட பேசிக்கிறேன். உம் மூஞ்சியையும் மொகரக்கட்டையையும் பாத்தா நான் கடன் குடுத்தேன். அவன் சொல்லித்தான் நான் குடுத்தேன். தொலஞ்சு போ. உன் பொஞ்சாதி ஒரு தேவடியா. போ, போய் பேண்டதைத் தின்னு. நாய்க்குப் பிறந்தவனே.”

“கொஞ்சமாவது நியாயமா என் கணக்க பாருங்க” கருப்பன் விடாது வற்புறுத்தினான்.

“ஒரு டஜன் அப்பனுக்குப் பிறந்த இந்த நாயி எனக்கு புத்தி சொல்லுது. எம்முன்னாடி நிக்காதே. போ போய் பீயைத் தின்னு. அரிசிக்கு பணம் தரமாட்டேங்கிறேயில்ல. அதைத் தின்னு” காளிச்செட்டி தொண்டை நரம்புகள் புடைக்க ஆக்ரோஷமாகக் கத்தினான்.

விவாதித்துப் பலனில்லை என்று அறிந்துகொண்ட கருப்பன் அறைக்குத்

திரும்பி மேஸ்திரியிடம் சொல்லலாமா என்று முத்தையாவிடம் கேட்டான்.

“எவன்கிட்ட சொல்லி என்ன ஆக போவுது? எல்லாப் பயகளும் ஒண்ணுதான். பெரிய அய்யாவுல இருந்து மேஸ்திரி வரைக்கும் செட்டிதுட்டு குடுத்து சரி கட்டியிருக்கான்ல. அவ்வளவு பேரும் அவனுக்குத் தான் வக்காலத்து வாங்குவானுவோ. பெரிய தொரைகிட்ட செட்டியப் பத்திச் சொன்னா காது குடுத்து கேக்ககூட மாட்டான். பண்டிகை சமயத்துல தொரைக்கு செட்டி விஸ்கி பாட்டிலும், கோழிகளுமா கொண்டு போய் கொடுத்தான். பத்தாக்கொறைக்கு பழமும், காய்கறியும் அனுப்பிட்டு இருக்கான். இதையெல்லாம் வாங்கிகிட்டு நமக்கா நாயம் சொல்லுவான்? பேசாம செட்டி எவ்வளவு சொல்லுதானோ அத குடுத்துட்டு வந்துரு. அதுதான் நல்லது. இனிமேற்கொண்டு அவன்கிட்ட வரவு செலவு வச்சுக்காத.”

முத்தையாவும் மனைவியும் கிராமத்துக்குப் போவதற்கான ஏற்பாடுகளில் பரபரப்பாக இருந்தனர். கிராமத்துக்குப் போவதற்கு வாய்ப்புள்ளவர்கள் மகிழ்ச்சியாகப் பாடிக் கொண்டும் சிரித்துக் கொண்டும் உல்லாசமான மனநிலையில் இருந்தனர். போக முடியாத கருப்பனையும் வள்ளியையும் போன்றவர்கள் இடிந்துபோய் முடங்கிக் கிடந்தனர். கருப்பன் படுப்பதற்கு தயாராகிக் கொண்டிருந்தபோது மேஸ்திரி கூப்பிட்டு அனுப்பினான்.

ஏராளமான சிறிய நோட்டு புத்தகங்கள் சிதறிக் கிடக்க மேஸ்திரி ஒரு பாயில் சம்மணம் போட்டு உட்கார்ந்திருந்தான். கருப்பனைப் பார்த்தவுடன் “செட்டியார் என்ன சொன்னார் தெரியுமா? அவர் பொய்க் கணக்கு சொல்லுதார்னு பணத்தத் தர முடியாதுன்னு வந்துட்டியாம். இந்த மாதிரி அடாவடியெல்லாம் இங்க பண்ண முடியாது கேட்டியா. இந்த எஸ்டேட் தொடங்கினதிலிருந்து காளிச் செட்டியார் உன்னை மாதிரி பத்தாயிரம் பேரப் பாத்திருப்பான். அவன் கணக்கு வழக்குல யாரும் சந்தேகப்பட்டதில்ல. அவன கொற சொல்றவன் நாளைக்கு என் கணக் கையும் பொய்க்கணக்குன்னுதான் சொல்லுவ. பேசாம போயி அவன் பணத்த குடுத்துட்டு என்ன வந்து பாரு.” கருப்பன் காளிச் செட்டியிடம் சென்று அவன் கேட்ட பணத்தைக் கொடுத்தான். பின்பு மாட்டுக்கறி கடைக்குச் சென்று கடைக்காரன் கேட்ட ஒரு ரூபாய் பன்னெண்டு அணாவையும் மறுபேச்சின்றி கொடுத்து விட்டான். இறுதியில் கருப்பனிடம் நான்கு அணா மிஞ்சியது. மேஸ்திரியிடம் சென்று அவன் சொன்னபடி செய்து விட்டதை அறிவித்தான்.

“அது சரி, எனக்குத் தரவேண்டியதை எப்பத் தரப்போற?”

கருப்பன் தலையில் இடியிறங்கியது. அவனுக்குக் கொடுக்கப்பட்ட அட்வான்ஸ், பயணத்தொகை, கம்பளி, அனைத்தும் சம்பளத்தில் பிடிக்கப்பட்டு விட்டன என்று நினைத்திருந்தான்.

சங்கரபாண்டியன் தொடர்ந்தான். “இத பாருலே நாப்பது ரூபா அட்வான்சாக் கொடுத்திருக்காங்க. அதில முப்பது ரூபா எஸ்டேட்டோடது. மீதி என் பணம். அதை நீதான்லே எனக்குக் குடுக்கணும்.”

கருப்பன் தன்னிடம் நான்கனா மட்டுமே மீதியிருப்பதாகக் கூறினான்.

“அது உன் சோம்பேறித்தனத்தினால வந்தது. நீயும் உன் பொஞ்சாதியும் ஒழுங்கா வேலை செஞ்சிருந்தீங்கன்னா எல்லாக் கடனையும் அடைச்சிட்டு ஊருக்குப் போறதுக்கு பணமும் மிச்சமிருந் திருக்கும். ஆனா உடம்பு நல்லாயிருக்கும்போதுகூட பொண் டாட்டியைப் பாத்துக்கணுமின்னு காரணம் சொல்லி ஆஸ்பத்திரியில ஒக்காந்திருக்கிற பய நீ. இந்த வருஷமாவது புத்தியா இரு. அடுத்த வாரம் இருபது கூலிகளை பதிவு பண்ணப் போறேன். உன்னையும், உம் பொஞ்சாதியையும் அவங்களோட சேர்த்துக்குதேன். உடனே வேலைக்குப் போயிட்டா சாமான் வாங்கறதுக்குக் கஷ்டம் இருக்காது. பன்னெண்டு மாசம் இருக்குது. ரெண்டு பேரும் கஷ்டப்பட்டு வேலை செஞ்சா கணக்கு முடிக்கிற அன்னைக்கு நூறு ரூபாயாவது கையில மீதி இருக்கும்.”

கருப்பன் மௌனமாகத் தலையசைத்தான்.

மறுநாள் அதிகாலையில் முத்தையா குடும்பத்தினர் சொந்த ஊருக்குக் கிளம்பினர். முத்தையா வள்ளியுடைய ஊருக்குச் சென்று அவள் பெற்றோரையும் கருப்பனின் அம்மாவையும் பார்ப்பதாக உறுதியளித்தான்.

“நானும் எம்பொஞ்சாதியும் அவங்களப் பாத்து நீங்க ரெண்டு பேரும் இங்கன ரொம்ப நல்லா இருக்கீகன்னும் இன்னும் ஒரு ஆறு மாசத்துல ஊருக்கு வந்திருவீகன்னும் சொல்லுதோம்.”

“நாங்க வரலைன்னு வள்ளியோட அப்பா அம்மாவும் ஏமாந்து போயிடுவாக. இங்கன வரும்போது ஒரு வருஷத்தில நிறைய பணம் சேர்த்திட்டு போலாமின்னு நினைச்சுட்டில்லா வந்தோம். இங்கத்த நெலம தெரிஞ்சா எங்கம்மா கெழவி துக்கப்பட்டே செத்துப் போயிரும்”கருப்பன் குரல் கம்மி தொண்டை அடைத்துக் கொண்டது.

“எல்லாம் நான் பாத்துக்குதேன். இன்னும் கொஞ்சநாள் இருந்து நிறைய சம்பாதிச்சிட்டா திருப்பி எஸ்டேட்டுக்கு வரவேண்டி இருக்காதுங்கிறதாலதான் நீங்க இங்கேயே தங்கிட்டீகன்னு சொல்லிடுதேன். எங்க ஊர்ல இருந்து பாதிநாள் நடை தொலவுலதானே உங்க ஊரு.”

“நீங்க எனக்கு அண்ணன் மாதிரி. உங்க பொஞ்சாதிய எம்பொஞ்சாதி அக்காமாதிரிதான் நெனைச்சிட்டு இருக்குதா. நீங்க இருந்ததுனாலதான், நாங்க எல்லாக் கஷ்டத்தையும் தாங்கிட்டோம். புத்தி சொல்றதுக்கு ஒத்தாசை செய்யறதுக்கு நீங்க இல்லாம நாங்க எப்படி காலந் தள்ளப்போறோமின்னு தெரியல.”

முத்தையா தாங்கள் விரைவில் திரும்பி வந்துவிடுவோம் என்று கருப்பனைத் தேற்றினான். அவர்கள் பொள்ளாச்சி வரை நடந்து போக வேண்டி இருந்தது. எனவே இருள் விலகு முன்பே புறப்பட்டு விட்டனர். வேறு சில கூலிகளும் அவர்களோடு கிளம்பிச் சென்றனர். ஒவ்வொருவரின் தோளிலும் சோற்றுமூட்டை தொங்கியது. ராமாயியின் கையைவிடாமல் பிடித்துக் கொண்டு வள்ளி விம்மி அழுதாள். கருப்பனாலும் கண்ணீரை அடக்கிக் கொள்ள முடியவில்லை.

சுமார் இருபது பேர் கொண்ட அந்தக் குழு அவர்கள் பார்வையிலிருந்து மறைந்து வெகுநேரத்திற்குப் பின்பும் அவர்களது கும்மாளமும், பாட்டுக்களும் காற்றில் மிதந்து வந்து கொண்டே இருந்தன. சங்கன் குடும்பத்தார் மறுநாள் புறப்படுவதாக இருந்தனர். கருப்பனும் வள்ளியுமே அறையில் மீதியிருந்தனர்.

# பாகம்-நான்கு

இன்னும் அந்த எட்டவே முடியாத
நம்பிக்கையை மனதில் கொண்டு ...

ஸ்காலர் ஜிப்ஸி

- மாத்யூ ஆர்னால்டு

# 1

ஒரு பெண், முதலாளித்துவ ஒழுக்கத்தை ஏற்றுக்
கொண்டு அதன்படி எது அதிக ஊதியம் தருகிறதோ
அதைச் செய்வதென்று முடிவு செய்வாளேயனால்
உழைப்பிற்கான ஊதியத்தைவிட பாவத்தின்
சம்பளத்தையே ஏற்றுக் கொள்வாள்.

என் இன்டெலிஜென்ட் வுமன்ஸ்
கைடு டு சோஷலிஸம்
-பெர்னார்ட் ஷா

கருப்பனும் வள்ளியும் தங்களைப் போல ஊருக்குப் போக முடியாத இன்னும் இருபது கூலிகளோடு இன்னொரு ஆண்டு வேலை செய்வதற்குப் பதிவு செய்யப்பட்டனர். சென்ற ஆண்டு நடைமுறையே இந்த ஆண்டும் பின்பற்றப்பட்டது. ஒரே வித்தியாசம் அவர்கள் இப்போது பழைய கூலிகள் என்று கருதப்பட்டனர். மருத்துவப்பரிசோதனையும், அலுவலகத்தில் பதிவு செய்யப்படுவதும் மிக விரைவில் பெயரளவுக்கு நடந்து முடிந்தன. பெரிய வள்ளியும், சின்ன வள்ளியும் வீட்டுக்குப் போய் விட்டதாலும் கருப்பனும், வள்ளியும்தான் முதலில் பதிவு செய்யப்படுகிறார்கள் என்பதாலும் வள்ளி தனது சொந்தப் பெயரிலேயே பதிவு செய்யப்பட்டாள். ஒவ்வொருவருக்கும் புதிய கம்பளியும், வழக்கமான வார ரேஷனும் செலவுக்காசும் வழங்கப்பட்டன. அடுத்த நாளிலிருந்து இரண்டாவது ஆண்டுப் பணி தொடங்கியது.

அடுத்தவாரம் சங்கரபாண்டியனும் அவன் மனைவியும் கிராமத்துக்குப் புறப்பட்டுச் சென்றனர். கருப்பன் வெள்ளையனிடம் சமையலறை காலியாக இருப்பதால் தான் அங்கே போய்விடலாமா என்று கேட்டதற்கு அவன் அது ஏற்கனவே இன்னொரு குடும்பத்திற்கு கொடுக்கப்பட்டு விட்டது என்று தனது வழக்கமான முரட்டுத்தனத்துடன் மறுத்துவிட்டான்.

சனவரி மாதத்தில் கிள்ளுவதற்கு அப்படியொன்றும் நிறைய இல்லை. சில கூலிகளே இருந்தாலும் கொழுந்து கிள்ளுதல் ஐந்து மணிக்கெல்லாம் முடிந்துவிடும். வழக்கமாக சம்பாதிக்கும் தொகை பாதியாகக் குறைந்துவிட்டது. பெரிய ஐயா தனது புத்தம் புதிய குழந்தை யைப் பார்க்க ஊருக்குச் சென்றுவிட்டார். டிவிசன் முழுவதுமே இப்போது

மாத்யூஸின் பொறுப்பிலிருந்தது. ஒருநாள் வள்ளி மும்முரமாக வேலையில் ஈடுபட்டிருக்கும்போது சீனியம்மா நெருங்கினாள்.

“சின்ன ஐயா வீட்டுக்கு சாணி மெழுகப் போறேன். நீயும் வாறியா புள்ள” அவருக்கு சமைச்சுக் குடுத்திட்டு ராத்திரிக்கு முன்னால வந்திருலாம்.”

வள்ளி அதை கவனிக்காதது போல் இருக்க முயன்றாள்.

“கேனத்தனமா நடக்காதே. சின்ன ஐயாதான் டிவிசன் முழுசுக்கும் இப்பப் பொறுப்பு. அவன் உதவியும் பண்ணலாம். உன்னையும் உம் புருஷனையும் ஒழிச்சும் போடலாம். மத்தவளுகெல்லாம் வர்றதுக்குக் காத்திட்டு கெடக்காளுவோ. நீ மட்டும் போன வருஷம் முரண்டு பிடிக்காம இருந்திருந்தியானா கணக்கு தீர்க்கறப்ப எக்கச்சக்க பணம் கிடைச்சிருக்கும். சந்தோஷமா ஊருக்குப் போயிருக்கலாம். இந்த வருஷமாவது நல்லபடியா ஊருக்குப் போற வழியப்பாரு” எங்கு தொட்டால் வள்ளிக்கு வலிக்குமோ அந்த இடத்தை சீனியம்மாள் குத்திக் கிளற முயன்றாள்.

“யாருக்கு இஷ்டமோ அவங்க சமைச்சுப் போடட்டும். எனக்கு இஷ்டமில்ல. இதே மாதிரி பேசிட்டு இருந்தேன்னா எம்புருசன்கிட்ட சொல்லிடுவேன்.”

“உம்புருசன் பார்க்கிற ஒவ்வொருத்தி கூடயும் ரோட்டோரம் படுத்துட்டு திரியிறான். அவனப் பாத்து நாங்க பயந்து நடுங்கறமாக்கும்? ஹில் தொர காலத்துலயிருந்து நான் இங்கே இருக்கேன். இந்த தேவடியாமுண்டை என்ன மிரட்டப் பார்க்கிறா.” சீனியம்மா பெருங்குரலெடுத்து கத்தத் தொடங்கினாள். சண்டை இழுப்பதுதான் அவளது நோக்கம் என்பதைப் புரிந்து கொண்ட வள்ளி வாயே திறக்கவில்லை. சீனியம்மாள் சலித்துப் போய் காறித் துப்பிவிட்டு வெறுப்புடன் நகர்ந்தாள்.

அடுத்த சனிக்கிழமை கருப்பன் வாரரேஷனுக்காக கடைக்குப் போனபோது வள்ளிக்கு ரேசன் வழங்கப்படவில்லை என்று கண்டான். ஏதாவது கவனக்குறைவாக இருக்கும் என்று சின்ன ஐயாவிடம் புகார் கூறினான்.

“அந்தத் தேவடியாளுக்கு எதுக்கு ரேசன் குடுக்கணும். வேலைக்கு வராம லைனில இருக்கிற எல்லாப் பயல்களோடவும் படுத்துக் கிடக்கிறா. உனக்கு எத்தனை ஏத்தம் இருந்தா அவளுக்கு ரேசன் கேட்டு இங்கே வருவே.”

“அவ ஆறுநாள் வேல செஞ்சாங்க ஐயா” கருப்பன் பணிவைக் கைவிடவில்லை.

“அவ ஆறுநாள் வேல செஞ்சான்னு பொய் சொல்ற அளவுக்கு உனக்கு தைரியம் வந்துருச்சா. மூணு நாள்தான் வேலைக்கு வந்தா. மீதி மூணு நாள் எங்கே போயிருந்தான்னு அவளையே போய் கேட்டுக்கோ. நல்ல தங்கமான பொண்டாட்டிய வெச்சிருக்கான்.” மாத்யூஸ் சீறினான். வெள்ளையனும் அருகில் நின்றிருந்த மற்றவர்களும் சிரித்தனர்.

மேற்கொண்டு பேசிப் பலனில்லை என்று தெரிந்து கொண்ட கருப்பன் திரும்பி வந்து வள்ளியிடம் நடந்ததை சொன்னான்.

வள்ளியொன்றும் பெரிதாக அதிர்ந்து போய் விடவில்லை. நீளமாகப் பெருமூச்சு விட்டு விட்டு நடந்ததனைத்தையும் சொன்னாள். எல்லாம் அந்த நாசமாப் போன கிழவியின் வேலையாகத்தானிருக்கும் என்றாள்.

“இந்த எஸ்டேட்ல கூட்டிக் குடுக்கிறவங்களுக்கும், தேவடியாளுகளுக்கும்தான் வாழ்க்கை. ஏற்கெனவே ஒரு வருஷம் கட்டிப் போட்டுட்டானுவோ. இப்படி நம்ம சம்பளத்த புடிச்சு வெச்சா அடுத்த வருஷம்கூட இந்த நரகத்திலிருந்து தப்பிக்க முடியாது போலிருக்கே முருகா! கடவுளே காப்பாத்து” கருப்பன் வாய்விட்டுப் புலம்பினான்.

மறுநாள் வள்ளி வேலையிலிருந்து திரும்பி வந்தபோது சமையலறையில் புதிதாக ஒரு குடும்பம் குடிவந்திருப்பதைக் கண்டாள். அந்த இளைஞனுக்கு இருபது வயதும், அவன் மனைவிக்குப் பதினேழு வயதுமிருக்கும். அந்தப் பெண் சிவப்பாகவும், அழகாகவும் தோன்றினாள். ஆடை என்ற பெயரில் உடுத்தியிருந்த கந்தல்கள் அவர்கள் நிலைமையை அப்பட்டமாக வெளிச்சம் போட்டுக் காட்டின. அவளது காதுகள் அந்தக் கால வழக்கப்படி குத்தப்பட்டு ஏறக்குறைய தோள்வரை தொங்கிக் கொண்டு இருந்தன. அவற்றிலிருந்த துளைகளில் ஈய வளையங்கள் மாட்டப்பட்டிருந்தன. அவற்றைத் தவிர அவளுடலில் வேறு ஒரு நகையும் இல்லை. அவர்கள் திருநெல்வேலி மாவட்டத்தில் தென்காசிக்கு அருகில் உள்ள ஒரு கிராமத்தைச் சேர்ந்தவர்கள். சங்கரபாண்டியனின் உதவி மேஸ்திரியான வைரவன் அவர்களுக்குப் பக்கத்து ஊர். கீழே மழையில்லாததால் பயிர்கள் காய்ந்து போய் பிச்சை எடுக்க வேண்டும் அல்லது பட்டினி கிடக்க வேண்டும் என்ற நிலை. ஒருநாள் வைரவன் அவர்களைச் சந்தித்து எஸ்டேட்டில் தினமும் வேலை கிடைக்கும் என்றும், தான் அவர்களை அங்கு அனுப்பி வைப்பதாகவும் கூறினானாம். அவர்களும் மகிழ்ச்சியாக ஒப்புக் கொண்டு வந்து விட்டார்கள். அந்தப் பெண்ணின் பெயர் பூசாத்தாள். கணவன் ராமசாமி.

அந்தப் பெண்ணைப் பழக்கப்படுத்திக் கொண்ட வள்ளி ஏதாவது உதவி தேவைப்பட்டால் கேட்கும்படி சொல்லிவிட்டு வந்தாள்.

மறுநாள் அந்த ஜோடி பதிவு செய்யப்பட்டது. வள்ளியின் குழுவிலேயே பூசாத்தாள் அனுப்பப்பட்டாள். முதல் நாள் பூசாத்தாள் தேயிலைக் காட்டில் நின்றபோது உதவி எழுத்தர் வந்து சேர்ந்தான். நேராக வள்ளியிடம் சென்று அவள் கூடையைப் பார்த்துவிட்டு கூச்சலிட்டான். "வெள்ளையா, இந்த நாய் பழகவே மாட்டேங்குது. இவ இந்த மாதிரி கொழுந்தத்தூக்கிட்டு பாக்டரிக்கு வந்தா, பேர் குடுக்கவே மாட்டேன்."

பின்பு அவன் புதிதாய் வந்திருந்தவர்கள் கிள்ளிக் கொண்டிருந்த சாலுக்குச் சென்றான்.

"இல்லையில்ல இப்படிப் பறிக்கக் கூடாது இதோ நான் காட்டறேன் பாரு" மேத்யூஸ் பூசாத்தாளை நெருங்கினான். பின்பு அங்கிருந்து வந்த கிளுகிளுத்த சிரிப்பொலியிலிருந்து கற்றுக் கொடுப்பதும், கற்றுக் கொள்வதும் இரு தரப்பினருக்கும் திருப்தி அளிக்கும் வகையில் நடக்கிறது என்று வள்ளி புரிந்து கொண்டாள். அன்றிலிருந்து ஒவ்வொரு நாளும் பூசாத்தாள் வேலையில் முன்னேற்றம் அடைந் திருக்கிறாளா என்று பார்க்க மாத்யூஸ் அவர்கள் காட்டுக்கு வந்துவிடுவான் இந்தப் பயிற்சியில் வள்ளி மறக்கப்பட்டாள். அவளுக்கு 'அப்பாடா' என்றிருந்தது. மற்ற கூலிகள் காற்றடிக்கும் திசையை ஊகித்துக் கொண்டும் கிசுகிசுக்கவும் நையாண்டி செய்யவும் தொடங்கினார்கள்.

"அட, பூசாத்தாளோட வாத்தியார் வர்றாரு" ஒருநாள் மாத்யூஸ் வருவதைப் பார்த்து ஒரு கூலி சொன்னாள்.

"எப்பத்தான் பாடம் முடியும்?" இன்னொருத்தி கேட்டாள்.

"அவ ரொம்ப புத்திசாலி, சீக்கிரத்துல கத்துகிட்டு வாத்தியாருக்குக் கத்துக் குடுக்கத் தொடங்கிடுவா" என்றாள் முதலாமவள்.

"வள்ளிக்குப் பாடம் படிக்கவே தெரியல" இன்னொருத்தி சொன்னாள்.

"லட்சுமி மூஞ்சியப் பாரு, இந்தப் பாடம் படிக்கிற வேலை அவளுக்குப் புடிக்கவே இல்லை போலிருக்கு" எல்லோரும் உரக்கச் சிரித்தனர்.

"ஏய் என்னா பல்லைக் காட்டிட்டு இருக்கறீக. நல்லாக் கிள்ளுங்க. முத்தெல, மீனெல பறிக்காதீங்க கொழுந்தக் கிள்ளாதீங்க" மேஸ்திரி எங்கிருந்தோ கூச்சலிட்டான்.

"மொட்டைப் பறிக்காதீங்கன்னு வாத்தியார்கிட்ட சொல்லுதான்" திரும்பவும் அமுங்கிய சிரிப்பொலி எழுந்தது.

ஒருநாள் பூசாத்தாள் அறைக்குத் திரும்ப வரவில்லை. அவள் கணவன் தானே சமைத்து, சாப்பிட்டான். வள்ளி, கருப்பனின் காதில் பூசாத்தாள், மேத்யூசுக்குச் சமைக்கச் சென்றிருப்பாள் என்று கிசுகிசுத்தாள். “மத்தவங்க சமாச்சாரம் நமக்கெதுக்கு” என்றான் கருப்பன். “அவளுக்கு சமைக்கப் புடிச்சுதுன்னா சமைக்கட்டும். சின்ன ஐயாவுக்கு ஒரு நல்ல சமையல்காரி கிடைச்சா நமக்கு சந்தோசம்தான். இஷ்டமில்லாதவங்கள சமைக்கச் சொல்லி தொந்தரவு பண்ண மாட்டானில்ல”ஆனால் வள்ளிக்குத் தூக்கம் வரவில்லை. பூசாத்தாள் எப்போது வருகிறாள் என்று தெரிந்து கொள்ளும் ஆர்வம் அவளது மூளையைக் குடைந்து கொண்டிருந்தது. விழித்தபடியே படுத்துக்கிடந்து பாக்டரி மணி பனிரெண்டு அடிப்பதையும், ஒன்று அடிப்பதையும், இரண்டு அடிப்பதையும் கேட்டுக் கொண்டு இருந்தாள். இறுதியில் விருப்பமின்றியே தூக்கம் அவளைத் தழுவிக் கொண்டது. காலையில் விழித்தபோது பூசாத்தாள் அடுப்படியில் ஏதோ உருட்டிக் கொண்டு இருந்தாள். சற்றுநேரத்தில் ஒரு புத்தம் புதிய சேலை உடுத்திக் கொண்டு வேலைக்கு கிளம்பினாள்.

உதவி எழுத்தர் அவர்கள் காட்டுக்கு வருவதை நிறுத்தி விட்டான். அது கூலிகளின் பார்வைக்குத் தப்பவில்லை. “வாத்தியாருக்கு என்ன ஆச்சு? நாலுநாளா ஆளையே காணோம்.”

“பாடம் படிக்கிறவ எல்லாத்தையும் படிச்சு முடிச்சிட்டா. அதனால காலையில படிக்க வேண்டியதில்ல.” யாரோ ஒருத்தி சொல்ல மற்றவர்கள் சிரித்தனர்.

“அவ நல்லாக் கத்துக்குவான்னு நான் அப்பவே சொன்னேனில்ல புதுச்சேலையைப் பாருங்க. நல்லாப் பாடம் படிச்சு முதல் பிரைசு வாங்கியிருக்கா” மூன்றாவது பெண் சொன்னாள். பூசாத்தாள் அதை கவனிக்காதது போல் வேலையில் மூழ்கியிருந்தாள்.

ஒரு வாரம் கழிந்தது. ஒருநாள் காலையில் வள்ளி தோட்டத்திற்கு வந்தபோது ஒரே அல்லோல கல்லோலமாயிருந்தது. இரண்டு பெண்கள் கட்டிப் புரண்டு புழுதி பறக்கச் சண்டை போட்டுக் கொண்டிருந்தனர். குத்துக்களும் உதைகளும் தாராளமாகப் பரிமாறப்பட்டுக் கொண்டிருந்தன. பக்கத்தில போனபோதுதான் குத்துச்சண்டை வீரர்கள் சின்ன ஐயாவின் பழைய வைப்பாட்டியான லட்சுமியும், புதிய ஆசை நாயகியான பூசாத்தாளும் என்று தெரிந்தது. வேலை இன்னும் தொடங்கவில்லை. கிள்ளுபவர்கள் சுற்றி நின்று சிரித்துக் கொண்டும், நையாண்டி செய்து கொண்டும் இருந்தனர்.

“ஓஹோ ஹோ ஹோ... வாத்தியார் வந்து பாடம் படிக்கிற புள்ளைங்க சண்டைப் போடறதப் பாத்தா எப்படி இருக்கும்?” ஒருத்தி ஆரம்பித்து வைத்தாள். எதைப் பற்றியும் கவலையே படாமல் சண்டை தொடர்ந்து நடந்து கொண்டிருந்தது.

“லட்சுமி, உட்றாதே முடிச்சுக் கட்டீரு. அவ மூக்கைக் கடிச்சுத் துப்பு” யாரோ ஒருத்தி உற்சாகப்படுத்தினாள்.

“பூசாத்தா, விட்டுராதே, போட்டுத்தாக்கு. தொணைக்கு வேணா வாத்தியார வரச் சொல்லுதோம்.” இன்னொரு கும்பல் ஆர்ப்பரித்தது. திரும்பவும் சிரிப்பொலி எழுந்தது.

“இந்தத் தேவடியா லட்சுமிக்கு இனிமே நம்மள வேலை செய்ய வச்சிருவானோன்னு பயம் வந்திருச்சு. நம்ம காச முழுங்கி முழுங்கிக் கொழுத்துப்போய் கெடக்கா.”

“ஆமா, அதோட இந்தத் தேவடியா முண்டை நம்மைப் பத்திக் கதை வேற கட்டிவிடுவா.”

“ஏய் லட்சுமி இனி உன்னை நாய்கூடச் சீந்தாது” என்று சொல்லி விட்டு ஒரு பெண் கடும் வெறுப்போடு காறித் துப்பினாள். ஒவ்வொரு வரும் தன்னைப் பார்த்து சிரிப்பதை கண்டு கடுங்கோபம் அடைந்த லட்சுமி பூசாத்தாளை தாறுமாறாக அடித்து நொறுக்க அவளது ஒரு காதிலிருந்த ஓட்டை பிய்ந்து போனது.

“ஐயய்யோ என்னைக் கொன்னு போட்டாளே, கொன்னு போட்டாளே” பூசாத்தாள் தொண்டையைப் பிய்த்துக் கொண்டு அலறினாள். அந்த நேரத்தில் காட்டுக்கு வந்து சேர்ந்த துணை மேஸ்திரிகள் சண்டையைப் பார்த்து ஓடிவந்து குத்துச்சண்டை வீராங்கனைகளைத் தனித்தனியாகப் பிரித்து போட்டியை நிறுத்தினர். கிழிந்துபோன காதிலிருந்து ரத்தம் ஒழுக பூசாத்தாள் பெருங்குரலெடுத்து ஒப்பாரி வைக்கத் தொடங்கினாள்.

“இதை சின்னையா கிட்ட சொல்லிரணும்” என்றான் ஒரு மேஸ்திரி. அவசரமாக ஓடிவந்து கொண்டிருந்த வெள்ளையனிடம், “ஏலே வெள்ளையா, உங்கூலிக லட்சுமியும், பூசாத்தாளும் சண்டை போட்டு லட்சுமி பூசாத்தா காதை கடிச்சு துப்பிட்டா. அவள ஆசுபத்திரிக்குக் கூட்டிட்டு போறோம். நீ என்ன செய்யணுமோ செஞ்சுக்கோ”

பூசாத்தாள் மருத்துவமனைக்குக் கொண்டு செல்லப்பட்டு உள் நோயாளியாக அனுமதிக்கப்பட்டாள். ராமசாமி பக்கத்திலேயே இருந்து மனைவியைக் கவனித்துக் கொண்டான். உதவி எழுத்தர் தன் செல்வாக்கைப் பயன்படுத்தி மறுநாள் கிழிந்த காதை சரி செய்வதற்காக

பூசாத்தாளை முடீஸிலிருந்த மருத்துவமனைக்கு அனுப்பச் செய்தான்.

# 2

கீழான இச்சைகளுக்கு அடிமையானவன்
தன் தறிகெட்ட ஆன்மா
இழுத்துச் செல்லும்
வழியிலேயே செல்வான்.

ரூத் - வேர்ட்ஸ்வொர்த்

பிப்ரவரி மாதம் விடைபெற்றுக் கொள்ளும் நேரத்தில் சங்கரபாண்டியன் ஏராளமான கூலிகளோடு சமவெளிகளிலிருந்து திரும்பி வந்தான். அவர்களில் முத்தையா குடும்பம் இல்லாததைக் கண்டு கருப்பனும் வள்ளியும் ஏமாற்றமடைந்தனர். சங்கனும் அவன் மனைவியும்கூடத் திரும்பி வரவில்லை. இரண்டே இரண்டு பழைய கூலிகள் மட்டுமே மீண்டும் எஸ்டேட்டுக்குத் திரும்பியிருந்தனர். மற்றவர்கள் அத்தனைபேரும் புதியவர்கள். புதிதாக வந்தவர்களில் மயிலோடை கிராமத்திற்குப் பக்கத்து ஊர்களைச் சேர்ந்தவர்கள் யாராவது இருக்கிறார்களா என்று கருப்பன் விசாரித்தான். அதிலும் ஏமாற்றம்தான் மிஞ்சியது.

“முத்தையா அண்ணாச்சி திரும்ப வருமா?” வள்ளி ஒருநாள் கேட்டாள்...

“வர்றேன்னுதான் சொல்லுச்சு. கொஞ்சநாள் கழிச்சு வந்தாலும் வரும். ராமாயி உங்கிட்ட எதுனாச்சும் சொல்லிச்சா?”

வள்ளி இல்லையென்று தலையசைத்தாள்.

“கொஞ்சநாள் பாக்கலாம். வர்றதாயிருந்தா மேஸ்திரியோடவே வந்திருப்பாகள்ள?” ஏமாற்றத்தில் மூழ்கியிருந்த கருப்பன் தனக்குத்தானே முணுமுணுத்துக் கொண்டான்.

“வேற ஏதாவது எஸ்டேட்டுக்குப் போயிருப்பாகளா?”

“அப்படியிருக்காது. இந்த எஸ்டேட்தான் ஆனமலைலயே நல்லதுன்னும், இங்கதான் காச்சல் கம்மின்னும், நெறய கொழுந்து கிள்ள முடியும், சம்பளம் கிடைக்குமுன்னும் அண்ணாச்சி சொல்லியிருக்குது. அதனால கண்டிப்பா வேற எஸ்டேட்டுக்குப் போயிருக்க மாட்டாக.” ஒரு வாரம் கழித்து வெள்ளையன் ஒரு கடிதத்தைக் கொண்டு வந்தான். அது முத்தையாவிடமிருந்து வந்த கடிதம். முத்தையாவும், ராமாயியும் கருப்பனின் அம்மாவையும், அக்காவையும், மச்சானையும் பார்க்க

மயிலோடைக்குப் போயிருந்தார்களாம். எல்லோரும் நலமாக இருக்கிறார்கள். கருப்பனும், வள்ளியும் வராதது குறித்து அவர்களுக்கு ஏமாற்றம்தான். ஆனால் முத்தையா அவர்கள் கொஞ்சம் பணம் சேர்த்து விட்டு விரைவில் வந்து விடுவார்கள் என்று நம்பிக்கை அளித்துள்ளான். ஒரு மாதத்தில் தானும் என் மனைவியும் எஸ்டேட்டுக்குத் திரும்பிவந்துவிடுவதாக கடிதத்தில் முத்தையா உறுதியும் அளித்திருந்தான்.

விரக்தியில் தொய்ந்த போயிருந்த கருப்பனுக்கும் வள்ளிக்கும் அந்தக் கடிதம் மிகுந்த உற்சாகத்தைக் கொடுத்தது. தாங்களே மயிலோடைக்குப் போய்வந்ததைப் போலத் தோன்றியது அவர்களுக்கு. முத்தையாவும் ராமாயியும் வரும் நாளுக்காக இப்போதிருந்தே அவர்கள் காத்திருக்கத் தொடங்கினார்கள். பெற்றோரைப் பற்றி இன்னும் அதிக விவரங்களைப் பெறுவதற்காக.

இன்னொரு வாரம் கழிந்தது. முத்தையாவினிடத்தில் கோவிந்தன் என்ற புதிய கூலியின் குடும்பம் அமர்த்தப்பட்டது. கோவிந்தனின் மனைவி மாரியாயி மற்றும் அவர்களது இரண்டு வயதுப் பெண் குழந்தையோடு அவன் தம்பி ராஜாவும் மலைக்கு வந்திருந்தனர். இது பற்றி கருப்பன் வெள்ளையனிடம் கேட்டபோது முத்தையாவுக்கு இன்னொரு நல்ல இடம் கொடுக்கப்படும் என்று கூறினான். "முத்தையா பழைய கூலிடே அவனுக்கு நல்ல எடம் கொடுக்கணும்லா."

கோவிந்தனின் பெற்றோர்கள் சின்னம்மையினால் இறந்து போனதால், கவனித்துக் கொள்ள யாரும் இல்லையென்று கோவிந்தன் தம்பியையும் தன்னோடு அழைத்து வந்திருந்தான். அவர்களுக்கு ஒதுக்கப்பட்ட அறை மிகவும் சிறியதென்பதால் ராஜாவுக்குத் தூங்கத் தனியிடம் ஒதுக்க முடியவில்லை. "இந்த மாதிரி நெறயக் குடும்பங்க இருக்கு. காட்ல இருந்து மரம் கொண்டு வந்து நான் கொடுக்கற மூணு பலகைகளை வெச்சு சுவரோரமா நாலடி உயரத்துல ஒரு (மேடை) பரண் மாதிரி கட்டிக்க. நீயும் பொஞ்சாதியும் மேல படுத்துக்கங்க. ஒந்தம்பி கீழ படுக்கட்டும் இப்படித்தான் எல்லா லூட்லயும் செய்யுதாங்க. எங்கூட வா. மத்த எடத்துல எல்லாம் எப்படி மேடை கட்டியிருக்காங்கன்னு காட்டுதேன்" என்றான் வெள்ளையன்.

கோவிந்தன் ராசா மற்றும் கருப்பனின் உதவியோடு ஒரு மேடை கட்டிக் கொண்டான்.

இரண்டு நாட்கள் கழித்து சங்கரபாண்டியனோடு வந்த எல்லா கூலிகளும் பதிவுக்கு அழைத்துச் செல்லப்பட்டனர். வேலையிலிருந்து

வந்த பிறகு மாரியாயியிடம் வள்ளி அவர்களைப் பற்றி விசாரித்தாள். “நாங்க திருநெல்வேலில ராஜபாளையத்துக்குப் பக்கத்துல இருக்கிற புத்தூர்காரங்க.”

இதுக்கு முன்னாடி ஏதாவது எஸ்டேட்ல வேல பாத்திருக்கீகளா?”

“இல்ல இதுதான் மொதத்தடவ”

“இங்க எப்படி வந்தீங்க? இதப் பத்தி எப்படித் தெரியும்?” வள்ளியால் அந்தக் கேள்வியைக் கேட்காமலிருக்க முடியவில்லை.“கொஞ்ச தூரத்து ஒறவுக்காரங்களோட வந்தோம். அவங்க கங்காணிக்குப் பக்கத்து ஊர்க்காரவுக. ஆறு மாசத்துக்கு முன்னால மாமியாரும், மாமனாரும், சின்னம்மை வந்து செத்துப் போயிட்டாக. அவங்களப் பாத்துக்கறதுக்கும், பொதைக்கறதுக்கும் எங்ககிட்டிருந்த எல்லாமே செலவாகி கடன் வேற ஆகிப்போச்சு. வேலையே கெடைக்கல. அப்ப சொந்தக்காரங்க எஸ்டேட்டுக்குப் போறதாக் கேள்விப்பட்டு அங்க போனப்ப கங்காணிகிட்ட கூட்டிட்டுப் போனாக. அவுக கடன அடைக்கதுக்கு அம்பது ரூபா கொடுத்தாரு.”-

“எங்கூரு கயத்தாருக்குப் பக்கத்தால இருக்குது” வள்ளிக்கும் தன்னைப் பற்றிச் சொல்ல வேண்டும் போலத் தோன்றியது. மாரியாயி சொல்லச் சொல்ல அவளுக்குள் பழைய நினைவுகள் அலைமோதிக் கொண்டிருந்தன.

“எங்களுக்கு எஸ்டேட்டில இது ரெண்டாவது வருசம். ஏதாவது ஒத்தாச வேணுமின்னா கூச்சப்படாம கேளு. என்ன வேணுமின்னாலும் செஞ்சு தரோம். நாங்க இங்க வந்தப்ப எப்படி இருந்துச்சின்னு எனக்கு ஞாபகமிருக்குது. உங்க இடத்துல முன்னாடி இருந்த முத்தையா அண்ணாச்சியும் ராமாயி அக்காவும்தான் எங்கள அவ்வளவு நல்லா பாத்துகிட்டாக. அவங்க இல்லைன்னா நாங்க என்ன ஆயிருப்போமோ” வள்ளியிடமிருந்து அவளையறியாமலேயே ஒரு ஏக்கப் பெருமூச்சு வெளிவந்தது.

“சத்தியமா இங்க வந்து பாத்தவுடனே எங்களுக்கும் என்னமோ மாதிரி ஆகிப்போச்சு. எஸ்டேட்டுன்னா அப்படி இருக்கும், இப்படி இருக்குமின்னு கதைகதையா சொன்னத நம்பி இங்க வந்தா… குளிரு வேறதாங்கவே முடியல. நேத்திக்கு எங்க யாருக்குமே தூக்கம் வரல. இந்த கொஞ்சம்போல எடத்துலயே பொங்கியும் தங்கியும் காலம் தள்ள வேண்டியிருக்கே. கொளுந்தனார் வேற பலகைக்குக் கீழே படுக்க வேண்டியிருக்கு. நம்ம ஊரில வேலை கெடைக்காட்டிக் கூட வீடு

வாசலெல்லாம் இதைவிட நல்லாத்தான் இருக்கும். இந்த வீட்டு அளவுக்கு எங்க குடிசை இருக்கும். அது முழுக்க நாங்கதான் இருப்போம். வெளிய கூட பொங்குவோம், தூங்குவோம். குளிரு அடிக்காதுல்லா. இங்க நாம ரெண்டு குடும்பம் இருக்க வேண்டியிருக்குல்லா. இதில எப்படி குடும்பம் நடத்த முடியும். புருஷன் பொஞ்சாதிக்குள்ள ஒரு பேச்சுகூட பேச முடியல.. தெரியாத்தனமா வந்திட்டோம். வேலை செஞ்சு எவ்வளவு சீக்கிரம் முடியுமோ சம்பாரிச்சு மேஸ்திரி கடனை அடைச்சிட்டு ஊருக்குப் போயிறனும். இந்தமாதிரி மோசமான இடத்தில இருக்கிறத விட ஊருல பட்டினி கிடக்கலாம்." மாரியாயி பொழிந்து தள்ளிவிட்டாள். வள்ளி பதிலே பேசவில்லை.

மறுநாள் புதிய கூலிகள் பதிவு செய்யப்பட்டு முதன்முதலாக வேலைக்குச் சென்றனர். அவர்கள் இன்னொரு குழுவில் இருந்ததால் வள்ளியால் மாரியாயிக்கு எந்த உதவியும் செய்ய முடியவில்லை. இரவில் மாரியாயி தன்னுடைய அனுபவங்களை வள்ளிக்கு விவரித்தாள். "பழைய ஆளுங்க கிள்ளுற வேகத்தைப் பாத்து திகைச்சுப் போயிட்டேன். இது நம்மால முடியவே முடியாதுன்னு நெனைச்சிட்டேன். ஆனா சாயந்தரத்துக்குள்ள கொஞ்சம் பழகிட்டேன். பெரிய கஷ்டமாத் தெரியல"

"ஆமா, போகப் போக வேகமா கிள்ளிப் பழகிரலாம். கிள்ளறது கஷ்டமே இல்ல..." வள்ளி வாக்கியத்தை முடிக்கவில்லை என்பதை மாரியாயி கண்டு கொண்டாள். "வேற என்ன கஷ்டம்? எல்லாத்தையும் சொல்லு" மாரியாயி வற்புறுத்தினாள்.

"நாம கொழுந்து கிள்ளினா மட்டும் போதுமா. அதை பாக்டரிக்குத் தூக்கிட்டுப் போகணும். இப்ப நமக்கு நிறைய கொழுந்து கிடைக்கறதில்ல. ஆனா சீசனில் கூடை நிறைஞ்சு போயிடும். சில சமயம் மத்தியானமும் ராத்திரியும் ரெண்டு தடவை எடைபோட வேண்டியிருக்கும். கூட நெறய சொமய தூக்கிட்டு சாதாரணத் தரையிலேயே நடக்க முடியாது. இதுல வேற நட்டகுத்தா இருக்கிற மலை மேல ஏறணும். சும்மா மலைமேல ஏறினாலே மூச்சு வாங்கும். இந்த மாதிரி கனமான கூடையைத் தூக்கிட்டு ஏறுறது ரொம்ப ரொம்ப கஷ்டம். நான் புதுசா வந்தப்ப நாலு எட்டு வப்பேன். கொஞ்சம் நின்னு மூச்சு வாங்குவேன். திரும்பவும் நாலெட்டு வெப்பேன். திரும்பவும் நிப்பேன். இப்படித்தான் மலை ஏறினேன். பொம்பளைங்களை இந்த மாதிரி கனமான சுமையத் தூக்கிட்டு மலை ஏற வைக்கிறது எவ்வளவு கொடும. என்ன செய்ய இதுதான் நம்ம தலைவிதி."

"அப்புறம்?" மாரியாயியின் குரலிலிருந்தது பீதியா? கவலையா? அல்லது

அனைத்தையும் தெரிந்து கொள்ளும் ஆர்வமா? இவை அனைத்தும் கலந்த கலவையா? என்று புரிந்து கொள்ள முடியவில்லை.

“சீக்கிரத்துல காய்ச்சல் காலம் தொடங்கிடும். எங்க ஊருல இந்த மாதிரி காய்ச்சலில நான் கஷ்டப்பட்டதே இல்ல. அக்கம் பக்கம் யாருக்கும் வந்தும் பாத்தததில்ல. அது மனுசன நடு நடுங்க வைக்கும். தூக்கித் தூக்கிப் போடும். ஒரு தடவை வந்துட்டு உடவா செய்யும், திரும்பத் திரும்ப வந்திட்டே இருக்கும். ஒரு மனுசன விட்டு வைக்காது. காய்ச்சலுக்கு குடுக்கிற மருந்து இருக்கே, கசப்புண்ணா கசப்பு அப்பாடி. காய்ச்சலே பரவாயில்ல மாதிரி தோணிடும். அதவிட்டா மழைகாலம் வரும். மாதக்கணக்கில நிக்காம மழை பெய்யும். அட்டைக கூட்டம் கூட்டமா வந்து இருக்கிற ரத்தத்தையெல்லாம் உறிஞ்சி எடுத்திரும். ரொம்ப பயந்துடாத. சீக்கிரத்துல எல்லாம் பழகிப் போயிரும். மொதல்ல எனக்கும் இப்படி வந்து சிக்கிட்டோமேன்னு தான் இருந்துச்சு. போகப்போக இதெல்லாம் பழகிப் போச்சு.”

ஒரு மாதம் கழிந்தது. இன்னும் முத்தையா வரவேயில்லை. ஒருநாள் கருப்பன் முத்தையா எப்போது வருவான் என்று வெள்ளையனிடம் கேட்டான்.

“அந்தக் கழுதைக்குப் பொறந்த பய வரமாட்டேன்னுட்டான். அவங்க ஊர்ல ஏதோ நாய்க்கன்கிட்ட வேலைக்கு சேர்ந்திட்டான் போலிருக்கு” என்று பதில் வந்தது.

கருப்பனுக்கும் வள்ளிக்கும் அந்த செய்தி மிகுந்த துயரத்தை அளித்தது. சொந்த அண்ணனைப் போலவே முத்தையாவை அவர்கள் நினைத்துக் கொண்டிருந்தனர்.

பூசாத்தாள் முடீஸிலிருந்து வந்து விட்டாள். கிழிந்த காதோடு இன்னொரு காதும் சரிசெய்யப்பட்டு நவநாகரிக பெண்களின் காதுகளைப் போலவே அவை தோற்றமளித்தன. சில நாட்களில் நவநாகரீகமான கம்மல்களை அணிந்து கொண்டு அவள் வலம் வரத் தொடங்கினாள். சின்ன ஐயா அந்த கம்மல்களைப் பொள்ளாச்சியிலிருந்து வாங்கி வரச்செய்து கொடுத்திருக்கிறான் என்ற வதந்தி உலாவியது.

ஒருநாள் மாலை வள்ளி வேலையிலிருந்து வந்தவுடன் மாரியாயி அவளை ரகசியமாக இழுத்துச் சென்றாள். வள்ளியின் தோளுக்கு மேல் ஆண்கள் யாராவது தென்படுகிறார்களா என்று எட்டிப் பார்த்தபடி கிசுகிசுத்தாள். “இன்னைக்கு காட்டுல ஒரு வேடிக்கை நடந்திச்சு. பெரிய

தொரை குதிரையில வந்தாரு. ஒரு மேஸ்திரியக் கூப்பிட்டு அவன்கிட்ட குதிரையைக் குடுத்திட்டு இறங்கி வந்து கூடைகளை எல்லாம் பாத்தாரு.ஒண்ணு ரெண்டு கூடைகளில பழுத்த இலை இருந்திச்சி. மேஸ்திரிகள தமிழில கெட்ட கெட்ட வார்த்தையாத் திட்டு திட்டுன்னு திட்டுனாரு.

பொறவு கிள்ளிட்டிருக்கிற இடத்துக்குப் போய் எல்லாரையும் இஷ்டத்துக்குக் கிள்ளியும், கிச்சுகிச்சு முட்டியும் வெளையாண்டாரு. அப்புறம் செல்லம்மாங்கிற புள்ளைகிட்டப் போயி அவளை அப்படியே தூக்கிக் குதிரையில வெச்சுக் கொண்டு போயிட்டாரு. ஒருத்தரும் ஒண்ணும் சொல்லல. புள்ளைங்க சிரிக்க வேற செஞ்சாங்க. ஒரு மணிநேரம் கழிச்சு செல்லம்மா வந்து ஒண்ணுமே நடக்காத மாதிரி கிள்ளத் தொடங்கிட்டா. இங்க இப்படித்தான் இருக்குமா?"

"பெரிய தொர அவருக்கு நல்லாத் தெரிஞ்ச புள்ளைங்ககிட்ட தான் இப்படிப் பண்ணுவாரு. செல்லம்மாதான் அவருக்கு ரொம்பப் புடிக்குமின்னு கேட்டிருக்கேன். ஆனா எல்லார்கிட்டேயும் இப்படி நடந்துக்க மாட்டாரு." வள்ளி ஜாக்கிரதையாக பதிலளித்தாள். சமையலறையில் குடியிருந்தவர்கள் இன்னும் வந்து சேரவில்லை. மாரியாயி அதைச் சுட்டிக்காட்டி சொன்னாள். "இந்தப் பொம்பள சின்ன ஐயாவோட வெப்பாட்டின்னு சொல்றாக. கொஞ்சம்பேர் அவகிட்ட ஜாக்கிரதையா இருக்க சொன்னாக. பெரிய காட்டு ஐயா, சின்ன ஐயா யாரப்பத்தியும் அவமுன்னாடி எதுவும் பேசவேண்டா. பேசினா அவ உடனே சின்ன ஐயாகிட்ட சொல்லிக் குடுத்திடுவான்னு சொல்லுதாங்க."

"நானும் அப்படித்தான் கேள்விப்பட்டேன். நான் யார்கிட்டையும் எதுவும் பேசவும் மாட்டேன். அந்தமாதிரி ஆளுககிட்டயிருந்து வெலகி இருந்துக்கோ மாரி."

மலேரியாக் காலம் தொடங்கியது. முதன்முதலில் காய்ச்சலில் விழுந்தவர்களில் கருப்பனும் ஒருவன். வெள்ளையன் கருப்பனை மருத்துவமனைக்கு அனுப்ப குரூப் ஒரு ஊசி போட்டார். மறுநாளே அவன் வேலைக்கு அனுப்பப்பட்டான். வள்ளிக்குப் பேறுகாலம் நெருங்கிக் கொண்டிருந்தது. அவளுக்கு இந்த நிலையில் காய்ச்சல் வந்தால் ரொம்பவும் மோசமாகப் போய்விடுமென்று கருப்பன் பதறிக் கொண்டிருந்தான்.

முத்துக்கருப்பன் என்ற ஒரு நாட்டு வைத்தியன் எஸ்டேட்டில இருந்தான். எஸ்டேட்டைப் பொறுத்தவரை ஜோஸ்யன், தாயத்துக் கொடுப்பவன்,

மந்திரம் மாயம் செய்பவன் எல்லாமே அவன்தான். “இத பாருப்பா, நான் என்னால முடிஞ்ச மருந்து கொடுப்பேன். ஆனா சிலபோது அதனால ஒரு பிரயோசனமும் இருக்காது. மாரியம்மனுக்கு காவு கொடுத்தாதான் சரியாகும். அப்புறம் ஒரு மந்திரிச்ச கயிறு தர்றேன். அத உன் பொஞ்சாதியோட கழுத்தில கட்டிட்டன்னா காய்ச்சல் பிசாசு அவகிட்ட வரவே வராது.”

“அதுக்கு எவ்வளவு செலவாகும்?

“மாரியம்மனுக்கு பலி கொடுக்கணும்னா நல்ல எளஞ் சேவலாத்தான் கொடுக்கணும். ஒரு நல்ல சேவலா நீயே வாங்கி எங்கிட்ட கொடு. இல்லாட்டி அதுக்கான பணத்த எங்கிட்ட கொடு. நல்ல சேவலா வாங்கி வாரேன். அடுத்தநாள் படையல் போட்டுறலாம். உனக்காக எல்லாத்தையும் கம்மி செலவுல பண்ணித்தர்றேன். பன்னென்டு ரூபாகுடு”முத்துக் கருப்பன் குண்டைத் தூக்கிப் போட்டான்.

“எங்கிட்ட பணமே இல்ல சாமி. இத்தன பணத்தை எப்டி சம்பாதிக்கறதுன்னும் தெரியல. மேஸ்திரிகிட்ட கடன் வாங்க எனக்கு இஷ்டமேயில்ல” கருப்பன் கையைப் பிசைந்தான்.

“பெரியய்யா எழுதித் தந்தா ஆபிசுல பணம் கெடைக்கும். மேஸ்திரிகிட்ட சொல்லி பெரியய்யாகிட்ட எழுதிவாங்கலாம். உனக்கு ஏற்கனவே கடன் இருந்தா பணம் கெடைக்காது. அப்படீன்னா யார் கிட்டயாவது கடன் வாங்குறத தவிர வேற வழியே இல்ல.” முத்துக்கருப்பன் சற்றே நிறுத்தினான். வேணுன்னா நானே உனக்கு கொஞ்ச வட்டிக்குப் பணம் தர்றேன்!”

“யார்கிட்டயும் பணம் வாங்க எனக்கு இஷ்டமில்ல. பெரியய்யாகிட்டே இருந்து கடுதாசு வாங்க முடியுமான்னு பாக்கேன். ஆனா நீங்க கேட்டதைக் கொஞ்சம் கொறச்சுக்க மாட்டீகளா?” கருப்பன் கடன் விஷயத்தில் பிடிவாதமாயிருந்தான்.

நீண்டநேர பேரத்துக்குப் பிறகு முத்துக்கருப்பன் கருப்பனுக்காக சேவல் வாங்குவது உட்பட அனைத்தையும், ஏழு ரூபாய்க்குள் செய்து கொடுப்பதாக ஒப்புக் கொண்டான்.

கருப்பன் சங்கரபாண்டியனை அணுகி பெரியய்யாவிடம் கடிதம் வாங்கித் தரும்படி கேட்டான்.

“என்ன?” மேஸ்திரி துள்ளியெழுந்தான். “எங்கடனையே இன்னும் அடைக்கல. ஆபீஸ்ல வேற இன்னும் ஏழு ரூபாய் கடன் வாங்கித்தரச் சொல்லுத. இப்படியே போனா வருசக் கடைசில உங்கணக்குல

ஒண்ணுமேயிருக்காது. அப்புறம் எம்பணத்த எப்படிலே திருப்பித் தருவ?"

"நாணொண்ணும் தேவையில்லாம கடன் கேக்கல மேஸ்திரி. ரொம்ப அவசியங்கறதுனாலதான் கேக்கேன்". பின்பு கருப்பன் அவனிடம் வள்ளியின் நிலையையும் முத்துக்கருப்பன் சொன்னதையும் விளக்கினான்.

சங்கரபாண்டியன் முத்துக்கருப்பனைப் பகைத்துக் கொள்ள விரும்பவில்லை. முத்துக்கருப்பனுக்கு தொழிலாளிகளிடம் நிறைய செல்வாக்கு இருந்தது. எனவே பெரிய ஐயாவிடம் பேசி கடிதம் வாங்கித் தர ஒப்புக் கொண்டான். அதேபோல் இனிமேற்கொண்டு இதுபோன்ற உதவி கேட்டு வரக்கூடாது என்று எச்சரிக்கவும் தவறவில்லை. மறுநாள் சங்கரபாண்டியனிடமிருந்து அழைப்பு வந்தது.

"விசயத்தை சொன்னவுடனே பெரிய ஐயா வானத்துக்கும் பூமிக்குமா குதிச்சாரு. கடிதாசியும் இல்ல. ஒரு மண்ணும் இல்லைன்னுட்டாரு. நான் கையக் கால புடிச்சு வாங்கி வந்துருக்கேன். நாளைக்கு மத்தியானம் ஆபீசுக்குப் போயிப் பணத்தை வாங்கிக்கோ."

மறுநாள் மாலை ஐந்து மணிக்கு ஹெட் கிளார்க் அவனிடம் கைநாட்டு வாங்கிக் கொண்டு பணத்தைக் கொடுத்தான். "பெரிய தொர பணமே குடுக்க மாட்டேனுட்டாரு. நான்தான் உனக்காக கெஞ்சிக் கேட்டு வாங்கிதாரேன்" அவனும் சங்கரபாண்டியன் பாடிய அதே பல்லவியை திரும்பப் பாடினான்.

கருப்பன் நன்றியுணர்ச்சி மேலிட பணத்தைப் பெற்றுக் கொண்டு நேராக வந்து முத்துக் கருப்பனிடம் கொடுத்தான்.

"வெள்ளிக்கிழம சாயந்தரம் ஆறு மணிக்கு வா. எல்லாம் தயாரா இருக்கும். மாரியம்மன் கோயிலுக்குப் போயி காவு குடுத்திட்டு உனக்கு மந்திரிச்ச கயிறு தாரேன்."

முத்துக்கருப்பன் சொன்ன கோயில் ஒரு சிதைந்து போன ஒற்றை அறைக் கட்டிடம். முன்னால் புல்லையும், காட்டுக் கொடிகளையும் கொண்டு ஒரு சிறிய பந்தல் வேயப்பட்டிருந்தது. முத்துக்கருப்பன் அறையைத் திறந்து விளக்கேற்றினான். பின்பு கையோடு கொண்டு வந்திருந்த சேவலை பலி கொடுத்து ஏதோ மந்திரங்களை முணு முணுத்தபடி ரத்தத்தை சாமி சிலை மீது தெளித்தான். வள்ளியின் மீதும் சில துளிகளை தெளித்தான். பின்பு பனை ஓலையில் மடிக்கப்பட்டிருந்த தாயத்தை கருப்பனிடம் கொடுக்க அவன் அதை வள்ளியின் கழுத்தில் கட்டினான்.

“இப்ப தைரியமாப் போ மக்கா. காய்ச்சக்காரப் பிசாசு உன்னைக் கண்டாலே காத தூரம் ஓடிரும்.” கருப்பனுக்கும் வள்ளிக்கும் இதயம் லேசாகிப் போனது. மகிழ்ச்சியோடு இருவரும் அறைக்குத் திரும்பினர்.

அந்த ஆண்டு ஆனைமலைகளில் மலேரியா கோர தாண்டவம் ஆடியது. குரூப்பும் அவனது மெடிக்கல் கூலியும் பகலிலிருந்து இரவு வரை மருந்துப் பாட்டில்களோடு லைன்களில் சுற்றி வந்தனர். மிகக் கடுமையாகப் பாதிக்கப்பட்டவர்களை மருத்துவமனைக்குக் கொண்டு சென்று ஊசி போட்டனர். சங்கரபாண்டியனும் வெள்ளையனும் ஒரே நேரத்தில் காய்ச்சலில் விழுந்தனர். சங்கரபாண்டியன் பெரிய மேஸ்திரி என்பதால் குரூப் அவனது அறைக்கே சென்று ஊசி போட்டார். நான்கு நாட்களில் காய்ச்சல் குணமாகிவிட்டது என்றாலும் பத்து நாட்களுக்கு மேஸ்திரி அறையை விட்டு வெளியே வரவில்லை.

ஆனால் கூலிகளைப் பொறுத்தவரை காய்ச்சல் குணமான மறுநாளே அவர்கள் வேலைக்கு ஏறக்குறைய இழுத்துச் செல்லப்பட்டனர். பூசாத்தாளுக்கும் காய்ச்சல் வந்தது. அவ ஐந்து நாட்களில் குணமடைந்து விட்டாள். சங்கரபாண்டியனோ, வெள்ளையனோ அவளைக் கண்டு கொள்ளவேயில்லை. பத்து நாட்களுக்கு சின்ன ஐயா அவளுக்குப் பேர் கொடுத்துவிட்டான் என்று சொல்லப்பட்டது. மற்றவர்கள் வேலைக்குப் போன நேரத்துல அவள் அறைக்கு சின்ன ஐயா வந்ததாகக்கூட வதந்தி உலவியது.

கோவிந்தனும், அவன் மனைவியும் தம்பியும் காய்ச்சலில் விழுந்தனர். கோவிந்தன் இருந்த நிலையைப் பார்த்துவிட்டு அவனை ஆசுபத்திரியில் சேர்க்க வேண்டும் என்று குரூப் உத்தரவிட்டார். கருப்பனையும் மற்ற இரண்டு கூலிகளையும் அரைநினைவோடு இருந்த கோவிந்தனை ஆஸ்பத்திரிக்குத் தூக்கிச் செல்லும்படி வெள்ளையன் உத்தரவிட்டான். மாரியாயி வேலைக்குப் போகும்படி பணிக்கப்பட்டாள். ஆனால் இரவில் மருத்துவமனையில் இருந்து கோவிந்தனை கவனித்துக் கொள்ள அனுமதி அளிக்கப்பட்டது. ராசா சமைத்ததோடு இரவில் குழந்தையையும் பார்த்துக் கொண்டான். கோவிந்தன் ஆஸ்பத்திரியிலிருந்து அனுப்பப்படுவதற்கு முன்பே மாரியாயியைக் காய்ச்சல் தாக்கியது. அங்கே மருத்துவமனையில் இடம் இல்லாததால் அவள் வெளி நோயாளியாகவே நிறுத்தி வைக்கப்பட்டாள். ஏராளமான கூலிகள் மரணமடைந்தனர். கருப்பனின் லைனிலேயே ஐந்து பெரியவர்களையும் பனிரெண்டுக்கும் மேற்பட்ட குழந்தைகளையும் மலேரியா காவு வாங்கியது. இது ஏதோ மிகவும் மோசமான வகை மலேரியாக் காய்ச்சல் என்று கூறப்பட்டது.* சில கூலிகள் காய்ச்சல்

வந்ததுமே நினைவிழந்து 24 மணிநேரத்தில் இறந்து போனார்கள். குமரிமலை எஸ்டேட்டிலிருந்து நான்கு மைல் தொலைவில் உள்ள வாகமலை என்ற எஸ்டேட்டில் முக்கால்வாசிப் பேருக்கு காய்ச்சல் வந்தது என்றும் கால்வாசிப் பேர் இறந்து போனார்கள் என்றும் வதந்தி உலாவியது. ஆனைமலைகளில் உள்ள அத்தனை எஸ்டேட்டுகளில் இருந்தும் மரணபயத்தால் அறிவிழந்து போன ஏராளமான கூலிகள் தறிகெட்டு பொள்ளாச்சி நோக்கி ஓட்டமெடுத்தனர். மலைப்பாதை இன்னொரு முறை கம்பளம் விரித்தது போல் பிணங்களால் மூடப்பட்டது. ஒருவரும் பொள்ளாச்சி போய் சேரவில்லை.

* மேலிக்கண்ட் மலேரியா

# 3

பெண்ணிடம் பிறந்த மனிதருக்கு வாழ்நாளோ
குறைவு; வருத்தமோ மிகுதி...

பைபிள் - யோபு-14

ஒரு நாள் கருப்பன் வேலை செய்து கொண்டிருக்கும் போது உடனடியாக மருத்துவமனைக்குப் போகும்படி வெள்ளையனிடமிருந்து செய்தி வந்தது. கருப்பனுக்கு சர்வாங்கமும் பதறியது. நெஞ்சே வெடித்துவிடும் வேகத்தில் ஓடி வந்தவன் வள்ளி அரை நினைவாய்க் கிடப்பதைக் கண்டான். அவளுக்கு விட்டு விட்டு வலிப்பு வந்து கொண்டிருந்தது. அவளோடு வந்திருந்த இரண்டு பெண்கள் அவளை அசையாமல் பிடித்துக்கொண்டிருந்தனர். கொழுந்து கிள்ளிக் கொண்டிருக்கும்போது வள்ளி நடுங்குகிறது என்றாளாம். வீட்டுக்குப் போகச் சொன்னவுடன் கொஞ்ச தூரம் போவதற்கு முன்பே வலிப்பு வந்து கீழே விழுந்து விட்டாளாம். டாக்டர் ஊசி போட்டிருக்கிறார் என்றார்கள். அவளுக்குக் கருப்பனை அடையாளமே தெரியவில்லை. கருப்பன் வந்தவுடன் மற்ற பெண்கள் வேலைக்குத் திரும்பினார்கள்.

மாலை டாக்டர் குரூப் வள்ளியைப் பார்க்க வந்தார். அவர் வள்ளி ஆபத்தான நிலையில் இருப்பதாகவும், கடும் காய்ச்சலினால் கருச்சிதைவு ஏற்படலாம் என்று அஞ்சுவதாகவும், துணையிருக்க ஒரு பெண்ணை ஏற்பாடு செய்யும்படியும் கூறினார். மாரியாயி கருப்பன் கேட்டுக் கொண்டதனால் முழுமனதோடு அங்கே தங்கினாள். எதிர்பார்த்தபடியே இரவில் வள்ளிக்கு கருக்கலைந்து போனது.

கருப்பன் மெடிக்கல் கூலியை எழுப்பினான். டாக்டர் ஒரு ஊசி போட்டுவிட்டு கருப்பனிடம் கொஞ்சம் பிராந்தி கொடுத்து அரைமணி நேரத்திற்கு ஒருமுறை கொஞ்சம் கொஞ்சமாக வள்ளிக்குக் கொடுக்கும்படி சொன்னார்.

வள்ளி கொஞ்சம் சுயநினைவு வந்ததும், கருப்பனைக் கண்டு கொண்டு தேம்பினாள். கருப்பன் அவளுக்கு ஆறுதல் சொல்ல முயன்றாலும் அவனுடலும் விம்மல்களால் குலுங்கிக் கொண்டிருந்தது. இன்னொரு முறை வலிப்பு வர வள்ளி நினைவிழந்தாள். விடியற் காலையிலேயே அங்கு வந்துவிட்ட வெள்ளையன் வள்ளியின் நிலையைப் பார்த்து விட்டு கருப்பனை ஒன்றும் சொல்லவில்லை. ஆனால் மாரியாயியை

வேலைக்குப் போகும்படி உத்தரவிட்டான். மாரியாயிக்கு மனமேயில்லை என்றாலும் வேறு வழியில்லாமல் இரவு கண்டிப்பாக வருவதாக கூறி விட்டு புறப்பட்டுச் சென்றாள். மருத்துவமனைக்கு வந்த முடீஸ் தலைமை மருத்துவ அதிகாரியிடமும் குரூப் வள்ளியைப் பற்றி ஆலோசனை கேட்டுக் கொண்டார்.

மூன்றுநாட்கள் வள்ளி வாழ்வுக்கும் சாவுக்கும் இடையே ஊசலாடிக் கொண்டிருந்தாள். குரூப் எந்த நம்பிக்கையும் அளிக்கவில்லை. ஆனால் பின்பு அவள் நிலையில் தானாக முன்னேற்றம் தெரியத் தொடங்கியது. நினைவற்றுக் கிடக்கும் நேரம் குறைந்து கொண்டே வந்து இறுதியில் நின்றேவிட்டது. அடுத்த முறை தலைமை மருத்துவ அதிகாரி வந்தபோது அவளைப் பரிசோதித்து விட்டு அபாய கட்டம் தாண்டி விட்டது என்றார். பொங்கி வந்த உற்சாகத்தில் கருப்பனுக்கு மகிழ்ச்சிக் கூத்தாட வேண்டும் போலிருந்தது. வள்ளி மூன்று வாரங்கள் மருத்துவ மனையில் இருந்தாள். பத்து நாட்கள் பகலில் கருப்பன் அவளுடன் இருக்க அனுமதிக்கப்பட்டான். பின்பு பகலில் வேலைக்குச் சென்றுவிட்டு இரவில் அங்கே வந்து விடுவான்.

பின்பு மருத்துவமனையிலிருந்து வள்ளியை கருப்பனும், மாரியாயியும் வீட்டுக்கு அழைத்து வந்தனர். வள்ளி வந்ததைக் கேள்விப்பட்டு நாட்டு வைத்தியன் அவளைப் பார்க்க வந்தான்.

“என் தாயத்துதாலெ அவளக் காப்பாத்திச்சு. இல்லாட்டி காய்ச்சப் பிசாசு அவளைக் கொன்னே போட்டிருக்கும். யார் பண்ணின புண்ணியமோ எங்கிட்ட வந்து தாயத்தை வாங்கிட்டு போனே. அவ முழுசா நல்லாகி வேலைக்குப் போற அளவுக்கு ஆகும்போது அம்மனுக்கு நன்றி சொல்லி ஒரு படையல் போட்டிருலே. எப்பக் கூப்பிட்டாலும் வாறதுக்கு காத்திட்டிருக்கேன்.”

தோல்வியை வெற்றியாக மாற்றிவிட்ட நாட்டு வைத்தியன் இன்னொரு வேட்டை உண்டு என்ற நம்பிக்கையோடு அகன்றான். ஐந்து நாட்கள் வள்ளியால் ஓய்வெடுக்க முடிந்தது. பின்பு வெள்ளையன் நச்சரிக்கத் தொடங்கி விட்டான்.

“ஒரு மாசமா நீ வேலைக்குப் போகலை. கருப்பனும் பத்துநாளா வேலைக்குப் போகலை. உடனே வேலைக்குக் கிளம்பலைன்னா கணக்குத் தீர்க்கற அன்னைக்கு கையில எதுவுமே கிடைக்காது.” எழுந்து நிற்கவே முடியாமலிருந்த வள்ளி பணிக்குக் கிளம்பினாள்.

# 4

துயரம் தோய்ந்த நாட்கள் வந்துவிட்டன. அவைதான்
வருடத்திலேயே சோகம் மிகுந்தவை

- வில்லியம் .பிரையன்ட்

பருவ மழை தொடங்கியது. மலேரியா தற்காலிகமாக மலைகளுக்கு விடுதலையளித்தது.

"அப்பாடா, இன்னொரு வருசத்துக்குக் கவலையில்லை." வள்ளி நிம்மதிப் பெருமூச்சு விட்டபடி மாரியாயியிடம் கூறினாள்.

"இனி ஒண்ணும் வராதில்ல வள்ளி. நெனச்சா ஈரக்கொல எல்லாம் பதறுது."

"எப்பவாவது காய்ச்சல் வரும். ஆனா இவ்வளவு மோசமா இருக்காது. ஒருநாள் ரெண்டுநாள் மருந்து சாப்பிட்டாப் போதும். சீக்கிரம் குணமாயிரும்."

"காய்ச்ச மாதிரியே மருந்தும் படுமோசமாத்தான் இருக்கு. இப்படி ஒரு கசப்பை நான் பார்த்ததே இல்லை. ஒருதடவை அந்த மருந்தை சாப்பிட்டா எத்தனை நாளைக்கு அந்த கசப்பு வாயிலையே இருக்கு!"

"மழைக்காலத்தில் இன்னொரு காய்ச்சல் வரும். குத்திக் குத்தி இருமல் வரும். சில சமயம் எச்சில்ல ரத்தம் கூட வரும். புள்ள, குட்டிகளுக்கு வந்திச்சுன்னா அவ்வளவுதான். ஆனா எனக்கு என்னமோ காச்சலைவிட அட்டைய நெனச்சாத்தான் பயமா இருக்கு. ராத்திரி பகலா மழையில ஊறி ஊறி அந்த மழை சத்தத்தைக் கேட்டுக் கேட்டு பைத்தியமே புடிச்ச மாதிரி ஆயிரும். இந்த மலைக்கு வந்தபின்னாடி மழைய நினைச்சாலே வயித்தெரிச்சலா இருக்கு." வள்ளி கசப்புடன் சொன்னாள்.

"அப்ப இங்க எந்தக் காலம் வந்தாலும் நிம்மதியே கிடைக்காது போலிருக்கே. இந்த மாதிரி காய்ச்சலெல்லாம் கீழே வந்ததே இல்ல. ரெண்டு மூணு வருஷத்துக்கு ஒரு தடவை சின்னம்மைதான் வரும்." மாரியாயிக்கு தான் விட்டுவிட்டு வந்திருந்த சுட்டெரிக்கும் சமவெளிகள் இப்போது சொர்க்கமாகத் தெரிந்தன.

வள்ளிக்கு மாரியாயியை பயப்படுத்தும் எண்ணமே இல்லை. ஆனாலும் அடிவயிற்றிலிருந்து பொங்கி வந்த வெறுப்பிலும், இயலாமையிலும் அவள் தொடர்ந்து பேசிக்கொண்டே போனாள். "இந்தக் காய்ச்சலோட

இன்னொரு வியாதியும் வரும். இரத்த ரத்தமா, கோழையோட பயங்கரமாப் பேதியாகும். அதில வேற எத்தனையோ பேர் போய்ச் சேந்துருவாக"

"வருசக் கடைசியில தப்பி பிழைச்சு உயிரோட இருந்தா யோகம்தான்." என்றாள் மாரியாயி.

"அந்த முருகன்தான் காப்பாத்தணும்" என்றாள் வள்ளி.

# 5

ஒரு நல்ல காட்சியைக் காண உனக்கு மட்டும் உரிமை உள்ளது என்றும் அதைக் காண அவனுக்கோ அவளுக்கோ உரிமையில்லை என்றும் நீ நினைக்கிறாயா?

ஐ சிங் தி பாடி எலக்ட்ரிக்
-வால்ட் விட்மென்

குமரிமலை எஸ்டேட்டில் எழுத்தர்களாக வேலை செய்து வந்த மூன்று இளைஞர்கள் ஒரு சனிக்கிழமை மாலை ஒரு வீட்டில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். அவர்களிலேயே மூத்தவன் இருபத்தைந்து வயதான முதல் உதவியாளன் ராஜ். அவன் ஐந்தாண்டுகளாக எஸ்டேட்டில் இருந்து வருகிறான். அடுத்தவனுக்கு இருபத்தியிரண்டு வயது இருக்கும். கூலிகளுக்கான பதிவேட்டை கவனித்து வந்த செக்ரோல் குமாஸ்தா. அவன் பெயர் அருள்தாஸ். எஸ்டேட்டில் இரண்டு வருடங்களாக இருக்கிறான். மூன்றாமவனுக்கு ஏறக்குறைய பத்தொன்பது வயது. அப்பொழுதுதான் எஸ்.எஸ்.எல்.சி தேறியிருந்தான். கிறிஸ்துதாஸ் எஸ்டேட்டுக்கு வந்து பதினைந்து நாட்கள்தான் ஆகிறது. அவர்கள் உட்கார்ந்திருந்த வீடு ராஜுவுடையது. அந்த வீட்டில் ஒரு படுக்கையறையும், கூடமும், அதையடுத்து ஒரு சமையலறையும் படுக்கை யறைக்கு அருகில் ஒரு சிறிய குளியலறையும் இருந்தன.

“கிறிஸ்துதாசு, எப்படிலே இருக்கு எஸ்டேட் வேலை?”

“ரெண்டு வாரம்தாண்ணே ஆச்சு. அதுக்குள்ள என்னத்தச் சொல்றது?”

“ஆமா சரிதான்,” அருள்தாஸ் இடையில் புகுந்தான் “இந்த ரெண்டு மூணு மாசத்துல இந்த வேலைக்கு வர்ற ரெண்டாவது ஆள் நீ. முதல்ல வந்தவன் தாங்க முடியாம ஒரு மாசம் முடியறதுக்கு முன்னாடியே ஓடிப் போயிட்டான். அதனாலதான் உனக்கு எஸ்டேட்டு புடிச்சிருக்கா, நீயாவது தங்குவியான்னு தெரிஞ்சிக்க ஆசைப்படுதோம்.”

“நிசத்தை சொல்லனுமின்னா இத்தனை மோசமாயிருக்குமின்னு நான் நினைக்கவே இல்லைண்ணே. இதுமாதிரி நான் வந்ததிலிருந்து கொட்டு கொட்டுனு கொட்டுற மழையும் பிடிக்கல. அட்டையும் பிடிக்கல. அதைவிட இந்தக் குளிரு பிடிக்கவே இல்லை. ஆனா ஒண்ணு, நான் ஒரு மாதத்தில ஓடிப் போயிற மாட்டேன். அதப் பத்தி நீங்க கவலைப்படவே

வேண்டாம்.”

“அப்ப சரி நீ தாக்குப் புடுச்சு இருந்துருவே. நீ இங்க இருக்கணும்னுதான் நாங்களும் கவலப்படறோம். உனக்கு ஏதாவது ஒதவி வேணும்னா கேளு. எங்களால முடிஞ்ச எல்லாத்தையும் செய்யுதோம்”என்றான் ராஜ்.

“ரொம்ப நன்றிண்ணே! எனக்கு எப்ப தனியா ஒரு வீடு கெடைக்கும்?”

“பாருலே, உனக்கு வேலை குடுக்கணுங்கறதே இந்த வருஷத் தொடக்கத்துலதான் முடிவாச்சு. ஆபீஸ் வேல ஒவ்வொரு வருசமும் அதிகமாயிட்டே வருது. பெரியய்யா ரெண்டு வருசமா வேலைக்கு ஆள்வேணும்னு கேட்டுட்டே இருந்தார். இந்த வருசம்தான் இன்னொரு ஆளை வேலைக்குச் சேர்க்க ஜெனரல் மேனேஜர் ஒத்துக்கிட்டார். இன்னொரு வீடு கட்டறதுக்கு பணம் ஒதுக்க இனிமேல் முடியாது. சீக்கிரம் மழைகாலம் முடிஞ்சுடும். பொறவு பெரியய்யா ஜெனரல் மேனேஜர்கிட்ட பேசி ஒனக்கு ஒரு புது வீடு கட்டித் தருவாக.” அனுபவம் வாய்ந்த ராஜ்தான் விளக்கினான்.

“என்ன இங்க இப்படி கரடுமொரடா வீடு கட்டறாங்க. செவுரு கோணல் மாணலா மேடு பள்ளமா இருக்குது. கையத் தூக்குணா முட்டுற அளவுக்கு கூர கீழால இருக்கு. கதவு ஜன்னல் எல்லாம் இஷ்டம்போல வளஞ்சு நெளிஞ்சு இருக்கு. சமயல் குசினிய பக்கத்தால கட்டி புகை குபுகுபுன்னு வீடெல்லாம் வருது” கிருஸ்துதாஸின் குரலில் ஏமாற்றம் அப்பட்டமாகத் தெரிந்தது.

“இங்கிருக்கற கொத்தனாருங்க நல்லாத்தான் வீடு கட்டுவாக. ஆனா குடுக்கற பணத்துக்கு ஏத்த மாதிரிதானே வீடு கட்ட முடியும்? ஜி.எம்.குதிரைகளைக் கட்டி வெக்கற லாயம் இதவிட நல்லாயிருக்கு. இங்க எல்லா உதவி குமாஸ்தா வீட்டுத் தரையும் மண்ணுத் தரைதான். சாணிபோட்டு மெழுகணும். எப்பிடி ஈரமாயிருக்கு பாரு. ஆனா தொரையோட லாயத்துக்கு சிமென்ட் தர போட்டிருக்காங்க. கதவு ஜன்னலுக்கு மேல எவ்வளவு பெரிய ஓட்டைபாரு. அத அடைக்கவே மாட்டானுவ. அதெல்லாம் தேவையில்லன்னு வெள்ளைக்கார எஜமானுங்க நெனைக்கறாவ. இந்த ஓட்டை வழியா மழையும் குளிரும் வராம இருக்க டீ போட்டு வெக்கற பலகையையும் சாக்குகளையும் வெச்சு அடைச்சிருக்கேன். இந்தச் சாமான்களைப் பாரு. ஒரு மரக்கட்டில், படுக்கற அறைக்கு ஒரு சின்ன மேஜை. அதுதான் எழுதறதுக்கு. ரெண்டு நாற்காலி, மூணு முக்காலி, இதுதான் அஸிஸ்டென்டுக்கு கொடுக்கற சாமான். எப்பவாவது சிநேகிதகாரங்க வந்தா மரப்பெட்டி மேல உக்கார வேண்டியதுதான். சுவரைப் பத்தி

சொன்னயில்ல. சதுரக் கல்லால கட்டினாத்தான சுவர் சமமாயிருக்கும். காட்டுல மேட்ல ஆத்துல கெடக்கற கல்லுகளை கொண்டுவந்து அப்படியே கட்டினா மேடு பள்ளமாத்தான இருக்கும்? வீட்டுக்கு அஸ்திவாரமே கெடையாது. அதுதான் மழைக்காலத் துல தரை இப்படி ஓதமடிக்குது. ஈரம் வராம இருக்க படுக்கற எடத்துல தரை முழுக்க சாக்கு போட்டு வெச்சிருக்கேன். சில சமயம் மழத்தண்ணி வீட்டுக்குள்ள கூட வந்துரும்.

பொறுமையாகக் கேட்டுக் கொண்டிருந்த கிருஸ்துதாஸ் சீனியர் களின் குவாட்டர்ஸ் பற்றிக் கேட்டான்.

“அங்க இன்னொரு பெட்ரூமிருக்கும். ஸ்டோர் ரூம் இருக்கும். மரக்கட்டிலும் ரெண்டு நாக்காலியும், சாப்புடறதுக்கு ஒரு மேசையும் உண்டு. ஹெட் கிளார்க்குக்கும், ஹெட் ரைட்டருக்கும் ஒரு அலமாரி இருக்கும். மத்த மூத்த உத்தியோகஸ்தர்களுக்கெல்லாம் பெட்ரூமில மட்டுதான் சிமென்ட் தரை இருக்கும். இந்த ரெண்டு பேருக்கும்தான் வீடு முழுக்க சிமென்ட் தரை” இது அருள்தாஸ்.

“ஏண்ணே அப்படி?”

“அவங்கள ஜி.எம்.முக்கு ரொம்பப் பிடிக்கும்.”

“ஏதாவது வாடகை குடுக்கணுமா?”

“எஸ்டேட்டுல மேனேஜரு, உத்தியோகஸ்தர்க, கூலிங்க யாரும் வீட்டுக்கு வாடகை குடுக்க வேண்டியதில்லடே.”

“ஜெனரல் மேனேஜர் பங்களாவைப் போனவாரம் பாத்தேன். எப்படி ஒரு பகட்டா இருக்கு. எல்லா மேனேஜர்களுக்கும் இப்படி ஒரு பங்களா இருக்குமாண்ணே?”

“எல்லா மேனேஜர்களோட பங்களாக்களும், நல்லா, பெரிசா வேணுங்கிற வசதிகளோடதான இருக்கும்.”

“அவங்க இருந்திட்டுப் போட்டும். ஆனா உத்தியோகஸ்தர்களை ஏன் இப்படி வெச்சிருக்காங்க?” கிறிஸ்துதாஸ் ஆற்றாமையுடன் கேட்டான்.

“எஜமானுக்குப் புடிச்சாக் குடுப்பாரு. இல்லைன்னா இல்ல. ஆனா நீ கேக்க முடியாது. உனக்கு இது புடிக்கலைன்னா இந்த இடத்தை விட்டு ஒழிஞ்சு போக வேண்டியதுதான்” சொல்லிவிட்டு ராஜ் கசப்புடன் சிரித்தான்.

“சரி, சாப்பிடலாம் வாங்க” அருள்தாஸ் அழைத்தான்.

“நாங்க கொஞ்சம் பீர் குடிச்சா ஒண்ணும் சங்கடப்பட மாட்டியே”ராஜ், கிறிஸ்துதாஸை பார்த்துக் கேட்டான்.

“இல்லைண்ணே எனக்கு ஒண்ணுமில்ல, எஸ்டேட்டுல எல்லாரும் குடிப்பாங்கன்னு கீழேயே எங்கிட்ட சொல்லியிருக்காக.” “இங்க வந்த பின்னாடிதான் நாங்க குடிச்சுப் பழகினோம்.” அருள்தாஸ் பீர்பாட்டில்களையும் டம்ளர்களையும் மேசை மீது பரப்பினான்.

“ஏன் குடிச்சுப் பழகினீய?” குடிச்சே ஆகணுமின்னு ஏதாவது இருக்கா?” அருள்தாஸ், கிறிஸ்துதாஸை உற்றுப் பார்த்தான். இப்படிக் கூட ஒரு கேள்வி கேட்க முடியுமா என்று அவன் ஆச்சரியப்படுவது போல் தோன்றியது. வழக்கம்போல ராஜ்தான் பதில் சொல்லத் தொடங்கினான்.

“இத பாருல, நீ இப்ப குளிரில நடுங்கிட்டு இருக்கே, சில சமயம் இதைவிட மோசமா குளிரடிக்கும். அப்பெல்லாம் தண்ணியடிச்சு உடம்பை சூடாக்கிக்கணுமின்னு தோணும். அதுவும் மத்தவங்க அப்படிச் செய்யறதைப் பார்க்கும்போது கண்டிப்பாத் தோணும். இங்கே நமக்கு ஒண்ணாக் கலந்து பழக வாய்ப்பே இல்லை. எப்பவும் ஒரே மாதிரி சலிப்பா இருக்கும். காலைல எந்திரிச்சா ஆபிஸ் போற, மத்தியானம் சாப்பிட வாரே, திரும்பவும் ஆபிஸ் போற, ராத்திரி திரும்ப வாரே. போறதுக்கு ஒரு இடமும் இல்லை, நேரமும் இல்லை. பொழுது போக்கிறதுக்கு வேறு வழியே கிடையாது. இந்த மாதிரி இருந்து இருந்து ஏதாவது வித்தியாசமா இல்லைன்னா பைத்தியம் பிடிச்சது போல ஆகிடும். அதனாலதான் சனிக்கிழமை ராத்திரி எல்லாரும் ஒரு வீட்டுல கூடி, சீட்டு விளையாடி, குடிச்சு கடவுளே கைவிட்ட இந்தக் காட்டுக்குள்ள அடைஞ்சு கிடக்கிறோமிங்கிறத அந்த ஒரு நாளைக்காவது மறந்திருப்போம்.”

“நான் என்னமோ நீங்க மத்தவங்க குடிக்கிறதப் பாத்துதான் குடிச்சு பழகிட்டீங்களோன்னு நெனச்சேன், வேற ஒண்ணுமில்ல” கிறிஸ்துதாஸால் ராஜ் சொன்னதைப் புரிந்து கொள்ள முடியவில்லை என்பது அவன் பேச்சிலேயே தெரிந்தது.

ராஜ் அதற்கு பதிலளிக்கவில்லை.

“நீ கழுகுமலை ஹெட் ரைட்டர் மாணிக்கத்துக்குச் சொந்தமா?”

“ஆமாண்ணே, அவரு சொல்லித்தான் இங்கே வந்தேன்”

“நினைச்சேன். மாணிக்கம் நிறைய தடவை எங்க ஹெட்கிளார்க்கிட்ட வந்து உன்னப்பத்தி பேசியிருக்காரு.”

“உங்களுக்கு இந்த எஸ்டேட்டில, ஆனைமலைல ஏதாவது சொந்தக்காரங்க இருக்காகளா” கிறிஸ்துதாஸ் கேட்டான்.

“இல்லையே” என்றான் ராஜ்.

“அப்புறம் எப்படி இங்க வந்தீக?”

“அஞ்சாவது பார்ம் படிக்கும்போது எங்கப்பா செத்துப்போயிட்டாரு. படிக்க வைக்க ஆளில்ல. அதனால எஸ்டேட்டில வேலை கிடைக்குமின்னு கேள்விப்பட்டு ஆனைமலைக்கு வந்தேன். ஹெட்கிளார்க் நல்ல மனுஷன். எனக்கு சிபாரிசு பண்ணி இந்த வேலைய வாங்கிக் குடுத்தாரு.”

“நீங்க எப்படிண்ணே?” கிறிஸ்துதாஸ் அருள்தாஸைப் பார்த்துக் கேட்டான்.

“ஹெட் டீ மேக்கர் எனக்குச் சொந்தம். அவரு லீவுல வந்தப்ப எஸ்டேட்டில வேலை வேணுமின்னு கேட்டேன். அவரு என்னைக் கூடவே கூட்டிட்டு வந்திருட்டாரு. அவரு வீட்டில மூணு மாசம் இருந்தேன். அப்போ ஆபீசில செகண்ட் கிளார்க்கை திடீரென்று டிஸ்மிஸ் பண்ணிட்டாக. அதனால எனக்கு அந்த வேலை கிடச்சுது.”

“ஏன் அவன அப்படிப் பண்ணிட்டாக?”

“அவன் பாவம். அவனுக்கு மலேரியா வந்திருந்தது. நிறைய வேலை இருந்ததால ஆஸ்பத்திரி போயி ஒரு ஊசி போட்டுட்டு முழுசா சரியாகறதுக்கு முன்னாடியே ஆபீஸ் வந்து வேலை செஞ்சிட்டு இருந்தான். பயங்கரமான தலைவலியினால மூணு நாளா தூக்கமே இல்லேன்னு வேற சொல்லிட்டிருந்தவன் ஆபீசிலேயே தூங்கிட்டான் போலிருக்கு. ஜெனரல் மேனேஜர் வந்தப்பத் துள்ளி எந்திரிச்சு சல்யூட் அடிக்கணும். இவன் அடிக்கலை. ஜெனரல் மேனேஜருக்கு பயங்கரமா கோபம் வந்து அந்த எடத்திலேயே அவனோட கணக்கைத் தீர்த்து அனுப்பச் சொல்லி உத்தரவு போட்டிட்டாரு.”

“இப்படியெல்லாம் கூட நடக்குமா? ஹெட்கிளார்க் தொரைகிட்ட ஒண்ணுமே சொல்லலையா?”

“ஜி.எம்.முக்கு கோபம் வந்தா ஒரு எழவையும் காதுல போட்டுக்க மாட்டாரு. அந்த மாதிரி நேரத்துல யாராவது வந்து ஏதாவது சொன்னாலும் பொறுத்துக்க மாட்டாரு. இங்க இதெல்லாம் சர்வ சாதாரணம்.”

“நீ ஒண்ணும் பயப்படாதே” மிரண்டு போயிருந்த கிறிஸ்துதாஸைப்

பார்த்து ஆறுதலாகக் கூறினான் அருள்தாஸ். “அது எப்படியோ தெரியாம நடந்துபோச்சு. உனக்குத்தான் உதவுறதுக்கு நாங்க இருக்கோம்லா. மூத்த உத்தியோகஸ்தர்களுக்குப் புடிக்கலைன்னாத்தான் வேலையை விட்டுத் தூக்கறது நடக்கும். உன்னைப் பொறுத்த வரைக்கும், நாங்க ரெண்டு வருஷமா வேலைக்கு ஆளில்லாம திண்டாடிட்டு இருந்த நேரத்துல வந்துருக்கே. ஜான்ஸனும் உனக்கு சப்போர்ட் பண்ணுவார்”

“ரொம்ப நன்றிண்ணே. எனக்கு ஒண்ணுமே தெரியாது. நீங்க எனக்கு உதவி பண்ணலேன்னா எங்கதி அவ்வளவுதான்” கிறிஸ்துதாஸ் ஆடிப் போயிருந்தது அவன் குரலிலேயே தெரிந்தது.

“எல்லாரும் மொதல்ல அப்படித்தான் போகப் போக பழகிடும்.”

“ரெஸ்டே கிடைக்காது போலிருக்கு”

“ஆமா காலைல ஏழு மணிக்கு ஆபிசில இருக்கணும். ஏழரையிலிருந்து எட்டுக்குள்ள எப்ப வேணா ஜி.எம். வருவாரு. ஒன்பது மணி இல்லைன்னா கொஞ்சம் பொறுத்து அவரு போயிருவாரு. அப்பத்தான் நாம காலைல சாப்பாட்டுக்கு வர முடியும். ஒண்ணிலிருந்து ரெண்டு வரைக்கும் மத்தியானம் சாப்பாடு. ஜி.எம். திரும்பவும் மூணு மணிக்கு வந்து அஞ்சு மணி வரை இருப்பாரு. சில சமயம் டீ சாப்பிட்டு விட்டு திருப்பியும் ஆறு மணிக்கு வருவாரு. யோகம் இருந்தா ஏழு மணிக்குப் போயிடலாம். ஒன்பது மணி வரைக்கெல்லாம் கூட நாங்க வேலை செஞ்சிருக்கோம். இப்ப ஜி.எம். லீவுல இருக்கிறதால காலைல ஏழரை மணிக்கு ஆபீஸ் திறந்து சாயங்காலம் அஞ்சரை மணிக்கு மூடிடுறோம்.”

“எஸ்டேட்டில எல்லா இடத்திலயும் ஃபாக்டரி, காடு... வேலை இத்தனை கஷ்டமாத்தான் இருக்குமா?”

“ஆமா, காட்டுல உத்தியோகஸ்தருங்க ஏழு மணிக்கு ஆரம்பிப்பாக. நல்லா இலை தழைஞ்சு வரும்போது இன்னும் சீக்கிரமாக்கூட போக வேண்டியிருக்கும். அப்போ கூலிங்க சாயந்தரம் ஏழு மணி வரைக்கும் கூட இருப்பாக. கொழுந்த எடைபோட எட்டு மணி ஆயிரும். அதுக்கு அப்புறம்தான் அவங்க வீட்டுக்குப் போக முடியும். அப்பவும் எழுத்து வேலக்காரங்களோட வேலை முடியாது. கூலிகளோட பேரெல்லாம் எழுதி செக்ரோலை முறையா வச்சுக்கணும். எல்லா வேலையும் முடிஞ்சி சாப்பிடறதுக்கு பத்து மணி ஆயிரும். கவாத்து மாதிரி முக்கியமான வேலை நடந்திட்டு இருக்கும்போது உத்தியோகஸ்தருங்க சாப்பாட்டுக்கு வீட்டுக்குப் போனா மேனேஜருக்குப் பிடிக்காது.

அதனால அவங்க காட்டிலேயே சாப்பிட்டுவாக. நல்லவேளை நான் காட்டு வேலைக்குப் போகல”

“நிஜந்தான். காட்டு வேலைக்கு வந்த நிறைய பசங்க ஓடிப் போயிட்டாக” என்றான் அருள்தாஸ்.

“பாக்டரில எப்படி?” கிறிஸ்துதாஸ் கேட்டான்.

“அங்கேயும் அப்படித்தான். கொழுந்து கம்மியா இருக்கும்போது ஏழு மணிக்கு முடியும். நல்ல சீசனில நைட் பன்னெண்டு மணிக்குதான் வேலை முடியும். காலைல நாலு மணிக்கு ஆரம்பிச்சுரும். அந்த மாதிரி நேரத்தில அவங்க அங்கனயே கிடக்க வேண்டியதுதான்” என்று முடித்தான் ராஜ்.

“கீழே என்னமோ எஸ்டேட்டில வேலை கம்மி, பணத்தை வாரிக் கட்டிட்டு வரலாமுன்னு நெனைக்காவளே!”

“வேலையை பொறுத்தவரைக்கும் அது ரொம்பத் தப்புன்னு உனக்கே தெரியுதுல்லா. பணத்தைப் பொறுத்த வரைக்கும் உனக்கு எவ்வளவு சம்பளம் சொல்லியிருக்காக?” அருள்தாஸ் கேட்டான்.

“திட்டவட்டமா ஒண்ணும் சொல்லலை. மாணிக்கம் மாமா ரெண்டு மூணு மாசம் சம்பளம் இல்லாம வேலை செய்யணும், வேலை பழகின பின்னாடி ஹெட் கிளார்க் ஜி.எம்கிட் பேசி ஏதாவது வாங்கித் தருவாருன்னு சொன்னாரு.”

“வேலை பழகிறதுங்கிறது ஒண்ணுமேயில்ல. நீ சம்பளம் இல்லாம வேலை செய்யப் போறே அவ்வளவுதான். மிஞ்சி மிஞ்சிப் போனா வேலை பழகறதுக்கு ஒரு மாசம் ஆகும். ஆனா இங்க வேலை பழகிட்டிருக்கே, பழகிட்டிருக்கேன்னு சொல்லி இழுத்தடிப்பாங்க. எனக்கு ஆறு மாசம் சம்பளமே கிடைக்கல. ஆனா முன்னாடி இருந்தவன் செஞ்ச எல்லா வேலையும்தான் நானும் செஞ்சேன்”

“சம்பளம்?”

“ஏழு ரூபாயில ஆரம்பிச்சுது” அருள்தாஸ் பதிலளித்தான்.

“பாவம். பயல பயப்படுத்தாத” என்றான் ராஜ்.

“இல்லைல்ல. நான் ஒண்ணும் பயப்படுத்தல. பின்னாடி ஏமாந்து முழிக்கறதுக்கு முன்னாடியே தெரிஞ்சிட்டா நல்லதில்லையா” என்றான் அருள்தாஸ்.

“என் சாப்பாட்டுக்கு மாமா உங்களுக்கு பணம் குடுத்திடறேன்னு

சொன்னாரு. தற்சமயம் அது போதும் சம்பளம் கிடைச்சா கூடுதலா சந்தோசப்படுவேன்.”

# 6

மனம் துயரத்தின் கனம் தாங்காமல் துவண்டு போயிருந்தது.
அதன் ஒரு மூலையில் இன்னும் ஏதோவொரு
பலவீனமான நம்பிக்கை ஒட்டிக் கொண்டிருந்தது

சாங் ப்ரம் தி பொகிமியன் கேர்ள்
-ஏ.பன்

வருட இறுதியில் வந்த பண்டிகை வழக்கமான கோலாகலத்துடன் கொண்டாடப்பட்டது. அதன்பிறகு திருநெல்வேலி கூலிகளுக்கு கணக்கு முடிக்கப்பட்டது. சனவரி மூன்றாம் தேதி கணக்கு முடிக்கப்படும் என்று சங்கரபாண்டியன் ஏற்கெனவே சொல்லியிருந்தான். வள்ளி நீண்டநாள் நோய்வாய்ப்பட்டிருந்ததால் இருவருக்கும் ஊருக்குப் போகிற அளவுக்கு பணம் கிடைக்கும் என்ற நம்பிக்கையே இல்லை. எனவே இருபது ரூபாய் கையில் வாங்கியபோது போன ஆண்டு இருந்த ஏமாற்றம் விரக்தியும் ஏற்படவில்லை. இருந்தாலும் இரண்டு ஆண்டுகளாக தங்களை ஊருக்குப் போகவிடாமல் பிடித்து ஆட்டிவரும் துரதிருஷ்டத்தை நினைத்து வருத்தமடைந்தனர்.

ஆபீஸிலிருந்து வந்தவுடன் கருப்பன் சங்கரபாண்டியனுக்கு தர வேண்டியிருந்த பத்து ரூபாயைக் கொடுத்துவிட்டான். மாட்டுக்கறி கடைக்காரனுக்கும் வேறு ஒரு சிறிய கடன்காரனுக்கும் கொடுத்த பின்பு கருப்பனிடம் ஐந்து ரூபாய் தங்கியது.

“எனக்கு மட்டும் காய்ச்ச வராம இருந்திருந்தா ஊட்டுக்கு போயிருக்கலாமே” வள்ளி வாய்விட்டுப் புலம்பினாள்.

மறுநாள் மேஸ்திரி கருப்பனை அழைத்துச் சொன்னான். “ஏலே கருப்பா ரெண்டு வருஷமாச்சு. இப்பக்கூட உன்னால ஊட்டுக்குப் போக முடியல. பாத்தா பாவமா இருக்கு. ஊருக்குப் போயி ஒரு மாசம் இருந்தேனா, சொந்த ஊருக்காத்து வள்ளியை சுத்தமா சரியாக்கிடும். உனக்கு ஏதாவது நல்லது பண்ணணுமின்னு தோணுது. ஒரு விஷயம் சொல்லுதேன். இப்ப உனக்கு இருபது ரூபா அட்வான்ஸ் தாரேன். ஊருக்குப் போயி ஒரு மாசம் இருந்திட்டு வாரியா. அப்புறம் நீ எஸ்டேட்டுக்குத் திரும்பி வாரதுக்கும் நானே ஏற்பாடு பண்ணுதேன். கூட ஏதாவது பணம் வேணுமின்னா கயத்தாறுல இருக்கிற ஏஜென்ட்கிட்ட சொல்லித் தரச் சொல்லுதேன். என்னலே சொல்லுதா” கருப்பனின் இதயம் வேகமாகத்

துடிக்கத் தொடங்கியது. அம்மாவின் முகமும், மயிலோடையும் படம் போல் கண்முன் ஓடியது. தொங்கிப் போயிருந்த அவன் முகத்தில பளிச்சிட்ட ஒளியைக் கண்டு ஊக்கம் பெற்ற சங்கரபாண்டியன் தொடர்ந்து கரைக்கத் தொடங்கினான்.

“ஊருக்கு போகணுமின்னா நாளானைக்கே பொறப்புடு. நம்ம கூலிங்க கொஞ்சம் பேர் கீழே போறாங்க. அவங்களோட நீயும் சேர்ந்து போலாம்.”

சரி என்ற சொல் தொண்டைக் குழிவரை வந்துவிட்டது. எப்படியோ தன்னை அடக்கிக் கொண்டு மனைவியையும் கேட்டுவிட்டு மறுநாள் பதில் சொல்வதாகச் சொல்லி விட்டான்.

மேஸ்திரியின் அறையை விட்டு வெளியே வந்ததுதான் தாமதம். கருப்பன் தலைதெறிக்க வள்ளியிடம் பாய்ந்தோடினான். “இதை ஒத்துகிட்டு வீட்டுக்குப் போயிட்டு வரலாமா. அம்மையையும் அக்காவையும் பார்த்து ரெண்டு வருஷமாச்சு. இப்பவும் போகலைன்னா பெத்த கிழவி செத்தே போயிடும். நமக்கும் ஊரைப் பார்த்தா நல்லாயிருக்கும்.”

“சரி போலாம்” வள்ளி தன்னை மறந்து சொல்லிவிட்டாள். கருப்பனுக்கு உற்சாகத்தில் தலைகால் புரியவில்லை. இப்பொழுதே மேஸ்திரியிடம் சென்று எல்லா ஏற்பாடும் செய்து வருவதாகக் கூறி கிளம்பினான்.

திடீரென்று எதையோ நினைத்துக் கொண்ட வள்ளி சட்டென்று கருப்பனின் கையைப் பிடித்து இழுத்தாள்.

“மாமா நில்லு… நில்லு கொஞ்சம் ஆற அமர யோசிச்சு முடிவு பண்ணலாம்” என்றாள்.

“ஏன் உனக்கு என்ன ஆச்சு? இதில யோசிக்கிறதுக்கு என்ன இருக்கு?”

“மேஸ்திரி குடுக்கிறதை வாங்குனோம்னா இங்கன திரும்பி வந்து தானே ஆகணும்?”

கருப்பன் கல்லாய் சமைந்துவிட்டான். ஊர் திரும்ப வேண்டும் என்ற தவிப்பில் அதைப் பற்றி யோசிக்கவே இல்லை.

“ஆமா…” என்று இழுத்தான்.

“அப்ப ஒண்ணுக்கு நாலுதடவ நல்லா யோசிச்சுதான் முடிவு எடுக்கணும். ஒரு தடவை வீட்டுக்குப் போயிட்டா நான் இந்தப் பக்கமே வரமாட்டேன். இந்த நரகத்துக்கு வாரதவிட விசத்தக் குடிச்சிட்டு

செத்துப்போயிருவேன். இதுவரைக்கும் பட்டபாடு போதாதா?” வள்ளி நிதானமாகப் பேசினாள்.

“ஆனா வள்ளி நம்மளைப் பார்த்தா அவங்க எத்தனை சந்தோஷப்படுவாக? இந்த வருசமும் நாம போகலைன்னா அம்மை வெசனப்பட்டு செத்தேப் போயிரும்லா...”

வள்ளி அசையவில்லை. “போயிட்டுத் திரும்பி வந்தா மட்டும் உங்கம்மா தாங்கிக்குமா!” கருப்பன் இருண்டு போனவனாய் வாயே திறக்கவில்லை. அவள் சொல்வது சரியென்று மனம் உணர்ந்தாலும் கூட வீட்டுக்குப் போவதை எதிர்த்துப் பேசுவதற்காக வள்ளி மீது கண்மண் தெரியாத கோபம் மூண்டது. “அங்கே போயாச்சுன்னா” வள்ளி அதே நிதானமான குரலில் தொடர்ந்தாள். “இங்க பட்ட பாட்டை எங்கம்மைட்ட சொல்லிடுவேனோன்னு பயமா இருக்கு. என்னால அடக்கி வைக்கவே முடியாது. உள்ளதைக் கேட்டா அவங்க நம்மை இங்க வரவுடுவாகளா? நமக்கும் அங்கேயே இருக்கலாமுன்னதான் தோணும். மேஸ்திரி நம்மளை விடமாட்டான். போலீசைக் கூட்டியாந்து புடிச்சிருவான். சின்னராமன், அவன் பொஞ்சாதி மாதிரி நாமளும் ஆகிருவோம். வர்ற வருசம் காய்ச்ச வந்தாக்கூட தாங்கிட்டு வேலை செஞ்சா ஊருக்கு போறதுக்கு நம்ம கையில பணம் வந்திரும். ஒரு பயலுக்கும் பணம் குடுக்க வேண்டியதில்ல. ஊருக்குத் திரும்பிடலாம். இன்னொரு வருசம் தாக்குப் புடிச்சிட்டு வேலை செய்யறதுதான் நல்லதுன்னு நினைக்குதேன்.”

அவள் குரலிலிருந்த தீவிரம் கருப்பனை பலவீனப்படுத்திவிட்டது. இரவு நெடுநேரம் அவர்கள் பேசினார்கள். விவாதித்தார்கள். பின்பு கனத்த இதயத்தோடு இன்னொரு ஆண்டு இங்கேயே தங்குவது என்று முடிவு செய்து விட்டார்கள்.

“நாளைக்கு பூசாத்தாளும், அவ புருசனும் ஊருக்குப் போறதா பேசிக்கறாங்க. மேஸ்திரிக்குக் கொடுக்க வேண்டிய கடனை அடைச்ச பெறகும் அவங்க கைல எழுபத்தஞ்சு ரூபா இருக்காம். மாரியாயி சொல்லுதா. இந்த மாதிரி ஆளுங்கதான் இங்க சம்பாறிக்க முடியும்” வள்ளி சொன்னாள்.

“அவங்க திரும்பி வரப்போறாகளா?”

“மாரியாயி சொன்னதை வச்சிப் பாத்தா திரும்பி வருவாக. வராம எங்க போவாக. வேறெங்க இப்பிடிச் சம்பாதிக்க முடியும்?”

மறுநாள் கருப்பன் தாங்கள் இன்னொரு வருடம் இங்கேயே இருக்கப்

போவதாக சங்கரபாண்டியனிடம் சொல்லி விட்டான்.

“அப்ப சரி. ஊருக்கு இன்னும் ஒரு வாரத்துல கெளம்புதேன். வெள்ளையனும் எங்கூட வரான். கோல் மேஸ்திரி திருமல இங்கன இருப்பான். ரெண்டு மாசம் கழிச்சுத்தான் திரும்பி வருவேன். நீ எப்பப் பதிவு பண்ணிக்கணும்னு நெனக்கேன்னு சொன்னா ஏற்பாடு பண்ணுதேன்.”

வள்ளியிடம் பேசிவிட்டுச் செல்வதாக வழக்கம் போல் கருப்பன் கூறிவிட்டு வந்து விட்டான். வீட்டுக்கு வந்தவுடன் கருப்பன் வள்ளியிடம் “இப்ப ஒரு விசயம் முடிவு பண்ணலாம். நம்ப சங்கரபாண்டியன் மேஸ்திரிகிட்டயே பதிவு பண்ணிக்கலாமா வேற யாராவது மேஸ்திரிகிட்டப் போயிடலாமா?” என்று கேட்டான். அவனுக்கு ஏதாவது மாற்றம் வேண்டியிருந்தது. இரண்டு ஆண்டுகளாக மூச்சுத் திணற வைத்துக் கொண்டிருந்த கடன் சுமையிலிருந்து கிடைத்த விடுதலையை எப்படியாவது பயன்படுத்த வேண்டும் போலிருந்தது.

“எனக்கு இந்த அறையை விட்டுப் போகப் புடிக்கல மாமா. இது நல்லாப் பழகிப் போச்சு. இன்னொரு மேஸ்திரிகிட்டப் போனா வேற எடத்துக்குப் போக வேண்டியிருக்கும். அப்புறம் இந்த மேஸ்திரிய நமக்குத் தெரியும். புது மேஸ்திரி இவனைவிட மோசமானவனா இருந்திட்டா என்ன செய்யறது?” வள்ளி வழக்கம் போல தீர்மானமாகச் சொல்லி விட்டாள்.

“சங்கரபாண்டி மேஸ்திரிகிட்டயே இருக்கறதுதான் நல்லது. நீ சொல்றது சரிதான். மத்தவங்க இவனவிட மோசமான பயலுகளாம். பொய்க்கணக்குதான் எழுதுவாகளாம். கடனத் திருப்பிட்டாக்கூட தரவேயில்லேன்னு சாதிப்பாங்களாம். இப்ப நாம நம்ம மேஸ்திரி காசத் திருப்பிக் கொடுத்திட்டதால நம்மள அதிகாரம் பண்ண முடியாதுன்னு அவன் தெரிஞ்சிட்டிருப்பான். தொல்லயும் பண்ண மாட்டான்” கருப்பன் சொன்னதை அவள் ஒப்புக் கொண்டாள்.

எனவே மறுநாள் தாங்கள் உடனடியாகப் பதிவு செய்து கொள்ள விரும்புவதாக மேஸ்திரியிடம் கருப்பன் சொல்ல இன்னொரு ஆண்டு பணி செய்ய அவர்கள் பதிவு செய்யப்பட்டனர். மூன்றாவது ஆண்டு தொடங்கியது.

# பாகம்-ஐந்து

வாழ்வெனும் போரில் வீழ்ந்துபட்டவர்களின்
தோற்கடிக்கப்பட்டவர்களின் புகழை

நான் பாடுகிறேன்.
சிதைக்கப்பட்டவர்களின் காயம்பட்டவர்களின்
துன்பக் கடலில் மூழ்கிப் போய் உயிரையும்
இழந்தவர்களின் வாழ்வை
நான் இசைக்கின்றேன்

விக்டர்

டபிள்யுடபிள்யுஸ்டோரி

# 1

எனவே பெற்றோரின் ஒப்புதலில்லாமல் குழந்தைகள் திருமணம் செய்து கொள்வது எவ்வளவு மோசமானது என்பதைப் பற்றியெல்லாம் நான் பேசினேன். ஆனால் எனது பேச்சு சிறிய சலனத்தைக் கூட அவர்களிடம் ஏற்படுத்தவில்லை.

பிக்விக் பேப்பர்ஸ்
- சார்லஸ் டிக்கன்ஸ்

சங்கரபாண்டியன் ஊருக்குக் கிளம்புமுன் இரவு தனது தலைமை எழுத்தர் அப்பாவுவைப் பார்க்கப் போனான்.

“ஏலே சங்கரபாண்டி எப்பக் கெளம்புதே” அப்பாவு ஏற்கனவே மேஸ்திரியின் பயணத் திட்டம் குறித்து அறிந்திருந்தது தெரிந்தது.

“அய்யா, நாளைக்குக் கெளம்புதேன். அதான் பாத்துட்டுப் போலான்னு வந்தேன்.” மேஸ்திரி ரூபாய் நோட்டுக்கள் வைக்கப்பட்டிருந்த ஒரு உறையை எடுத்து கொடுக்க, அப்பாவு புன்னகையோடு பெற்றுக் கொண்டார்.

“சங்கரபாண்டி, புள்ளைக்கு மாப்ள பார்த்துட்டிருக்கேன். சீக்கிரம் முடிவாயிரும். நீ கண்டிப்பா கல்யாணத்துக்கு வரணும்லே”

“கண்டிப்பா வந்துருவன்யா. கண்ணாலம் எப்பங்க”

“தேதி குறிக்க இன்னும் பையனோட அப்பாவைப் பார்க்கல. இன்னொரு பதினைஞ்சு நாள்ள விடுப்புல போறேன். அப்ப எல்லாத்தையும் பேசி முடிச்சுரலாம்னு நெனக்கேன். தேதி முடிவானதும் சொல்லுதேன்.”

“சீதனங் கொடுக்கணுங்களாய்யா?”

“ஆமா பாண்டி. ஆயிரம் ரூபா. பையனோட அப்பா ஒரு கஞ்சம் புடிச்சவன். கண்ணாலம் முடியறதுக்கு முன்னாடியே என்னை ஒழிச்சுக்கட்டிருவான்.”

“பையன் எப்படிங்கைய்யா? அவரும் பேராச புடிச்சவருதானா?”

“அதப் பத்தித் தெரியல பாண்டி. பெத்தவங்கதானே எல்லாத்தையும் பாத்துக்கறாங்க பையன் எப்படியிருந்தா என்ன?”

“அய்யா கண்ணாலத் தேதிய கொஞ்சம் முன்னாடியே சொல்லிடுங்க சாப்பாட்டுக்கு காய்கறி, வாழைப்பழம் வாழை எலை எல்லாம் நான் ஏற்பாடு செய்யுதேன்” என்றான் மேஸ்திரி.

“நல்லது பாண்டி எவ்வளவு முன்னாடி முடியுமோ அவ்வளவு முன்னாடி சொல்லுதேன்.”

“பையன் என்னய்யா பண்ணுதாரு! ”

“எஸ்.எஸ்.எல்.சி. பாஸ் பண்ணிட்டு அப்பாவோட சொத்தைப் பார்த்துட்டிருக்குதான். இங்கியே கூட்டிட்டு வந்து வேல பாத்து வைக்கலாம்னு பாக்கேன். மாசமானா நிச்சயமா ஏதாவது கொஞ்சம் பணம் வர்ற வேலமாதிரி வேற வேல இருக்காதுல்லா.”

“அய்யா எம் மச்சினன் வெள்ளையன் ராவுக்கு உங்கள வந்து பார்க்கணும்னு ஆசப் படுதான்.”

“அவன் எதுக்கு என்னைப் பார்க்க ஆசப்படுதான்?”

“அவனுக்கும் கண்ணாலம் கட்டி வெச்சுடலாம்னு நெனக்கோம். மேஸ்திரியாயிருந்தா கண்ணாலம் கட்டி வெக்கத் தோதாயிருக்கும். நீங்கதான் பாத்து அவனப் பெரிய மேஸ்திரியாக்கணும்.”

“ஓஹோ இதுதான் சங்கதியா? பார்க்கலாம். அவனுக்கு வயசு கொறச்சல்னு பெரிய தொரை ஒத்துக்க மாட்டேன்னுகூடச் சொன்னாலும் சொல்லுவாரு.”

“தொர என்ன நெனச்சாலும் நீங்க சொன்னா அவரு தட்ட மாட்டாருங்கிறது எங்களுக்குத் தெரியுங்கைய்யா. நீங்க மனசு வைச்சா எங்களுக்கு உதவி பண்ணலாம். தயவு பண்ணி இந்த ஒத்தாச பண்ணிக் குடுங்கைய்யா.”

“நீ சொல்லுதேங்கறதுக்காக முடிஞ்சவரை பாக்கேன் பாண்டி. ஒரு இருபது பேர் இருக்கிற கேங்குக்கு மேஸ்திரியாப் போட்டாப் போதுமா?”

“அய்யா இஷ்டப்பட்டு என்ன செஞ்சாலும் எங்களுக்குச் சந்தோஷம்தான். வெள்ளையன் வாழ்க்கைபூரா நன்றி மறக்காம இருப்பான்.”

“சரி பாண்டி என்னால முடிஞ்சதெல்லாம் செய்யுதேன்” என்றார் அப்பாவு.

“உங்கள நேரா வந்து பாக்கறதுக்கு வெள்ளையனை அனுப்பு

தங்கைய்யா” என்று கூறிவிட்டு மேஸ்திரி வெளியேறினான்.

அரைமணி நேரத்திற்குள் வெள்ளையன் வந்து தா-----ழக் குனிந்து வணங்கினான். “நீங்க தாங்கைய்யா சாமி மாதிரி. உங்க புள்ள மாதிரி என்னைப் பாத்துங்கங்கைய்யா. காலமுச்சூடும் உங்களுக்கு அடிமையா இருப்பேன்.”

“சரி வெள்ளையா. நாந்தான் பாண்டிகிட்டயே சொல்லிட்டேனே. சொன்னாக் கண்டிப்பா செய்வேன். சங்கரபாண்டி ஹெட் கிளார்க்கப் பார்த்தானா?”

“இல்லைய்யா. ராவுக்குப் பார்க்கறேன்னிருக்காரு.”

“அவரையும் பாத்து ஒத்தாசை கேட்டர்றது நல்லதுலே.”

“இப்பவே போய்ப் பாத்தறேங்கைய்யா. உங்கள மொதல்ல பார்த்துட்டுப் போலாம்னுதான் வந்தேன்.” வெள்ளையன் திரும்பவும் ஒருமுறைக் குனிந்து விடைபெற்றுக் கொண்டு கையோடு கொண்டு வந்திருந்த கரன்ஸி நோட்டுகள் அடங்கிய ஒரு கவரை நீட்டினான். அப்பாவு வாயெல்லாம் பல்லாகப் பெற்றுக் கொண்டார்.

பின்பு வெள்ளையன் நேராக ஹெட் கிளார்க்கைப் போய்ப் பார்த்து அவரிடமும் ஒரு கவரை நீட்டினான். அவர் வாய் நிறையச் சிரிப்போடு அந்தப் பரிசை அங்கீகரித்துவிட்டு பின்புதான், “என்ன விசயம்” என்று விசாரித்தார்.

வெள்ளையன் தன் விண்ணப்பத்தைச் சொன்னவுடன், “பெரிய காட்டு ஐயாவைப் பாத்தியா? என்ன சொன்னார்?” என்று கேட்டார்.

“ஒத்தாச பண்றேன்னு வாக்குக் குடுத்திருக்காருங்க. உங்களப் போய்ப் பார்க்கச் சொன்னார்.”

“சரிடே, முடிஞ்சவரைக்கும் பாக்கேன்.”

வெள்ளையன் உருகி உருகி நன்றி சொல்லிவிட்டு கிளம்பினான்.

# 2

நன்றிகெட்டத் தனமே அவர்களால் மிகப்பெரிய குற்றமாகக் கருதப்படுகிறது. அதற்கு அவர்கள் இவ்வாறு காரணம் சொல்கிறார்கள்: “தனது புரவலருக்குக் கெடுதல் செய்தவர்கள் மனிதகுலம் முழுமைக்குமே பொதுவான எதிரியாகக் கருதப்பட வேண்டும்.”

கல்லிவர்ஸ் டிராவல்ஸ்
- ஜோனதன் ஸ்விஃப்ட்

வடக்கு டிவிசன் தலைமை எழுத்தர் ரத்தினம் தன் வீட்டில் மரக்கட்டிலில் உட்கார்ந்திருந்தார். எதிரே ஒரு நாற்காலியில் தலைமை டீ மேக்கர் மாசிலாமணி. இருவர் முகங்களிலும் எதையோ ஆழ்ந்து பேசிக் கொண்டிருக்கும் பாவனை தெரிந்தது. கவலை ரேகைகள் கூடக் காணப்பட்டன.

“உங்க உதவியாள் ஒரு பய இருக்கானே அவன் எப்படியிருக்கான். சொன்னபடி கேக்கானா? இல்ல ஒங்கள கவுக்கறதுக்கே பூடகமா வேலை பாத்துட்டிருக்கானா?” மாசிலாமணி கேட்டார்.

“வெளிய பாக்கறதுக்கு அடக்க ஒடுக்கமா இருக்கற மாதிரிதான் தெரியுது.”

“அந்தப் பிச்சக்காரப்பயல நம்பாதீங்க. அவன் பாம்பு மாதிரி. ஜி.எம்மோட சோக்ரா அவனுக்கு நெருங்கின ஒறவு. ஜி.எம்.மைப் பத்தியோ, எஸ்டேட்டைப் பத்தியோ அவம் முன்னாடி பேசும்போது ஜாக்கிரதையா இருக்கணும். இல்லைன்னா நீங்க சொன்னதைத் திரிச்சு சோக்ராகிட்ட சொல்லிடுவான். சோக்ரா அத கண்ணு, காது, மூக்கு வச்சு ஜி.எம்கிட்ட கோள் மூட்டிருவான்” மாசிலாமணி பாதி வேடிக்கையாகவும் பாதி தீவிரமாகவும் எச்சரித்தார்.

“நம்ம அண்ணன் புள்ள ஜான்சனும் சொல்லியிருக்கான்லா. நான் பக்குவமாத்தான் இருக்கேன்.”

“வீரமுத்து மேஸ்திரிகிட்டையும் பாத்து நடந்துக்குங்க. அவம் புள்ள ஜி.எம்.மோட ஆளுகள்ள ஒருத்தி. தெக்கு டிவிஷன்ல காசி மேஸ்திரின்னு ஒருத்தன் இருக்கான். இந்த ரெண்டு பயலுகதான் ஜி.எம்.முக்கு புள்ளைகளை ஏற்பாடு செஞ்சு குடுக்கிறவனுங்க”

“ஆமா, தம்பியும் சொன்னான். இந்த வீரமுத்துப்பய வேலயே செய்ய மாட்டேங்கான்லா. எப்ப பாத்தாலும் ரோட்டுலபோய் நின்னுகிட்டு தொர எப்ப வருவாருன்னு நாயாக் காத்து கெடக்கான். அவரு தல தெரிஞ்சா போதும். எட்டு ஊருக்கு கேக்க மாதிரி வணக்கம் போடுதான். ஓட்டமா ஓடிப்போயி குதிரயப் புடிச்சுக்குதான். நான் வந்த புதுசுல ஒருநாள் சால்ல நின்னுட்டுருந்தேன். இந்த பயலும் அங்கதான் இருந்தான். ஜி.எம். நேரா அவங்கிட்ட போயி குதிரலேருந்து எறங்காம என்னவோ சொல்லிட்டுப் போயிட்டாரு. ஒரு அஞ்சு நிமிசம் போல இருக்கும், இவன் மீனாட்சிங்கிற புள்ளைட்ட என்னமோ சொல்லி எங்கேயோ அனுப்புனான். நான் ஒருத்தன் அங்கன இருக்கேன்னு அவன் மதிக்கவேயில்ல. நான் அவனுக்கு சாப்பாடு எடுத்துட்டு வரச் சொல்லிதான் அந்தப் புள்ளய அனுப்புதான்னு நான் நெனச்சிட்டேன். எனக்கு கோவம்னா அப்படி ஒரு கோவம். அவனச் சத்தம் போட்டு அந்தப் புள்ளய கூப்பிடச் சொன்னேன். அந்தப் பய ஓடிவந்து சொன்னப் பொறவுதான தெரியுது, தொரதான் அவள 12-ஆம் நம்பர் காட்டுக்கு அனுப்பச் சொன்னாருன்னு. எனக்கு பக்குன்னு ஆயிப் போச்சு. வாயே தொறக்கலியே. தம்பிகிட்ட விசயத்தப்போட்டப்பதான் தெரியுது. அவன்கிட்ட பாத்துதான் நடந்துகிடனுமுன்னும், ஜி.எம் பத்தி எதுவும் சொல்லிரக்கூடாதுன்னும். அன்னைலேருந்து இவ்வளவு நாளாச்சு என்ன நடந்தாலும் சரி நான் பார்த்தும் பாக்காத மாதிரி போயிருவேன்.”

“என்னது அது 12-ஆம் நம்பர் காடு?”

“விதைக்காக மரம் வெச்சிருக்றம்ல அதுதான். அந்த எடம்தான் காட்டுக்குப் பக்கத்துல இருக்கு.”

“ஓஹோ வீரமுத்துவும் கோபாலும் கூட்டாளிமாருல்லா. ரெண்டு பேரும் குணசேகராவை ஒழிச்சுக் கட்டணும்னு கங்கணம் கட்டிட்டுத் திரியறானுவோ. வேலு மேஸ்திரி பொஞ்சாதி கருப்பாயி இருக்கால்லா. அவளதான் குணசேகரா வைப்பாட்டியா வைச்சிருக்கானாம். மத்தியானம் 2 மணிலேருந்து 3 மணி வரைக்கும் அவ குணசேகரன் வீட்டுல கெடப்பா. இது அவ புருசன்காரனுக்கும் தெரியும். இந்த பயலுவ ரெண்டு பேரும் சேர்ந்து இப்ப வேலுவ சரிகட்டிட்டானுவ. ஒருநாள் கருப்பாயி குணசேகரன் வீட்டுல இருக்குற சமயமா பாத்து வேலுவ வீரமுத்து ஜி.எம். பங்களாக்கு கூட்டிட்டுப் போயிட்டான். வேலு நேரா ஜி.எம்முகிட்ட போயி குணசேகரா எம் பொஞ்சாதிய நெதம் மிரட்டி அவன் வீட்டுக்கு கூட்டிட்டுப் போயிருதான். இப்பகூட ரெண்டு பேரும் அவன் வீட்டுலதான் இருக்காங்க. இப்ப போன அவங்கள கையும், களவுமாப் பிடிக்கலாமுன்னு புகார் சொன்னான். ஜி.எம்.

உடனே கிளம்பி குணசேகரா வீட்டுக்கு போனாரு. அங்க போய் பாத்தா யாருமேயில்ல. இந்த வெவரம் எல்லாம் குணசேகராவுக்கு வேண்டப்பட்ட கூலியாளு யாருக்கோ தெரிஞ்சிருக்கு. அவங்க முன்னகூட்டியே போய் குணசேகராகிட்ட தகவல் சொல்லிட்டாப்ல. அதனால தொர வரும்போது அவன் ஓடிவந்து காட்டுல வேலை பாத்துட்டு இருந்துருக்கான். எப்படியோ இந்தத் தடவ கோபாலனோட திட்டம் தோத்துப் போச்சு."

"அந்தப் பிச்சைக்காரப் பய கோபாலனுக்கு எதுக்கு குணசேகரா மேல இத்தனை ஆத்திரம்?" ரத்தினம் கேட்டான்.

"அதான் குணசேகரா வேலையை இவன் புடிக்கணும்னு பாக்குதான்னு சொன்னேன்லா. அதோட அந்தப் பய குணமே அப்படித்தாம்லா. ஏதாவது காரியம் ஆகணும்னா காலப்பிடிப்பான் அப்புறம் கழுத்தை அறுக்கறதுக்கு நேரம் பாத்துட்டு இருப்பான். உனக்கே தெரியும், இவனே பழனி மேஸ்திரி பொஞ்சாதி அன்னத்தாய வெச்சிருக்கான். அதத் தவிரவும் அங்கே இங்க தொடுப்பு உண்டு. குணசேகரன் நெனச்சிருந்தா இந்த கோபாலன் பயல பெரிய சிக்கலில்ல சிக்க வச்சிருக்கலாம். ஏன் அவன வேலையைவிட்டே தூக்க வைச்சிருக்கலாம். ஆனா எப்பவெல்லாம் இந்த கோபாலன் பய பிரச்சினைல மாட்டிகிட்டானோ அப்பவெல்லாம் குணசேகரன்தான் அவனக் காப்பாத்தினான். ஆனா இந்த கோபாலன் தன்னைக் காப்பாத்தின மனுசனுக்கே துரோகம் பண்ணுதான்னா பாரேன்... அவன் எதுக்கும் தயங்காதவனாக்கும் அவங்கிட்ட கொஞ்சம் ஜாக்கிரதையா இரு."

"நம்ம ஜி.எம். என்ன இத்தனை பயங்கரமான ஆளா இருக்கான்? அவன் பொஞ்சாதி எப்படித்தான் இதையெல்லாம் பொறுத்துக்குதாளோ பாவம், ஒருவேளை அவளுக்கு இவன் விவகாரம் எல்லாம் தெரியாதோ?" புதிதாக வேலைக்குச் சேர்ந்திருந்த ரத்தினத்திற்கு எல்லாமே ஆச்சரியமாயிருந்தது.

"அட இல்ல, அவளுக்கு எல்லாம் தெரியும். ஜி.எம்மும் அவகிட்ட மறைக்கணும்னு பெரிசா கவலைப்பட மாட்டான். சில சமயங்கள்ல புள்ளைகள அவன் பங்களாவுக்கே கூட கூட்டிட்டு போறான்."

"இந்த மாதிரி ஆளோட எப்படித்தான் ஒரு பொம்பளை இருக்குதோ"

"அட அவளும் அப்படித்தான்லே, சனிக்கிழமை ராவுகள்ல அவ கிளப்புல இருந்து வீட்டுக்கே வரமாட்டா. முடீஸில ஒரு அசிஸ் டென்ட் மேனேஜரோட அவ தொடுப்பு வெச்சிருக்கான்னு கதை ஊரெல்லாம்

நாறுது. வாயத் தெறக்க மாட்டேன்னு சத்தியம் பண்ணுனா ஒரு ரகசியம் சொல்லுவேன். இத அப்பாவுதான் எங்கிட்ட சொன்னாரு. நான் யாரு கிட்டயும் சொல்ல மாட்டேன்னு அவனுக்கு சத்தியம் பண்ணிக் குடுத்திருக்கேன்.”

“கண்டிப்பா சொல்ல மாட்டேண்ணே” ரத்தினம் அவசரப்படுத்தினான்.

“மேடமும் மாஸ்டருக்குச் சளச்சவ கெடயாது. அவன் போற வழியிலேதான் இவளும் போகுதா. எஜமான் கூலிக்காரப் பொண்டுகளோட ஒட்டிட்டு இருந்தா மேடம் ஒரு கூலிக்காரப் பயலை வெச்சிருக்கா. ஜி.எம்முக்கு ராமன்ங்கிற பேரில ஒரு சைஸ் இருக்கான் தெரியும்லா. அவன் பயனுக்கு பதினாறு வயசகுது. நல்ல செவத்த பையன். பாக்கிறதுக்கு ஆளு அழகா இருப்பான். கிராஸ் ஹில்ஸ்க்கும் வேற எடங்களுக்கும் பிக்னிக் போகும்போது மேடம் இந்தப் பயலத் தான் சாப்பாட்டுக் கூடையை தூக்கிட்டு வான்னுக் கூட்டிட்டு போறா. பிக்னிக் இடத்துக்குப் போனாபோதும், அந்தப் பயலை பாடாபடுத்தி சோலிய முடிக்காளாம். இந்தப் பயலோட அப்பன்காரன் ரொம்ப பயந்துபோயி அப்பாவுகிட்ட யோசனை கேட்டுருக்கான். அப்படித்தான் அப்பாவுக்கு விசயம் தெரிஞ்சிருக்கு. ஆண்டவனுக்குப் பொதுவா இத யாருகிட்டயும் சொல்லிடா தீங்கப்பு.” எல்லாவற்றையும் சொல்லி முடித்தபின்பு மாசிலாமணிக்கு பயம் பிடித்துக் கொண்டது.

“நான் எதுக்குண்ணே வெளியில சொல்லுதேன்? அப்பாவு அவருக்கு என்ன சொன்னாரு?” ரத்தினத்தின் கவனம் அதிலேயே இருந்தது.

‘பயலை சொந்த ஊருக்கு அனுப்பிடுன்னு சொல்லியிருக்காரு”

# 3

*கிழக்குக் காற்றைப் போல நான் குடியிருப்பினுள் பாய்ந்தபோது சிறிய மேஜையில் சிகரெட் பெட்டியும், பெரியமேஜையில் இல்லஸ் டிரேடட் வீக்லி பேப்பர்களும், தரையில் எனது செருப்புகளும், உருப்படாத ஒவ்வொரு பொருளும் சகிக்க முடியாவிதத்தில் சரியாக அதனதனிடத்தில் வைக்கப்பட்டிருந்தன... பின்பு கதவு வழியாக அன்புமயமான பழைய வேலைக்காரன் ஷீவ்ஸ் ஒரு ட்ரே முழுக்கத் தேவையான பொருட்களோடு தோன்றினான்...*

*தி இனிமிடபிள் ஜீவ்ஸ்*
-பி.ஜி. வுட்ஹவுஸ்

தலைமை மேலாளர் திருவாளர் வொயிட் பங்களாவுக்கு முன்னால் குதிரையைக் கொண்டு வந்து நிறுத்தி இறங்கினார். அது ஒரு மாலை நேரம். அவர் அப்போதுதான் கொழுந்து கொண்டு வரப்படுவதை மேற்பார்வை இட்டு விட்டு, பெண்களோடு விளையாடி விட்டு ஃபாக்டரியிலிருந்து திரும்பி வந்திருந்தார். வாசலில் காத்திருந்த ராமன் ஓடிச் சென்று குதிரையைப் பிடித்துக் கொண்டான். வொய்ட் வரவேற்பறைக்குச் சென்று வழக்கமான சோபாவில் உட்கார்ந்து கொண்டார். தயாராக இருந்த சோக்ரா மண்டியிட்டு அமர்ந்து அவரது ஷூக்களையும், சாக்ஸ்களையும் கழற்றி கால்களில் ரப்பர் செருப்புகளை மாட்டினான்.

“பிரிங் டீ மாஸ்டர்?” சோக்ரா கேட்டான்.

“ய்யா” மெட்ராஸ் மெய்லி-ன் பக்கங்களில் மூழ்கியபடியே துரை முனகினார். சோக்ரா ஒரு ட்ரேயில் ஒரு குவளை முழுக்க டீயும், இன்னொரு ஜக்கில் பாலும், சக்கரையும், இன்னொரு தட்டில் ஸான்ட்விச்களும், பிஸ்கெட்களும் கொண்டு வந்து ஒரு டீபாயை எஜமானுக்கு அருகே வைத்து அனைத்தையும் அதன்மேல் ஒழுங்காகப் பரப்பினான்.

“டீ ரெடி மாஸ்டர்”

“மேடம் எங்க” வொய்ட் கேட்டார்.

“மேடம் பாக்ஸ் கம் (திருமதி பாக்ஸ் கழுகுமலை மேனேஜரின் மனைவி)

டு மேடம்ஸ் கோஸ் வெள்ளிமலை பங்களா” சோக்ரா விநோதமான ஆங்கிலத்தில் பேசினான். இருவரும் வெள்ளிமலை மேனேஜரின் பங்களாவுக்குச் சென்றார்கள் என்பதைத்தான் அப்படிச் சொன்னான்.

“மேடம் இரவு உணவுக்கு வருவாளா?” வொயிட் ஆங்கிலத்தில் கேட்டார்.

“வெளியே டின்னர் சாப்பிடறாங்க.”

வொய்ட் ஒரு கோப்பையில் டீயை ஊற்றி உறிஞ்சின பின்பு ஒரு ஸான்ட்விச்சை எடுத்து மென்றபடி பேப்பர் மீது கண்களை ஓட்டினார். சோக்ரா மரியாதையாகத் தள்ளித் தயாராக நின்றிருந்தான். சில நிமிடங்களில் பேப்பரை முடித்துவிட்டு இன்னொரு கப் டீ ஊற்றிக் கொண்டார். சரியான தருணத்திற்குக் காத்திருந்த சோக்ரா முன்னால் வந்து “மாஸ்டர் பிக் புட் டென் லிட்டில் பிக்ஸ்” (வொய்ட் வளர்த்து வரும் பன்றி பத்து குட்டிகள் போட்டுள்ளது) என்றான்.

“வெரிகுட், நல்லாப் பார்த்துக்கோ. குட்டிகளுக்குப் பால்ல ரொட்டியத் தோச்சு தினமும் குடு. வைக்கோல் கொண்டு வந்து போட்டு அவைகளுக்கு வெதுவெதுப்பா இருக்கற மாதிரி பார்த்துக்கோ.”

“யெஸ் மாஸ்டர்” அவர் நல்ல மனநிலைக்கு வந்த பிறகு சோக்ரா மெதுவாகத் தன் விஷயத்துக்கு வந்தான்.

“மாஸ்டர், என் மனைவியின் தம்பி பட்டினி கிடக்கிறான். வேல கொடுங்க” சோக்ரா துண்டு துண்டான ஆங்கிலத்தில் கோரிக்கை வைத்தான்.

“உன் மனைவியின் தம்பி எங்கிருக்கிறான்?”

“கிராமத்தில மாஸ்டர். சொன்னா இப்பவே கூட்டிட்டு வர்றேன்.”

“நோ நோ இப்ப வேண்டாம். அவன் எவ்வளவு படிச்சிருக்கான்?”

“மூன்றாவது பார்ம், குட் வொர்க்மேன் மாஸ்டர், கிவ் வொர்க் மாஸ்டர், - மாஸ்டர் என்ன வேல சொன்னாலும் செய்வான் மாஸ்டர். கல்லத் தூக்கச் ன்னா தூக்குவான். மாஸ்டர் பன்னிக்கு சோறு போடச் சொன்னா நல்லாப் போடுவான்...”

“இங்கிலீஷ் பேசுவானா?”

“ஆமா மாஸ்டர், வெரிகுட் இங்கிலிஷ் ஸ்பீக் (நல்லா இங்கிலிஷ் பேசுவான்) இப்போ யுரோப்பியன் மாஸ்டர்கிட்ட வேலை செய்யறான்”

“எங்கே” மிஸ்டர் வொய்ட் கேட்டார்.

“மிஷன் பங்களா, மாஸ்டர்.”

“ஆல்ரைட், அவனைப் பத்தி நான் அப்பாவுகிட்ட பேசறேன்.”

“மாஸ்டர் மி யு ஸ்லேவ், மை வைஃப் யுவர் ஸ்லேவ், மை வைஃப் பிரதர் யுவர் ஸ்லேவ், மாஸ்டர் ஹெல்ப், வி லிவ் இஃப் மாஸ்டர் நோ ஹெல்ப், வி நோ லிவ்” (மாஸ்டர், நான் உங்க அடிமை. என் மனைவி உங்க அடிமை, என் மச்சான் உங்க அடிமை, எஜமான் உதவினா நாங்க உயிரோட இருப்போம். இல்லாட்டி நாங்க செத்துப் போயிருவோம்?) என்றான் சோக்ரா.

“ஆல்ரைட் ஆல்ரைட் உதவறேன். அப்பாவுகிட்ட பேசறேன்” என்றார் வொயிட்.

“மாஸ்டர், ராவுல மாஸ்டரோட எந்தப் புள்ள இருந்தான்னு மேடம் கேட்டாங்க” என்றான் சோக்ரா தனது வழக்கமான ஆங்கிலத்தில்.

“ப்பூ... நீ என்ன சொன்னே?”

“மாஸ்டர், இங்க ஒரு பொண்ணும் வரலைன்னு சொன்னேன்.”

“மேடத்துக்கிட்ட யாரு சொல்லியிருப்பாங்க? மாதவி இங்க வர்றத யாராவது பாத்தாங்களா?” - மாதவி சோக்ராவின் மனைவியின் தங்கை.

“ஹெட்கிளார்க்தான் மேடத்திடம் சொல்றாருன்னு நினைக்கிறேன் மாஸ்டர்.”

“நீ எப்பவுமே ஜான்சனைப் பத்தி மோசமாவே பேசறே. அவன் எனக்கு ரொம்ப விசுவாசமானவன்.”

“ஹெட்கிளார்க் மேடத்துகிட்ட பேசிட்டு இருக்கிறத கண்ணால பார்த்தேன் மாஸ்டர்.”

“ஸ்டாப் இட்” வொய்ட்டுக்கு கோபம் வரத்தொடங்கியது தெரிந்தது.
“இந்த மாதிரிப் பேச்சை இதோட நிறுத்து, பிளடி ராட்.”

# 4

உங்களில் பாவம் செய்யாதவர் முதலில்
இப்பெண் மேல் கல் எறியட்டும்

பைபிள் -யேவான் சு -8

அந்த ஆண்டு கடும் வயிற்றுப் போக்கு, கொள்ளை நோயாகப் பரவியது. ஏராளமான குழந்தைகளும், பெரியவர்களும் நோயால் உயிரிழந்தனர். கோவிந்தனும் கடுமையாக பாதிக்கப்பட்டு மருத்துவ மனையில் அனுமதிக்கப்பட்டான். பகலில் வேலைக்குச் சென்றுவிட்டு இரவு நேரங்களில் மாரியாயி மருத்துவமனைக்குச் சென்று அவனை கவனித்துக் கொண்டாள். ராசய்யா அந்த இரவுகளில் குழந்தையைப் பார்த்துக் கொண்டான். கருப்பனும் தினமும் மருத்துவமனைக்குச் சென்று கோவிந்தனைப் பார்த்து வந்தான்.

“கோவிந்தனுக்கு இப்பக் கொஞ்சம் பரவாயில்ல. ஆனா ஆளு எலும்பும் தோலுமா ஆயிட்டான்” என்று ஒருநாள் மருத்துவமனைக்குப் போய் வந்தவுடன் கருப்பன் வள்ளியிடம் சொன்னான். “மொதல்ல அஞ்சு நிமிஷத்துக்கு ஒரு தடவ கக்கூஸுக்குப் போயிட்டு வந்திட்டிருந்தான். ரத்தமெல்லாம் சுண்டிப்போன மாதிரி இருந்தது. இப்பக் கொஞ்சம் கஞ்சி குடிக்க முடியுது. இன்னும் ஒரு வாரத்துக்காவது ஆஸ்பத்திரியில இருக்கணும்னு வைத்தியர் சொல்லி இருக்குதாரு.”

“நமக்கு இந்த வியாதி வராம இருக்கணும்.”

“முத்துக்கருப்பன்கிட்ட போயி உனக்கு ஒரு தாயத்து வாங்கிட்டு வரட்டுமா?”

“வேண்டாம். எனக்கு இந்த வியாதியப் பாத்து பயமில்ல. மலைக்காய்ச்சலை நெனைச்சாதான் வயித்தக் கலக்குது.”

ஒருநாள் மாரியாயி கணவனைக் கவனிக்கப் போகாமல் அறையிலிருப்பதை பார்த்து வள்ளி, “இன்னும் போகலயா, ரொம்ப நேரமாச்சே”என்று கேட்டாள்.

“இல்ல, அதுக்கு இப்ப பரவாயில்ல. குழந்தை ராசாவப் போட்டு பாடாப்படுத்துது. நான் இல்லாம சோறும் திங்க மாட்டேங்குது. நான் கொழந்தைய ஆசுபத்திரிக்குத் தூக்கிட்டு போறது அவருக்கு பயமா இருக்காம். வீட்டுலேயே இருந்து குழந்தையப் பாத்துக்க சொல்லிடுச்சு”

“சரி அண்ணனப் பாத்துக்க ராசாவயாவது அனுப்பலாம்ல”

“நான் அனுப்பினேன் அக்கா, ஆனா அதுதான் ஒத்தாசைக்கு யாரும் வேண்டான்னு சொல்லி ராசாவையும் திருப்பி அனுப்பிடுச்சு”

அன்று நள்ளிரவில் பக்கத்து அறையில் ஏதோ கசமுசப்புச் சத்தம் கேட்டு வள்ளி விழித்துக் கொண்டாள். ஊசி விழுந்தால் கேட்கும் நிசப்தத்தில் ராசாவின் கெஞ்சும் குரல் ஏதோ கிணற்றுக்குள்ளிலிருந்து வருவது போல் கேட்டது.

“சத்தம் போடாதே மடையா, பேசாம இரு” மாரியாயி கிசுகிசுத்ததும் கேட்டது.

“ஐயோ, ஐயோ மதினி வேண்டாம் என்னால முடியாது”

ராசாவின் குரல் சற்றே உயர்ந்தது. வள்ளி துள்ளியெழுந்து கருப்பனை எழுப்பி, பக்கத்து அறையில் ஏதோ சரியில்லை என்றாள்.

“ஐயோ மதினி என்னை விடு” ராசாவின் குரல் ஏறக்குறைய அழுகையுடன் ஒலித்தது.

ஏறக்குறைய ஐந்து நிமிடங்கள் அமைதி பின்பு திடீரென்று ராசா கத்தினான் “கருப்பண்ணாச்சி, கருப்பண்ணாச்சி இங்கன வாங்க”

கருப்பனும், வள்ளியும் பாய்ந்தோடினர். இருளில் மேடைக்கு கீழிருந்து யாரோ வாரிச் சுருட்டிக் கொண்டு அவசரமாக எழுவது நிழலாகத் தெரிந்தது. “ராசா என்னல ஆச்சு, ஏன் கத்துதே?”ராசா ஓடிவந்து கருப்பனோடு ஒட்டிக் கொண்டான். “ராவுக்கு என்னை வேறெங்கயாவது தங்க வையிங்க. நான் இங்கன தூங்க மாட்டேன்.”

“சரி சரி. இப்ப ரகளை பண்ணாதே. முதல்ல விளக்கை பத்தவை.” வள்ளி தங்கள் அறையிலிருந்து விளக்கை எடுத்து வந்தாள். மாரியாயி மேடை மீது தலையோடு காலாகப் போர்த்துக் கொண்டு ஆழ்ந்த உறக்கத்தில் இருப்பது போன்று பாசாங்கு செய்து கொண்டிருந்தாள்.

“அண்ணாச்சி, என்னை வேற எங்கயாவது அனுப்பிடுங்க” ராசா கெஞ்சினான்.

“கவலைப்படாத. இனி ஒண்ணும் ஆகாது. இனி யாரும் உன் உறக்கத்த கெடுக்காம பாத்துக்கறோம். நடந்தது நடந்து போச்சு. உள்ள நடந்தத வெளிய சொன்னா நம்ம மானம்தான போகும். நம்ம பேர நாமதான் காப்பாத்திக்கணும். அதனால இப்ப இங்கனயே படுத்துக்கோ நாங்க பாத்துக்குதோம்.” ராசாவை கருப்பனும் வள்ளியும் வற்புறுத்தி இணங்க

வைத்தனர். மாரியாயி மூச்சே காட்டவில்லை. “இதப்பத்தி யாருகிட்டயும் ஒரு வார்த்தையும் சொல்லக் கூடாது, கேட்டியா உங்கண்ணன்கிட்ட கூட மூச்சு விடக்கூடாது” என்ற கருப்பன் போர்வைக்குள் புதைந்திருந்த மாரியாயியை நோக்கி “இன்னைக்கி நடந்ததப் பத்தி யாரும் வெளில பேசாம இருக்கதுதான் நல்லது. நாங்களும் வாயத் தொறக்கமாட்டோம். வேற மாதிரி கதைய கட்டி விசயத்த மாத்தலாம்னு நெனச்சா அப்புறம் வாயக் கிளறி வயித்தெரிச்சல கொட்டிக்க வேண்டியதுதான். எல்லாத்தையும் மறந்திட்டா நல்லது.” என்று சொல்லிவிட்டு வள்ளி பின்தொடர வெளியேறினான்.

அறைக்கு வந்தபிறகு “மாரியாயி இப்படி நடந்துக்குவான்னு நான் நெனச்சே பாக்கல மாமா” என்று வள்ளி கருப்பனின் காதருகே கிசுகிசுத்தாள்.

“மாரியாயி மத்த பெண்டுகளைவிட நல்லவளுமில்ல, கெட்டவளுமில்ல. இங்கிருக்கிற நெலமதான் அவள புத்தி கெட்டுப் போக வைக்குது. இந்த மாதிரி கும்பல்ல இருந்தா வேற என்ன நடக்கும். தறிகெட்ட இடத்துல கோவிந்தனும் மாரியாயியும் எப்படி புருஷனும் பொஞ்சாதியுமா இருக்க முடியும்? புத்தி தடுமாறித்தான் போகும்.”

“அவங்க ரெண்டு பேரும் நல்லாத்தானே இருந்தாங்க.”

“ஆமா இனியும் அப்படித்தான் இருப்பாங்கன்னு நெனைக்கேன்.”

ஐந்து நாட்களுக்குப் பிறகு கோவிந்தன் மருத்துவமனையிலிருந்து வீடு திரும்பினான். கருப்பனுக்கும் வள்ளிக்கும் எல்லாமே இயல்பாக இருப்பது போல்தான் தோன்றியது.மாரியாயி ஒருவாரம் வள்ளியுடன் பேசவில்லை. ஆனால் பின்பு வழக்கம் போல சகஜமாகப் பேசி பழகத் தொடங்கி விட்டாள்.

ஒருநாள் திரும்பிக் கொண்டிருக்கும்போது பூசாத்தாள் எஸ்டேட் கடைக்குப் போய்க் கொண்டிருப்பதைப் பார்த்து வள்ளி வியப்படைந்தாள்.

“நீ எப்ப வந்தே?”

“நாங்க வந்து ரெண்டு நாளாச்சே.”

“உங்க அறைக்கு வரவேயில்லையே. வேறெங்காவது இடம் கிடைச்சுடுச்சா?”

“ஆமா, எங்களுக்கு அதோ அங்கன வேற இடம் குடுத்திட்டாங்க” என்று பூசாத்தாள் தெருவைத் தாண்டி இருந்த லைனை நோக்கிக்

கைகாட்டினாள். அது உதவி எழுத்தர் மாத்யூஸுடைய வீட்டுக்கு அருகிலிருந்தது.

வீடு திரும்பியதும் வள்ளி முதல் வேலையாக பூசாத்தாளைச் சந்தித்ததை விலாவாரியாக கூறினாள்.

“தங்கத்துல கம்மல் மாட்டியிருக்கா. பெரிய வெள்ளிக் கொலுசும் வளையலும் போட்டிருக்கா. புத்தம் புதுசா நல்ல சீல கட்டியிருக்கா. கல்யாணப் பொண்ணுமாதிரில்லா இருக்கா!”

“இந்தமாதிரி ஆளுகளுக்குத்தான் காலம்” கருப்பனிடமிருந்து சூடான பெருமூச்சு வெளிவந்தது.

# 5

கேலி செய்வதற்கென்றே ஒதுக்கப்பட்ட விசயம் திருமணம். திருமண விழா குறித்து மகிழ்வுடன் பேசுகிறோம். திருமண வாழ்க்கை பற்றிய எந்த விதமான ஒளிவு மறைவான வஞ்சப் புகழ்ச்சியும் நாம் செய்யவில்லை என்பது தெளிவாகப் புரிந்து கொள்ளப்படவேண்டுமென்று மன்றாடிக் கேட்டுக்கொள்கிறோம்.

பிக்விக் பேப்பர்ஸ்
- *சார்லஸ் டிக்கன்ஸ்*

தலைமை எழுத்தர் அப்பாவு புதுமண தம்பதிகளுக்காக தனது வீட்டில் ஒரு வரவேற்பு ஏற்பாடு செய்திருந்தார். திருமணம் நடந்து ஒரு வாரம் கழித்து அவரது மகளும், மருமகனும் மற்றும் குடும்பத்தினரும் எஸ்டேட்டுக்கு வந்திருந்தனர். வீட்டுக்கு முன்பு புற்களையும், பச்சை இலைகளையும் கொண்டு ஒரு சிறிய பந்தல் போடப்பட்டிருந்தது. சர்ச்சிலிருந்து கொண்டு வரப்பட்ட சில பெஞ்சுகளும் மற்ற ஊழியர்களின் வீடுகளிலிருந்து கொண்டு வரப்பட்டிருந்த முக்காலிகளும் பந்தலின் கீழ் போடப்பட்டிருந்தன. குரங்குமலை கழுகுமலை எஸ்டேட் எழுத்துப் பணியாளர்களும் பங்கெடுத்துக் கொள்ளும் விதத்தில் வரவேற்பு சனிக்கிழமை மாலை ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. குரங்குமலை எஸ்டேட் ஃபீல்டு ரைட்டரும் அம்மிணியின் கணவனுமான ஜார்ஜைத் தவிர இரண்டு எஸ்டேட்டுகளையும் சேர்ந்த அத்தனை எழுத்துப் பணியாளர்களும் விழாவுக்கு வந்திருந்தனர். பக்கத்து எஸ்டேட்டுகளில் இருந்தும் சில பணியாளர்கள் வந்திருந்தனர். மூத்த உத்தியோகஸ்தர்கள் தங்கள் குடும்பங்களையும் கூட அழைத்து வந்திருந்தனர். அப்பாவு வாசலிலேயே நின்று முகம் நிறைய சிரிப்போடு விருந்தாளிகளை வரவேற்றார். அவரது அசட்டுத்தனமான நையாண்டிகளும், வெடிச் சிரிப்பும் அவர் ‘வெள்ளைக் குதிரை’ ஏறியிருந்ததை அப்பட்டமாகக் காட்டின. விருந்தாளிகள் வந்தவுடன் தம்பதிகளுக்கு அறிமுகப் படுத்தப்பட்டு ஆசியும், பரிசுப் பொருட்களும் வழங்கியதும் சிற்றுண் டிகள் பரிமாறப்பட்டன. ஆண்கள் பந்தலுக்குக் கீழ் அமர பெண்கள் வீட்டிற்குள் அழைத்துச் செல்லப்பட்டனர். உதவி எழுத்தர் மாத்யூஸும் ராஜூம் சிற்றுண்டிகள் பரிமாறிக் கொண்டிருந்தனர்.

தலைமை எழுத்தரின் நல்லெண்ணத்தைப் பெற இது ஒரு சிறந்த

சந்தர்ப்பம் எனக் கருதியதால் தெற்கு டிவிஷன் மேஸ்திரிகள் விலையுயர்ந்த பரிகளோடு ஒவ்வொருவராக வந்து கொண்டிருந்தனர். குரூப்பின் தலை தெரிந்ததும் "ஹலோ டாக்டர்" என்று அப்பாவு அவர் முதுகில் தட்டி உற்சாகமாக வரவேற்றார். பின்பு திருமதி குரூப்பின் பக்கம் திரும்பி சட்டென்று பணிவான தோற்றத்தை வரவழைத்துக் கொண்டு "தோத்தரம் அம்மா" என்றார்.

"சாரி, கொறச்சு தாமசமாயி, ஆசுபத்திரியில ஒரு பாடு பணி. ஈ கொல்லம் டிசன்ட்ரி சீசன் பயங்கரமாணு" என்றார் குரூப். வயதான எழுத்துப் பணியாளர்கள் மூவர் பந்தலை நெருங்கிக் கொண்டிருப்பதைக் கண்ட அப்பாவு முன்னேறிச் சென்று வரவேற்றார். "வாங்கண்ணே! நீங்க வந்ததுல ரொம்ப சந்தோஷம்" மூவரிலும் மூத்தவர் முடீஸிலுள்ள ஒரு எஸ்டேட்டில் தலைமை எழுத்தராக உள்ள அருளய்யா. அடுத்தவர் ஸ்டான்மோர் குரூப். எஸ்டேட்டுகளில் ஒன்றின் தலைமை பீல்ட் ரைட்டர் அருமைநாயகம். மூன்றாமவர் ஜேம்ஸ் பின்லே எஸ்டேட்டில் டீமேக்கராக இருக்கும் பாண்டியன். அப்பாவு அவர்களை உள்ளே அழைத்துச் சென்று மகளுக்கும், மருமகனுக்கும் அறிமுகம் செய்து வைத்தார். சிற்றுண்டிக்குப் பின்பு அவர்களை இரவு தங்கும்படி கேட்டுக் கொண்டார்.

"ஏற்கனவே இருட்டிப் போச்சு. உங்க எஸ்டேட்டுக்குப் போறது கஷ்டம். ஜான்சன் வீட்ல நீங்க தங்க ஏற்பாடு செய்யுதேன். அவரு பொஞ்சாதி ஊருக்குப் போயிருக்கு" என்றார். வந்தவர்கள் அதற்காகவே காத்துக்கெண்டிருந்தது போல் உடனே ஒப்புக் கொண்டனர். அப்பாவு பெருமகிழ்ச்சியடைந்தார்.

ஏற்கனவே பந்தலில் ஒரு மூலையில் அமர்ந்திருந்த மூத்த ஊழியர்களான குரூப், ஜான்சன், சாமிதாஸ், ஆறுமுகம், மாணிக்கம் மாசிலாமணியுடன் இவர்களும் இணைந்து கொண்டனர்.

"பெருசுக எல்லாம் மூலைல ஒண்ணாச் சேந்துருச்சு பாரு" ராஜ் அருள்தாஸின் காதில் கிசுகிசுத்தான்.

"பாட்டில் இல்லாம கொண்டாட இதென்ன சில்லற விசேசமா?"

வரவேற்புக்கு வந்திருந்த எல்லோரும் கிளம்பிச் சென்ற பிறகு அப்பாவு மூலையில் ஒன்று கூடியிருந்த குழுவினரை ஜான்சனின் வீட்டுக்கு அழைத்துச் சென்றார். அங்கே மகிழ்ச்சிகரமான கொண்டாட்டத்திற்காக அனைத்து ஏற்பாடுகளும் செய்யப்பட்டிருந்தன.

# 6

‘இந்தியர்கள் கடவுள்களை விரும்புகிறார்கள்.’
‘ஆங்கிலேயர்கள் தங்களைக் கடவுளர்களாகக் காட்டிக் கொள்வதை விரும்புகிறார்கள்.’
இதிலெல்லாம் அர்த்தமேயில்லை. நாம்இங்கேயிருக்கிறோம், இருக்கப் போகிறோம். கடவுள்கள் இருந்தாலும் இல்லாவிட்டாலும் இந்த நாடு நம்மோடுதான் இருக்கும். இந்தப் பாவப்பட்ட நாட்டை வாள் முனையில் அடக்கியாளவே இங்கேயிருக்கிறோம். இந்தியாவில் நாம் இனிமை நிறைந்தவர்களாக நடந்து கொள்வதில்லை. அப்படி நடந்து கொள்ளும் உத்தேசமும் நமக்கில்லை.

எ பேஸேஜ் டு இந்தியா
- இ.எம்.பாஸ்டர்

“கொண்டாட்டத்தை ஆரம்பிக்கலாமா” என்றார் மகிழ்ச்சி வெள்ளத்தில் மிதந்து கொண்டிருந்த அப்பாவு, “என்னுடைய சிநேகிதத்த மதிச்சு இத்தன பேரும் ஒண்ணா சேர்ந்து இந்த விருந்துக்கு வந்தது எனக்கு ரொம்ப சந்தோசமா இருக்கு.” “வாங்க நாம ஆரம்பிச்சிடலாம், பசி என் வயித்தைக் கிள்ளுது.” ரொட்டியும் பீர், பிராந்தி பாட்டில்களும் நிறைந்திருந்த மேசையைச் சுற்றி அவர்கள் அமர்ந்தனர். “ஆரம்பிக் கறதுக்கு முன்னால”“நாம எல்லாரும் எழுந்து நின்று நம்ம அப்பாவு வுடைய மகளுக்காகவும், அவளுடைய கணவனுக்காகவும் குடிக்கலாம்.” எல்லோரும் எழுந்து நின்று பீர் நிறைந்த கோப்பைகளை ஒரு மூச்சில் காலி செய்தனர்.

“இப்போ, நம்ம அப்பாவுவுடைய நலனுக்காக இன்னொரு கிளாஸ் குடிப்போம்” என்றான் ஜான்சன். இன்னொரு கோப்பையும் காலி ஆனது.

“இப்போ உக்காரலாம்” என்றார் அப்பாவு.

“அந்த பிச்சக்காரப் பய ஜார்ஜ் ஏன் இன்னும் வரலைன்னுதான் எனக்கு ஒரே ஆச்சர்யமா இருக்கு” என்றார் குரூப்.

“ஒருவேளை எல்லார் முன்னாடியும் தலைகாட்ட வெட்கப்படுதானோ என்னவோ” என்றான் சாமிதாஸ். “ஆமா! இவன் தலயக்காட்டாமே இருக்கட்டும். இவன் பொண்டாட்டி எங்கெங்கேயோ போயி

எல்லாத்தையும் காட்டிட்டுத் திரியுறா” என்றார் குரூப். அங்கு வெடிச் சிரிப்பு கிளம்பியது. அப்பாவு அருளய்யாவுக்கும் மற்ற இரு நண்பர்களுக்கும் அந்த சிரிப்பிற்கான காரணத்தை விளக்கினார்.

“டாக்டர், சங்கரபாண்டியப் பத்தி ஒரு வேடிக்கையான செய்தி தெரியுமா?” அப்பாவு கேட்டார்.

“இல்லை இல்லை என்ன அது?”

“அந்தப் பிச்சைக்காரன் இன்னொரு ஒரு கல்யாணம் பண்ணிட்டான். இதயும் சேர்த்து அவனுக்கு மூணு பொண்டாட்டி. யாரைக் கல்யாணம் பண்ணிக்கிட்டானுன்னு நெனைக்குதீக? அவனோட மொத ரெண்டு பொஞ்சாதிகளோட தங்கச்சியத்தான். இந்த பொண்ணுதான் கடைசி பொண்ணு. பதினைஞ்சு வயதுதான் ஆச்சு. மூணு அக்கா தங்கச்சிகளும் ஐயாவோட அந்தப்புரத்துக்குள்ள வந்திட்டாங்க.”

“பாவம் அந்தப் பொண்ணு. இவன் பான வயித்த வைச்சே அந்த புள்ளைய நசுக்கிருவான்லா.” ஜான்சன் சொன்னதும் எல்லாரும் குலுங்கிக் குலுங்கி சிரித்தனர்.

“எம் பொண்ணு கல்யாணத்துக்கு வந்திருந்தான். அங்கே வைச்சு எங்கிட்ட ஒண்ணுமே சொல்லல. இங்க வந்த பொறவு மாத்யூஸ் சொல்லிதான் எனக்கு கதையே தெரியும். இன்னைக்கு காலைல வீட்டுக்கு வந்தப்ப கேட்டேன். அதுக்கு அந்தப்பய சொல்லுதான். ஆமாய்யா கண்ணாலம் கட்டிகிட்டேன். அவ பொறந்ததிலிருந்து அவளோட எல்லாச் செலவையும் நான்தான் செய்யுதேன். நான்தான் படிக்க வைச்சேன். இரண்டாவது பாரம் வரைக்கும் படிச்சிருக்கா. எல்லாச் செலவையும் நான் செய்து போட்டு இன்னொரு பயலுக்கு எதுக்கு அவள விட்டுக் கொடுக்கணும்ங்கான். நல்லாருக்குதில்லா” என்றார் அப்பாவு.

“ஜார்ஜினை குறிச்சி நியூஸ் எந்தெங்கிலும் கேட்டிட்டுண்டோ?” குரூப் வேறு விஷயத்துக்குத் தாவினார். “அந்த பிச்சைக்காரப்பய ஏதோ வல்லிய திட்டம் போட்டிட்டு இருக்குன்னு” குரூப் போதையில் பேசுவது தமிழா, மலையாளமா என்றே யாருக்கும் புரியவில்லை.

“என்னது அது?” சாமிதாஸ் கேட்டான்.

“புல்லோட அசிஸ்டெண்ட் நல்ல ஒரு செக்கன், ஜென்டில்மேன். அவன் பரைஞ்சதாணு. அம்மணி அவளோட பிராணநாதனுக்கு அசிஸ்டென்ட் மேனேஜர் பணி வாங்ஙான் முயற்சி செய்யுன்னு போல. அசிஸ்டென்ட் மேனேஜர் பட்லர் இதை அறிஞ்சு வளர கோபம் ஆயி”என்றார் குரூப்.

“பட்லருக்கு இது எப்படித் தெரியும்?” அப்பாவு கேட்டார்.

“தண்ணியடிச்சிருக்கும்போது புல்லே சொல்லிட்டாம் போலிருக்கு”

குரூப் கூறினார்.

“எத்தனையோ படிச்ச இந்தியாக்காரங்க அந்த வேலைக்கு சந்தோஷமா வரத் தயாராயிருக்காங்க. ஆனா இந்தியாக்காரங்களுக்கு அந்த மாதிரி வேலையெல்லாம் குடுக்கறதேயில்ல. அப்படியிருக்கும் போது இந்தப்பய காலேஜுக்குள்ள கூடப் போகாதவன் ஆசப்படறான்.”

“அவனுக்கு அப்படி என்ன தகுதியிருக்கு.”

“நல்லா செவப்பா ஒரு பொஞ்சாதியிருக்கா?” சாமிதாஸ் சொல்லவும் திரும்பவும் வெடிச்சிரிப்பு எழுந்தது.

“சிரிப்பு இருக்கட்டும். அவன் எஸ்.எஸ்.எல்.சி தேறிட்டானு நெனக்கறியளா?” அப்பாவு தொடர்ந்து வற்புறுத்தினார்.

“ரெண்டு வருஷம் இன்டர் படிச்சதாவும் ஒடம்பு சரியல்லாமப் போயிட்டதால பரிச்சை எழுத முடியாமப் போச்சுன்னும் சொல்லிக்குதான்” என்றான் சாமிதாஸ்.

“அப்ப எஸ்.எஸ்.எல்.சி தேறியிருக்கணும்” குரூப் முடிவாகக் கூறினார்.

“ஆனா இந்தப் பிச்சக்காரப் பயலுக்காக வொய்ட் கிட்டப் போய் சிபாரிசு பண்ற அளவுக்கு புல்லுக்கு ஒருநாளும் துணிச்சல் வராது”என்றான் ஜான்சன்.

“இல்ல இல்லா. நம்ம குரூப்ல ஜார்ஜுக்கு பணி வாங்கித்தரான் புல் ட்ரை செய்யில்லா. மைசூர்ல நெறய காபி, டீ தோட்டங்கள் வைச்சிருக்கற ஒரு வலிய கம்பெனியோட மேனேஜிங் டைரக்டரை புல்லுக்குத் தெரியும். அந்த எஸ்டேட்டுகள்ள ஏதோ ஒண்ணுல ஜார்ஜுக்கு பணி வாங்கித்தரான் புல் ட்ரை செய்யுன்னு” குரூப் விலாவாரியாக விளக்கினார்.

“அப்ப இன்னுங் கொஞ்ச நாள்ள ஜார்ஜ் எஜமானேன்னு கூப்புட வேண்டியிருக்கும்னு தம்பி சாமிதாஸ் பயப்பட வேண்டியதில்லேங்கறேன்.” அப்பாவு சிரிப்புடன் சொன்னார்.

“பொஞ்சாதிய விட்டுக் கொடுக்கற பயலப் போயி எஜமான்னு நான் சொல்லுவேன்னு நீங்க நினைக்கிறீயளா?” சாமிதாஸின் முகத்தில் கோபம் கொப்பளித்தது.

“சரியாச் சொன்னே. பாரியாள அவனே வெச்சிருந்தா ஆயாள் அஸிஸ்டென்ட் மேனேஜர் ஆகவே முடியாது” குரூப் இடையில் புகுந்தார்.

“போனாப்போகுது விடுங்க. ஜார்ஜ் நம்ம கம்பெனிய விட்டுப் போகும்போது நாம அவனுக்கும் அவனோட அழகான பொஞ்சாதிக்கும் பெரிசா ஒரு வழியனுப்பு விழா நடத்திடலாம். அது சரி ஏதாவது இந்தியாக்காரன் ஏதாவது எஸ்டேட்ல அஸிஸ்டென்ட் மேனேஜரா இருக்கானா?” அப்பாவுவின் குரலில் ஆர்வம் தெரிந்தது.

“ஆமாம். கூர்க்ல என்னோட ஒறவுக்காரன் ஒருத்தன் வேல செய்யுதான். அங்க ஒரு எஸ்டேட்ல ஒரு இந்தியன்தான் மேனேஜரா இருக்கானாம். ஆனா அவனுக்கு பெரிய பெரிய எடத்தில எல்லாம் நிறையத் தொடர்பு இருக்காம். அவன் அண்ணந்தம்பிமாருககெல்லாம் ராணுவத்தில பெரிய அதிகாரிகளா இருக்காங்க. அதேமாதிரி எந்தம்பி ரத்தினமும் சொல்லியிருக்கான். நீலகிரியிலும் ஒரு டீ எஸ்டேட்டுல இந்தியாக்காரன் ஒருத்தன் மேனேஜரா இருக்கானாம். அவனும் கூர்கில இருந்து ஒரு நல்ல பெரிய குடும்பத்திலிருந்து வந்தவன்தானாம்.”

“ஆமாம், ஐரோப்பாக்காரங்களுக்கு கூர்க்கிகளை ரொம்பப் பிடிக்கும். ராணுவத்தில பெரிய ஆபீசர்களா அவங்க நிறையப் பேர் இருக்காங்க. அவுங்க செல்வாக்கினாலதான் இந்த மாதிரி வேலைங்க கிடைக்குது. போனமாசம் ஒரு இந்திய அதிகாரி, அவரும் கூர்க்கிதான் வந்து எங்க மானேஜர்கூட தங்கியிருந்தார். அந்த அதிகாரியும், ராணு வத்தில அதிகாரியா இருக்கிற எங்க மேனேஜரோட மகனும் ஒரே ரெஜிமென்ட்டுல இருந்தாங்களாம். இந்தமாதிரி கூர்க்காரங்களுக்கு நிறைய தொடர்பு இருக்கு. அதனாலதான் அவுங்க எஸ்டேட்டில இந்தப் பதவிகளுக்கு வராங்க” என்றார் அருளய்யா.

“ஜார்ஜ் ஜெயிச்சிட்டான்னா எஸ்டேட்டில பெரிய பதவிகளுக்கு வர்றதுக்கு இன்னொரு வழியும் கண்டுபிடிச்ச மாதிரி இருக்கும்.”

“ஜார்ஜோட வழி எஸ்டேட்டில மட்டும்தான் இருக்கா என்ன? உலகத்தில எல்லா இடத்திலயும் அந்த வழி இருக்கு” என்றார் ஜான்ஸன்.

“அடடா இந்த மாதிரி ஒரு தத்துவத்தை எங்க கண்டுபிடிச்சீங்க?” அப்பாவு சிரித்தார்.

“ஜான்ஸன் பரைஞ்ஞது சரியாணு” குரூப் ஒப்புக் கொண்டார்.

“உங்க ஃபாக்ஸ் எப்படியிருக்காரு?” அப்பாவு மாணிக்கத்திடம் கேட்டார்.

“ஃபாக்ஸ், ஃபாக்ஸ் மாதிரியே இருக்காரு. யாரையும் நம்பாம அப்புறம் புதுசா ஒரு அசிஸ்டென்ட் மேனேஜர் வந்திருக்கான். அவன் பேரு கிரீன்.

நெசமாலுமே அவன் பச்சமண்ணுதான். ஃபாக்ஸ் அவனுக்கு காட்டு வேலையும், செக்ரோல் வேலையும் சொல்லித் தரச் சொன்னான். காட்டு வேலைய நல்லாப் பழகிட்டான். செக்ரோலை எப்படி சொல்லித் தர்றதுன்னுதான் தெரியல.” மாணிக்கம் பதிலளித்தார்.

“ஏன், என்னாச்சு” குரூப் கேட்டார்.

“சாதாரண ஒண்ணும் ஒண்ணும் ரெண்டு கணக்கே அவனுக்குத் தெரியல. ஒரு நாளும் கூட்டல் கணக்கை சரியாவே போட மாட்டேங்குதான். பிரைமரி ஸ்கூலைக்கூட இந்தப் பய தாண்டிருக்க மாட்டான்னு நெனக்கேன். அவங்க அதை கிராமர் ஸ்கூல்ங்கிறாங்க.”

“ஆமா, அங்க, படிப்பு வராத ஒண்ணுக்கும் ஒதவாத எல்லாப் பயல்களையும் இந்தியாவுக்கு அனுப்பி எல்லாவிதமான பெரிய பெரிய வேலைகளிலும் உட்கார வைக்கிறாங்க” என்றார் அருளய்யா.

“இந்த மாதிரி பயலுகதான் நம்மளை ஆட்சி பண்ணுதானுவோ மேல உக்காந்துட்டு மிதிக்கவும் செய்யிதானுவ” மாணிக்கம் சொன்னான்.

“போனவரம் ஃபாக்ஸ் உண்மையிலே என்னோட உதவியாள் வடிவேல ஒதைச்சுப் போட்டான். அன்னைக்கு உடம்பு சரியில்லாததால நான் வேலைக்குப் போகலை. ஃபாக்ஸ் காட்டுக்குப் போனப்ப அங்க ஒரு பசுமாடு மேய்ஞ்சிட்டு இருந்திருக்கு. யாரோ அது வடிவேலோடதுன்னு சொல்லிட்டானுவ. வடிவேலு கிள்ளுன கொழுந்த எடை போட்டுட்டு இருந்த எடத்துக்கு அவன் நேரப் போயி கொழுந்து கிள்ளற பொண்டுகளுக்கு முன்னாடியே சட்டையப் புடிச்சு கன்னத்தில மாத்தி மாத்தி அடிச்சிருக்கான். ‘பிளடிஃபூல், உன்னோட பிளடி பசுமாட்டை டீச்செடிகிட்ட விட்டேன்னா என்ன ஆகுமின்னு தெரிஞ்சுக்கோன்னு மிரட்டியிருக்கான். பாவம் வடிவேலு எந்த பசுமாடு தோட்டத்துக்கு எப்ப வந்ததுன்னு அவனுக்குத் தெரியவே தெரியாது. எஸ்டேட்டில மாடுகளைப் பாத்துகிறவன் அசந்தப்ப பாத்து மாடு கயிறை அவுத்திட்டு வந்திருக்கு. ஆனா ஃபாக்ஸ்க்கு இது தெரியாம வடிவேலப் பேசவே விடாம அடிச்சிருக்கான். வடிவேலு என் வீட்டுக்கு வந்து கண்ணீர் விட்டு அழுவுதான். எனக்கு பாவமாப் போச்சு.”

“ஃபாக்ஸ் குடிச்சிருந்தானா?”

“விஸ்கியோ, பிராந்தியோ எதுவும் குடிக்கல. ஆனா இந்த வெள்ளைக்கார பயலுகளுக்கு இருக்கிற அதிகாரவெறி குடிவெறிய விட கூடுதலால்லா இருக்கு. வெள்ளைக்கார எஜமானுக என்ன செய்தாலும் பிளடி இந்தியனுக பொறுத்திட்டுதான போணும், அப்படித்தான்

வைச்சிருக்கானுவ” என்றார் மாணிக்கம்.

“எங்க குரூப்பில இதவிடப் படு மோசமான ஒரு சம்பவம் நடந்தது, சொல்றேன்.” அருளய்யா தொடங்கினார்.

“எங்க குரூப்பில மச்சிகம்னு ஒரு ஹெட் ஃபீல்டு ரைட்டர் இருந்தான். போனவாரம் அவன் காட்டுல வேல செஞ்சிட்டு இருக்கும் போது மேனேஜர் ஸ்வேன் அவங்கிட்டப் போயி கண்டபடி திட்டிருக்கான். தமிழ்லயும், இங்கிலீஷ்லயும் தெரிஞ்ச எல்லா கெட்ட வார்த்தைகள்லயும் திட்டி இனிமே நீ வேலைக்கே வேண்டான்னு சொல்லிட்டான். அதோட நிக்காம மாச்சிகம்மை தன்னோட காருக்குள்ள ஏறச் சொல்லி அட்ட கட்டிக்கு ஓட்டிட்டு போனான். அங்க எறக்கிவிட்டு கீழே தெரிஞ்ச சமவெளியக் காட்டி ‘அதுதான் பொள்ளாச்சி பிளடி, நீ நடந்தே ஒழிஞ்சுபோ, உன்னோட பிளடி ஃபேமிலிய பின்னாடியே அனுப்பி விடறேன்னு சொல்லி அவர அங்கயே எறக்கி விட்டுட்டு எஸ்டேட்டுக்கு திரும்பி வந்திட்டான். டிரைவர்தான் மத்தவங்ககிட்ட என்ன நடந்ததின்னு சொல்லியிருக்கான். ஸ்வேன் ஹெட் கிளார்க்கைக் கூப்பிட்டு மச்சிகத்தோட பொண்டாட்டி, புள்ளைக, அதில ஒண்ணு கைக்குழந்தை எல்லாத்தையும் உடனடியா எஸ்டேட்டை விட்டு அனுப்பனும்ட்டான். ஹெட்கிளார்க்குக்கு இடிவிழுந்த மாதிரி ஆயிடுச்சு. மச்சிகத்தை எஸ்டேட்டுக்கு வந்து குடும்பத்தைக் கூட்டிட்டு போறதுக்கும் அனுமதிக்கச் சொல்லிக் கெஞ்சியிருக்காரு. ஸ்வேன் அசைஞ்சே குடுக்கல. இப்பவே மச்சிகம் பொஞ்சாதிக்கு இருபத்தைஞ்சு ரூபாய குடுத்து வெளியே அனுப்புன்னு கராறா சொல்லிட்டான். அவ்வளவுதான். எஸ்டேட்டில இருந்த எல்லா குமாஸ்தாக்களும் ஒண்ணு சேர்ந்து அவுங்க செலவுல ஒரு மாட்டு வண்டிய ஏற்பாடு பண்ணி அந்தக் குடும்பத்தை தெரிஞ்ச ஒரு தொழிலாளியோட அனுப்பி வைச்சாங்க. அவுங்க கீழே இறங்கிட்டு இருக்கும்போது மச்சிகம் மேல வந்திட்டு இருந்திருக்குதான். அப்புறம் எல்லாருமா சேர்ந்து பொள்ளாச்சி போனாங்களாம். இது போன வாரம்தான் நடந்தது.”

“ஸ்வேன் உண்மையிலேயே ஒரு ஸ்வைன்தான்,” என்றார் அப்பாவு.

“பக்கத்தில ஏதும் நகரம் இல்ல. ஏதாவது இருந்தச்சுனா இங்க என்ன மாதிரி அக்கிரமங்க நடக்குதுன்னு ஜனங்ககிட்டயாவது சொல்லலாம்.” மாசிலாமணி நிஜமான கோபத்துடன் சொன்னான்.

“அதனால என்ன பிரயோஜனம்?” ஜான்ஸன் கேட்டான்.

“இந்த மாதிரி விஷயங்களை பேப்பர்ல எல்லாருக்கும் தெரியற மாதிரி

பப்ளிஷ் செய்ய முடியாதா?” குரூப் கேட்டார்.

“அதப்பத்தி அவுங்க கவலையே படமாட்டாங்க. அதோட இந்த விஷயங்களையெல்லாம் வெளியிடறதுக்கு எந்த பத்திரிக்கைக்காவது தைரியம் வருமாங்கிறது சந்தேகம்தான். அவங்கதான நாட்டை ஆட்சி பண்ணிட்டிருக்காங்க.”

“எல்லாத்தையும் பொறுத்துப் போறதைத் தவிர வேறு வழியில்ல. கீழே நம்மள யாரும் வேலைக்கு வைச்சுக்க மாட்டாங்க. அதனாலதான் இங்க வந்தோம். எல்லாத்தையும் சகிச்சுக்கத்தான் வேணும். ”தன்னிரக்கம் ஏறக்குறைய மாணிக்கத்தை புலம்பத் தூண்டியது.

“இவிடே குணசேகரனுக்கும் இதுதான நடந்தது?” என்றார் குரூப்.

“ஆனா அது இந்த அளவு மோசமில்லையே. அவனுக்கு குடும்பமும் கிடையாது. கொடுக்க வேண்டிய பணத்தை முழுசா குடுத்திட்டாங்க” என்றார் அப்பாவு.

“மச்சிகம் சங்கதி மாதிரி மோசமில்லதான் அதுக்காக இதை எப்படி ஒதுக்க முடியும்?” ஜான்ஸன் கோபத்துடன் அப்பாவுவை மறுத்துப் பேசினான்.

“அவங்க குதிரையை விடக் கேவலமா நம்மை நடத்துறாங்க”மாணிக்கம் தன் பங்குக்குத் தொடங்கினான். “நம்ம மேனேஜர் மழைக்காலத்துக்கு முன்னாடி குதிரை லாயத்த ரிப்பேர் பண்ணறதில மும்முரமா இருந்தான். ஆனா போன மழை காலத்தில இருந்து என் வீடு படு மோசமா ஒழுகுது. கூரையைக் கொஞ்சம் சரி பண்ணிக் குடுங்கன்னு கேட்டேன். ஸ்டாஃப் குவார்ட்டர்ஸை ரிப்பேர் பண்றதுக்கு பணம் ஒதுக்கலைன்னு சொல்லி மறுத்திட்டான். இந்த மழைக் காலத்தை எப்படி ஓட்டப் போறேனோ தெரியல.”

நமக்குக் குடுக்கிற சம்பளத்தைப் பாருங்களேன். தலைமை குமாஸ்தாவுக்கு மாசம் நாற்பது ரூபா சம்பளம். ஆனா அம்பது கூலிகளை வெச்சிருக்கிற மேஸ்திரிக்கு கமிஷன் மட்டும் அம்பது ரூபா கிடைக்கும். இந்த மேஸ்திரிகளை நாம கட்டுப்படுத்தி வெச்சிருக்கணுமாம். நல்லவேளை அவனுகளுக்கு படிப்பில்ல. இல்லாட்டி நம்மளை யாருமே மதிக்க மாட்டானுவோ.”

“சரிபோதும் நிறுத்துங்க. புதுசா கல்யாணம் ஆனவங்க நல்லாயிருக்கணுங்கிறதுக்காக குடிக்க வந்து இப்படிப் புலம்பிகிட்டிடுருக்கோம். சீட்டு விளையாடலாமா” ஜான்ஸனுக்கு திடீரென்று விருந்து நினைவுக்கு வந்துவிட்டது. “இதாணு சரி” குரூப்

ஏறக்குறைய துள்ளிக் குதித்தார். “நீ தன்னே எனிக்கு ஏத்த ஆள். மேசையைக் காலி பண்ணி சீட்டைப் போடுங்க. காலி பண்றேன்னு திறக்காத பாட்டில்களை கொண்டுப் போயிடாதீங்க. அது இருக்கட்டும்.”

சீட்டு விளையாட்டு விடியற்காலை வரை தொடர்ந்தது.

# 7

ஒரு பிரார்த்தனையை கிசுகிசுக்கவோ
வேதனையை வெளிப்படுத்தவோ அஞ்சுகிறோம்.
நம் ஒவ்வொருவருக்குள்ளும் ஏதோ ஒன்று
செத்துப் போய்விட்டது. செத்துப் போனது
வேறொன்றுமில்லை, நம்பிக்கைதான்.

தி பேலர்டு ஆஃப் ரீடிங் கோல்
-சு ஆஸ்கார் வொயில்டு

பூசாத்தாளும், அவள் கணவனும் குடியிருந்த சமையலறை இப்போது ஒரு விதவைப் பெண்ணுக்கும், அவளது மூன்று குழந்தைகளுக்கும் ஒதுக்கப்பட்டது. அந்தப் பெண் குப்பாயிக்கு ஏறக்குறைய முப்பது வயது. பெரிய பெண்ணுக்கு பனிரெண்டு வயதும், அடுத்த பையனுக்குப் பத்து வயதும், கடைசிப் பெண்ணுக்கு எட்டு வயதும் இருக்கும். அவள் வள்ளியிடம் தாங்கள் போன ஆண்டு மூணாறில் ஒரு தேயிலைத் தோட்டத்தில் வேலை செய்து வந்ததாகவும், அங்கே காய்ச்சல் வந்து அவளது கணவனும், மாமியாரும், ஒரு குழந்தையும் இறந்துவிட்ட தாகவும் கூறினாள். கணவன் இறந்த பிறகு எஸ்டேட்டில் இருந்த உறவினர்கள் தங்களுக்குள் கொஞ்சம் பணம் வசூலித்து அவர்களை கிராமத்துக்கு அனுப்பினார்கள். கிராமத்தில் அவர்களுக்கென்று யாரும் இல்லாததால் சங்கரபாண்டியனிடம் கூலிகளாக இருந்த சில நண்பர்களோடு அவள் இங்கே வந்துவிட்டாள். குப்பாயி நல்ல அழகி மட்டுமல்ல, மிகப்பெரிய வாயாடியும்கூட என்று அவளோடு கொஞ்சம் பேசியதுமே வள்ளி கண்டுகொண்டாள். இரண்டு குழந்தைகளோடு மறுநாள் அவள் பணிக்கு பதிவு செய்யப்பட்டாள். வள்ளியும் அந்தப் பெண்ணும் விரைவில் தோழிகளாகி விட்டனர். முதல் ஞாயிற்றுக் கிழமையன்று குப்பாயியும் வள்ளியும் சாவகாசமாக லைனுக்கு வெளியே உட்கார்ந்து பேசத் தொடங்கினார்கள்.

“மூணாறு எங்கேக்கா இருக்குது? இங்கே நிறையப் பேர் அதப்பத்திப் பேசிக்கிறாக. ஆனா நான் போனதில்ல” வள்ளி கேட்டாள்.

“மூணாறு உடுமலைப்பேட்டையிலிருந்து அம்பது மைல் தொலைவில் இருக்கு. உடுமலைப்பேட்டை ரயில்வே ஸ்டேசனில் இறங்கி மாட்டுவண்டியிலோ, நடந்தோ மூணாறுக்குப் போகணும். கூலிக எப்பவும் நடந்துதானே போவாக.”

“மூணாறில எஸ்டேட்டெல்லாம் எப்படி இருக்கும்?”

“இப்பக்கூட மூணாறில எங்க மாமா ஒருத்தர் இருக்காரு. மூணாறுக்கு வர்றதுக்கு முன்னாடி அவர் ஆனைமலைல இருந்தாரு. மூணாறைவிட ஆனைமலை எவ்வளவோ பரவாயில்லைன்னு சொல்லு வாரு. மூணாருல குளிரும் கூடுதலு. எஸ்டேட்டில இந்த அளவு வெளச்சலும் இருக்காது. அதனால கொழுந்து கிள்ளறவங்களுக்கு இங்கே கிடைக்கிற மாதிரி சம்பளமும் கிடைக்காது. மூணாறைச் சுத்தி இருக்கிற எஸ்டேட்டுகளில மலைக்காய்ச்சல் இந்த அளவுக்கு வராது. கீழே இருக்கற எஸ்டேட்டுகளிலதான் இது அதிகம். ஆன இருமலோட சேர்ந்து வாற இன்னொரு காய்ச்சல் அங்கே வரும். கூலிக்காரங்க நிறையப் பேரு அதனால செத்துப் போவாங்க. முக்கியமா குளிர் காலத்திலதான் அதிகமா இருக்கும். இங்கனபாடி நல்லா கட்டியிருக்காங்க. மூணாறில இதைவிடக் கூட்டமா இருக்கும்.

“மூணாறில எத்தனை வருசமா இருந்தே அக்கா?”

“ரெண்டு வருசம் வள்ளி. முதல் வருசத்திலேயே மாமியாரும், குழந்தையும் செத்துப் போனாங்க. ரெண்டாவது வருசம் புருசனும் போயிட்டான்.”

“எங்களுக்கு இது மூணாவது வருசம்” என்றாள் வள்ளி.

“இந்த சங்கரபாண்டியன் கங்காணி எப்படி?”

“மத்த மேஸ்திரிங்க அளவுக்கு மோசமில்லைன்னு சொல்றாக. எங்களப் பொறுத்தவரைக்கும் அப்படி ஒண்ணும் நல்லவனாத் தெரியல.”

“இங்கன கங்காணிக கூலிகள அடிப்பாகளா?”

“பின்ன. பொம்பளைங்களைக் கூட அடிப்பாக. உடம்பு சுகமில்லாம, வேலைக்குப் போக முடியாம இருந்தாக்கூட அடிச்சு வேலைக்கு இழுத்திட்டு போவாக. எஸ்டேட் பொழப்பு நாய்ப் பொழப்பு. சே..!”

“மூணாறிலயும் இதே கதைதான். கங்காணிக கூலிகளைப் போட்டு அடிப்பாங்க. தொரைக கங்காணிகளையும் சில சமயம் ஐயாக்களையும் கூட அடிச்சு உதைப்பாங்க. என்ன இங்க நீங்க மேஸ்திரின்றீங்க. அங்க நாங்க கங்காணிம்போம். அதுதான் வித்தியாசம் வேறொண்ணுமில்ல.”

“ஆனா பொம்பளைக நிலைமைதான் ரொம்ப மோசம். ஏதாவது ஒரு ஐயாவோ, இல்லேன்னா மேஸ்திரியோ உம்மேல ஆசவச்சி அதுக்கு நீ இணங்கலேன்னா படாதபாடு படுத்திருவானுவோ. அடிச்சு நொறுக்கிறுவானுக. ஆனா நம்மள கூப்பிடலையேன்னு நிறைய

பொம்பளைங்க காத்திட்டிருப்பாளுங்க. பெரிய தொரைக்கு இஷ்டமான சில பொண்ணுக இருக்காளுவ. அவங்க அப்பா அம்மாவும் சரி, புருஷனுங்களும் சரி, அதப்பத்தி கவலையே படறதில்ல. இந்த மாதிரி ஆளுகளுக்குத்தான் எஸ்டேட் வாழ்க்கை சரியாயிருக்கும்."

"மூணாறிலையும், இந்த மாதிரி புள்ளைங்க இருக்கத்தான் செய்றாங்க. மத்தவக பாடு நாய்படாதபாடுதான்."

"கழுகுமலை எஸ்டேட்டில ஒரு முஸ்லிம் மேஸ்திரி இருக்கு தாங்கா. இந்தக் கம்பெனியிலேயே அவன்தான் கொடூரமான மேஸ்திரின்னு சொல்லுதாங்க. ஆம்பிளை கூலிங்க ஓடிப்போகாம இருக்க ராவுல சங்கிலி போட்டு எல்லாத்தையும் ஒண்ணா கட்டிப் போடுதானாம். அவன் கேங்குல கொஞ்சம் பேர்தான் குடும்பமா இருக்காங்க. மத்தவங்க எல்லாம் ஆம்பிளைங்கதான். ஏதாவது பொம்பளைப் புள்ளமேல கண்ணு போட்டுட்டான்னா அவ ஏத்துகிட்டுதான் ஆகணும். இல்லாட்டி அவளைக் கொன்னு பொதைச்சிருவான். கீழே இருக்கவங்ககிட்ட நல்ல மாப்பிள்ளை பாத்து தாரேன்னு அப்பா அம்மா கிட்ட சொல்லி பொண்டுகளை இங்கு கூட்டிட்டு வந்து வெப்பாட்டியா வெச்சுக்குவான். அவன் கொடுமை தாங்காம இருபது வயது பொண்ணு கூட கிழவிக மாதிரி ஆயிருவாக்கா. கொஞ்சநாள் அவன் வெச்சிருந்திட்டு அந்த பொண்டுகளை அவனோட ரௌடிகளுக்குக் குடுத்திருவான்."

"தொரைக ஒண்ணும் சொல்ல மாட்டாங்களா? இவன் இஷ்டப்படி நடக்க விடுறாகளா?"

"அவுங்க வேலை நடக்கிற வரைக்கும் தொரைக இதப்பத்தியெல்லாம் கவலையே பட மாட்டாங்க. எம்புருசன் சொன்னாரு. கொஞ்ச நாளைக்கு முன்னால இந்த மேஸ்திரி மலபாரிலிருந்த ஒரு ஆளையும், அவனோட பதினைஞ்சு வயதுப் பொண்ணையும் கூட்டிட்டு வந்தானாம். அப்பன்காரன்கிட்ட உதவி மேஸ்திரி வேலை தரேன்னும் பெண்ணுக்கு எஸ்டேட்டிலேயே ஒரு வசதியான மேஸ்திரியாப் பாத்து கட்டி வைக்கிறேன்னும் சொன்னானாம். ஆனா இங்க வந்த உடனே அவங்கப்பனை ஆம்பிளைங்க லைனுக்கு நேராக் கூட்டிட்டு போயி மத்தவங்க மாதிரி சங்கிலியில கட்டிப் போட்டுட்டாங்க. அந்தப் பொண்ணை மேஸ்திரி லைனுக்குக் கொண்டு போயி ஒரு ரூமில அடைச்சு வெச்சிட்டான். ஒருநாளு அப்பங்காரன் காட்டில வேலை செஞ்சிட்டு இருக்கும்போது தொரை வந்தான். இந்த ஆளு அவன் காலில விழுந்து தம்பொண்ணைப் பத்தி சொல்லி இருக்கான். தொரை அதக் காதுலயே போட்டுக்கல. அடுத்தநாள் காலைல அந்த ஆளு பாடில

செத்துக் கிடந்தானாம். தொரைகிட்ட சொன்னதுக்காக மேஸ்திரியோட ரெளடிக அவனை அடிச்சுக் கொன்னுட்டாகன்னு பேச்சு. அந்த பொண்ணுக்கு என்னாச்சுன்னு யாருக்குமே தெரியாது.”

“மிருகம் மாதிரியான மனுசங்களுக்கு நடுவிலல்லா சிக்கியிருக்கோம்” குப்பாயி கன்னத்தில் கைவைத்து சொன்னாள்.

“அதே மாதிரி பொம்பளைங்களும் இருக்கிறாங்க. யூசுப் மேஸ்திரி கொஞ்சம் பொம்பளைங்க வேலைக்கு வெச்சிருக்கிறானாம். யாராவது கர்ப்பம் ஆனா அதக் கலைச்சு விடறதுதான் அவங்க வேலையாம். இதுக்கு ரொம்ப பயங்கரமான காரியமெல்லாம் செய்வாங்களாம். அந்த பாவப்பட்ட பொண்ணுகளை தரையில கட்டிப் போட்டு மேல ஏறிக்கூட குதிப்பாங்களாம். சில சமயம் அந்தப் பொண்ணுங்க செத்துப் போகுமாம். இந்தப் பாவப்பட்ட பொண்ணுகளுக்கு உதவறதுக்கு ஒரு ஆள்கூட இல்ல. இந்தக் கொடூரமான மேஸ்திரி, அவனோட கொடூரமான ரெளடிகிட்ட சிக்கிட்டு அவங்க சீரழியுறாங்க.”

“நம்ம எஸ்டேட்டில எப்படி?”

“இங்கன மட்டும் என்ன? இங்கயும் மேஸ்திரிக கூலிகளை அடிக்கதான் செய்யுதாங்க. சில சமயம் யாராவது ஓடிப்போயி சிக்கிட் டாங்கன்னா இங்க கொண்டு வந்து அடிச்சு நொறுக்கிடுவாங்க. சில சமயம் கொன்னே போடுவாங்க. ஆனா கழுகுமலையில நடக்கிற மாதிரி இங்கே கேள்விப்பட்டதில்ல.”

“அது ஒண்ணுதான் நிம்மதி” என்றாள் குப்பாயி.

“பெரிய தொரைக்குப் புடிச்ச நிறைய பொண்ணுக இருக்கிறாங்க. அவளுக எஸ்டேட்டுக்கே ராணி மாதிரி பாசாங்கு பண்ணுவாளுக. கூலிகளைப் பத்தி, மேஸ்திரிகளைப் பத்தி சில சமயம் ஐயாக்களைப் பத்திகூடக் கோள்மூட்டி விட்டு தண்டனை வாங்கிக் குடுத்திடுவாளுக.”

“முருகன்தான் காப்பாத்தனும். ஓநாய்களுக்கு நடுவுலல்லா வந்து மாட்டியிருக்கோம்” என்றாள் குப்பாயி.

# 8

காலன் என்ற பெயர் கொண்ட ஒரு அறுவடைக்காரன்
தன் கருக்கறுவாளைக் கொண்டு
கவனமாக முற்றிய தானியங்களையும்
நடுவே மலரும் மலர்களையும்
ஒருங்கே அறுத்துப் போடுவான்.

தி ரீப்பர் அண்ட் திஃபிளவர்ஸ்
-லாங்ஃபெல்லோ

படுபயங்கரமான மலேரியாக் காலம் திரும்பவும் வந்தது. அந்த ஆண்டு குறிப்பாக குழந்தைகளைப் பொறுத்தவரை படுமோசமானதாக இருந்தது. முன்னெப்போதையும் விட ஏராளமான குழந்தைகள் காய்ச்சல் காலம் முடிவதற்கு முன்பே கொத்துக் கொத்தாக உயிர் விட்டன. வள்ளி கடுமையான காய்ச்சலுக்கு ஆளானாள். அவளுக்கு மூன்று ஊசிகள் போடப்பட்டன. உடல்நிலை கொஞ்சம் தேறியது போலத் தோன்றியது. ஊசி போட்ட இடத்தில் வலிகூட முழுவதும் தீரவில்லை. அதற்குள் மீண்டும் ஒருமுறை அவளைக் காய்ச்சல் தாக்கியது. வள்ளி மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டாள். அந்த காய்ச்சல் கட்டி அவளுக்கு இருப்பது கண்டு பிடிக்கப்பட்டது. ஆனாலும் அவள் ஒரு வாரத்தில் மருத்துவமனையிலிருந்து அனுப்பப்பட்டாள். இரண்டு மாதங்களுக்கு இடைவெளியில்லாமல் தினமும் மருந்து குடிக்க வேண்டும் என்று சொல்லப்பட்டது. காய்ச்சலைப் போலவே மருந்தையும் அவளால் சகித்துக் கொள்ளவே முடியவில்லை.

“மாமா எச்சில்கூட கசப்பா மாறிப் போச்சு நாக்குல ஒரு ருசியும் தெரியல. நாள் முழுக்க வாய் கசந்து கெடக்குது.” வள்ளி பொறுத்துக் கொள்ளவே முடியாமல் தேம்பினாள்.

“உனக்கு காய்ச்ச நல்லா ஆகணும் புள்ள. உடம்பு குணமாகணும். கசப்பப் பார்க்காம நாள் தவறாம மருந்து சாப்புட்டுரு புள்ள.” கருப்பன் கெஞ்சியும், மிரட்டியும் வற்புறுத்தி அவளை அந்தக் கசப்பு மருந்தை விடாது குடிக்க வைத்து வந்தான். கருப்பனையும் காய்ச்சல் தாக்கியது. ஆனால் அவன் மருத்துவமனைக்குச் சென்று ஊசி போட்டுக் கொண்டு நேராக வேலைக்குச் சென்று விட்டான். ஒருநாள் கூட வேலையை இழப்பதில்லை என்றும் வருடக் கடைசியில வீட்டுக்குப் போகும் அளவுக்கு சம்பாதித்தே தீருவது என்றும் தீர்மானகரமான உறுதி

பூண்டிருந்தான்.

அதோடு அலுவலகத்திலிருந்து தன் கணக்கில் ஏழு ரூபாய் கடன் பெற்று முத்துக்கருப்பனிடம் சென்று ஒரு தாயத்து வாங்கிக் கொண்டான். “காச்ச காலத்துக்கு முன்னாடியே வந்திருந்தேன்னா பிசாசு கிட்டக்கயே வராது பண்ணியிருப்பேன். சரி, இனிமேலாவது அது ரொம்ப வெளாடாம பாக்கேன்.”

கருப்பன் தாயத்தை வாங்கிச் சென்று வள்ளியின் கழுத்தில் கட்டினான். இனிமேல் பிரச்சினை வராது என்று இருவரும் நிம்மதி அடைந்தனர். ஆனால், ஒரே வாரத்தில் திரும்பவும் காய்ச்சல் வள்ளியைத் தாக்கியது. ரத்தம் சுண்டிப் போனதைப் போல அவளுடல் வெளுத்து வந்தது. காய்ச்சல் கிருமிகள் அவள் ரத்தத்தை அழித்துக் கொண்டிருக்கின்றன என்றார் குரூப்.

“காய்ச்சல் கட்டி குறையாத வரைக்கும் அவ சரியாகமாட்டா. அவ மருந்து ஒழுங்காக் குடிச்சாத்தான் கட்டி குறையும். அவளுக்கு நல்ல சாப்பாடும் குடுக்கணும்” என்றார் மருத்துவர்.

எனவே அந்த சகிக்க முடியாத கசப்பு மருந்தை வள்ளி பாட்டில் பட்டிலாக விழுங்கிக் கொண்டிருந்தாள். அதே நேரத்தில் முடிந்தவரை அதிக நாட்கள் வேலை செய்து ஊர் திரும்புவதற்கான பணத்தை ஈட்டி விடுவதென்று அவளும் ஒருவித உக்கிரமான உந்துதலுடன் இருந்ததால் கொழுந்து கிள்ளவும் விடாது சென்று வந்தாள். கருப்பன் வேலையிலிருந்து வந்ததும் சமையல் அனைத்தையும் செய்து விடுவான். மிகவும் பலவீனமடைந்திருந்த வள்ளி வந்ததும் படுக்கையில் விழுந்து அடித்துப்போட்டது போல் தூங்கிப் போவாள்.

# 9

உன் கடவுளாகிய ஆண்டவரின்
பெயரை வீணாகப் பயன்படுத்தாதே

பைபிள் விடுதலைப் பயணம்
அத்தியாயம்- 20

வெள்ளையன் ஊருக்குச் சென்று மூன்று மாதங்கள் கழித்துப் புது மனைவியுடன் திரும்பினான். அவன் வந்த அன்று சங்கரபாண்டியன் சார்பில் அவனது கூலிகள் அனைவருக்கும் ஒரு விருந்து கொடுக்கப்பட்டது. உடல்நிலை இடங் கொடுக்காவிட்டாலும் கூட பெரிய மேஸ்திரிக்குக் கோபமூட்டி விடக்கூடும் என்ற அச்சத்தில் வள்ளியும் விருந்துக்குச் சென்றிருந்தாள். விருந்தின்போது சங்கரபாண்டியனின் மூன்றாவது மனைவியைக் கண்டாள்.

“நம்ம மேஸ்திரியோட புது பொஞ்சாதியப் பாத்தியா?” வீடு திரும்புகையில் கருப்பனைக் கேட்டாள்.

“மொதல்ல அத நான் மேஸ்திரியோட புள்ளைன்னு நெனச்சிட்டேன். அப்புறம்தான் பொஞ்சாதின்னு தெரிஞ்சுது.”

“இந்தத் தடவ மொத ரெண்டு சம்சாரத்தையும் கூட்டிட்டு வரலே. நம்ம எஸ்டேட்டுக்கு வர்றதுக்கு முன்னாடிதான் ரெண்டாவது கண்ணாலம் கட்டியிருந்தான் தெரியுமா? அவளும் நம்ம கூடத்தான் வந்தா ஞாபகமிருக்கா மாமா” வள்ளி பழைய நினைவுகளில் மூழ்கிப் போவது தெரிந்தது. கருப்பன் கவலையுடன் அதைக் கவனித்தவாறே தலையசைத்தான்.

“இந்தப் பொண்ணு தங்கமா இழைச்சிருக்கா. இந்த மூணாவது கல்யாணத்தப் பத்தி மொத ரெண்டு பொஞ்சாதிங்க என்ன நெனச்சாங்களோ?” நல்ல வேளையாக வள்ளியின் கவனம் பழைய நினைவுகளை நோக்கித் திரும்பவில்லை.

“வள்ளி உனக்குத் தெரியாதா? அவுக என்ன நெனப்பாங்கங்கறதைப் பத்தியெல்லாம் சங்கரபாண்டிக்கு என்ன கவலை? பெரிய பணக்காரன். பெரியெய்யாவை விடப் பணக்காரன். இவனுக்கு எக்கச்சக்கமான காணி நெல்லு வயலிருக்காம். இப்ப வேற கயத்தாறுல நெறயக் கடைகளை வாங்கியிருக்கானாம். எஸ்டேட்டுக்கு மட்டும் வந்து பெரிய

மேஸ்திரியாகாம இருந்திருந்தா நம்மள மாதிரி பஞ்சத்தில் அடிபட்ட கூலியாத்தான் இருந்திருப்பான். கைநெறய செலவழிக்க எக்கச்சக்கமாப் பணமிருக்கறதால அவம் பொஞ்சாதிகளும் சந்தோசமாத் தானிருப்பாளுக. சங்கரபாண்டியன் என்ன செய்யறாங்கறதப் பத்தி அவுளுக கண்டுக்கவே மாட்டாளுவ."

"வெள்ளையன் பொஞ்சாதிய கொழுந்து கிள்ள அனுப்புவானா?" வள்ளி கேட்டாள்.

"கண்டிப்பா. ஒடனே அனுப்ப மாட்டான். ஆனா ரெண்டு மூணு மாசங்கழிச்சி பொறவு அவ வேலைக்குப் போய்த்தான் ஆவணும். மத்த மேஸ்திரிகளோட பொஞ்சாதிகளும் வேலைக்கு வரத்தானே செய்யுதாங்க. சங்கரபாண்டியன் மாதிரி பெரிய மேஸ்திரிகதான் பொஞ்சாதிகள வேலைக்கு அனுப்பாம வச்சிருக்கானுவ."

"வெள்ளையன் எப்படி மாமா பெரிய மேஸ்திரி ஆனான்?"

"பெரியய்யா சிபாரிசு செஞ்சிருப்பாரு. அவருக்கு சங்கர பாண்டியப் பிடிக்கும் அதோட வெள்ளையனும் அவருக்கு பெரிசா எதுனாச்சும் அள்ளிக் குடுத்திருப்பான்."

மறுநாள் காலை அடுத்த லைனில் பெருங்குழப்பம் ஏற்பட்டது. அங்கிருந்த மாரியப்பன் என்ற கூலி அலுவலகத்திலிருந்து வாங்கி வந்த ஐந்து ரூபாயை ஒரு மரப்பெட்டியில் வைத்திருந்தான். அந்தக் குடும்பம் விருந்துக்குச் சென்று வந்தவுடன் நேராகப் படுக்கப் போய்விட்டது. மறுநாள் ஞாயிறு. வால்பாறைக்குச் சென்று பழைய துணிகள் வாங்கிவர மாரியப்பன் அதிகாலையிலேயே எழுந்து பெட்டியைத் திறந்தபோது அதிலிருந்த பணத்தைக் காணவில்லை. அந்த அறையிலிருந்த யார் மீதும் அவனுக்குச் சந்தேகமில்லை. அவர்கள் இரண்டாண்டுகளாக ஒரே குடும்பம் போலப் பழகி வருபவர்கள். அவர்கள் துணையுடன் அறையின் மூலை முடுக்கெல்லாம் தேடிவிட்டான்.

"காகிதக் கத்தையை எலி தூக்கிட்டுப் போயிருக்கும். வளை கட்டுறதுக்கு எலி இந்த மாதிரி செய்யும்" என்றார் ஒரு பெரியவர். எனவே அவர்கள் அடுக்கி வைத்திருந்த விறகுக் கட்டைகளை முழுவதுமாக இடம் மாற்றி வைத்துவிட்டு இண்டு இடுக்கெல்லாம் தேடிப் பார்த்துவிட்டனர். எலிகள் இருந்தன. வளை இருந்தது. ஆனால் ரூபாய் நோட்டுகளை மட்டும் காணவில்லை. பக்கத்திலிருந்தவர்களுக்கும் செய்தி பரவியது. பாடிகளில் திருட்டே நடப்பது கிடையாது. எனவே ஒவ்வொருவரும் திருடனைப் பிடிப்பதில் ஆர்வம் கொண்டிருந்தனர்.

அடுத்த அறையிலிருந்த ஒரு பாட்டி முந்தய இரவு எல்லோரும் விருந்துக்குப் போனபின்பு அறைக்கு முன்னால் ஒரு ஆள் நின்று கொண்டிருப்பதைப் பார்த்ததாகவும், ‘யார்’ என்று தான் கேட்டபோது அந்த மனிதன் பதிலேதும் சொல்லாமல் அங்கிருந்து அகன்று விட்டதாகவும் கூறினாள். அப்போது அவள் அதை முக்கியமாக நினைக்க வில்லையாம். அதே பாடியில் சமையலறையில் குடியிருந்து வரும் இருளாண்டி என்பவன் மீது சந்தேகம் விழுந்தது. அவன் குடும்பம் குழந்தை குட்டியில்லாத தனிக்கட்டை. மூன்று மாதங்களுக்கு முன்புதான் வேறொரு எஸ்டேட்டிலிருந்து இங்கு வந்து பதிவு செய்து கொண்டிருந்தான்.

இருளாண்டி விருந்துக்கு வரவில்லை என்று யாரோ சொன்னார்கள். எனவே அவர்கள் அவனையழைத்து விருந்துக்கு ஏன் வரவில்லை என்று விசாரித்தனர். யாரும் அவனை விருந்தில் பார்க்கவில்லை. என்றாலும்கூட அவன் தான் வந்திருந்ததாக அடித்துக் கூறினான்.

எலிகள் தூக்கிச் சென்றிருக்கும் என்று கூறிய பெரியவர் சாமியப்பன் நெருக்கினார். “விருந்தில உனக்குப் பக்கத்தில உட்கார்ந்திருந்த ஆளுகளோட பேரச் சொல்லுல.”

“அடுத்த லைன்ல இருக்கிற சுப்பையா” என்றான் இருளாண்டி.

அவர்கள் சுப்பையாவை அழைத்து விசாரித்தனர்.

“இல்லவே இல்லையே, பக்கத்துக்கு அறையில இருக்கிற வைரவனும் என்னோட வீட்ல இருக்கிற ஈஸ்வரனுந்தானே எனக்கு ரெண்டு பக்கத்திலயும் உட்கார்ந்திருந்தாங்க. நாங்க பேசிட்டே சாப்பிட்டோமே”என்றான் சுப்பையா.

“இவனை மேஸ்திரிகிட்ட கூட்டிட்டு போலாம்” சாமியப்பன் கூறினார். இருளாண்டி மேஸ்திரியிடம் அழைத்துச் செல்லப்பட்டான். “பணத்தை எடுத்தியாலே?” மேஸ்திரி வெடுக்கென்று நேரடியாகக் கேட்டான்.

“இல்லை” சுருக்கமான பதில்.

“உன்னைய யாருமே விருந்தில பாத்தமாதிரி தெரியல. அதனால நீ அங்கன வரல. அது நல்லாத் தெரியுது. ராவுல எங்கடே இருந்த?”

“விருந்திலதான் இருந்தேன்” இருளாண்டி அடித்துப் பேசினேன். “இத பாருல, என்னோட லைனிலயும் சரி, எஸ்டேட்டிலேயும் சரி, எத்தனையோ வருசமா ஒரு திருட்டு கூட நடந்ததில்ல. உண்மையச் சொல்லிட்டேனா விட்டுருவேன். இல்லைனா எலும்பு கிலும்பெல்லாம்

உடைச்சுப் போட்டிருவேன்.”

“நான் யாரு பணத்தையும் எடுக்கல” இருளாண்டி அதையே கிளிப்பிள்ளையாகச் சொல்லிக் கொண்டிருந்தான்.

“கடைசியாகக் கேக்கறேன்ல, பணத்தை எடுத்தியா?”

“இல்லை” அதே பதில்.

சங்கரபாண்டியன் முஷ்டியை மடக்கி மழைபோல் குத்துகைளப் பொழிந்தான். “ஏதாவது நடக்கறதுக்கு முன்னாடி உண்மையைச் சொல்லிரு.”

“இல்லை” இருளாண்டி அழுத்தத் திருத்தமாகக் கூறினான்.

சங்கரபாண்டியன் இருளாண்டி மீது பாய்ந்து மூர்க்கமாக அடித்து நொறுக்கத் தொடங்கினான். மேஸ்திரியின் அடியாட்களில் ஒருவன் வந்து ஓங்கி ஒரு உதை விட்டான். நான்கடி தள்ளிப் போய் விழுந்த இருளாண்டி “ஐயோ! ஐயோ! என்னைக் கொல்றாகளே” என்று அலறத் தொடங்கினான்.

வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த மாரியப்பனாலேயே இதைத்தாங்க முடியவில்லை. அவன் முன்னால் வந்து, “எம்பணத்த எடுக்கலைன்னு முருகன் மேல ஆணையிட்டு சொல்லட்டும். நானும் விட்டிருதேன்” என்றான். கூடியிருந்த அத்தனை பேரும் அது நியாயமானது என்று ஒப்புக் கொண்டனர்.

“என்னலே சத்தியம் பண்ணுதியா” மேஸ்திரி இருளாண்டியிடம் கேட்டான்.

“சரி, நான் சத்தியம் செய்யுதேன்” என்றான் இருளாண்டி.

சங்கரபாண்டியன் அறைக்குள் சென்று முருகக் கடவுளின் படம் ஒன்றை எடுத்து வந்தான். கூடவே கற்பூர வில்லைகள் வைக்கப்பட்டிருந்த ஒரு பித்தளை ஆரத்தித் தட்டையும் கொண்டு வந்து படத்தின் முன் வைத்தான். பின்பு இருளாண்டியை நோக்கித் திரும்பி “கற்பூரம் ஏத்தறேன் எரியற கற்பூரத்து மேல கை வெச்சு பணம் எடுக்கலன்னு சத்தியம் பண்ணு.”

கற்பூரம் ஏற்றப்பட்டது. “வா சத்தியம் பண்ணு” மேஸ்திரி இருளாண்டியை அழைத்தான். இருளாண்டி நகரவில்லை. “சத்தியம் பண்ணு, தேவடியா மவனே, இல்லேன்னா உண்மைய ஒத்துக்கோ,” சங்கரபாண்டியன் அவன் கழுத்தைப் பிடித்து நெட்டித் தள்ளியபடி

இடிபோல் முழங்கினான்.

“ஆமா, நான்தான் பணத்த எடுத்தேன்” இருளாண்டி ஒப்புக் கொண்டான்.

“நாயே, கழுதைக்குப் பொறந்த பயலே, பணம் எங்கடா?”

“வீட்ல ஒளிச்சு வெச்சிருக்கேன்.”

“போய் எடுத்திட்டு வா” மேஸ்திரி அதிகம் பேசவில்லை.

இருளாண்டி மாரியப்பனோடு அறைக்குச் சென்று பேப்பரில் சுற்றப்பட்டிருந்த பணத்தைக் கொண்டு வந்து கொடுத்தான். சங்கரபாண்டியன் அதை எண்ணிப் பார்த்துவிட்டு மாரியப்பனிடம் கொடுத்துவிட்டான்.

“ரோட்டில போறவனுக்கும், வாரவனுக்கும் பொறந்த இந்த திருட்டு நாயை என்ன செய்யலாம்?”

“பெரிய ஐயாகிட்ட கூட்டிட்டு போவோம். அவரு இவனைப் போலீசுல புடிச்சுக் குடுக்கட்டும்.”

“போலீசுல புடிச்சுக் குடுத்தா அவுக கேஸ் போடுவாக. பொள்ளாச்சி மேஜிஸ்டிரேட் கோர்டில கேஸ் வரும். நாம எல்லாரும் சாட்சி சொல்லப் போகணும். நான்தான் எல்லாச் செலவையும் பாத்துக்கணும். அதோட போலிசுக்கு காபி, சாப்பாடு வாங்கிக் கொடுத்து, பணமும் குடுக்க வேண்டி இருந்தாலும் இருக்கலாம். இந்த அஞ்சு ரூபாய்க்காக இருபது ரூபாயாவது குடுக்க வேண்டியிருக்கும். விடியட்டும் பெரிய ஐயாகிட்ட சொல்லி இந்தப் பயல எஸ்டேட்ட விட்டு அடிச்சுத் தொரத்திடலாம். திருட்டுப் பயலுக நமக்கு வேண்டாம். இப்ப இவன் ஓடிப்போகாம நல்லா கட்டிப் போட்டு வைங்க” என்றான் மேஸ்திரி.

அதேபோல் மறுநாள் அவர்கள் பெரிய ஐயாவிடம் இருளாண்டியை கொண்டு சென்றனர். அப்பாவு ஒரு பிரம்பை எடுத்து கை ஓயும் வரை விளாசிவிட்டுக் கூலிகளிடம் அவனை எஸ்டேட்டை விட்டு விரட்டி அடிக்கும்படி சொன்னார். பின்பு “இங்கேர்ந்து ஓடிப்போயிரு. திருட்டுப் பயலுக்கு பொறந்தவனே, இன்னொரு தடவை இதுக்குள்ள கால வைச்சிராத” என்று கூறியபடியே ஏற்கெனவே ஓடத் தொடங்கியிருந்த இருளாண்டியை மேலும் இரண்டு சாத்து சாத்தினார்.

# 10

> ஏழைக் கருப்பர்களாகிய நாங்கள் லஞ்சம் வாங்குகிறோம். எதற்காக எங்களுக்கு லஞ்சம் கொடுக்கப்பட்டதோ அந்தப் பணியை செய்து தருகிறோம். அதன் விளைவாக சட்டம் எங்களைக் கண்டுபிடித்துத் தண்டிக்கிறது. ஆங்கிலேயர்கள் லஞ்சம் வாங்கிக் கொள்கிறார்கள். எதுவுமே செய்வதில்லை, நான் அவர்களை வியந்து பாராட்டுகிறேன்.
>
> எ பாசேஜ் டு இண்டியா
> இ.எம்.பாஸ்டர்

ஒருநாள் காலை தலைமை எழுத்தர் மாணிக்கம் தேயிலைச் சால்களினூடே நடந்தபடி வேலை நடப்பதை மேற்பார்வையிட்டுக் கொண்டிருந்தபோது திரு.பாக்ஸின் குரல் கேட்டது. மாணிக்கம் நின்றிருந்த இடத்திற்கு மேலிருந்து நடைபாதையில் ஃபாக்ஸ் குதிரை மீது வந்துகொண்டிருந்தார்.

“ஹே மாணிக்கோம் இங்க வா.”

“வந்துட்டேன் துரைகளே” மாணிக்கம் அவசரமாகத் தொப்பியைக் கழற்றிவிட்டு தேயிலைச் செடிகளை விலக்கிக் கொண்டு பாக்ஸிடம் ஓடினார்.

“எங்க போயிட்டிருக்க?”

“பதினொண்ணாவதில கொளுந்து கிள்ளறதப் பாத்துட்டு இருபத்தேழுக்குப் போயிட்டு இருக்கேன் தொரைகளே.”

“எலை எப்படியிருக்கு மாணிக்கம்?”

“ரொம்பக் குறைவாத்தான் இருக்கு தொரைகளே, ஆனாலும் ரொம்பக் கஷ்டப்பட்டு நிறையாக் கிள்ளறதுக்கு முயற்சி பண்ணுதோம். ஏப்ரல் சாரல் வர்றவரைக்கும் கொழுந்து சரியாக் கிடைக்காதுன்னு நெனக்கேன். கொஞ்சமாத்தான் மழை பெஞ்சுது தொரைகளே, அது பத்தல.”

“எப்ப அந்த பிளடி ரெய்ன்ஸ் வரு ம் ன்னு நினைக்கறே மாணிக்கோம்?”

“வர்ற மாதிரியே தெரியல தொரைகளே, பலி குடுக்கிறதுக்கு மேஸ்திரிக பணம் கேக்குதாங்க. சாமிக்குப் படையல் போடாததினாலதான் மழை

வரலைன்னு சொல்லுதாங்க.”

“அடச்சே, ஏதோ பிளடி ஓல்டு ஃபூல்ஸ் கொஞ்சம் சேவல்களைக் கட் பண்ணி அவனுக பிளடி வயித்தை நிரப்பிக்கலைங்கறாதால மழை வரலை அதுதான அவனுங்க ஒர்ஷிப்.”

“ஆமா தொரைகளே.”

“ஆனாலும் நாம இந்த பிளடி பெக்கர்ஸ் சொல்றதைக் கேட்கதான் வேணும்.”

“ஆமா தொரைகளே.”

“அந்த பிளடிஃபூல்ஸுக்கு எத்தனை பணம் வேணுமாமா”

“முப்பது ரூபா கேக்குதாங்க தெரைகளே.”

“அது ரொம்ப அதிகம் மாணிக்கம். இருபது ரூபா பத்தாதா?”

“இல்லை தொரைகளே, எல்லா குழந்தைகளுக்கும் கடலை பொரி குடுக்கணுங்குதாங்க, போன வருஷமும் முப்பது ரூபாதான் குடுத்தோம்.”

“ஆல்ரைட், ஈவெனிங் அஞ்சுமணிக்கு ஆபிஸ் வந்து பணம் வாங்கிக்கோ. அந்த பிளடி பூல்ஸ் பலி கொடுக்கட்டும்.”

“சரி துரைகளே.”

“மாணிக்கோம் மேடத்துக்கு நாளையிலிருந்து ஒரு வாரத்துக்குப் பத்து கூலிகளும், ரெண்டு மூணு ஆசாரிகளும் வேணுமாம். பன்னி வளர்க்கறதுக்கு வேலி போடணுமாம். மேடம் வொய்ட் ரெண்டு பன்னி கொடுக்கறேன்னு சொல்லியிருக்காரு. உங்க நாட்டுப் பன்னியில்ல மாணிக்கம் இங்கிலீஷ் பிக்.”

“சரி துரைகளே. எல்லாத்தையும் ஏற்பாடு பண்ணிடறேன்.”

“மாணிக்கோம் கூலிகளை களைப்பிடுங்கற கணக்குலயும், ஆசாரிகளை பாக்டரி கணக்குலயும் எழுதிக்கோ. வேலிக்குக் கம்பி வலை வேணும் அதையும் பாக்டரி கணக்குல நீ எழுதிக்கலாம்.”

“சரி துரைகளே செஞ்சுடுதேன்.”

“இந்த பிளடி எஸ்டேட்ல முள்ளம்பன்னி இல்லையா?”

“இருக்கு துரைகளே. நெறயா...”

“அதுகள் குழி தோண்டி டீ புதர்களையும் வேர்களையும் நாசமாக்கிடும்னு உனக்குத் தெரியாதா?”

“தெரியும் துரைகளே?”

“அப்புறம் ஏன் அந்த பிளடி பன்னிகளை உட்டு வெச்சிருக்க?”

“கூலிகள் கஷ்டப்பட்டுப் பிடிக்கறாங்க துரைகளே. ஆனா அதுகள் சுலபமா வலைல சிக்க மாட்டேங்குது.”

“ஒரு முள்ளம்பன்னியக் கொன்னா நாம எவ்வளவு பணம் குடுப்போம்?”

“அஞ்சு ரூபாய் துரைகளே!”

“அதை ஏழு ரூபாயாக்கிடலாம். மாணிக்கோம் இன்னைக்கு ஈவெனிங்குக்குள் அஞ்சு பிளடி முள்ளம்பன்னிகளையாவது நீ கொன்னிருக்கனும். உன் கூலிகள் எத்தனை பன்னிகளைக் கொன்னாங்கன்னு ஒரு சீட்ல எழுதிக் கொண்டுவா. நான் பணம் கொடுக்கறேன். நான் சொல்றது புரியுதா மாணிக்கோம்?”

“நல்லாப் புரியுது துரைகளே.”

“ஆல்ரைட் 5 மணிக்கு ஆபீஸ் வா. டோன்ட் பீ லேட் மேடத்தை 5.15க்கு கிளப்புக்குக் கூட்டிட்டு போகணும்.”

“சரி துரைகளே.”

“பிளடி கூலிகளையும், பிளடி கார்பென்டர்களையும் அனுப்ப மறந்துடாத” சொல்லிவிட்டு துரை குதிரையைத் தட்டி விட்டார்.

“மாட்டேன் துரைகளே. குட்டே துரைகளே” மாணிக்கம் துரை விலகிச் சென்றதும் தொப்பியைத் தலையில் வைத்துக் கொண்டு நடக்கத் தொடங்கினார்.

சரியாக ஐந்து மணிக்கு மாணிக்கம் அலுவலகத்திலிருந்தார். ஃபாக்ஸ் தலைமை எழுத்தரிடம் மாணிக்கம் வந்திருக்கிறாரா என்று கேட்பது காதில் விழுந்தது.

“ஆமாம் துரைகளே இங்கதான் இருக்கார்” என்றார் ஆறுமுகம்.

“உள்ள வா மாணிக்கோம்” ஃபாக்ஸ் அங்கிருந்தே குரல் கொடுத்தார்.

“குட் ஈவெனிங் மாஸ்டர்” மாணிக்கம் வணக்கம் செய்தார்.

“ஆறுமுகம் போன வருசம் இந்த பிளடி மேஸ்திரிகளுக்கு அவனுங்களோட பிளடி சாமி வொர்ஷிப் பிஸினசுக்கு எவ்வளவு பணம் கொடுத்தோம்?”

“அம்பது ரூபான்னு புக்ல இருக்கு துரைகளே!”

“ஆல்ரைட் இந்த வருசம் அதே அமௌண்டைக் கொடுத்துர்றேன். ஒரு ரசீது தயார் செய் ஆறுமுகம்.”

“சரி துரைகளே” ஆறுமுகம் அகன்றதும் துரை கை நீட்ட மாணிக்கம் ஒரு சீட்டை அதில் வைத்தார்.

“என்ன இது மாணிக்கோம்.”

“நேத்து மூணு முள்ளம் பன்னகளைக் கொன்னோம் துரைகளே. இன்னைக்கு ரெண்டு மொத்தம் அஞ்சு பன்னிக்கு இந்தச் சீட்டு.”

“ஹல்லோ ஆறுமுகம்” துரை கூச்சலிட்டார். “மாணிக்கம் அஞ்சு முள்ளம்பன்னிக்கு சீட்டுக் கொண்டு வந்திருக்குது. ஒவ்வொரு பன்னிக்கும் எவ்வளவு குடுக்கறோம்?”

“அஞ்சு ரூபா துரைகளே.”

“அந்த பிளடி பன்னிகளைப் பிடிக்கிறது ரொம்ப கஷ்டமான வேலையாம். அதனால ஏழு ரூபாய் கொடுக்கலாம். 35 ரூபாய்க்கு இன்னொரு ரசீது எழுது.”

“வெரி வெல் மாஸ்டர்” ஆறுமுகம் பதிலளித்தார்.

ஆறுமுகம் வெளியில் சென்றதும் ஃபாக்ஸ் தனது மேஜை சாவியை எடுத்து என்பத்தைந்து ரூபாய் நோட்டுகளை எண்ணி மாணிக்கத்திடம் முப்பது ரூபாய்களைக் கொடுத்துவிட்டு மீதியைத் தன் பாக்கெட்டில் போட்டுக் கொண்டார்.

“ஆல்ரைட் மாணிக்கம் நீ போகலாம். கூலிகளையும், கார்பென்டர்களையும் நாளைக்கு அனுப்ப மறந்துடாதே.”

“மாட்டேன் துரைகளே.”

“போகறதுக்கு முன்னாடி ரசீதுல கையெழுத்துப் போட்டுட்டு போ” என்றபடி ஃபாக்ஸ் எழுந்தார்.

“சரி துரைகளே. குட்நைட் துரைகளே” மாணிக்கம் தொப்பியை கக்கத்தில் இடுக்கிக் கொண்டு ஒதுங்கி நின்று விடையளித்தார்.

# 11

படித்த இந்நாட்டவன் இப்போது இந்தத் தந்திரத்தைத்தான் பயன்படுத்துகிறான். முன்பு பயத்துடன் நெளிவது அவன் வழக்கம். ஆனால் இளைய தலைமுறை ஆண்மைமிக்க விடுதலையுணர்வுடன் நிமிர்ந்து நிற்பதில் நம்பிக்கை கொண்டுள்ளது... ஆனால் இவன் ஆணவத்துடனிருந்தாலும் சரி பயந்து நடுங்கினாலும் சரி விசயம் ஒன்றுதான்.
அவன் தனது மரியாதையை
அதிகரித்துக்கொள்ள,வெளிப்படையான
ஆங்கிலத்தில் சொன்னால் காரியம் சாதிக்கத்தான்
விரும்புகிறான். வேறொன்றுமில்லை.

ஏ பேசேஜ் டு இண்டியா
- இ.எம்.பாஸ்டர்

அலுவலக குமாஸ்தாக்களான ராஜ், அருள்தாஸ், கிறிஸ்துதாஸ் ஆகியோர் அப்பாவுவின் மருமகனான ராபர்ட்டோடு தேநீர் அருந்திக் கொண்டிருந்தனர். தேநீர் விருந்து ராஜின் வீட்டில் நடந்து கொண்டிருந்தது. ராஜ் அப்பாவுவின் வீட்டிற்குச் சென்று ராபர்ட்டை அழைத்து வந்திருந்தான். முதலில் மணமகனுக்கு நீண்ட மகிழ்ச்சியான திருமண வாழ்க்கைக்கு வாழ்த்துக்கூறி விட்டு தேநீர் கோப்பைகளோடு அமர்ந்தனர்.

“உங்க சொந்த ஊரு எது?” ராஜ் பேச்சைத் தொடங்கினான்.

“திருநெல்வேலியில சாத்தான்குளம்.”

“படிச்சதெல்லாம்.”

‘மூணாவது ஃபாரத்திலிருந்து மிஷல் கால்டுவெல் ஸ்கூல்ல அது தூத்துக்குடியில இருக்கு” ராபர்ட் பதிலளித்தான்.

“எங்க ஊரு தூத்துக்குடிக்குப் பக்கத்திலதான். அருள்தாஸ் நாகர்கோவில், கிறிஸ்துதாஸ் திருவாங்கூரில கன்னியாகுமரிக்குப் பக்கத்தில ஒரு கிராமம்” ராஜ் தங்களை அறிமுகப்படுத்திக் கொண்டான்.

“எழுத்து வேலை செய்யிறவங்க பெரும்பாலும் திருநெவேலி, தெற்கு திருவாங்கூர் ஊரிலிருந்து வர்றவங்களாதான் இருக்காக நான் பாத்தவரைக்கும்.”

“ஆமா, ஆனா வேற இடத்திலிருந்து வந்தவங்களும் இருக்குதாங்க. நம்ம வைத்தியர் மலபாரில தலசேரி. உதவி குமாஸ்தா, வடக்கு டிவிசன் அவரும் அந்த ஊருதான். நம்ம டிவிசன் அசிஸ்டென்ட் ஃபீல்டு ரைட்டர், மாத்யூஸ் ஈரோட்டுக்காரன். குரங்குமலை எஸ்டேட்டு தலைமை குமாஸ்தா வடக்கு திருவாங்கூர்” ராஜீ தொடர்ந்து பேசினான்.

“எழுத்து வேலை செய்யறவங்கள்ல இந்துக்காரனே இல்லையா?”

“இருக்காங்க,” “ஆறுமுகம், கழுகுமலை எஸ்டேட் ஹெட் கிளார்க் இந்துதான். மதுரக்காரரு. இந்த எஸ்டேட்டு உதவி குமாஸ்தா வடிவேலுவும் இந்துதான். கோயமுத்தூரு. நம்ம வைத்தியரும் வடக்கு டிவிஷன் அசிஸ்டென்டும் இந்துதான்.”

“கூலிங்களும், திருநெவேலி, அதச் சுத்தியிருந்து வந்தவங்கதான் போலிருக்கு.”

“ஆமா, ஆனா நிறையப் பேரு, முப்பத்தஞ்சு சதவீதம் பேரு பழனி, ஈரோடு தாலுக்காக்காரங்க. கூலிங்க பெரும்பாலும் பறையர்களும், பள்ளர்களும்தான். மலபார் மாப்ளக்காரங்க கொஞ்சம் பேரு இருக்காக. அதுகூட தேவரு, கவுண்டருமாதிரி மேல் சாதிக் கூலிங்களும் கொஞ்சம் பேரு இருக்காக.”

“காட்டுவாசிங்க யாராவது கூலிகளாக இருக்காவளா?”

“அவங்களும் கொஞ்சம் பேரு இருக்காக. ஆனா அவங்க இன்னும் பாதி காட்டுவாசியாத்தான் இருக்காக. பொறவு கட்டிடம் கட்டுற மேசனுங்க, தெலுங்கு பேசற போயர் சாதிக்காரங்க” என்றான் அருள்தாஸ்.

“ஏண்ணே, இங்க வாரதுக்கு மொதல்ல வேற ஏதாவது எஸ்டேட்டில இருந்திருக்கியளா?” “நான் பொறந்த வளர்ந்ததே எஸ்டேட்லதான் ராஜ். அப்பா இப்பவும் மூணாறுலதான் இருக்காரு.”

“மூணாறுக்கு ஆனைமலை எப்படியிருக்கு?” ராஜ் கேட்டான்.

“மூணாறு ரொம்ப குளிரா இருக்கும். இங்க கூலி லைன்களும், ஸ்டாஃபுக்கான குவார்ட்டர்ஸும் பரவாயில்ல. நல்லாக் கட்டியிருக்காக.இங்க புதுசா வந்தவங்களுக்குக் குடுக்கிற வீடு அளவுக்குதான் அங்க சீனியர்க வீடே இருக்கும். இங்க சீனியர்க, ஜூனியருக எல்லாத்துக்கும் பெரிசா நல்லாக் கட்டின வீடுகளே இருக்கு.”

“அப்பிடியா! நாங்க என்னமோ எங்க குவார்டர்ஸ் படுமோசமா இருக்குன்னுல்லா நினைச்சிட்டிருக்கோம்.”

“மூணாறை பார்க்கலைல்லா. அதான் அப்படி நினைக்கீக.”

“மூணாறில எத்தனை குரூப் எஸ்டேட் இருக்கு. நீங்க வேலை செஞ்ச இடத்தைத் தவிர வேற எஸ்டேட்டுகளில வீடு எப்படி இருக்கும்?”

அருள்தாஸுக்கு இதைவிட மோசமான வீடுகள் இருக்க முடியும் என்று நம்பவே முடியவில்லை.”

“ரெண்டு மூணைத் தவிர மூணாறில இருக்கிற பெரும்பாலான எஸ்டேட்டுக கண்ணன் தேவன் கம்பெனிகளோடதுதான். மத்தது மலையாளம் பிளான்டேஷன் கம்பெனிகளோடது. எல்லா எடத்திலயும் நெலமை ஒண்ணுதான்.

“மூணாறு திருவாங்கூரில இல்ல இருக்கு?” அருள்தாஸ்.

“ஆமா, ஆனா மூணாறுக்கும் திருவாங்கூரில உள்ள மத்த எடங்களுக்கும் ஒரு சம்பந்தமும் இல்லை. திருவாங்கூர்காரங்க மூணாறுக்கு போணுமின்னா உடுமலைப்பேட்டை வந்துதான் போகணும். அந்தப் பக்கம் மலையடிவாரத்தில் ஒரு பெரிய ஆறு இருக்கு. அதுக்குப் பாலம் கூட கிடையாது. அதனால திருவாங்கூருக்கு நேரடியா ரோடும் கிடையாது.”

“கூலிங்க, ஸ்டாஃப்க எல்லாம் அந்த ஊர்க்காரங்கதானா?”

“அப்படியொண்ணுமில்ல. அங்கயும் இங்க மாதிரிதான். கூலிங்க திருநவேலி, ராமநாதபுரம், மதுரக்காரங்க, ஸ்டாஃப் திருநவேலி, தெற்கு திருவாங்கூர்காரங்க. ஒண்ணு ரெண்டு வடக்கு திருவாங்கூர்காரர்களும் இருப்பாங்க.”

“மேனேஜருக ஸ்டாஃப்கள எப்படி நடத்துவாங்க?” ராஜ் தனக்கு ஆர்வமான விஷயத்தைக் கேட்டான்.

“அதுவும் இதே மாதிரிதான். இதவிட மோசம்னு கூட சொல்லலாம். பக்கத்தில இருக்கிற ஒரே டவுன் உடுமலைப் பேட்டைதான். அதுக்கும் மூணாறுக்கும் எந்தவிதமான நிர்வாகத் தொடர்பும் கிடையாது. அதனால கம்பெனியோட ஜெனரல் மேனேஜர் ஒரு ராஜா மாதிரி. இந்தியா முழுக்க இருக்கிற பெரிய கம்பெனிகளில இதுவும் ஒண்ணு. அதனால திருவாங்கூர் அரசிலும், மெட்ராஸ் அரசிலும் இந்தக் கம்பெனி ஜி.எம்.முக்கு பெரிய செல்வாக்கு இருக்கு. கவர்ன்மென்ட் ஆபீசருங்க அவரப் பார்த்தாப் பயப்படுதாங்க. அவரு என்ன செய்தாலும் தட்டிக் கேட்கறதுக்கு யாரும் கிடையாது. இந்த மாதிரி சூழ்நிலையில இங்கிருக்கிற நிலைமையைவிட அங்க எப்படி ஸ்டாப்பும், கூலியும்

நல்லா இருக்க முடியும்?”

“மேனேஜர்களில்இந்தியாக்காரங்க யாராவது இருக்காகளா?”

“யாருங் கெடயாது. எல்லா மேனேஜர்களும் டாக்டரும் இஞ்சினீயரும் இத மாதிரி பெரிய வேலை செய்யற எல்லாரும் வெள்ளக்காரங்கதான்.”

“மூணாறுல காட்டு யானைக பயங்கரமான தொந்தரவு கொடுக்குதுன்னு சொல்றாங்களே அப்படியாண்ணே?”

“ஆமா, காலைல 9 மணிக்கு முன்னாலயும், சாயந்தரம் 5 மணிக்கு அப்புறமும் உடுமலைப்பேட்டை மூணாறு ரோட்ல நடமாடவே முடியாது. அந்த நேரத்துல முட்டாள்தனமா வெளிய சுத்துன கூலிகள் பலபேர் உயிரை விட்டிருக்காக. பெரும்பாலும் தனியே இருக்கற காட்டு யானைகள்தான் பெருந்தொல்லை பண்ணும். அதுக எஸ்டேட் டுகள்ள ஆளுக குடியிருக்கற எடத்துக்கு ரொம்பப் பக்கத்துலயேகூட வந்துரும். அதுகளுக்கு கூலிகள் தங்கள் தோட்டத்துல போட்டு வெச்சிருக்கிற வாழை, கரும்புண்ணா ரொம்பப் பிடிக்கும். எஸ்டேட்ல கூட ராவான பின்னாடி வெளிய யாரும் வர்றது நல்லதிக்குல்ல”

“இங்கயும் யானைங்க உண்டு. ஆனா நீங்க சொல்லுத அளவுக்கு பிரச்சினையில்ல. ஆனா யாராவது காட்டுக்குள்ள போய் மாட்டிகிட்டா கண்டிப்பா ஆபத்துதான். விறகு வெட்ட காட்டுக்குள்ள போற கூலிகள அடிக்கடி யானைகள் விரட்டிட்டு வரும். பொள்ளாச்சி ரோடும் இருட்டாயிருச்சின்னா பாதுகாப்பானதில்ல. யானைக்கு மூங்கில் குருத்துன்னா ரொம்பப் பிடிக்கும். ரோட்டுக்கு ரெண்டு பக்கமும் வளர்ந்திருக்கற மூங்கில் குருத்துகளைத் தின்ன யானைகள் பொள்ளாச்சி ரோட்டுக்குக் கூட்டங்கூட்டமா வரும்” என்றான் ராஜ்.

“நோய் நொடியெல்லாம் மூணாறுல எப்படி?”

“எல்லா எஸ்டேட்டும் மனுசனக் கொன்னு பொதைக்கறதுக்குன்னே கட்டினதுதானே. அங்க மட்டும் எப்படி வேறமாதிரி இருக்கும்? மூணாறு டவுன்ல மலேரியா கொஞ்சம் கம்மி. ஆனா அங்கியே கீழ இருக்கற மத்த எஸ்டேட்டுகள்ள நெலம இதவிட மோசம். அங்க நிமோனியாவும், இன்புளுயென்சாவும் கொன்னொழிச்ச ஆளுகளுக்குக் கணக்கே கெடயாது.” ராபர்ட் வெறுப்புடன் சிரித்தான். சூழ்நிலையில் தொற்றிக் கொண்ட இறுக்கத்தை உணர்ந்த ராஜ் பேச்சை மாற்றும் உத்தேசத்துடன் வேலை குறித்துக் கேட்டான்.

“இங்க இருக்கிற எஸ்டேட்டுகள்ள ஏதாச்சும் ஒண்ணுல வேல காலி ஆச்சின்னா எனக்குக் குடுக்கறேன்னு ஜி.எம். சொல்லியிருக்காருன்னு

மாமா சொல்லுதாரு. கழுகுமலை ஆபிஸ்ல இன்னொரு ஆளை வேளைக்கு எடுக்கணும்னு சொல்லிட்டு இருக்காவாளாம். எப்படியிருந்தாலும் இன்னும் மூணு மாசத்துக்கு இங்கதான் இருப்பேன். பெறவு வேலையே கெடச்சாலும் வேல பழகறவரைக்கும் சம்பளம் கொடுக்க மாட்டாங்கன்னு வேற சொல்லுதாங்க.”

“வெள்ளக்காரங்க நம்மள வெச்சிருக்கிற நெலமய பார்த்தீகளா? கூட்டல் கழித்தல் கூடத் தெரியாத, பள்ளிக்கூடத்துல இருக்க வேண்டிய பசங்களையெல்லாம் இங்கிலாந்துல இருந்து இங்க அனுப்பி நேரடியா கொழுத்த சம்பளத்துல உதவி மேனேஜராக்டுறானுவ. இங்க வந்த பொறவுதான் கூட்டல் கழித்தலே பழகறானுவ. தோலோட நெறம் மட்டும் இல்லாட்டி செக்ரோல் கிளார்க்காகக் கூட இவனுங்கள வேலைக்கு வெச்சுக்க மாட்டாங்க. ஆனா நீயும் நானும் மாசக்கணக்கா சம்பளமில்லாம வேல செய்யணும். தொழில் பழகின பெறகுகூட யோகமிருந்தாதான் பத்துரூபா சம்பளம் கிடைக்கும். சில சமயம் மேனேஜருங்க நமக்கு வயசு பத்தாது, அனுபவமில்லேன்னு சொல்லி ஏழு ரூபாய்தான் கொடுப்பாங்க. ஒரு கூலிகூட இதவிட அதிகம் சம்பாதிப்பான். ஒரு கூலிக்கு சம்பாதிக்கற மாதிரி ரெண்டு கொழந்தைங்க இருந்தா அந்தக் குடும்பத்தோட வருமானம் சீனியர் ஸ்டாப்போட சம்பளத்தவிட அதிகமாயிருக்கும். இதெல்லாமே தப்பாத்தான் இருக்கு. நாம என்ன செய்ய முடியும்? நம்ம கையில ஒண்ணுமில்ல” ராஜ் தானே கேள்வியையும் கேட்டு பதிலும் சொல்லிக் கொண்டான். அடக்க முடியாமல் கொட்டி விட்டாலும் பேச்சு திரும்பத் திரும்ப இந்த எரிச்சலூட்டும் விசயங்க ளையே சுற்றி வருவது அவனுக்குப் பிடிக்கவில்லை.

“இங்க எப்படிப் பழகணும்னு உங்க மாமனார் சொல்லியிருப்பார்னு நெனைக்கிறேன்” என்றான் அருள்தாஸ்.

“இன்னும் இல்ல ரெண்டு நாளு கழிச்சு மெல்லமா சொன்னாலும் சொல்லுவாரு.”

“இப்பவே பழகிக்கறது நல்லது. இல்லாட்டி சிக்கல்ல சிக்கிக்குவீங்க” என்று தொடங்கிய அருள்தாஸ் மடமடவென்று மூழ்கிக் கொண்டிருக்கிற கப்பலிலிருந்து தப்புவதற்கு யோசனை சொல்பவன் போல ஒப்பிக்கத் தொடங்கினான்.. முதலில் எஜமான் முன்னாடி தொப்பியோ செருப்போ போட்டுட்டு நிக்கக் கூடாது. மழை பெஞ்சாலும் குடையை விரிச்சுட்டு நிக்கக் கூடாது. மேனேஜரப் பாத்தா வணக்கம் போடணும். எப்பவும் மாஸ்டர் (எஜமான்)ன்னுதான் சொல்லணும். இதுதான் இங்க

மரியாதையான வார்த்தை. மூணாவதா இங்க நல்ல துணிமணி போடக் கூடாது. எப்பவுமே கிழிஞ்ச ஒட்டுப்போட்ட சட்டையும், கால் சட்டையும்தான் போடணும். செருப்பும் கிழிஞ்சு தெச்சதாத்தான் இருக்கணும். சாக்ஸ்ல எவ்வளவு ஓட்டையிருக்கோ அவ்வளவு நல்லது. நாலாவது ரெண்டும் மூணும் ஆறுன்னு எஜமான் சொன்னால் மறுக்கவே கூடாது. ஆமாங்க எஜமாங்கணும். இப்பிடியெல்லாம் இருந்தா இங்கயிருக்கற எஜமான்களுக்கு உங்கள ரொம்பப் பிடிச்சுப் போயிரும். அவங்ககிட்டயிருந்து எந்தத் தொந்தரவும் வராது.”

ஏப்ரல் நடுப்பகுதி வந்தபோது மாலை நேரங்களில் கனத்த மழை பெய்தது. பத்து நாட்களில் தேயிலைப் புதர்களில் பெரும் எண்ணிக்கையில் அரும்புகள் தோன்றின. கொழுந்து கிள்ளுபவர்களுக்கு வேலை ஓயவேயில்லை. அந்த ஆண்டு சீஸன் மிகவும் நன்றாக இருந்தது. சாத்தியமான ஒவ்வொரு ஆணும், பெண்ணும் குழந்தையும் கொழுந்து கிள்ள அனுப்பப்பட்டனர். மதியத்துக்குள் கூடைகள் நிரம்பி விட்டதால் இரண்டுமுறை எடை போட வேண்டி வந்தது. கணக்குத் தீர்க்கும்போது கூலிகளுக்கு நல்ல சம்பளம் கிடைக்கும் என்று மேஸ்திரிகள் கூலிகளை உற்சாகப்படுத்தினர்.

# 12

நான் பணிபுரியும் இஸ்ரயேலின் கடவுளான வாழும்
ஆண்டவர்மேல் ஆணை! என் வாக்கினாலன்றி வரும்
ஆண்டுகளில் பனியோ மழையோ பெய்யாது.

பைபிள் -1, அரசர்கள்
அத்தியாயம் -17

ஃபாக்ஸ் ஒருநாள் மாணிக்கத்தை தேயிலைத் தோட்டத்தில் வந்து சந்தித்தார். “வெல் மாணிக்கோம், நம்ம ரெண்டு பேரும் சேர்ந்து எஸ்டேட்டுக்கு மழையக் கொண்டு வந்திட்டோம்.”

“யெஸ் மாஸ்டர்.”

“இந்த பிளடி ஃபூல்ஸ் அவங்களோட சாமி ஒர்ஷிப்பினாலதான்மழை வந்திருச்சுன்னு நிஜமாவே நினைக்கிறாங்களா?”

“யெஸ் மாஸ்டர்.”

“எல்லாப் பணத்தையும் அந்த பிளடி ஒர்ஷிப்புக்குதான் செலவு பண்ணினாங்களா? இல்லை அமுத்திட்டாங்களா?”

“நோ மாஸ்டர் அவங்க செலவு பண்ணினாங்க.”

“மாணிக்கோம், இந்த வருஷம் எக்கச்சக்கமான சாவு, இல்லையா?”

“யெஸ் மாஸ்டர், இந்த மாதிரி சாவு விழுந்திட்டே இருந்தா எஸ்டேட்டுக்கு ஒரு கூலியும் வரமாட்டாங்கன்னு மேஸ்திரிக சொல்லுதாக.”

“சரியாத்தான் சொல்றாங்க மாணிக்கோம், இங்கேயே தங்கியிருக்கிற மாதிரி ஒரு கம்பவுண்டர் வேணும்னு மிஸ்டர் வொயிட்கிட்ட பேசியிருக்கேன். ஒரே ஆளுக்கு குரங்கு மலையிலும், நோயாளிகளைப் பாத்திட்டு கழுகுமலைக்கும் வந்து நம்ம கூலிகளைப் பாக்கிறது கஷ்டந்தான். கம்பெனிக்கு எழுதியிருக்கேன். இந்த வருஷக் கடைசிக் குள்ள இங்கேயே இருக்கிறமாதிரி ஒரு கம்பவுண்டர் வந்திருவாருன்னு வொயிட் சொல்றாரு.”

“புதுசா வர்றவருக்கு குவார்ட்டர்ஸ் இல்லையே தொரைகளே.”

“ஓ, அவன் எப்படியாவது சமாளிச்சுக்க வேண்டியதுதான். ஒரு வேளை

ஆசாரி லைன்ல ஒரு ரூம் குடுக்கலாம். அடுத்த சீசனுக்குப் புதுசா வீடு கட்டிரலாம்.”

“என் வீடும் ரொம்ப ஒழுகுது. எசமான் மனசு வெச்சு...”

“நீ ஒரு பிளடி ஃபூல் மாணிக்கோம்.”

“எஸ் மாஸ்டர்.”

“இப்ப எஸ்டிமேட் எதுவுமில்லை மாணிக்கோம், அடுத்த வருஷம் ஏதாவது செய்ய முடியுமான்னு பாக்கறேன்.”

“யெஸ் மாஸ்டர்.”

“மணிக்கோம். உங்கிட்ட ஒரு ரகசியம் சொல்றேன். வெளிய சொல்லிடுவியா?”

“நோ மாஸ்டர்,”

“நம்ம சி.எம்.ஓ. டாக்டர் பார்பர், நம்ம கம்பெனி குரூப் ஆஸ்பத்திரிக்கு ஒரு நல்ல தகுதியான டாக்டரை நியமிக்கணுன்னு சிபாரிசு பண்ணியிருக்காரு. அதனால நம்ம ஆஸ்பத்திரிக்கு கம்பெனி ஒரு எல்.எம்.பி டாக்டரை நியமிக்கப் போகுது. குரூப் குரங்கு மலைக்குப் போவான். அங்கிருக்கிற பயல் இங்க வந்திடுவான்.”

“வெரிகுட் மாஸ்டர்” என்றார் மாணிக்கம்.

“இந்த பிளடி நாட்டு வைத்தியனுக்கு பதிலு உங்களுக்கு ஒரு நிஜமான டாக்டர் கிடைக்கப் போறாரு. கம்பெனிக்கு நன்றியோட இருக்கணும் மாணிக்கோம்.”

“ஆமாம் மாஸ்டர். நாங்க எப்பவுமே நன்றியோடதான் இருப்போம்.”

“மாணிக்கோம் மேடம் சொல்றா பசார்ல ஒரு பய இருக்கானே, அவனோட பிளடி நேம் என்ன?”

“காளிச்செட்டியார் மாஸ்டர்.”

“அந்த பிளடி செட்டி நல்ல காய்கறி அனுப்பறதில்லைன்னு மேடம் சொல்றா. நீ அந்தப் பிச்சைக்கார பயகிட்ட போயி நல்ல காய்கறி அனுப்பலைன்னா அந்த பிளடி நாயை எட்டி மிதிச்சு எஸ்டேட்டை விட்டு தொரத்திருவேன்னு சொல்லு.”

“யெஸ் மாஸ்டர்.”

“அப்புறம் கிரீன் எப்படிப் போயிட்டிருக்காரு?”

“ரொம்ப நல்லாப் பழகிக்கிறாரு மாஸ்டர், சீக்கிரம் பழகிக்கிறாரு.”

“இப்ப அவன் என்ன பழகிட்டிருக்கான்?”

“நான் அவருக்கு தினமும் கொழுந்து கிள்றதைக் காட்டிக்கிட்டிருக்கேன் மாஸ்டர்.”

“ஆல்ரைட், கவாத்து ஆரம்பிக்கும்போது அதை அவனுக்குக் காட்டணும். அப்போ இலை பறிக்கறதை நிறுத்திடணும். செக்ரோல் பண்றானா?”

“யெஸ் மாஸ்டர்.”

“எப்படிப் பண்றான்?”

“ரொம்ப நல்லா செய்யிறாரு மாஸ்டர்.”

“ஆல்ரைட், நான் கிளம்பறேன். இன்னைக்கு எந்த ஃபீல்டுல கிள்றாங்க?”

“பதினைந்து முப்பத்தேழு, இருபத்திமூணு மாஸ்டர்.”

“சரி, நான் போய் கிரீன் என்ன பண்ணிட்டிருக்கான்னு பார்க்கிறேன்.”

“நானும் வரட்டுமா மாஸ்டர்?”

“வேண்டா நீ போயி அந்த பிளடி செட்டியப் பாரு. இன்னொரு தடவை மேடத்துகிட்டயிருந்து கம்ளெயின்ட் வந்தா அவனை ஒதச்சே தொரத்திடுவேன்னு சொல்லு.”

“யெஸ் மாஸ்டர். குட்டே மாஸ்டர்.”

மாணிக்கம் ஃபாக்ஸுக்கு விடை கொடுத்தார்.

பின்பு காளிச்செட்டியாரைப் பார்க்க கடைவீதிக்குச் சென்றார். செட்டியார் அங்கே இல்லை. அவருடைய உதவி ஆள்தான் இருந்தான். மாணிக்கம் அவனை அழைத்தார். “இதபாரு முத்துசாமி, நீங்க பங்களாவுக்கு நல்ல காய்கறி அனுப்பறதில்லைன்னு மேடம் பெரிய தொரைகிட்ட சொல்லியிருக்காக. என்ன சொல்லுதே?”

“ஐயா, பொள்ளாச்சில கிடைக்கிறதிலையே நல்ல காய்கறிகளையும், பழங்களையும்தான் மேடத்துக்கு அனுப்பிகிட்டு இருக்கோம். உங்களுக்கே தெரியுங்க ஐயா. நாங்க அதுக்கு காசே வாங்கிறதில்ல. அதோட அவுங்க பட்லரை வேற சந்தோஷப்படுத்த வேண்டியிருக்கு. அதனால அவனுக்கும் காசில்லாமதான் காய்கறி குடுக்குறோம். போன வாரம் அவன் குழந்தைகளுக்கு ஏதோ பழம் கேட்டான். எல்லாத்தையுமே

சும்மா தரமுடியாதில்லயா. அதனால லாபம் வெச்சுக் காம நியாயமான விலையைக் கேட்டோம். அவனுக்குக் கோபம் வந்திருச்சு போல இருக்கு. அடுத்தநாள் அவன் இங்க வந்து ஒண்ணுக்கும் ஆகாத காய்கறியெல்லாம் பங்களாவுக்கு அனுப்பறோம்னு கத்திட்டுப் போனான். நாங்க என்ன பண்றது?"

"இதப்பாரு முத்துசாமி, பெரிய தொரைக்குப் புடிக்கலைன்னா ஒரு நாள்கூட இங்க கடை வெக்க முடியாதுன்னு உனக்கும் தெரியும், எனக்கும் தெரியும். பெரிய தொரைக்கு உம்மேல கோபம் மூட்டி விடுகிற அளவுக்கு பட்லருக்கு செல்வாக்கு இருந்திச்சுன்னா அவனையும் நீங்க அனுசரிச்சுத்தான் போவணும். வேற வழியே கிடையாது. நீங்க சும்மாவா குடுக்குதீய. பொருளுக்கான விலை எல்லாம் எஸ்டேட் பில்லுல ஏத்திருவீங்கன்னு தெரியாதா என்ன? இதுக்கெல்லாம் சேத்துதான உத்தியோகஸ்தமாரு கிட்டயும், கூலிககிட்டயும் கொள்ள வெலக்கி வியாபாரம் செய்யுறீக. அதனால இந்த மாதிரி பேசற வேல வெச்சுக்காதே நான் என்ன சொன்னே னோ அத அப்படியே காளிச்செட்டிகிட்ட சொல்லு. இல்லாட்டி என்ன வந்து பாக்கச் சொல்லு?"

தனக்கு கொடுக்கப்பட்ட வேலையை முடித்தவுடன் மாணிக்கம் குமரிமலை எஸ்டேட்டுக்கு விரைந்து சென்று அப்பாவுவின் வீட்டுக்குக் கதவைத் தட்டினார். கதவைத் திறந்த அப்பாவு மாணிக்கத்தைப் பார்த்து ஆச்சரியப்பட்டுப் போனார்.

மாணிக்கம் வீட்டுக்குள் நுழைந்து கதவைச் சாத்திவிட்டு கம்பெனி மருத்துவமனைக்குப் பொறுப்பாக ஒரு எல்.எம்.பி டாக்டரை நியமித்திருப்பதை கிசுகிசுத்தார்.

"அப்ப குரூப்புக்கு என்ன ஆகும்?"

"அவரு குரங்குமலை எஸ்டேட்டுக்குப் போக வேண்டியதுதான் அங்கிருக்கிற கம்பவுண்டர் இங்க வருவாரு."

"ஜான்ஸன் தம்பிக்கு கண்டிப்பா இது தெரிஞ்சிருக்கும் ஏன் நம்மகிட்ட சொல்லைன்னு ஆச்சரியமாயிருக்கே. வா, நேராப்போய் கேட்கலாம்" அப்பாவு அவசரமாகக் கிளம்பினார். ஜான்ஸனை சந்தித்தபோது அவரே செய்தி கேட்டு ஆச்சரியமடைந்தார்.

"ஆபீஸ் மூலமா ஒரு கடிதப் போக்குவரத்தும் நடக்கலைன்னு எனக்கு நல்லாத் தெரியும். வொயிட் பங்களாயிலிருந்து இதை ஏற்பாடு பண்ணியிருப்பாரு."

“இப்பக் கேள்வி என்னன்னா இந்த விஷயத்தை குரூப்கிட்ட சொல்றதா இல்லையாங்கிறதுதான்” என்றார் அப்பாவு.

“அவர்கிட்ட சொல்ல வேண்டாம்னுதான் நான் நெனைக்கேன். நாம சொன்னா அவரு பார்பர்கிட்ட கேப்பாரு. ஃபாக்ஸ் செய்திய ரகசியமா வெச்சிருக்கச் சொல்லியிருக்காரு. எனக்கு சிக்கலாப் போயிரும்” என்றார் மாணிக்கம்.

“ஆனா குரூப் நம்ம எல்லாருக்கும் நல்ல பழக்கமான ஆளுல்லா. அவரை சுதாரிச்சுக்கச் சொல்ல வேண்டாமா?” அப்பாவுக்கு ஏதாவது செய்ய வேண்டுமென்று தவிப்பாகவிருந்தது.

“சுதாரிச்சு என்ன ஆவப் போவுது?” என்றார் ஜான்ஸன். “வொய்ட் ஏதாவது செய்யணுமின்னு முடிவு பண்ணினா அதை செஞ்சே தீருவாரு. நாம எச்சரிக்கை பண்ணினாலும் குரூப்பினால அதைத் தடுக்கிறதுக்கு எதுவும் செய்ய முடியாது. எல்லாமே உறுதியா முடிவான பொறவு வொய்ட்டே எங்கிட்ட சொல்லுவாரு. அப்ப குரூப்கிட்ட செல்லலாம்” ஜான்சனின் யோசனையை ஏற்றுக்கொண்டு மாணிக்கம் அவரது எஸ்டேட்டுக்கும், அப்பாவு வீட்டுக்கும் திரும்பினர்.

# 13

அப்பொழுது டிராமாவிலே ஒரு குரல் கேட்கிறது; ஒரே புலம்பலும், பேரழுகையுமாய் இருக்கிறது; இராகேல் தம் குழந்தைகளுக்காக அழுது கொண்டிருக்கிறார்; ஆறுதல் பெற அவர் மறுக்கிறார்; ஏனெனில் அவரது குழந்தைகள் அவரோடு இல்லை.

பைபிள் –மத்தேயு
- அத்யாயம் 3

அந்த ஆண்டு ஏப்ரல் மாதத்தின் இறுதியில் எஸ்டேட்டில் மிகவும் துயரமான ஒரு சம்பவம் நடந்துவிட்டது. அதற்கு முதல்நாள் முழுவதும் மழை கொட்டிக்கொண்டிருந்தாலும் அன்று பகல் சூரியன் பிரகாசமாக ஒளிவீசிக் கொண்டிருந்தது. அந்தக் கதகதப்பில் கவர்ந் திழுக்கப்பட்டு ஐந்து பையன்களும், ஒரு வயதான பெண்ணும் ஆற்றுக்குத் துணி துவைக்கச் சென்றனர். மழைக்காலம் இன்னும் முழுமையாகத் தொடங்கவில்லை. எனவே கணுக்கால் அளவுக்கே ஆற்றில் தண்ணீர் ஓடிக் கொண்டிருந்தது. ஆற்றின் நடுவே ஒரு பெரிய தட்டையான கல் நீருக்கு மேல் ஓர் அடி உயரத்தில் இயற்கையாக அமைந்திருந்தது. கூலிகள் அதில்தான் துணிகளைத் துவைத்து உலர வைப்பது வழக்கம்.அந்தப் பாறை முப்பது அடி நீளமும் அதில் பாதியளவு அகலமும் உள்ளது. பையன்களும், கிழவியும் நீரில் இறங்கிப் பாறைக்குச் சென்று துணி துவைக்கத் தொடங்கினர். குமரிமலையில் சூரியன் கண் கூசுமளவிற்கு ஒளிவீசிக் கொண்டிருந்தது. ஆனால் அதே நேரத்தில் அருகில் இருந்த கிராஸ்ஹில்ஸ் குன்றுகளில் கடும் மழை பெய்து கொண்டிருந்தது. அந்தக் குன்றுகளிலிருந்து பாய்ந்து வந்து ஆற்றில் கலந்த ஏராளமான சிற்றோடைகளின் காரணமாக நீர்மட்டம் உயரத் தொடங்கியது. துணிகளைப் பாறையில் விரித்து உலர வைத்துவிட்டு வெயில் காய்ந்து கொண்டிருந்த அவர்கள் நீர்மட்டம் கொஞ்சம் கொஞ்சமாக உயர்வதை கவனிக்கவில்லை. அவர்கள் கவனித்தபோது நீர் பாறையைச் சுற்றி வேகமாகச் சுழித்து ஓடத் தொடங்கிவிட்டிருந்தது. அது விரைவில் குறைந்துவிடும் என்று நினைத்ததால் நீர்மட்டம் உயர்ந்ததை யாரும் பொருட்படுத்தவில்லை. ஆற்றங்கரையில் மூன்று லைன்கள் இருந்தன. அதிலிருந்த சில ஆட்கள் நீர்மட்டம் உயர்வதை கவனித்து அந்தக் கிழவியையும் பையன்களையும் ஆற்றைக் கடந்து வரும்படி கூச்சலிட்டு எச்சரித்ததோடு உதவுவதற்கு

தாங்களும் கரைக்கு ஓடினர். ஆனால் அதற்குள் ஆற்றில் வெள்ளம் அசுர வேகத்தில் இரைச்சலுடன் பாய்ந்து ஓடத் தொடங்கி விட்டது. பாறையில் சிக்கிக் கொண்டிருந்தவர்களோ கரையில்இருந்தவர்களோ ஆற்றில் இறங்கவே முடியவில்லை. ஆற்றை நீந்திக் கடக்கும் நோக்கத்துடன் தண்ணீரில் இறங்கிய இரு பையன்கள் நீரோட்டத்தில் அடித்துச் செல்லப் பட்டனர்.

கரையில் இருந்தவர்களின் கூச்சல் கேட்டு, வேலை செய்து கொண்டிருந்தவர்களும் ஓடி வந்தனர். அவர்களில் சிலர் பையன்களைக் காப்பாற்றும் நோக்கத்தோடு ஆற்று வெள்ளத்தோடு ஓடிச் சென்றனர். பக்கத்துக் காட்டிலிருந்த அப்பாவுவும் விரைந்து வந்து கயிறுகளை எடுத்து வரும்படி உடனடியாக இரண்டு கூலிகளை பாக்டரிக்கு அனுப்பினார். பையன்களின் பெற்றோர்களும் அங்கே ஓடிவந்தனர். பெண்கள் மார்பில் அடித்துக் கொண்டு அலறி அழத்தொடங்கினர். திடீரென்று அந்த இடத்துக்கு ஓடி வந்த ஒரு ஆள் யாரும் தடுப்பதற்கு முன்னே நேரடியாக வெள்ளத்தில் பாய்ந்தான். அவனது ஒரே மகனும் பாறையில் சிக்கிக் கொண்டிருந்தான். பாறையை அடைவதற்கு மிகுந்த நெஞ்சுரத்துடன் அவன் போராடினாலும் மூர்க்கமாகப் பாய்ந்தோடிய நீர் அத்தனை பேரின் கண்ணெதிரே அவனை அடித்துச் சென்றது. கரையில் நின்று கொண்டிருந்த அவன் மனைவியும் கண்மூடித்தனமாக பாய்ந்தோடி ஆற்றில் குதிக்க முயன்றாள். ஆனால் மற்றவர்கள் அவளைத் தடுத்துப் பிடித்துக் கொண்டனர். நெஞ்சைப் பிளக்கும் கதறல்களால் காற்றே கனமாகிப் போய்விட்டது போல் தோன்றியது. பெண்கள் ஏதாவது செய்து பாறையில் தவித்துக் கொண்டிருந்த பையன்களையும் பெண்ணையும் காப்பாற்றும் படி ஆண்களைத் தூண்டியபடி உரக்க அழுது அரற்றினர். மறுகரையில் இருந்த அப்பாவு பையன்களின் பெற்றோரை அங்கிருந்து அழைத்துச் செல்லும்படி கூச்சலிட்டார். ஆனால் அவர்கள் தங்களைப் பிடித்து இழுத்தவர்களை எதிர்த்துக் கடுமையாகப் போராடி அங்கேயே நிலைத்து நின்று கதறிக் கொண்டிருந்தனர். ஆண்கள் மேலும் கீழும் இலக்கில்லாமல் அலைய இறுதியில் பலர் ஒன்று சேர்ந்து பையன்களின் பெற்றோர்களை லைன்களுக்குத் தூக்கிச் சென்றனர். அப்பாவு சிலரை ஆறு அகலமாக விரிந்து பரவும் இடத்துக்கு அனுப்பி யாரையாவது வெள்ளம் அடித்து வந்தால் காப்பாற்ற முயலும்படி கூறி அங்கேயே இருக்கச் செய்தார். இதற்கிடையில் பாறையில் சிக்கிக் கொண்ட பையன்கள் பயத்தால் பைத்தியமாகி தங்களை மறந்து தண்ணீரில் குதித்தனர். கண்ணிமைக்கும் நேரத்தில் அவர்களை விழுங்கிய வெள்ளம் தன் போக்கில் இழுத்துச் செல்லத் தொடங்கியது.

கயிறு கொண்டு வரச் சென்ற கூலிகள் ஓட்டமும் நடையுமாகத் திரும்பி வந்தனர். கரையில் நின்றவர்கள் ஓடிச்சென்று கயிறுகளை வாங்கிக்கொண்டனர். பாறையில் ஒரே ஒரு பையனும் மூதாட்டியும் மட்டுமே மீதியிருந்தனர். பாறையில் பெரும்பகுதி மூழ்கிப் போய் ஒரு சிறிய பகுதி மட்டுமே இன்னும் நீருக்கு மேல் துருத்திக் கொண்டிருந்தது. நீர்மட்டம் தொடர்ந்து உயர்ந்து வந்தது. “செல்லையா” அப்பாவு கூச்சலிட்டார்.

விளையாட்டு வீரனைப் போல் தோற்றமளித்த ஒரு உயரமான இளைஞன் முன்னாள் வந்தான். “பாறை மேல கயித்த வீசு” என்று உத்தரவிட்டு விட்டு பாறையிலிருந்த பையனையும், பெண்ணையும் கயிற்றைப் பிடித்துக் கொள்ளும் படி கூச்சலிட்டார். செல்லையா கயிற்றை வீசினான். அதே நேரத்தில் மற்றவர்களும் வீச, கயிறுகள் ஒன்றோடொன்று சிக்கிக் கொண்டன. அப்பாவு மற்றவர்களை மிரட்டி, கத்திக் கூச்சலிட்டு கயிற்றை வீச வேண்டாமென்று தடுத்துவிட்டுப் பின்பு தானே கயிற்றின் ஒரு முனையில் ஒரு கல்லைக் கட்டி செல்லையாவிடம் கொடுத்து அதை வீசும்படி கூறினார். செல்லையா பலம் கொண்ட மட்டும் அதை வீச பாறையில் நின்றவர்கள் அதைப் பிடிக்கும் முன்பே பாறையில் துருத்திக் கொண்டிருந்த பகுதியும் நீரில் மூழ்கிவிட்டது. அசுர வேகத்துடன் ஓடிவந்த ஆற்று வெள்ளம் செல்லையா இன்னொருமுறை முயற்சி செய்வதற்கு முன்பே அத்தனை பேரின் கண்முன்பே கதறிக் கொண்டிருந்த பெண்ணையும், பையனையும் இழுத்துச் சென்றது.

# 14

இன்னும் அதிக மழையும், அதிக ஓய்வும், அதிக நீரும்
வாத்துகளுக்கு மிகவும் நல்லது.

-பழமொழி

மழைக்காலம் தொடங்கியது. மழை கொட்டியது, கொட்டியது, கொட்டிக் கொண்டேயிருந்தது. அதற்காகவே காத்துக் கொண்டிருந்தது போல் அட்டைகள் படைபடையாகத் திரண்டு வந்து தங்கள் பங்கிற்குக் கூலிகளின் ரத்தத்தை உறிஞ்சத் தொடங்கின. நாட்கணக்காக அவர்களால் சூரியனையே பார்க்க முடியவில்லை. நாட்கள் வாரங்களாகின. ஆனால் மழை நிமிட நேரமும் நிற்கவில்லை. இருண்ட வானத்தின் கீழே ஆற்றில் பொங்கிப் பாய்ந்தோடிய வெள்ளத்தின் பேரோசையை ஒரு மைல் தொலைவிலிருந்தே கேட்க முடிந்தது.

காலையில் கூலிகள் வேலைக்குக் கிளம்பிய அரை மணி நேரத்தில் அவர்களின் தோல் நீரூற்றாய் இறங்கிய மழையில் நனைந்து ஊறிப்போனது. பலருக்கு இன்புளூயென்ஸாவும், நிமோனியாவும் வந்தன. வழக்கம்போல எண்ணற்ற குழந்தைகளும் சிறுவர்களும் நோய்களுக்குப் பலியாகினர். பெண்களால் ஒருநாளைக்கு ஒரு அணா கூட சம்பாதிக்க முடியவில்லை என்றாலும் மேஸ்திரிகள் அவர்களை வேலைக்குச் செல்லும்படி விரட்டிக் கொண்டேயிருந்தனர். பழனி, ஈரோடு கூலிகளுக்குக் கணக்குத் தீர்த்து அனுப்பப்பட்ட பின்பு திருநெல்வேலிக் கூலிகள் மட்டுமே மீதியிருந்தனர். மருத்துவரும் அவரது உதவியாளும் திரும்பவும் பரபரப்புடன் இயங்கி நோயாளிகளுக்கு சிகிச்சையளித்துக் கொண்டிருந்தனர். இந்த முறை நோயாளிகள் மூச்சுக்குழல் அழற்சியாலும் நிமோனியாவாலும் மற்ற மார்பு தொடர்பான நோய்களாலும் அவதிப்பட்டனர். ‹லையும் கழிந்து கொண்டிருந்தது. இருந்தாலும் கொட்டிக் கொண்டிருந்த மழை விடுவதற்கான அறிகுறியே இல்லை. களைகள் தேயிலைச் செடிகளையே மறைக்குமளவிற்குச் செழித்து வளர்ந்தன. எல்லாக் கூலிகளும் களைபிடுங்க அனுப்பப்பட்டனர். இளம் சிறுவர்களும் சிறுமிகளும் ஓய்வின்றி மழையிலும் குளிரிலும் களைபிடுங்கியதால் அவர்களது பிஞ்சு விரல்கள் விரைத்துப் போயின. ஆனாலும் அவர்கள் தங்களது சின்னஞ்சிறு முதுகுகள் வலியால் துவளத் துவள தொடர்ந்து களைப் பிடுங்கினர். எப்போதாவது யாராவது சிறுவனோ, சிறுமியோ

முதுகு வலி தாங்காமல் இரண்டு நிமிடத்திற்கு மேல் நிமிர்ந்து நின்றால் மேஸ்திரிகள் ஆபாச வசமாரி பொழிந்து தள்ளுவார்கள். உடனே அந்தக் குழந்தை திரும்பவும் குனிந்து அவசரமாகக் களைபிடுங்கத் தொடங்கும்.

இரவு பகலாக சுழன்றடித்த மழைக்கும், அசுரவேகத்தில் வளர்ந்த களைகளுக்கும் ஒரு முடிவே இல்லை போலத் தோன்றியது. கூலிகளின் லைன்கள் முழுவதும் நோயாளிகளால் நிரம்பிப் போயின. அந்தச் சிறிய மருத்துவமனையில் இடமில்லாததால் அவர்களுக்கு லைன்களிலேயே சிகிச்சையளிக்கப்பட்டது. ஆனால் மருந்து கொடுத்துவிட்டு மருத்துவர் நகர்ந்த அடுத்த வினாடியே மேஸ்திரிகள் வேட்டை நாய்கள் போல லைனில் நுழைந்து படுத்த படுக்கையாக இல்லாமல் எழுந்து நடமாடக் கூடிய நிலையில் இருந்தவர்களை எல்லாம் தேடிப்பிடித்து இழுத்துச் சென்றனர்.

கருப்பன் ஒருநாள்கூட இடைவெளி விடாமல் வேலைக்குச் சென்றான். கணக்குத் தீர்க்கும் நாள்வரை வேலைசெய்ய வேண்டுமென்று தீர்மானகரமான உறுதி அவனை உந்தித் தள்ளிக் கொண்டிருந்தது. ஆனால் நேர்த்திக் கடன் கழிப்பது போல பாட்டில் பாட்டிலாக கசந்து குமட்டிக் கொண்டு வந்த அந்த மருந்தை விழுங்கிய போதிலும், மேலும் மேலும் வள்ளி பலவீனமடைந்து வந்தாள். அவள் வயிற்றிலிருந்த கட்டி மேலும் பெரிதாக வளரத் தொடங்கியது. பிரச்சினைகளை மேலும் அதிகமாக்கும்விதமாக அவள் திரும்பவும் கர்ப்பமடைந்தாள். அவளுக்கு சத்தான உணவு அளிக்கும்படி டாக்டர் குரூப் கருப்பனிடம் கூறினார்.

எனவே கருப்பன் அலுவலகத்தில் ஐந்து ரூபாய் பெற்று அவளுக்குத் தினமும் சிறிது பால் வாங்கிக் கொடுத்து வந்தான். ஒரு நாள் கருப்பன், குரூப்பிடம் அடுத்தமுறை தலைமை மருத்துவ அதிகாரி வரும்போது வள்ளியைக் காட்டும்படி கேட்டுக் கொண்டான். அதேபோல குரூப்பின் ஆலோசனைப்படி தலைமை அதிகாரியான வெள்ளைக்காரர் வந்த அன்று வள்ளி மருத்துவமனைக்குச் சென்றாள். அவர் வள்ளியைப் பரிசோதித்துப் பார்த்துவிட்டு சில ஊசிகள் போடும்படியும், அவளுக்கு நோய்க்கான விடுமுறை பெற்றுத் தரும்படியும் குரூப்பிடம் கூறினார். எனவே வள்ளிக்குப் பத்து நாட்கள் விடுமுறை அளிக்கப்பட்டது.

கருப்பன் ஒவ்வொரு நாள் மாலையிலும் அவளை ஊசிபோட மருத்துவமனைக்கு அழைத்துச் சென்றான். வள்ளியிடம் கொஞ்சம் முன்னேற்றம் தெரிந்ததும் பெருமகிழ்ச்சியடைந்தான். மழைக்காலம்தான் தேயிலைப் புதர்களைக் கவாத்து செய்யும் காலம். அது ஒரு மாதமாக நடந்து தற்சமயம் முடிவடையும் நிலையிலிருந்தது. ஒருநாள் கழுகுமலை

எஸ்டேட்டின் தலைமை எழுத்தர் ஜார்ஜ் தேயிலைப் புதர்கள் வெட்டிச் சீராக்கப்படுவதை மேற்பார்வையிட்டுக் கொண்டிருந்தான். புல் அளித்திருந்த ஒரு பழைய ஓவர் கோட்டையும், எண்ணெய்த் துணியால் சுற்றப்பட்டிருந்த ஒரு காக்கித் தொப்பியையும் அணிந்து சால்களினூடே உள்ள பாதையில் தனது கையிலிருந்த கோலைத் தரையில் ஊன்றி நின்று கொண்டிருந்தான்.

அப்போது மழை சாரலாக மாறியிருந்ததால் குடை மடக்கப்பட்டு அவன் கையிலிருந்தது. புல், இங்கு வந்து பார்ப்பதாக உறுதியளித்திருந்தார். எனவே அவனது கண்கள் பங்களாவின் மீதே நிலைத்திருந்தன. கூலிகள் மும்முரமாகப் புதர்களைக் கத்தரிப்பதில் மூழ்கியிருந்தனர். எனவே களத்திற்கு சற்றுத் தொலைவில் குதிரையை விட்டு இறங்கி பாதையில் வொய்ட் நடந்து வருவதை யாரும் பார்க்கவேயில்லை. அவர் நேராக ஜார்ஜுக்குப் பின்னால் வந்து நின்றார்.

ஜார்ஜின் கண்கள் இன்னும் பங்களாவின் மேலேயே நிலைத்திருந்தன. அடுத்த வினாடி ஜார்ஜின் முதுகில் சுளீரென்று ஒரு அடி விழுந்தது. அதே நேரம் தொப்பி முரட்டுத்தனமாக அவன் தலையிலிருந்து தட்டி விடப்பட்டது. நிலை தடுமாறித் துள்ளித் திரும்பிய ஜார்ஜை, வொய்ட்டின் கோபத்தால் சிவந்த முகம் எதிர்கொண்டது.

“பிளடி, கழுதைக்குப் பிறந்தவனே. வேலையப் பார்க்க சம்பளம் கொடுக்கறனா, வனத்த வேடிக்கை பார்க்க சம்பளம் கொடுக்கறனா?” வொய்ட் கர்ஜித்தார்.

“மாஸ்டர் மன்னிச்சிருங்க. மாஸ்டர் மன்னிச்சிருங்க” ஜார்ஜ் மன்றாடினான்.

“புல்லுக்காகக் காத்திட்டிருக்கேன்.”

கூலிகள் வேலையை நிறுத்தி விட்டு வேடிக்கை பார்க்கத் தொடங்கினார்கள்.

“ஏன் நிறுத்திட்டீங்க? வேலையைச் செய்யுங்கடா செத்த நாயத் திங்கற பயலுகளா. பீ திங்கற பன்னிகளா.”

“இவ்வளவு உயரமாவா கத்தரிக்கிறது பிளடி கூலிகளா? நீ பிளடி பூல் இங்க நின்னு கனவா கண்டுட்டிருக்கே?” தொண்டை நரம்புகள் புடைக்க வொய்ட் கத்தினார்.

“மாஸ்டர் மன்னிச்சுக்கோங்க. மன்னிச்சுக்கோங்க” ஜார்ஜுக்கு அதிர்ச்சியாலும் பயத்தாலும் வேறு சொற்களே வாயில் வரவில்லை.

“நீயும் ஏண்டா கத்தரிக்கக் கூடாது? உன்னோட கத்தி எங்கடா பிளடி பூல்? எந்த வேலையும் செய்யக் கூடாதுன்னு நெனக்கற அளவுக்குப் பெரியாளாயிட்டியா? வயிறு புடைக்கத் தின்னுட்டு கனவா கண்டுட்டிருக்கே. பிளடி வயித்தப் பாரு?” வொய்ட் தன்கையில் வைத்திருந்த தடியால் ஜார்ஜின் வயிற்றில் ஈவிரக்கமின்றி மூர்க்கமாகக் குத்தினார்.

அந்த வினாடியில் ஜார்ஜின் தலைவிதி நூலிழையில் தொங்கிக் கொண்டிருந்தது. ஆனால் அதிர்ஷ்டவசமாக பெண்கள் அந்தப் பாதையில் ஒற்றை வரிசையில் தாங்கள் கிள்ளிய கொழுந்துகளோடு எடையிடுவதற்கு வந்து கொண்டிருந்ததை வொயிட் பார்த்துவிட்டார். “ஓடிப்போ பிளடி பூல். போய்க் கொஞ்சம் வேல செய். செடி வெட்டு. இன்னொரு தடவை உன்னை இந்தமாதிரி பார்த்தேன். நானே உன்ன உதச்சு வெளிய தள்ளிடுவேன்” என்று கூறி வொய்ட் இன்னொரு குத்தை வழங்கினார். ஜார்ஜ் ஒரு வினாடி வலியால் துள்ளிக் குதித்து விட்டு விரைப்பாக நின்றான்.

வொயிட், ஜார்ஜை மறந்துவிட்டுப் பெண்கள் பின்னே போகத் தொடங்கினார். அவர்களை தடவியபிடி, தொடைகளைக் கிள்ளியபடி.. அவர் வளைவில் திரும்பி பார்வைக்கு மறைந்ததும் ஜார்ஜ் பெருமூச்சு விட்டான். பெண்களைத் தொடர்ந்து போகும் வொய்ட் திரும்பி வர மாட்டாரென்பது அவனுக்குத் தெரியும். எனவே நடந்து சென்று கீழே கிடந்த தொப்பியை எடுத்து அழுத்தமாகத் தலையில் வைத்துக் கொண்டு யாராவது அதை இன்னொரு முறை தட்டிவிட்டுப் பாருங்கள் என்ற சவால் விடும் தோரணையில் சுற்றிலும் முறைத்துப் பார்த்தான்.

தனக்கு அருகிலிருந்த கூலியைத் தடியால் ஓங்கியடித்தான். “தேவடியா மவனே பாக்கற பொம்பளைகளோட எல்லாம் படுத்தாக் கெடக்கற? இவ்வளவு உயரமாவா கத்தரிக்கிறது? இன்னைக்கு உனக்கு பாதிப் பேர்தான் தருவேன். மாரிமுத்து மேஸ்திரி! இந்த நாய்க எல்லாம் ரொம்ப உயரமாக் கத்தரிச்சிட்டாங்க இவனுங்களுக்குக் கொடுக்க வேண்டிய அதிகப்படி ரேசனை* ரெண்டு வாரத்துக்கு நிறுத்தி வெக்கறேன்.”

ஜார்ஜ் கடுங்கோபத்துடன் இங்குமங்கும் அலைந்தான். தான் அடைந்த அவமானத்தைக் கூலிகளைத் திட்டித் தீர்த்துக் கொள்ள விரும்பியது போல வசைமாரி பொழிந்தான். அந்த நேரத்தில் புல் குதிரையில் வந்து சேர்ந்தான்.

“அந்தக் கெழட்டுப் பிச்சைக்காரன் வந்தானா ஜார்ஜ். அவன் குதிரைல வர்றதைப் பார்த்த மாதிரி ஞாபகம்” என்றான்.

“ஆமாம் மாஸ்டர் அவர் இங்கதான் இருந்தார். இப்பத்தான் கெளம்பினார்.”

“எந்த வழியாப் போனான்?”

“இந்த வழியா பொண்டுகளுக்குப் பின்னாடியே மேலே போனார்.”

“ஓஹோ அந்த கெழட்டுப் பிச்சைக்காரப் பய பெண்கள் பின்னாடி போயிட்டானா? இனி அவன் திரும்பி வரமட்டான், அவன் என்ன சொன்னான்?”

“கத்தரிச்சது ரொம்ப ஒசரம்னு சொன்னார் மாஸ்டர்.”

“அவன் நாசமாகப் போக” என்று திரு.புல் வாயார வாழ்த்தினான்.

# 15

பழையன, புதியவற்றிற்கு வழிவிட்டு விலகும்

- டெனிசன்

சிகரெட் பிடித்தபடி கடிதங்களைப் பார்வையிட்டுக் கொண்டிருந்த வொய்ட் தலையை தூக்கி “ஜான்ஸன்” என்றழைத்தார்.

“இந்த கம்பெனி ஆஸ்பத்திரிக்கு, ஒரு பட்டம் வாங்குன டாக்டர் வேண்டுமென்று டாக்டர் பார்பர் சிபாரிசு பண்ணியிருக்கார். அதனால அவரு சொன்ன ஒரு எல்.எம்.பி டாக்டரை வேலைக்குச் சேர்த்திருக்கோம். பேரு ஆபிரகாம். நம்ம மருத்துவமனைக்கு அவர்தான் மருத்துவ அதிகாரியா இருப்பார். குருப் குரங்குமலைக்குப் போயிருவான். அங்கிருக்கிற பயல கழுகு மலைக்கு அனுப்பிடலாம். குரூப்புக்கு ஒரு மாறுதல் உத்தரவை அடிச்சுக் கொண்டு வா”

“யெஸ் மாஸ்டர், என்ன தேதியிலிருந்து உத்தரவு நடைமுறைக்கு வருது மாஸ்டர்?”

“ஓ, ஒரு நிமிசம் இரு. இன்னைக்கு சூலை பத்து, ஆல்ரைட் முப்பத்தொண்ணாம் தேதி அவன் குரங்கு மலையில பொறுப்பு எடுத்துக் கொள்ளட்டும்.”

“வேற ஏதாவது உத்தரவில சொல்லணுமா மாஸ்டர்.”

“குரங்குமலையில குரூப் பாத்துக்கிறதுக்கு ஒரு சின்ன டிஸ்பென்ஸரிதான் இருக்கு. அவன் சம்பளத்தையும் குறைச்சிரலாமா ஜான்ஸன்?”

“டிரான்ஸ்ஃபரே டாக்டர் குரூப்புக்கு இடிவிழுந்த மாதிரி இருக்கும் மாஸ்டர்.”

“சே, அந்த மடையனை டாக்டர்னு சொல்லாதே அவன் ஒரு பிளடி வார்டுபாய்தானே.”

“யெஸ் மாஸ்டர், ஆனா நம்ம கம்பெனில அவன்தான் பெரிய எடத்தில இருக்கான். இப்ப அதவிட சின்னப் பதவிக்குப் போறான். மாஸ்டர் அவனோட சம்பளத்தையும் குறைச்சா அது அவனுக்குப் பெரிய அடியா இருக்கும்.”

“ஒரு உண்மையான டாக்டர் இங்க இருந்தா உனக்கு சந்தோஷமா இருக்காதா ஜான்ஸன். எல்.எம்.பி ஒரு பெரிய தகுதியில்லையா.”

“மாஸ்டர், ஒரு டாக்டரைப் பொருத்தவரைக்கும் அது குறைந்தபட்ச தகுதிதான் மாஸ்டர்.”

“நான்சென்ஸ், முட்டாள்தனமாப் பேசாதே. டாக்டர் ஆபிரகாமுக்கு ரொம்ப அதிகத் தகுதி இருக்குன்னு எனக்குத் தெரியும்.”

“யெஸ் மாஸ்டர்.”

“உன்னையெல்லாம் பாத்துகிறதுக்கு இந்த மாதிரி ஒரு பெரிய டாக்டர் வர்றதுக்கு நீ சந்தோஷப்படணும்.”

“எங்க எல்லாருக்கும் ரொம்ப சந்தோஷந்தான் மாஸ்டர்.”

“ஆல்ரைட் ஜான்ஸன். உத்தரவை டைப் பண்ணு. சம்பளம் அப்படியேதான் இருக்கும்னு சொல்லிடு. குரூப் மெடிக்கல் ஆபீசருக்குக் கீழே வேலை செய்யணும்னு சொல்லிடு.”

“யெஸ் மாஸ்டர்” என்று கூறிவிட்டு ஜான்ஸன் மறைந்தார். சில விநாடிகளில் அவர் தட்டச்சு செய்யப்பட்ட மாறுதல் உத்தரவோடு வர வொய்ட் அதில் கையெழுத்திட்டார்.

“நீயே, இந்த உத்தரவை அந்த பிளடி குரூப்கிட்ட குடுத்துவிடு ஜான்ஸன்.”

“யெஸ் மாஸ்டர்.”

வேலை முடிந்தவுடன் ஜான்ஸன் செக்ரோல் பணியில் இருந்த அப்பாவுவிடம் சென்றான்.

“வொயிட் உத்தரவை குரூப்கிட்ட குடுக்கணுமின்னு எனக்கு உத்தரவு போட்டுட்டார். ரொம்பநாள் பழகிட்டோமா சங்கடமாயிருக்கு, கூட வர்றீயளா?”

இருவரும் குரூப் வீட்டுக்குப் போனபோது அவர் மனைவியோடு இரவு உணவு அருந்திக் கொண்டிருந்தார். வேலைக்காரன்தான் கதவைத் திறந்தான். இவர்களைப் பார்த்ததும் “ஹலோ ஃபிரண்ட்ஸ்”என்று குரூப் உற்சாகமாக வரவேற்றார். “இப்பத்தன்னே காணாண் தோணிச்சு இல்லே. உட்காருங்க ஞான் ஒரு மினிட்டில வரான்” என்று கூறிவிட்டு உள்ளே சென்று கையைத் துடைத்துக் கொண்டே திரும்பி வந்தவர் நண்பர்களின் இருண்ட முகங்களைப் பார்த்து “என்ன, எந்து விஷயம்?”

ஜான்ஸன் பதிலேதும் சொல்லாமல் மாறுதல் உத்தரவை நீட்டினார்.

அதைப் படிக்கப் படிக்கவே குரூப்பின் முகம் வெளுத்துப் போனது. "என்னது" அதிர்ச்சியுடன் கேட்டார். "பத்து வருஷத்துக்கு மேல இவிட இருக்கேன். வொயிட் எப்போமே என்னோட வேலையைப் பாராட்டிட்டே இருப்பாரு. இப்ப எதுக்காணு என்னப் பதவி இறக்குறாரு."

"எல்லாம் அந்த பார்பரோட வேலை" என்றார் அப்பாவு.

"இன்னைக்கு வரைக்கும் பார்பரும் என் வேலையை ஒரு குறையும் சொல்லலையே."

"இருக்கலாம். ஆனா ஒரு படிச்ச டாக்டர் இங்க வேணும்னு சிபாரிசு பண்ணியிருக்காரு. ஏற்கெனவே டாக்டர் ஆபிரஹாம்னு ஒருத்தரை வேலைக்கு வெச்சுட்டாங்க போலத் தெரியுது. அதனால தான் உங்களைக் குரங்குமலைக்கு மாத்துதாங்க" என்று ஜான்ஸன் பதிலளித்தான்.

"வொய்ட் உங்களோட சம்பளத்தைக் கூட குறைக்கணும்னு சொன்னான். ஆனா தம்பி ஜான்ஸன் தான் உங்களுக்காகக் கெஞ்சிக் கேட்ட பொறவு இப்ப இருக்கிற சம்பளமே இருக்கட்டும்னு ஒத்துக்கிட்டானாம்"என்றார் அப்பாவு.

"நன்றிகெட்ட பிச்சக்காரங்க" குரூப் உச்சஸ்தாயில், சுத்தமான மலையாளத்தில் கத்தினார். "இத்தனை வருஷமா மாடு மாதிரி வேலை செஞ்சிருக்கேன். கடைசியில என்ன கிடைக்குது பாருங்க. கண்ணியமான மனுஷன் இந்த மாதிரி வீட்டில் இருப்பானா? ஆஸ்பத்திரிய நோக்கு, இதை ஆஸ்பத்திரின்னு சொல்ல முடியுமா? மாட்டுக்கொட்டாயிப் போல இருக்கு. இந்த மாதிரி நிலைமையில ஞான் சமாளிச்சுட்டு இருக்கேன். பின்னே மருத்துவச் செலவுகளைப் பாருங்க. என்னைக் கொண்டு எவ்வளவு குறைக்க முடியுமோ அவ்வளவு குறைச்சிருக்கேன். இந்த ஆஸ்பத்திரியில கொஞ்சம் குயினைன், கொஞ்சம் சோடா சாலிக் சைலாஸ், டிங்க்சர் அயோடின், எப்சம் சால்ட் மத்தது ஒண்ணும் இரண்டும்தான் இருக்குது. உள்நோயாளிகளுக்கு சாப்பாடு குடுக்காமயே சமாளிச்சிட்டு இருக்கேன். இங்கே ஞான்தன்னே டாக்டர், கம்பௌண்டர், மிட்வொய்ஃப், வார்டு பாய் எல்லாம். உதவிக்கு சும்மா ஒரு கூலிதான் உண்டு. இந்த மாதிரி நெலைமையில ஞான் எப்படி வேலை செஞ்சேன். எல்லாரும் புகழ்ந்து பாராட்டுற மாதிரி இப்பவும் வேலை செஞ்சிட்டிருக்கேன். நன்றி கெட்ட பிச்சக்காரனுங்க."

குரூப்பின் கூச்சலைக் கேட்டு ஏதோ பிரச்சினை என்று புரிந்து கொண்ட

திருமதி குரூப் வெளியே வந்து என்னவென்று கேட்டாள்.

“வெள்ளைக்காரக் குரங்குக ஆஸ்பத்திரிக்கு ஒரு எல்.எம்.பி டாக்டரைப் போட்டுட்டு நம்மைக் குரங்கு மலைக்கு மாத்திட்டாங்க”

இதைக் கேட்ட மாத்திரத்தில் திருமதி குரூப்பிடம் இருந்து விம்மல்கள் வெடித்துக் கிளம்பின. திருமதி குரூப் எஸ்டேட்டிலேயே தான் மிகவும் முக்கியமான பெண்மணி என்று கருதி வந்தாள். இப்போது குரூப் பதவியிறக்கம் செய்யப்பட்டதும் அந்த அவமானத்தை அவளால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. “சரி நீ தூங்கப்போ; இப்ப என்ன செய்யலாம்னு நம்ப ஆளுகளோட சேர்ந்து யோசிச்சுப் பார்க்கலாம்” என்று மலையாளத்தில் கூறி மனைவியைப் படுக்கையறையில் கொண்டு போய் விட்டுவிட்டு வந்தார்.

“எம்புத்தியே குழம்பிப் போச்சு. நீங்கள்தான் எனக்கு நல்ல யோசனை சொல்லணும், ஞான் எந்து செய்யாம்?”

“உங்களுக்கு வொய்ட்டைப் பத்தி நல்லாத் தெரியும். எதைப் பத்தியாவது ஒரு தடவை முடிவு பண்ணிட்டா எந்த சூழ்நிலையிலையும் அதை மாத்திக்க மாட்டார். அவர்கிட்டப் பேசி பிரயோஜனம் இல்ல. நானே பேசிப் பார்த்திட்டேன். இப்போதைக்கு டிரான்ஸ்ஃபரை ஒத்துக்கொள்வது நல்லது” ஜான்ஸன் நிதானமாகப் பேசினான்.

“வேலைய விட்டுட்டுப் போயிடலாம்னு கூடத் தோணுது”குரூப்பின் குரல் தடுமாற்றத்துடன் ஒலித்தது.

“அப்படி எதுவும் செஞ்சிடாதீங்க. இந்தக் காலத்தில வேலை கிடைப்பது எவ்வளவு சிரமம்னு உங்களுக்கே தெரியும். பார்க்கலாம், புது டாக்டருக்கு இந்த இடம் பிடிச்சுப் போயி இங்கேயே இருப்பான்னு என்ன நிச்சயம்? அவன் இங்க வந்து ஆசுபத்திரியையும், வீட்டையும் பாத்து ஒரு மழைக்காலத்தையும் பார்த்திட்டான்னா போதும் ஓடியே போயிடுவான்னு தோணுது. அதுக்கப்புறம் நல்லாப் படிச்ச டாக்டர் யாரும் இந்த எடத்தில இருக்க மாட்டான்னு வொயிட்டுக்கு புரிய வைக்கலாம். அதனால் இப்போதைக்கு இதை ஒத்துக்கிட்டு பொறுமையா இருக்கிறதுதான் நல்லது” என்றார் அப்பாவு.

“அப்பாவு அண்ணாச்சி சொல்றது சரிதான்” ஜான்ஸன் ஒத்துப் பாடினான். இறுதியாக குரூப் நண்பர்களின் யோசனையை ஏற்றுக் கொண்டார்.

1928, சூலை முதல் வாரத்தில் ஒரு பகல் வேளையில் ஒரு புதிய மருத்துவர் அலுவலகத்திற்கு வந்து சேர்ந்தார். கண்ணுக்கினியவராகத்

தோன்றிய அந்த இளைஞருக்கு முப்பது வயதுதானிருக்கும். காற் சட்டைகளும், கோட்டும் அதற்கேற்ற டையுமாக அவரது உடைகள் பளிச்சென்றிருந்தன. ஹெட் கிளார்க் விரைந்து வந்து வரவேற்றான்.

“நான்தான் ஹெட்கிளார்க் ஜான்ஸன், நீங்க தானே புது டாக்டர் ஸார்.”

“ஆமாம். நான்தான் டாக்டர் ஆபிரஹாம்” அவர் ஹெட்கிளார்க்கோடு கைகுலுக்கிவிட்டு பொது மேலாளரைத் தான் எப்போது பார்க்க முடியும் என்று கேட்டார்.

“அவர் இப்போது காட்டுக்குப் போயிருக்கிறார். மூன்று மணிக்குத்தான் வருவார். ஆனால் போவதற்கு முன் நீங்கள் வந்தால் உங்களுக்கான வீட்டைக் காட்டும்படியும் எல்லா உதவியும் செய்யும்படியும் உத்தரவிட்டு விட்டுப் போயிருக்கிறார்.”

“சரி, என் வீட்டைப் பார்க்கலாமா?”

“ஜான்ஸன் தனது உதவியாளர்களை அறிமுகப்படுத்தியதோடு தனது முதல் உதவியாளன் ராஜிடம் டாக்டருக்கு அவரது இல்லத்தைக் காட்டும் பணியை ஒப்படைத்தான். பின்பு தனது இல்லத்தில் புது டாக்டருக்கு மதிய உணவு தயாராக இருக்கிறது என்று அறிவித்தான். ஆபிரஹாம் அவருக்கு நன்றி தெரிவித்து விட்டு ராஜுடன் கிளம்பினார்.

“என்ன இது?” எதிரே தெரிந்த கட்டிடத்தைப் பார்த்து கேட்டார்.

“அதுதான் மருத்துவமனை” என்றான் ராஜ்.

“கடவுளே, இது ஏதோ ஆஸ்பத்திரியோட அவுட் ஹவுஸ்ன்னு நினைச்சேன்.” பின்பு ராஜ் அருகில் இருந்த டாக்டரின் வீட்டுக்கு அவரை அழைத்துச் சென்றான்.

“பாக்கறதுக்கு ஒண்ணும் சந்தோசமாவே இல்லையே. இதுக்கு முன்னாடி இங்கே இருந்தது யாரு!” என்றார் ஆபிரஹாம்.

“டாக்டர் குரூப்”

“டாக்டர்? இங்கே இன்னொரு டாக்டர் இருக்கிறாரா? இது எனக்குத் தெரியவே இல்லையே”

“குரூப் ஒரு கம்பௌண்டர்தான். ஆனா ஆஸ்பத்திரிக்கு அவருதான் பொறுப்பா இருந்தாரு. எல்லாரும் அவரை டாக்டர்னுதான் கூப்பிடுவாங்க.” பின்பு டாக்டர், ஜான்ஸனின் வீட்டில் மதிய உணவு அருந்திவிட்டு சரியாக மூன்று மணிக்கு வொயிட்டைப் பார்ப்பதற்காக அலுவலகத்தில் நுழைந்தார்.

சில நிமிடங்கள் கழித்து வந்த வொயிட்டைப் பார்த்து டாக்டர் முன்னே வந்து “நான் டாக்டர் ஆபிரஹாம் சார்” என்றார். ‘சார்’ என்ற வார்த்தை வொயிட்டை துணுக்குறச் செய்தது. ஆனால் அவர் ஏதும் பேசாமல் டாக்டரைத் தனது அறைக்குள் அழைத்துச் சென்றார். ஆனால் உட்காரச் சொல்லவில்லை.

உங்களைப் பார்த்ததில் மகிழ்ச்சி டாக்டர், டாக்டர் பார்பர் உங்களைப் பற்றி நிறையச் சொல்லி இருக்கிறார்.”

“ஆஸ்பத்திரிய சுத்திப் பார்த்தீர்களா? உங்க குவார்ட்டர்ஸைப் பார்த்தீர்களா? ஆஸ்பத்திரியக் கொஞ்சம் மாத்தணும்னு டாக்டர் பார்பர் சொன்னார். உங்க வீட்டுக்குக் கூட கொஞ்சம் வேலை செய்ய வேண்டியிருக்கும். என்னோட ஹெட் ரைட்டர் அப்பாவுகிட்ட உங்களை வந்து பார்க்கச் சொல்கிறேன். என்னவேணும்னு அவர்கிட்ட சொல்லுங்கள். நான் ஏற்பாடு செய்கிறேன்.”

“நான் டாக்டர் பார்பரை எப்பப் பார்க்க முடியும் சார்?”

“சனிக்கிழமைகளில் அவர் இங்கே வருகிறார் என்று நினைக்கிறேன்.
அப்போது அவரிடம் பேசிக் கொள்ளுங்கள்.”

# 16

தீயினால் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே
நாவினால் சுட்ட வடு

- திருக்குறள்

நல்ல உணவும், மருந்துகளும் கொடுக்கப்பட்ட பின்பும் வள்ளியின் உடல் நிலையில் எந்த மாற்றமும் தெரியவேயில்லை. பத்து நாள் விடுமுறையின் போது ஆரம்பத்தில் கொஞ்சம் முன்னேற்றம் இருப்பதுபோல் தோன்றியது. ஆனால் அது நீடிக்கவில்லை. அவளது வயிறு வீங்கத் தொடங்கியது. உடல் முழுவதும் மெலிந்து கொண்டே வந்தது. ஒருநாள் மாலை அவள் வேலையிலிருந்து திரும்பி வந்தபோது அவளது பாதங்களும் வீங்கியிருந்தன.

“இப்பிடி உடம்ப வைச்சுகிட்டு இனியும் வேலைக்கு போக வேண்டாம். நான் மேஸ்திரிகிட்ட சொல்லிப் பாக்கேன். ஒன்ன இன்னும் கொஞ்ச நாளைக்கு கூப்பிட வேண்டாமின்னு சொல்லுதேன்.” கருப்பன் அவளிடம் கூறினான்.

வள்ளி வசதியாக அமர்ந்து மூச்சு வாங்கிக் கொண்டு பின்பு பதிலளித்தாள். “மேஸ்திரி இதையெல்லாம் கேட்டுட்டு உட்டுரு வானாக்கும். மனுசனா அவன். இப்பவே வேலை செய்யலைன்னா கணக்கு முடிக்கிற அன்னைக்கு ஊருக்குப் போகப் பணமில்லாமத்தான் கெடக்கணும். வீட்டப் பாக்கணுமுன்னு ஏக்கம் கூடிப்போச்சு. இதுலயே எம்பாதி ஒடம்பு வீணாப் போச்சு. இந்த வருசம் ஊருக்குப் போயிட்டா கண்டிப்பா சரியாகிடுவேன். என்னால எவ்வளவு ஏலுமோ அவ்வளவு வேலை செய்யுதேன். இதே மாதிரி நிறைய பொண்டுக வேலை செய்யறதைப் பாத்துட்டுதான இருக்கேன். அடுத்த பாடில ஒரு பொண்ணு இருக்கா. அவ கால் என்னைவிட ரெண்டு மடங்கா வீங்கி கெடக்கு, ஆனா தினமும் வேலைக்கு வரத்தான் செய்யுதா. நான் கேட்டப்போ மாசமா இருக்கும்போது கால் வீங்கும். குழந்தை பிறந்ததும் வீக்கம் வடிஞ்சிடும்னு சொல்லுதா. பிரசவத்துக்கு அப்புறம் எங்காலிலயும் வீக்கம் வடிஞ்சிடும்னு நெனக்கேன்.”

ஆனால் வள்ளிக்குத் தெரியாமலேயே அவளுக்கு ஒரு வாரம் ஓய்வளிக்கும்படி கருப்பன் சங்கர பாண்டியனிடம் மன்றாடினான்.

“மாசமா இருக்கிற பொம்பளைங்கெல்லாம் ஊட்டுல உட்கார்ந்துகிட்டா வேலை எப்படிலே நடக்கும்? இங்கிருக்கிற ஒவ்வொருத்தியும் வருசம் தவறாம வயித்தைத் தள்ளிட்டு வந்திருதாளுவ” மேஸ்திரி வழக்கம் போல சீறி விழுந்தான்.

“அவ மாசமா மட்டும் இல்ல. காய்ச்சக்கட்டியும் வந்திருக்கு. அதனாலதான் உங்ககிட்ட கெஞ்சிட்டு இருக்கேன்” என்றான் கருப்பன்.

“இத பாருல, இங்க இருக்குற பொம்பளைங்க குழந்தை பிறக்கற வரைக்கும் வேலை செய்யுதாங்க. மத்தவங்கனால முடியும்னா உம் பொஞ்சாதியினாலையும் முடியும். அவளுக்கென்ன கொம்பா முளைச்சிருக்கு?”

“எல்லாப் பொம்பளைகளுக்கும் கட்டி வரல மேஸ்திரி?”

“ஆஸ்பத்திரி இருக்குல்லா. காசில்லாம அவளுக்கு மருந்து கிடைக்குதில்லலா. சும்மா தாரான்லா. அதான் உனக்கு அதோட மரியாதை தெரிய மாட்டேங்குது” என்றான் சங்கரபாண்டியன்.

“இங்கிருக்கறவுக ஈவுஇரக்கமே இல்லாத சென்மங்கன்னு தெரிஞ்சிருந்தா இந்தப் பக்கமே தலை வைச்சி படுத்திருக்க மாட்டேன்”என்றான் கருப்பன். முடிக்கும் முன்பே பளீரென்று சங்கரபாண்டியனின் கரம் கருப்பனின் கன்னத்தைப் பதம் பார்த்தது.

“நன்றி கெட்ட நாயே, இங்க வர்லேன்னா நீயும், உம் பொஞ்சாதி தேவடியாளும் செத்து பொதச்ச எடத்துல புல்லு முளைச்சிருக்கும். நீ அங்கே சோத்துக்கில்லாம பட்டினி கிடந்தே, உம்பொஞ்சாதி ரோட்டில போறவன், வாரவன் ஒவ்வொருத்தன் கூடயும் போயிட்டிருந்தா. இந்த நாய்ங்க மேல பாசங்காட்டி இங்க கூட்டிட்டு வந்தா மூஞ்சில ஏறி நக்கியா பாக்க? கழுதைக்குப் பொறந்தவனே” மேஸ்திரி தொண்டை நரம்புகள் புடைக்க வெறிகொண்டு கத்தினான். கூச்சல் கேட்டு உள்ளே வந்த அவனது அடியாட்கள் இருவர் தங்கள் பங்குக்கும் கருப்பனை உதைத்து கழுத்தைப் பிடித்து நெட்டித் தள்ளினர்.

# 17

துயரம் ஒரு மனிதனை அறிவாளியாக்குகிறது,
பணக்காரனாக்குவதில்லை.

-பழமொழி

ஞாயிறு அதிகாலை வள்ளிக்கு ஒரு பழைய சேலை வாங்குவதற்காக கருப்பன் வால்பாறை கிளம்பினான். சந்தை நாட்களில் பொள்ளாச்சியிலிருந்து நிறைய வியாபாரிகள் எல்லாவிதமான பழைய துணிமணிகளையும் வால்பாறைக்குக் கொண்டு வருவார்கள். சேலைகள், பாவாடைகள், குழந்தைகளுக்கான ஃபிராக்குகள், சட்டைகள், கோட்டுகள், அரைக்கால் சட்டைகள் அனைத்துமே மிகக் குறைந்த விலையில் அவர்களிடம் கிடைக்கும். அப்படி ஒரு கடைக்கு முன் கருப்பன் நின்று கொண்டிருந்தபோது நேர்த்தியாக உடையணிந்திருந்த ஒரு ஆள் அவனை நெருங்கினான். “ஏலேய் நீ எங்கேர்ந்து வாற” என்று நீண்டநாள் பழகிய வனைப் போல் கேட்டான்.

“குமரிமலை எஸ்டேட்” கருப்பன் சற்று தயக்கத்துடன் பதிலளித்தான்.

“பழைய துணிமணி வாங்க வநதிருக்கே இல்லையா?”

“ஆமா, பொஞ்சாதிக்கு சேலைத்துணி வாங்கலாம்னு வந்தேன். வேல முடிஞ்சி வரும்போது கட்டுன துணியெல்லாம் நனைஞ்சு ஈரமாயிருது. மாத்திக்க ஒண்ணும் இல்ல. என்னால புதுசு வாங்க முடியாது.” கருப்பன் அந்தப் புதியவனை பழைய துணி விற்கும் வியாபாரி என்று நினைத்துக் கொண்டு பேசினான்.

“இங்க ரொம்ப காலமா இருக்கியோ?” புதியவன் கேட்டான்.

“ஆமா. மூணு வருசம் ஆவப்போவுது.”

“இங்க வந்த பொறவு ஊருப் பக்கம் போயிட்டு வந்தியா.”

“இல்லை.”

“எப்பவுமே மேஸ்திரிகிட்ட கடன்பட்டுத்தான் இருக்க போலருக்கு.”

“ஆமா, இருந்த கடனை எல்லாம் அடைச்சி முடிச்சிட்டோம். இந்த வருசம் வீட்டுக்கு போயிடலாம்னு நெனக்கோம். ஆனா எங்க கெட்டகாலம் பொஞ்சாதி ரொம்பவும் உடம்பு முடியாம கெடக்கா. இந்த

வருசமாவது ஊருக்கு போறதுக்கு நாலு காசு கெடைக்குமான்னு பொறுத்துதான் பார்க்கணும்.”

“உன்னோட சொந்த ஊரு எது?”

“கயத்தாறுக்குப் பக்கத்தால மயிலோடை.”

“ஊரில உனக்கு சொந்தம் பந்தம், தெரிஞ்சவங்கன்னு எவ்வளவு பேர் இருப்பாங்க.

“கொஞ்சம் சொந்தக்காரங்க இருக்குதாங்க. ஆனா ஊரில இருக்கிற எல்லாருமே எனக்கு நல்லாத் தெரிஞ்சவங்கதான்.”

“சரி நான் சொல்லதக் கேளு. நீ பணக்காரனாகிறதுக்கு ஒரு வழி சொல்லுதேன். உங்க ஊரிலிருந்து உன்கூட எஸ்டேட்டுக்கு வர்றதுக்கு குறைஞ்சது பத்து கூலிகளை சேர்த்திட்டாயானா இங்க இருக்கிற எஸ்டேட்டில ஏதாவது ஒண்ணில உனக்கு மேஸ்திரி வேலை வாங்கித் தாறேன். கூலிங்க காசிலிருந்தும் உனக்குப் பணம் வரும். நீ சம்பாதிக் கிறதும் கைல நிக்கும். அப்புறம் முடிஞ்சா இன்னும் நிறையக் கூலிகளை உன் கேங்கில சேர்த்திக்கலாம். அம்பது பேரைக்கூட சேர்க்கலாம். கொஞ்ச நாளில பெரிய பணக்காரனாகிடலாம்.”

“ஆமா, ஒரு தடவை மேஸ்திரி சொன்னதையெல்லாம் நம்பித்தான் நிறைய சம்பாதிக்கலாம்னு இங்கன வந்தேன். இப்ப பொஞ்சாதிக்கு ஒரு புதுச்சீலை எடுக்கக் கூட வக்கில்லை” கருப்பன் கசப்புடன் சொன்னான்.

“நெசந்தான். ஆனா நான் ஒண்ணும் உன்னைக் கண்ணைக் கட்டிக்கிட்டு போகச் சொல்லலையே. எஸ்டேட்டில மூணு வருஷமா இருந்திருக்கே. உனக்கும் கொஞ்சம் அனுபவம் இருக்கும்லா. மேஸ்திரியினாலே சம்பாதிக்க முடியுமா முடியாதாங்கிறது உனக்குத் தெரியாமலா இருக்கும். அதனால நாஞ் சொல்றதும் உங்க மேஸ்திரி சொன்னதும் ஒண்ணு இல்ல. மனசு மட்டும் வெச்சாப் போதும். நிறையா சம்பாரிச்சு உங்க மேஸ்திரி மாதிரி பணக்காரனா வரலாம்.”

“அது சரி, நீங்க யாருன்னு தெரியலையே!”

“புது ஆளுங்க மேல நம்பிக்கையில்லாம நீ பயப்படுவதுல ஞாயமிருக்கு. ஆனா நாஞ் சொன்னது எல்லாம் ஏற்கனவே உனக்குத் தெரிஞ்சதுதான். ஆனமலைல தேயிலைத் தோட்டக்காரங்க எல்லாரும் சேர்ந்து எஸ்டேட்டுகளோட நல்லதுக்காக புதுசா சங்கம் தொடங்கிருக்காக. நான் அதோட ஏஜென்ட். எஸ்டேட்டு வேலைக்கு ஆள்புடிச்சி குடுக்கிற அளவுக்கு செல்வாக்கா இருக்கேன். பொறுப்பான மேஸ்திரிகளையும்,

கோல் மேஸ்திரிகளையும் ஏற்பாடு பண்ணிக் குடுக்கிறதுதான் என் வேலை. நீலகிரியிலயும், மூணாறிலும் கூட எனக்குத் தெரிஞ்சவங்க இருக்கிறாக. உனக்கு ஆனைமலை புடிக்கலைன்னா சொல்லு நீலகிரிலையோ, மூணாறிலோ கூட வேலை வாங்கித்தர என்னால முடியும்." "அதுசரி எனக்கும் இதுக்கும் என்ன சம்பந்தம்? எங்கிட்ட வந்து இத எதுக்கு சொல்லுதீக?" கருப்பன் புதியவன் மேல் கொண்ட சந்தேகம் விலகாமல் கேட்டான்.

"மூணு வருசமா எஸ்டேட்டில இருக்கேன்னு நீதானலே சொன்ன. எஸ்டேட்டப் பத்தி ஒனக்கு புடி கெடச்சிருக்கும்ல. நான் சொன்ன மாதிரி நீ கேட்டு நடந்துகிட்டேன்னு வையி. நீ எதுக்கு ஓடிப்போறத பத்தி நெனைக்கணும். உள்ளத சொல்லுதன் கேளு. இந்த வேலய ஆரம்பிக்கறதுக்கு நான் ஒனக்கு ஒரு பைசா தரப் போறதும் இல்ல. நமக்குள்ள எந்த பிரச்சினையும் வரப் போறதும் இல்ல. அப்புறம் எதுக்கு நீ பயப்படுத. ஒங்க ஊருக்குப் போவ ஒரு டிக்கட் எடுத்துதாரேன். ஊருக்குப் போயி கூலியாளுக கெடச்சா எனக்கு கடுதாசி எழுது. நான் பணத்தோட நேர்ல வந்து உங்கள எல்லாம் எஸ்டேட்டுக்குக் கூட்டிட்டு வந்துருவன்ல. எல்லாரையும் பதிவு பண்ணிட்டா உனக்கும் வருமானம் வர ஆரம்பிச்சுரும்லா."

"குமரிமலைலயே எனக்கு மேஸ்திரி வேல வாங்கித்தர முடியுமா?"

"இத பாருப்பா குமரிமலை ஒரு சின்னக் கம்பெனியோடது. ஆனா நான் உன்னைக் கூட்டிகிட்டு போகணும்னு நினைக்கிற எஸ்டேட் ஒரு ரொம்பப் பெரிய கம்பெனியோடது. அவங்களுக்கு ஏகப்பட்ட எஸ்டேட்டுகள் இருக்கு. அவங்க புதுசா நிறைய எஸ்டேட் திறக்கறதால நிறையா கூலிகளும் மேஸ்திரிகளும் தேவைப்படுதாக. அதனாலதான் உனக்கு அங்கன மேஸ்திரி வேலை வாங்கித் தர முடியும்ங்கிறேன்."

"உங்கபேரு என்னண்ணே?"

"எம்பேரு கோவிந்தசாமி. சொந்த ஊரு ராமநாதபுரத்திற்கு பக்கத்தில இருக்கு."

"எங்கூட பொஞ்சாதியும் இருக்காண்ணே. அவள இங்க தனியா உட்டுட்டு நான் மட்டும் எப்படி ஊருக்குப் போக முடியும். என்கையில நயாப் பைசா கிடையாது."

"இப்ப ஆகஸ்ட் மாசம் நடந்திட்டிருக்கு. அதனால கணக்கை முடிக்கச் சொல்லி கேட்கலாம். உனக்குக் கடன் இல்லாததினால அவங்களும் விட்டிருவாங்க. உன் கடனை முடிக்கறதுக்கு என் செல்வாக்கைப்

பயன்படுத்தறேன். அது முடிஞ்சவுடனே நீயும், உம் பொஞ்சாதியும் ஊருக்குப் போறதுக்கு நான் ரெண்டு டிக்கெட் வாங்கித்தாரேன். வழிச்செலவுக்கு கொஞ்சம் பணம்கூடக் குடுக்கேன். ஊருக்குப் போயி சேந்திட்டா எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரம் கூலிகளை சேர்த்திட்டு எனக்குத் தகவல் கொடு. மீதிய நான் பாத்துக்குதேன்.”

“ஆனா எம்பொஞ்சாதிக்கு உடம்புக்கு ரொம்ப முடியல, மாசமா வேற இருக்கா. அவளால வண்டியில வரமுடியுமான்னே தெரியலண்ணே.”

“உன்னால அவளுக்கு நல்லா சாப்பாடுகூட குடுக்க முடியலைங்கிறதாலதான் அவளுக்கு உடம்பு மோசமாயிருக்கும். கீழேன்னா கஞ்சிக் குடிச்சாலும் போதும்லா. ஆனா இது குளிரும், ஈரமுமான இடம்ல. இங்க தப்பிப் பொழச்சிருக்கிறதுக்கு நல்ல சாப்பாடு வேணும். உனக்குக் கிடைக்கிற சம்பளத்தில நீ என்ன பெரிய சாப்பாடு சாப்பிட்டுடப் போற. அதான் கூலிகளுக்கு அடிக்கடி உடம்புக்கு முடியாமல் போயிடுது. நீயே ஒரு மேஸ்திரியா இருந்தா நல்லா சம்பாரிச்சு நல்லா சாப்பாடு போட்டா அவளும் சரியாகிடுவா, நீயும் சரியாகிடுவே, அப்புறம் மேஸ்திரியாகி நல்லா சம்பாரிச்சா பொஞ்சாதிய வேலைக்குக் கூட அனுப்ப வேண்டியதில்லல்லா” இது மறுக்க முடியாததாக இருந்தது. கருப்பன் ஊசலாடத் தொடங்கிவிட்டதை உணர்ந்த கோவிந்தசாமி உடனடியாக முடிவு எடுக்க வேண்டிய அவசியமில்லை என்றும் மனைவியிடம் கலந்து பேசி முடிவு செய்யும்படியும் கூறினான். ஆனால் வேறு யாரிடமும் இது பற்றிப் பேசிவிட வேண்டாம் என்றும் இடையில் கணக்கு முடிப்பதில் தடைகள் ஏற்படுத்த வாய்ப்பிருக்கிறது என்றும் எச்சரித்தான்.

“அடுத்தவாரம் இதே நேரத்திற்கு இதே எடத்துக்கு வந்தா என்னப் பார்க்கலாம். அப்ப என்ன முடிவு பண்ணியிருக்கேன்னு சொல்லு. மத்தத நான் பாத்துகிறேன்” என்று சொல்லிவிட்டு கோவிந்தசாமி விடைபெற்றுச் சென்றான்.

சரியென்று ஒப்புக் கொண்டுவிட்டுத் தேவையான பொருட்களை வாங்கிவிட்டு கருப்பன் ஓட்டமும் நடையுமாக எஸ்டேட்டுக்குத் திரும்பினான்.

அறைக்கு வந்தவுடன் சேலையைக் கொடுத்துவிட்டு, கோவிந்தசாமியைக் கண்டதையும், மற்ற விசயங்களையும் ஒரே மூச்சில் கூறி முடித்தான்.

“எனக்கு என்ன செய்யறதுன்னு புரியல வள்ளி. இந்த ஆள் யாருன்னே

தெரியல. கண்டவனையெல்லாம் நம்பி படாதபாடுபட்டுட்டோம். ஆனா இவன் சொல்றதப் பார்த்தா ரொம்ப நல்லது மாதிரி படுது”கருப்பன் ஆற்றாமையுடன் கேட்டான்.

“இத ஒத்துகிட்டா ஒரு மாசத்தில ஊருக்குப் போயிடலாம். அத நினைச்சாத்தான் என்னால் மறுக்க முடியல. ஊருக்குப் போயி அப்பா அம்மாவையும், பாட்டியையும் பார்க்கணும், ஒரு தடவை அந்த மூச்சுக் காத்தை இழுத்து உட்டாலே என் நோவு எல்லாம் காணாமப் போயிடும்னு தோணுது. ஆனா நாம ஏற்கெனவே ஒரு தடவை ஏமாந்து போயிருக்கோம். இன்னொரு தடவையும் ஏமாற மாட்டோம்னு என்ன நிச்சயம்?” வள்ளியும் அதே குழப்பத்துடன் பதிலளித்தாள்.

“அதுதான் புள்ள எனக்கும் பயமாயிருக்கு” என்றான் கருப்பன்.

“அடுத்தவாரம் இந்த ஆளைப் பார்த்து அவன் உனக்கு மேஸ்திரி வேலை வாங்கித்தரறதா சொல்ற எஸ்டேட்டைக் காட்டச் சொல்லு மாமா. நீ நேரிலேயே பாத்துத் தெரிஞ்சிக்கோ. தேவைப்பட்டா அந்த எஸ்டேட்டைப் பத்தி மத்தவங்ககிட்ட விசாரிச்சுப்பாரு. அதுக்குப் பொறவு முடிவு பண்ணலாம்.”

“இது நல்ல யோசனை” குழப்பத்துக்கு விடை கிடைத்ததில் கருப்பன் மகிழ்ந்து போனான்.

“அடுத்தவாரம் அவனைப் பார்த்து எஸ்டேட்டைக் காட்டச் சொல்லி கேக்கேன். அப்புறமா முடிவு பண்ணலாம். இடையில இதப்பத்தி யாருகிட்டயும் பேசாதே. பேசினா நம்ம கணக்கு முடிக்கிறதைத் தடுக்க மேஸ்திரி என்ன வேணுமானாலும் செய்வான்.”

“முத்தையா அண்ணாச்சி மட்டும் இருந்தா...” வள்ளி இழுத்தாள்.

“நாம பொறுத்துப் பார்க்கலாம். எஸ்டேட்டைப் பார்த்திட்டு முடிவு செய்யலாம்” கருப்பன் அவசரமாகச் சொன்னான்.

# 18

இந்தியர்களின் நன்மைக்காக நாங்கள் இந்தியாவை வெற்றி கொள்ளவில்லை. இந்தியர்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்காகத்தான் இந்தியாவை வெற்றிகொண்டோம் என்று மிசனரி கூட்டங்களில் பேசப்படுவது எனக்குத் தெரிந்ததுதான். அது பொய். கிரேட் பிரிட்டனின் பொருட்களை விற்பனை செய்வதற்காகவே நாங்கள் இந்தியாவை வெற்றி கொண்டோம். வாள் முனையிலேயே நாங்கள் இந்தியாவை வெற்றி கொண்டோம். வாளைக் கொண்டேஅதை ஆளவும் செய்வோம்.

பிரிட்டனின் பால்டு அரசின் உள்துறை அமைச்சர்
பேசியதை மேற்கோள் காட்டியது லாலா லஜபதிராய்
- இன் அன்ஹேப்பி இந்தியா

திருவாளர் வொயிட்டுடனான சந்திப்புக்குப் பின்பு வீடு திரும்பிய டாக்டர் ஆபிரஹாம் மருத்துவமனையைச் சென்று பார்த்தார். அங்கிருந்த மெடிக்கல் கூலி அவரை எதிர்கொண்டான்.

“கம்பௌன்டர் எங்கே?” என்று ஆபிரஹாம் கேட்டார்.

அவர் டாக்டர் குரூப்பைப் பற்றி கேட்கிறார் என்று நினைத்துக் கொண்டு “அவர் குரங்குமலை எஸ்டேட்டுக்கு மாற்றப்பட்டு விட்டார்”என்று பதிலளித்தான்.

“அப்போ அந்த எடத்துக்கு இங்கே யார் வருகிறார்கள்?”

கூலி விழித்தான். டாக்டரி ஆபிரஹாம்தான் குரூப்பின் இடத்திற்கு வருவதாக அவனிடம் சொல்லப்பட்டு இருந்தது. சற்றுநேரம் விழித்துவிட்டு தயக்கத்துடன் “எனக்குத் தெரியாது ஐயா” என்றான்.

“மருந்து வைக்கும் அலமாரியோட சாவி யாருகிட்ட இருக்கு!”

“எங்கிட்ட ஐயா” என்றபடி கூலி அவற்றை எடுத்துக் கொடுக்க டாக்டர் அலமாரியைத் திறந்து உள்ளே பார்வையை ஓட்டினார்.

“இங்க ஒண்ணும் பெரிசா இல்லையே, வேற அலமாரி, ஸ்டோர் ஏதாவது இருக்கா?”

“இல்லை ஐயா.”

“ஆல்ரைட் சி.எம்.ஓ.கிட்டதான் பேசணும்” டாக்டர் தனக்குத் தானே கூறிக் கொண்டார்.

“அன்று இரவு ஜான்ஸனும், அப்பாவுவும் டாக்டரைப் பார்க்க வந்தனர்.

“உங்களுக்கு ஏதாவது தேவையான்னு கேட்க வந்தோம். இவருதான் ஹெட் பீல்டு ரைட்டர் அப்பாவு” என்ற ஜான்ஸன் அறிமுகப்படுத்தினான்.

“ஜி.எம். உங்களைப் பாத்து ஆஸ்பத்திரிக்கும் உங்க வீட்டுக்கும் என்னென்ன ரிப்பேர் செய்ய வேண்டியிருக்கும்னு உங்க அபிப்பிராயத்தக் கேட்க சொன்னார்” என்றார் அப்பாவு.

“தயவு செய்து உட்காருங்க, நீங்க வந்ததில எனக்கு ரொம்ப சந்தோசம், நிறைய விஷயங்களைப் பத்தி நான் தெரிந்து கொள்ள வேண்டுமென்று நினைக்கிறேன்.”

அவர்கள் உட்கார்ந்தவுடன் குரூப்பின் இடத்திற்குப் புதிதா யாராவது கம்பௌன்டர் நியமிக்கப்பட்டிருக்கிறாரா என்று டாக்டர் கேட்டார்.

“இல்லை” என்றான் ஜான்ஸன்.

“கம்பௌன்டர் இல்லாம ஒரு ஆஸ்பத்திரி எப்படி நடத்த முடியும்?”

“டாக்டர், இப்ப வரைக்கும் குரூப்தான் டாக்டர், கம்பௌன்டர். எனக்கு தெரிஞ்சவரைக்கும் ஆஸ்பத்திரிக்கு கம்பௌண்டரை நியமிக்கிற மாதிரி திட்டம் எதுவுமில்லை. இதப்பத்தியும், இது சம்பந்தமா வேற ஏதாவது வேண்டியிருந்தாலும் சி.எம்.ஓ.கிட்ட பேசறது நல்லது” என்றான் ஜான்ஸன்.

“இந்தக் கம்பெனியோட மூணு எஸ்டேட்டுக்கும் இதுதான ஒரே ஆஸ்பத்திரி. மொத்தமா எத்தனைபேர் இங்கே இருக்கிறார்கள்?”

“இந்த எஸ்டேட்டில அறுநூத்து அம்பது பேர். குரங்குமலையிலயும் கழுகுமலைலயும் ஐநூறு ஐநூறு பேர்.”

“கூலிகளில் பாதிப்பேர் பெண்கள் இல்லையா.”

“ஆமா.”

“அப்போ பிரசவம் பாக்கிறதுக்கு ஒரு மிட்வொய்ஃப்கூட இல்லாம எப்படி இருக்க முடியும்?”

“அப்படித்தான் டாக்டர் இதுவரைக்கும் இருக்கு. யாருமே இதப்பத்தியெல்லாம் கவலையே பட்டதில்ல. இப்ப நீங்க இங்க

வந்திருக்கீங்க. சி.எம்.ஓகிட்ட சொல்லுங்க. நீங்க அவசியம்னு நினைக்கிறது நடக்கும்னு நான் உறுதியா நம்புதேன்.”

“ஆயாகூட இல்லாம எப்படி இவ்வளவு நாள் சமாளிச்சாங்க?”

“பெரும்பாலான பிரசவம் லைன்லைதான் நடக்கும். யாராவது வயசான சொந்தக்காரங்க இல்ல தெரிஞ்சவங்க உதவிக்கு இருப்பாங்க. ஏதாவது பிரச்சினைன்னா ஆஸ்பத்திரிக்குத் தூக்கிட்டு வருவாங்க. குரூப் ஏதாவது செய்ய முடியுமான்னு பார்ப்பாரு. முடியலைன்னா ஏதாவது லாரியில ஏத்தி முடீஸ் ஆஸ்பத்திரிக்கு அனுப்பிடுவாக” என்றார் அப்பாவு.

“குரூப் ஒரு கம்பௌன்டர் கூட இல்ல. அவரு நோயாளிகளுக்கு மருந்து குடுத்திருக்காரு, பிரசவம் பாத்திருக்காரு. நல்ல இடந்தான் இது”என்றார் டாக்டர்.

“நீங்க வந்தது உண்மையிலேயே எங்களுக்கு சந்தோசம் டாக்டர். இனிமேலாவது நல்லபடியா ஆஸ்பத்திரி நடக்கும். சரியான மருத்துவ சிகிச்சை இல்லாம ஒருத்தரையாவது சாகக் கொடுக்காத ஒரு ஸ்டாஃப் குடும்பம் கூட இங்க இல்லை. எஸ்டேட்டில என்னோட குழந்தைங்க ரெண்டு செத்துப் போச்சு. போன வருசம் ஜான்ஸன் தம்பியோட குழந்தை தவறிப் போச்சு. கூலிகளைப் பொருத்தவரை குடும்பத்தில பாதிப் பேராவது செத்துப் போயிருப்பாங்க. சில சமயம் குடும்பம் முழுசுமே அழிஞ்சு போயிருக்கும்” அப்பாவு துயரம் தோய்ந்த குரலில் பேசிக் கொண்டே போனார்.

“பயங்கரமா இருக்கு. ஆனா இதில ஒண்ணும் ஆச்சர்யமில்ல. ஆஸ்பிட்டல்ல மருந்துன்னு ஏதோக் கொஞ்சம்தான் இருக்கு. ஒரு கருவி கூட இல்ல. ரெண்டே ரெண்டு வார்டுதான் இருக்கு. ரெண்டிலயும் கால் வைக்கவே முடியலை. அப்படி நாறுது, தினமும் கூட்டறதுக்குக் கூட யாரும் இல்ல. மெடிக்கல் கூலிதான் காவல்காரன். அவன்தான் சமையல்காரன். ஆனா இங்க சமைக்கறதேயில்ல. நோயாளிகளுக்கு அவங்க வீட்டில இருந்துதான் சாப்பாடு வருதுன்னு நினைக்கிறேன். அவுங்க கடலை, வறுத்த நிலக்கடலை எல்லாம் கொண்டு வந்து சாப்பிடுறாங்க. இந்த மாதிரி இடத்துக்கு வந்துட்டு எப்படி நோயாளிங்க உயிரோட வெளியே போறாங்கன்னுதான் ஆச்சர்யமாயிருக்கு” டாக்டர் நிஜமான கோபத்துடன் பேசினார்.

“இதுக்கு முன்னாடி நீங்க வேற ஏதாவது எஸ்டேட்டில இருந்திருக்கீங்களா டாக்டர்” டாக்டரின் கோபத்தைக் கண்டு அப்பாவு ஆச்சரியப்படுவது போல் தோன்றியது.

“இல்லை” எதிர்பார்த்த பதிலையே கூறினார் டாக்டர்.

“உங்களுக்கு எந்த ஊரு டாக்டர்?” ஜான்ஸன் கேட்டான்.

“வடக்கு திருவாங்கூரில் இருக்கிற திருவல்லா.”

“பள்ளிக்கூடம் எங்க படிச்சீங்க டாக்டர்?”

“படிச்சதெல்லாம் கோட்டயத்தில. அப்புறம் மெட்ராஸ்ல இருக்கிற மெடிக்கல் ஸ்கூல்ல” என்றார் ஆபிரஹாம்.

“அப்போ உங்களுக்கும், எஸ்டேட்டுக்கும் சம்பந்தமே கிடையாது. எஸ்டேட்டில இருக்கிற பழக்கவழக்கங்களை மொதல்லயே நாங்க சொல்லிடுதோம். இல்லாட்டி நீங்க எக்குத்தப்பா மாட்டிக்குவீங்க.” ஜான்ஸன் தொடங்கினான்.

“கண்டிப்பா இங்க நான் தெரிஞ்சுக்க வேண்டியது எல்லாத்தையும் சொல்லித் தந்தீங்கன்னா நான் ரொம்ப நன்றியுள்ளவனா இருப்பேன்.”

“டாக்டர் எஸ்டேட்டுக்குள்ள வர்ற படிச்சுப் பட்டம் வாங்கின மொதல் மனுசன் நீங்கதான். நாங்க படிப்பறிவில்லாத பாவப்பட்ட ஏழை சனங்க. கீழே யாரும் எங்களை வேலைக்கு வெச்சுக்க மாட்டாக. அதனால தான் எஸ்டேட்டுக்கு வந்தோம். வெள்ளைக்காரங்க எங்களுக்கும், கூலிகளுக்கும் கொஞ்சம்தான் வித்தியாசம் வெச்சிருக்காக. பணிஞ்சு போறதைத் தவிர எங்களுக்கு வேற வழி கிடையாது. மேனேஜருங்க முன்னாடி இந்தியாக்காரங்க செருப்பு போடவோ, குடை பிடிச்சிட்டு நிக்கவோ கூடாது. மழை பெஞ்சுட்டு இருந்தாக்கூட இப்படித்தான். நாம அவுங்களை “மாஸ்டர்”னுதான் கூப்பிடனும்” என்றார் அப்பாவு.

“அப்படியா...ம்ஹூம் இந்த எடம் எனக்கு ஒத்துவராது போலத் தெரியுதே. ஏதாவது பிரச்சினை வர்றதுக்கு முன்னாடி கிளம்பிடறது நல்லதுன்னு தோணுது. யாரையும் எசமான்னு கூப்பிடறதுக்கோ, மேனேஜர் முன்னாடி குடைய மடக்கறதுக்கோ நான் தயாரில்ல” ஆபிரஹாம் ஏறக்குறைய ஒரு முடிவுக்கு வந்துவிட்டது போல் தோன்றியது.

“டாக்டர், டாக்டர், அப்படி ஏதும் பண்ணிடாதீங்க. எங்களை நாதியில்லாதவங்களா உட்டுட்டு போகாதீங்க. நீங்க சி.எம்.ஓ.கிட்ட பேசினீங்கன்னா அவரு வொய்ட்கிட்ட பேசி உங்களுக்குத் திருப்தி ஆகிற மாதிரி எல்லாத்தையும் சரி பண்ணித் தந்திடுவாரு” ஜான்சன் பதறினான்.

“ஆல்ரைட், டாக்டர் பார்பர் என்ன சொல்றாருன்னு கேட்கிறேன்.

எனக்குத் திருப்தி ஆகிறமாதிரி எல்லாம் சரியாச்சுன்னா நான் இருப்பேன். இல்லாட்டி குட்பை டு த எஸ்டேட்ஸ்.”

தலைமை மருத்துவ அதிகாரி பார்பர் மருத்துவமனைக்கு வந்தபோது ஆபிரஹாம் மருத்துவமனையின் தேவைகள் குறித்து நீண்டநேரம் பேச்சுவார்த்தை நடத்தினார். பின்பு பார்பர் திருவாளர் வொய்ட்டை அவரது பங்களாவில் சென்று சந்தித்தார். தேநீர் அருந்திக் கொண்டிருக்கும்போது பேச்சு மருத்துவமனையையும், புதிய மருத்துவரையும் பற்றித் திரும்பியது.

“ஜார்ஜ், (ஜார்ஜ் என்பது வொய்ட்டின் பெயரின் முதல் பகுதி) ஆபிரஹாமை மத்த ஸ்டாஃப் மாதிரி நடத்தக் கூடாது. அவன் ஒரு படிச்ச டாக்டர் என்பது நினைவிருக்கட்டும்” என்றார் பார்பர்.

“என்ன உளர்றே டாம்”

“மாஸ்டர்னு கூப்பிடணும்னோ, உன்னைப் பார்த்தவுடனே தொப்பியைக் கழட்டணும்னு, குடையை மடக்கணும்னோ எதிர்பார்க்காதே. இன்னைக்கு நான் அவனைப் பார்த்தப்போ அவன் வேலையைவிட்டுப் போகத் தயாரா இருந்தான். இந்த மாஸ்டர்னு கூப்பிடறது, செருப்பைக் கழட்டறது இதெல்லாம் ஒத்து வராதுன்னு சொன்னான். நீங்க ஒரு படிச்ச டாக்டர்ங்கிறதால் இதெல்லாம் செய்ய வேண்டியதில்லை என்று நான் அவனுக்கு உறுதி குடுத்திருக்கிறேன்.”

“ஓ அப்படியா?” வொய்ட் கேலியாகக் கேட்டார்.

“நல்லாப் படித்தவன் வேண்டுமென்றால் உன் வழிகளைக் கொஞ்சம் மாற்றிக் கொள்ளத்தான் வேண்டும்.”

“ஆல்ரைட் டாம். முடிஞ்சவரைக்கும் பார்க்கிறேன். அந்தப் பயலை தூரத்தில பாத்தாலே நான் ஓடிப்போயிடறேன். நேர்ல பார்த்திட்டா பழக்க தோசத்தில என்ன செய்வனோ எனக்கே தெரியாது.”

“அப்ப அந்த விசயம் முடிஞ்சது. இனி ஆஸ்பத்திரியில மருந்து கலக்கிறதுக்கு ஒரு கம்பௌன்டரை நீ வேலைக்கு சேர்க்கணும்.”

“ஏய் டாம் நிறுத்து. அவன் மருந்து கலக்க முடியாத அளவுக்குப் பெரிய ஆளா? கொஞ்சம் படிச்சிட்டா இந்தியாக்காரப் பயலுக ரொம்ப பெரிய புடுங்கின்னு நினைச்சிக்கிறாங்க. ஏன் இப்பக்கூட நான் போயி செடி கத்தரிப்பேன். எலைய நானே எடை போடுவேன்.”

“காலம் மாறிப்போச்சு ஜார்ஜ். எந்தப் படிச்ச டாக்டரும் கம்பௌண்டர் வேலையப் பார்க்க மாட்டான்.”

“டாம், இந்த மாதிரி விசயமெல்லாம் நானே முடிவு பண்ண முடியாதுன்னு உனக்கே தெரியும். இயக்குநர் குழுவைக் கேட்கணும்.”

“நல்லது, அவுங்ககிட்டக் கலந்து பேசு. அத விட ஆஸ்பத்திரிய நடத்தறதுக்கு ஒரு நல்ல டாக்டர் வேணும். அதனால கம்பௌன்டரும் வேணும்னு தீர்மானமா சொல்லிடு. வேண்டுமென்றால் நானும் இதை எழுதிக் குடுக்கிறேன்.”

“இன்னும் என்னென்ன இருக்கு? முழுக்கதையும் கேக்கலாம் சொல்லு.”

“ஆஸ்பத்திரியக் கொஞ்சம் நல்லா நீ ஆக்கித் தரணும். எப்படி இருந்தாலும் அவனுக்கு கருவிகளும், மருந்துகளும் கொடுக்க வேண்டும் இல்லையா? அதெல்லாம் இல்லாம இங்க ஒரு டாக்டரை வெச்சு என்ன பிரயோசனம்? உன்னோட ஆஸ்பத்திரி ஒரு குதிரைக் கொட்டடின்னு தான் நான் சொல்லிட்டு இருந்தேன். ஆனா அங்க நீ ஒரு வார்டுபாயை உட்கார வெச்சிருக்கிற வரைக்கும் அதை மாத்த வேண்டிய அவசியம் இல்ல. இப்போ நல்ல கான்கிரீட் தரை போடணும். சுவரெல்லாம் பூசணும். அவன் குடியிருக்கிற வீட்டுக்கும் ஏதாவது செஞ்சாகணும். இப்படி இருக்கிறது ரொம்ப அவமானம்” டாக்டர் பார்பர் தீர்மானமாகப் பேசினார்.

“செலவு ரொம்ப அதிகமாகும் டாம்” என்றார் வொய்ட்.

“ஆகும்தான். ஆனால் என்றைக்காவது ஒருநாள் நீ ஒரு நிஜமான டாக்டரை வேலைக்கு வெச்சுதான் ஆகணும். அப்ப இந்த பிரச்சினையெல்லாம், வந்துதான் தீரும். வார்டுபாயை வெச்சிட்டு என்னென்னைக்கும் ஓட்ட முடியாது. தேயிலைத் தோட்டங்கள் ஒரு இருண்டு போன இடம், நரகம்னு பேப்பரில தினமும் கத்திக் கொண்டு இருக்கிறார்களே, நீ படித்ததில்லையா? காங்கிரஸ்காரப்பயலுக வரவர ரொம்ப மோசமாயிட்டாங்க. அந்தப் பயலுக தாங்களே ஆனைமலைக்கு வந்து எல்லாத்தையும் நேரடியாப் பார்க்கப் போறதாக்கூட ஒரு பேச்சு அடிபடுது. எப்படி இருந்தாலும் இந்த மாதிரி ஒரு வார்டு பாயை ஆயிரத்து ஐநூறு கூலிகள் இருக்கிற எடத்தில ஆஸ்பத்திரிக்குப் பொறுப்பா வைத்திருப்பது சரியில்லை.”

“என்னால முடிஞ்சிச்சின்னா காங்கிரஸ் பிச்சைக்காரப்பயலுக எல்லாத்தையும் பக்கத்தில இருக்கிற மரத்தில தூக்கில தொங்க விட்டிருப்பேன். இந்த காந்திப் பயலைப் பத்தி நம்ம சர்ச்சில் சொன்னது ஞாபகம் இருக்கா. “அரைநிர்வாண பக்கிரி”, குட் ஓல்ட் சர்ச்சில் தங்கமான மனுசன். அந்த மாதிரி ஒரு அஞ்சாறு பேர் இங்கிலாந்தில

இருந்தாப் போதும். இந்த இந்திய தேசிய காங்கிரஸே காணாமப் போய்விடும். இங்க அவனுக வருகின்ற விசயத்தைப் பொருத்தவரை நீ ஒண்ணும் கவலைப்பட வேண்டாம். நான் மரியாதைக்குரிய கவர்னர்கிட்டப் பேசி தடையுத்தரவு வாங்கி விடுகிறேன்.”

“எத்தனைக் காலம் தடையுத்தரவை வைத்துக் கொண்டு ஓட்ட முடியும் என்று நினைக்கிறாய்?”

“எவ்வளவு காலம் தேவையோ அவ்வளவு காலத்துக்கு.”

“பாரு ஜார்ஜ், உலகம் ஒரே இடத்தில் நின்று கொண்டு இருப்பதில்லை. அது மேலும் மேலும் முன்னேறிப் போய்க் கொண்டு தானிருக்கும். ஒரு நாடு முழுவதையும் எல்லாக் காலத்திற்கும் மிரட்டியே அடக்கியாள முடியாது. சர்ச்சிலைப் பத்திப்பேசினாய். சர்ச்சிலும், அவரைப் போலவே எண்ணங்கள் கொண்ட பலரும் இருக்கும்போதே நமது நாட்டில் தொழிலாளர் கட்சி தொழிலாளிக்காக எத்தனை சலுகைகளை அரசிடமிருந்து வென்றெடுத்து உள்ளது பார். நமது நாட்டில் உள்ள தொழிலாளிகள்தான், மற்ற நாடுகளில் உள்ள தொழிலாளிகளுக்கு உதாரணமாக இருக்கிறார்கள். இங்கேகூட தொழிலாளிகள் அணிதிரண்டு வருகிறார்கள். அவங்களுக்கு நல்ல திறமையான, தகுதி வாய்ந்த தலைவர்களும் இருக்கிறார்கள். வருங்காலத்தில், சீக்கிரத்தில் தொழிலாளர் நலத்திட்டங்கள் இங்கும் வந்துதான் ஆக வேண்டும். முன்னோக்கி ஓரடி எடுத்து வைக்க வேண்டிய காலம் இது” என்றார் பார்பர்.

“ப்பூ! இந்த பிளடி பாடிகளை பற்றி எனக்குக் கவலை இல்லை. ஒரு தொழிலிலும் வெற்றி அடையாத ஆட்கள்தான் தலைவர்கள் என்று அழைக்கப்படுகிறார்கள். அதனால்தான் அவர்கள் மற்றவர்களின் விவகாரங்களில் தலையிடுகிறார்கள். இந்த காந்திப் பயலையே எடுத்துக் கொள்வோம். அவன் ஒரு வக்கீலாக முயற்சி செய்து தோல்வி அடைந்தவன். அதனால் அரசியலுக்கு வந்துவிட்டான். பூ!”

“ஜார்ஜ், உன் மனதில் இருக்கிற தப்பெண்ணங்களினால் நீ குருடாக இருக்கிறாய். காங்கிரஸ் தலைவர்களில் மிகவும் திறமையான, மிகவும் படித்த பலர் இருக்கிறார்கள். வேறு வழியில்லாததினால் அரசியலுக்கு வந்தவர்கள் அல்ல அவர்கள். தங்கள் நாட்டின் விடுதலைக்குப் பணியாற்றுவது கடமை என்று கருதுவதாலேயே அவர்கள் அரசியலுக்கு வந்திருக்கிறார்கள்.”

“ப்பூ!” வொய்ட் அதை ஊதித் தள்ளினார்.

“பண்டிட் நேருவைப் பார் ஹேரோவிலும், கேம்பிரிட்ஜ்ஜிலும் படித்த பாரிஸ்டர். அவரால் பிரிட்டிஷ் பேரரசின் எந்த இடத்திலும் ஒரு மரியாதைக்குரிய பாரிஸ்டராகப் பணியாற்ற முடியும். அவரைப் போலவே மேலும் பலர் இருக்கிறார்கள்.”

“நீ எந்த பாரைப் பற்றி பேசுகிறாய்?” வொய்ட் கேட்டதும் அதுவரை இறுக்கமாகப் பேசிக் கொண்டிருந்த பார்பருக்கே சிரிப்பு வந்துவிட்டது.

“உன் புத்தி இப்படித்தான் ஜார்ஜ் வேலை செய்யுது. நான் சொல்வது பாரிஸ்டர் அட்லா. பாரும், லாவும் இல்லை. பாரிஸ்டராக வேலை செய்வதற்குத் தேவையான தகுதி அது.”

“அப்போ அவன் ஏன் அதைச் செய்யாமல் மற்றனைத்தையும் செய்து கொண்டிருக்கிறான்?”

“தன்னுடைய நாட்டின் விடுதலைக்குப் போராடுவது கடமை என்று நினைப்பதால்தான். ஜெர்மானியர்கள் ஒருவேளை நமது நாட்டை ஆக்கிரமித்திருந்தால் நீ அப்படி செய்ய மாட்டாயா ஜார்ஜ். நேருவுடைய அப்பா ஒரு ரொம்பப் பெரிய மரியாதைக்குரிய வக்கீல். ஏராளமான பணம் சேர்த்திருக்கிறார். நேருவும் அவருடைய அப்பா வழியில் போயிருக்கலாம். ஆனா மக்களுக்காகப் போராட வந்திருக்கிறார்.”

“ப்பூ! நீ ஒரு நல்ல டாக்டர் வேண்டுமென்று சொன்னாய். அப்படி ஒரு ஆளை நியமித்து விட்டேன். இப்போது ஒரு கம்பௌண்டர் வேண்டும் என்கிறாய்! மருத்துவமனையைப் புதுப்பிக்க வேண்டும் என்கிறாய்! எவ்வளவு பணம் வேண்டியிருக்கும்! இதெல்லாம் இந்த நாற்றம் பிடித்த இந்தியப் பிச்சைக்கார கும்பலுக்காக. ச்சீ!”

“காந்தியிடமோ, நேருவிடமோ இப்படி சொன்னால் நீ அவர்களது இரத்தத்தை உறிஞ்சிக் குடிப்பதால்தான் அவர்கள் நாறுகிறார்கள் என்பார்கள். ஜார்ஜ், மருத்துவமனை ஒரு சுத்தமான இடமாக இருக்க வேண்டும். உன்னிடம் ஒரு நல்ல மருத்துவமனை இருந்தால் அது நல்ல பெயரைத் தானே பெற்றுத்தரும். அது ஒரு நாளும் பணத்தை வீணடிப்பது ஆகாது” என்றார் டாக்டர் பார்பர்.

“ஆல்ரைட் டாம் இயக்குநர் குழுவில் பேச வேண்டும். என்னென்ன முடியுமோ அவற்றையெல்லாம் செய்கிறேன். ஆனால் எனக்குக் கொஞ்சம் கால அவகாசம் வேண்டும்.”

# 19

ஏய் நண்பா, நீ எல்லா வேலைகளையும்
நன்கு செய்தாய்; இன்று கண்ணீர் மல்க நிற்கிறாய்
ஒன்று செய். முடிந்தால் கண்டுபிடி...
யார் எசமானன்? யார் தொழிலாளி?
மை லேடீஸ் லேமென்டேஷன்

-ஸ்விஃப்ட்

கோவிந்தசாமிக்கு வாக்களித்தபடியே அடுத்த ஞாயிறு விடியற்காலையில் கருப்பன் வால்பாறைக்குச் சென்றான்.

“மொதல்லையே ஒரு தடவை நம்பள ஏமாத்தியிருக்கானுவ மாமா. அதனால புது ஆளுககிட்ட ரொம்ப ஜாக்கிரதையா இருக்கணும். எனக்கு அவனைப் பார்க்கப்போறது நல்லதா கெட்டதான்னே தெரியல” வள்ளிக்கு கருப்பனை அனுப்புவதற்கு விருப்பமேயில்லை. அவள் மனதிலிருந்த கவலை முகத்தில் அப்பட்டமாகத் தெரிந்தது.

“அவசரப்பட்டு எதையும் செய்ய மாட்டேன் வள்ளி. மொதல்ல எஸ்டேட்டைப் போயி பார்த்துட்டு நல்லா விசாரிச்சிட்டு அப்புறமா முடிவெடுக்கலாம்” என்றான் கருப்பன்.

“நேத்திலிருந்து மனசே சரியில்ல, ஒருவேளை இந்த கோவிந்தசாமி உன்னை ஏதாவது எஸ்டேட்டுக்குக் கூட்டிட்டுப்போயி பூட்டி வெச்சிட்டா, கழுகுமலை மாப்ளா மேஸ்திரி மாதிரி, எப்படி நீ திரும்பி வருவே?”

கருப்பன் பயந்துவிட்டான். “இதப்பத்தி நான் யோசிக்கவேயில்ல. நீ சொல்ற மாதிரி நடந்தாலும் நடக்கும். நான் ஜாக்கிரதையா இருந்துக்குதேன்.”

“அப்புறம் ஏன் போறே?” வள்ளி கேட்டாள்.

“ஒரு வேளை பணம் சம்பாதிக்க முடிஞ்சா வீட்டுக்கு போயிடலாம்ங்கிற ஆசையினாலதான். நான் நேராப் போயி எஸ்டேட்டைப் பாக்கலை வள்ளி. எஸ்டேட்டோட பேரை அவன்கிட்ட கேட்டுட்டு அப்புறம் வெசாரிச்சுப் பாக்கேன். நல்லபடியா இருந்தா, யாராவது சிநேகிதக்காரங்களைக் கூட்டிட்டு அந்த எஸ்டேட்டுக்குப் போய் பாக்கேன். எப்படி இருந்தாலும் உன்னக் கேக்காம எதுவும் செய்யவே

மாட்டன் புள்ள.”

“என்ன ஆனாலும் அவன்கூட எந்த எடத்துக்கும் போகமாட்டேன்னு சத்தியம் பண்ணு” வள்ளியின் கண்கள் நிறைந்திருந்தன.

கருப்பன் கடவுள்மீது சத்தியம் செய்து அவளை ஓரளவு அமைதிப்படுத்திய பின்பு மாலையாவதற்குள் வந்துவிடுவதாக இன்னொரு வாக்குறுதியும் கொடுத்துவிட்டு வால்பாறைக்குக் கிளம்பினான்.

அந்த மலைப்பாதையில் அவனைத் தவிர ஆள் நடமாட்டமே இல்லை. புத்துணர்வூட்டும் காலை வேளையும் தனிமையும் அவனுக்குள் சொந்த ஊரைப் பற்றிய நினைவுகளை தூண்டிவிட்டன. தனது சின்னஞ்சிறிய குடிசையையும், அப்பாவையும், அம்மாவையும், வேலைக்குப் போன நாட்களையும் ஒன்றாகக் கூடி மகிழ்ந்திருந்த நாட்களையும் நினைத்துக் கொண்டான்.“அம்மைதான் பாவம். மாசந்தோறும் பணம் அனுப்புதேன்னு வாக்குக் குடுத்தேன். வாரத்துக்கு நாலணாக்கு மேல கையில காசே வராதுன்னு அப்ப எப்படித் தெரியும். ஆனா நான் போட்ட மூணு கடுதாசியையும் பாத்து அம்மா நிலைமையை புரிஞ்சிட்டு இருப்பா. எந்த நாசமாப் போன நாளில அந்தத் தேவடியா மகன் சங்கரபாண்டியனை கயத்தாறுல பாத்தேனோ. இங்கன கெடந்து குளிரிலையும், நோயிலையும், மட்டமான சாப்பாட்டிலயும் கொஞ்சம் கொஞ்சமா சாகறதைவிட சொந்த ஊரில பட்டினி கிடந்தே செத்திருக்கலாம். ஊரு மண்ணிலயாவது புதைச்சிருப்பாக.”

கருப்பனுக்குள் கோபம் மூண்டெரியத் தொடங்கியது. இப்பவே எஸ்டேட்டுக்குத் திரும்பி போயி அந்த நாயப் பிடிச்சு சங்க கடிச்சு உயிரை எடுத்திடுதேன். என்னை அடிச்சுக் கொன்னாலும் சரி. எங்குடும்பத்த நாசமாக்கினவனப் பழிவாங்கினாப் போதும். அவன் இன்னும் உயிரோட இருந்து என்னமாதிரி இன்னும் நெறயாக் குடும்பங்களைக் கெடுக்க முடியாதில்லா.”

மாதக்கணக்கில் அடக்கி வைத்திருந்த கோபம் பீறிட்டு வெளிவர சங்கரபாண்டியனை ஒழித்து விடுவதென கணநேரத்தில் முடிவு செய்து தன்னையறியாமல் கருப்பன் எஸ்டேட் நோக்கித் திரும்பி ஒரு அடி வைத்தான். ஆனால் தோன்றிய வேகத்தில் ஆத்திரம் மறைந்து போனது. தான் அடித்துக் கொல்லப்பட்டால் ஓநாய்களுக்கு நடுவே தனியாக விடப்படும் வள்ளியின் நிலை என்னவாகும்? கோபமெல்லாம் வடிந்து போய் திரும்பவும் வழக்கமான தன்னிரக்கம் மனதில் நிறைந்து போக கருப்பனின் கால்கள் தாமாகத் திரும்பி வால்பாறை நோக்கி நடக்கத்

தொடங்கின.

பெரும்பாரமாக அழுத்திய துயரத்தை மறக்க சொந்த ஊரைப் பற்றிச் சிந்திக்கத் தொடங்கினான். தனது குடிசை இன்னும் நின்று கொண்டிருக்குமா அல்லது மழையாலும் கவனிப்பின்மையாலும் விழுந்து போயிருக்குமா? அம்மா என்ன செய்து கொண்டிருப்பாள்? மகள் வீட்டுக்கு வெளியே உட்கார்ந்து வெயில் காய்ந்து கொண்டும் பேத்தியுடன் விளையாடிக் கொண்டுமிருப்பாள். கிராமத்திலிருந்த தனது பழைய நண்பர்களையும் கருப்பன் நினைத்துக் கொண்டான்.

தனது அப்பா நாய்க்கரிடம் வேலை செய்த நாட்களும் தீபாவளிக் கொண்டாட்டத்திற்காக அவர் தங்களுக்கு துணிகளும், பணமும் கொடுத்ததும் கருப்பன் நினைவுக்கு வந்தது. இந்த எஸ்டேட்டில் இருக்கும் வெள்ளைக்காரத் துரைகளைவிட நாயக்கர்கள் எவ்வளவோ நல்லவர்கள்தான். அன்பானவர்கள்தான். இந்தப் பிச்சக்காரப் பயல் சங்கரபாண்டியன் தன்னை எப்படி ஏமாற்றிவிட்டான்!

தானும் வள்ளியும் ஒன்றாக இருப்பதில் மகிழ்ச்சி கொண்டு இணைந்து சந்தையில் கடை கடையாக அலைந்து திரிந்த இன்பமயமான நாட்கள்; முதல்முதலாக வள்ளியைத் தன் மனைவியாக்கிக் கொண்டு வீட்டுக்கு அழைத்து வந்த நாள்... அம்மா அன்று எத்தனை மகிழ்ச்சியுடனிருந்தாள். அந்தப் பாழாய்ப்போன பஞ்சம் வருகின்ற வரை எல்லோரும் ஒன்றாக எவ்வளவு சந்தோசமாயிருந்தோம். அந்தப் பஞ்சம் மட்டும் வராமலிருந்திருந்தால் தன் ஊரில் வேலை செய்து கொண்டிருப்பான். வள்ளியும் அம்மாவும் குடிசையில் சமைத்துக் கொண்டு தனக்காக மாலையில் காத்திருப்பார்கள். தனது சொந்த ஊரில் அம்மா மனைவிக்கு நடுவே இருப்பதாகக் கற்பனை செய்து கொண்டதும் அவனது இதழ்களில் நீண்ட நாட்களாகக் காணாமல் போயிருந்த புன்னகை அரும்பியது. தன்னை மறந்த நிலையில் விறுவிறுவென்று நடந்து கொண்டிருந்தவன் திடீரென்று தான் பக்கத்து எஸ்டேட்டுக்கு அருகில் வந்து விட்டதை உணர்ந்தான். அங்கு வேலை செய்யும் பலர் வால்பாறை நோக்கி நடந்து கொண்டிருந்தது தெரிந்தது. அவனுக்கு முன்னே இரண்டு பேர் தங்களுக்குள்ளே பேசிக் கொண்டே நடந்து கொண்டிருந்தனர். காலை நேர அமைதியில், கண்ணாடி போன்ற காற்றில் அவர்கள் பேசிக் கொண்டது அப்படியே கருப்பன் காதிலும் விழுந்தது.

“கருங்குண்டுல இருந்து உங்க சொந்தக்காரங்ககிட்ட இருந்து ஏதாவது செய்தி உண்டா?” ஒருவன் மற்றொருவனிடம் கேட்டான்.

“இதுவரைக்கும் இல்ல. அவங்க கண்டிப்பா ஓடித்தான் போயிருக்கணும். போற வழியிலேயே செத்துப் போயிட்டாங்களா இல்லை நல்லபடியா கீழே போய்ச் சேர்ந்தாங்களான்னு என்னால எதுவும் சொல்ல முடியல.”

“சவக்குழி மாதிரி இருக்கிற அந்த எடத்துல போய் எப்படிச் சேர்ந்தாங்க?” முதலாமவன் கேட்டான்.

“யாராவது ஏஜெண்டுகாரன்கிட்ட ஏமாந்திருப்பாங்க. ஊரில ரொம்பக் கஷ்டப்பட்டுட்டு இருந்தாக. நாங்க எஸ்டேட்டுக்கு வரும் போது அவக வர்றதா, வேண்டாமான்னு முடிவு பண்ணல. அதுக்கப்புறம்தான் வரலாம்னு முடிவு பண்ணினாங்க போலிருக்கு. கயத்தாறுல எஸ்டேட்டுக்கு கூட்டிட்டுப் போறேன்னு சொன்ன ஏஜெண்டை பாத்திருக்காக. ஒண்ணும் தெரியாத ஆளுகள இந்த ஏஜெண்டுக எப்படி ஏமாத்தறாங்க தெரியும்லா. இந்த ஆளுகளை நேரா கருங்குண்டுக்கு கூட்டிட்டுப் போயி அடைச்சு வெச்சிருப்பாக. மூணு மாசமா அவங்களப்பத்தி எந்தத் தகவலுமில்லை. அதுக்கப்புறம் அவங்கப்பாவுக்கு வந்த கடுதாசியில அவங்க கருங்குண்டுல வேலை செய்யறதாகவும், மலைக் காய்ச்சலால நிறைய பேர் சாகறதால தப்பிச்சு ஓடிப்போக முடிவு பண்ணியிருக்கிறதாகவும் எழுதியிருந்தது. கண்டிப்பா தப்பிச்சு போக முயற்சி பண்ணியிருப்பாக. இதுல நல்ல விசயம் என்னன்னா அவங்க யாருமே பொஞ்சாதிகளை கூடக் கூட்டிட்டுப் போகல.”

“அவங்க எஸ்டேட்டில இல்லைன்னு உன்கிட்ட யார் சொன்னா? அவங்கள அங்கேயே அடைச்சு வெச்சிருக்கலாமில்ல. எந்தக் கூலியும் கருங்குண்டுக்கு போக ஒத்துக்கிறதில்ல. அதனால அங்கன இருந்து ஒரு ஆள்கூட தப்பிச்சுப் போகாமப் பாத்துக்க மேஸ்திரிங்க என்னவெல்லாம் செய்ய முடியுமோ அதயெல்லாம் செய்வானுங்க.”

“ஆமா. அதுக்கும் வாய்ப்பிருக்கு. நானும் என்னோட சிநேகிதமாரோட அந்த எஸ்டேட்டுக்கு போயிருக்கேன். அங்கே தனியாப் போறது ஆபத்தானதுன்னு கேள்விப்பட்டதால நிறைய பேர்கிட்ட விசாரிச்சேன். அவங்கள நல்லாத் தெரிஞ்ச மூணு பேரைப் பார்த்தேன். அவங்க அந்த எஸ்டேட்டிலதான் வேலை செஞ்சாகன்னும், காய்ச்சல் காலம் உச்ச கட்டத்தில இருக்கும்போது எல்லாருமே காய்ச்சல் வந்து படுத்து கிடக்கும்போது அவுக திடீருன்னு காணாமப் போயிட்டாங்கன்னு சொன்னாக. எல்லா வாட்ச்மேன்களும், காய்ச்ச வந்து கிடந்ததினால வழக்கமா இருக்கிற கடுமையான கண்காணிப்பு இல்லியாம். அதனால அவுக தப்பிச்சிருப்பாக. நான் பாத்த ஆளுகெல்லாம் அவுக எஸ்டேட்டில

சாகலைன்னு மட்டும் உறுதியா சொன்னாக.”

“பொஞ்சாதிகளை கூடக் கூட்டிட்டு வராமப் போனது ரொம்ப நல்லதாப் போச்சு.”

“பொண்டுகளையும் கூடக் கூட்டிட்டு வாங்கின்னு ஏஜென்ட் முடிஞ்சவரைக்கும் சொல்லி பாத்தானாம். ஆனா அவுக அப்பா பிடிவாதமா ஒத்துக்க மறுத்திட்டாக. ஆம்பிளைங்க முதல்ல போங்க. ஆறு மாசம் கழிச்சு எல்லாம் நல்லா இருந்தா பொஞ்சாதிகளைக் கூட்டிட்டு போங்கன்னு உறுதியா சொல்லிட்டாக. நல்ல புத்தியுள்ள ஆளு.”

“இந்தக் கருங்குண்டு இருக்கே அது ஒரு சுடுகாடு மாதிரி. இப்ப அந்த எஸ்டேட்டோட பேரை மாத்திட்டாகளாம். மத்ததெல்லாம் அப்படியேதான் இருக்கு. இப்போ அந்த எஸ்டேட்டுக்கு கூலிகளே கிடைக்கறதில்லையாம். அதனால் முதலாளிக எஸ்டேட்டை மூடற நிலைமையில இருக்காங்கன்னு பேசிக்குதாக. கடைசி கடைசியா ஒரு முயற்சி பண்ணிப்பாக்குதாங்களாம். ஏஜெண்டுக பிடிக்கிற ஒவ்வொரு கூலிக்கும் நிறையப் பணம் தர்றதா சொல்லியிருக்காளாம். அதனால அந்த எஸ்டேட்டுக்கு எப்படியாவது ஆளுகளப் புடிச்சிடலாமுன்னு ஏஜென்டுக எல்லா வேலையும் செய்யுதாகளாம். மத்த எஸ்டேட் கூலிகள கடத்திட்டு கூட போறாகளாம்.”

பின்னால் நடந்தபடி அனைத்தையும் கேட்டுக் கொண்டே வந்து கொண்டிருந்த கருப்பனுக்கு கடைசி வாக்கியத்தைக் கேட்டதும் தூக்கி வாரிப்போட்டது. திடீரென்று புலன்கள் சுறுசுறுப்படைய மிகுந்த கவனத்துடன் அவர்கள் பேசுவதைக் கேட்கத் தொடங்கினான். “ஆமா நானும் கேள்விப்பட்டேன். வால்பாறையில கொஞ்சம் ஏஜென்டுக நிறையா சம்பளம் வாங்கித்தரேன்னு சொல்லி கூலிகளப் பிடிக்கிறாங் களாமாம். ஆனா எஸ்டேட் பேரை மட்டும் சொல்ல மாட்டாக.” முன்னால் போய்க் கொண்டிருந்த இருவரில் ஒருவன் சொன்னான். கருப்பனுக்கு ஆர்வம் எல்லை கடந்து போனது. ஓடிச்சென்று அவர்களோடு சேர்ந்து கொண்டான். “எந்த எஸ்டேட்டைப் பத்தி பேசிட்டிருக்கீக அண்ணாச்சி?”

“கருங்குண்டைப் பத்திதான்” அவர்களில் ஒருவன் “நீ எந்த எஸ்டேட்டிலிருந்து வார.”

“குமரிமலை” கருப்பன் பதிலளித்தான்.

“ஓ பக்கத்து எடந்தான். நாங்க வேலிமலை எஸ்டேட். எத்தனை

வருஷமா நீ குமரிமலையில இருக்கே.”

“எஸ்டேட்டில எனக்கு இது மூணாவது வருஷம்ணே.”

“குமரிமலை நல்ல எஸ்டேட். கொளுந்து கிள்ளறவங்களுக்கு நல்ல சம்பளம் கிடைக்கும்லா.”

“காய்ச்ச வரலேன்னா நீங்க சொல்றது சரிண்ணே. ஆனா எப்படியும் காய்ச்ச வந்திருதே. நாங்க மூணு வருசமா இருக்கோம். இன்னமும் வீட்டுக்குப் போற அளவுக்கு பணம் சேர்க்க முடியலை. இந்த வருசம் எம் பொஞ்சாதி ரொம்ப உடம்புக்கு முடியாம இருக்கா.”

“குமரிமலை எஸ்டேட் நல்ல எஸ்டேட்டுன்னு நான் சொன்னது, மத்த எஸ்டேட்டை விட நல்ல எஸ்டேட்டுன்னுதான். குமரிமலைலயும் நோய் வருதுதான். ஆனா கருங்குண்டு, கல்யாணப்பந்தல் எஸ்டேட்டுகளிலும், மத்த எஸ்டேட்டுகளிலும் அது ரொம்ப அதிகம். சரி நீ எந்தூருலே தம்பி?” என்று அவர்களில் தன்னை மாயாண்டி என்று அழைத்துக் கொண்டவன் கேட்டான்.

கருப்பன் தன் ஊர் பெயரைச் சொன்னவுடன் மாயாண்டி மகிழ்ந்து போனான். “நான் வீரம்பட்டிலே, கயத்தாறுக்கு வடக்கால அஞ்சு மைல்.”

“அப்ப எங்க ஊருக்கும், உங்க ஊருக்கும் மூணு மைல் தூரந்தாண்ணே!”

“உன்னப் பாத்ததிலே ரொம்ப சந்தோசம்லே. ஒருநாள் எங்க லைனுக்கு வர்றியா. பக்கத்து ஊர்க்காறவக ஒருத்தரையொருத்தர் நல்லாப் பழகி வெச்சிக்கணும்லா. நாங்க ரெண்டு பேரும் அதே ஊருதான். கண்டிப்பா நாங்களும் உங்க லைனுக்கு வாரோம்” என்றான் மாயாண்டி.

அவர்கள் தங்கள் கிராமங்களைப் பற்றியும், கயத்தாறைப் பற்றியும், எஸ்டேட்டுகளைப் பற்றியும் பேசிக் கொண்டே நடந்ததில், நடந்த களைப்பே தெரியவில்லை. வால்பாறையை நெருங்கும்போது நீண்ட காலமாக ஒருவரை ஒருவர் அறிந்திருந்தது போன்ற உணர்ச்சி மூவருக்குமே ஏற்பட்டுவிட்டது. மாயாண்டியும் அவன் நண்பனும் இந்த மாத இறுதிக்குள் கருப்பனை வந்து பார்ப்பதாக உறுதி கூறிவிட்டு சாமான் வாங்குவதற்காகப் பிரிந்து சென்றனர்.

கருப்பன் தனியாக நின்று கோவிந்தசாமியை பார்ப்பதா அல்லது எஸ்டேட்டுக்குத் திரும்புவதா என்று தனக்குள்ளேயே விவாதித்துக் கொண்டிருந்தான். மாயாண்டியிடம் பேசிய பிறகு ஏஜென்டின் மீதான சந்தேகம் மிகவும் அதிகரித்திருந்தது. அதே நேரத்தில் கொஞ்சம் பணம் சம்பாதிக்கும் ஆசையும் உந்தித் தள்ளியது. வள்ளியின் உடல் நாளுக்கு

நாள் மோசமடைந்து வருகிறது. அவளை எப்படியாவது கீழே கூட்டிச் சென்று விட்டால் கண்டிப்பாக குணமடைந்து விடுவாள் என்று கருப்பன் உறுதியாக நம்பினான்.

அந்த விநாடியில் கருப்பன் விரக்தியின் உச்சத்திற்குச் சென்று ஒரு முடிவெடுத்தான். கோவிந்தசாமி அவனைக் கருங்குண்டுக்கே அழைத்துச் செல்வதாக இருந்தாலும் சரி வள்ளியைக் கீழே அழைத்துச் செல்ல அதற்கு முன்பு பணம் கிடைத்தால் போதும். ஒப்புக் கொள்ளலாம் என்று முடிவு செய்தான். “நான் கருங்குண்டுல செத்தாலும் பரவாயில்ல. வள்ளியாவது ஊட்டுக்குப் போயி அப்பா அம்மாகூட சந்தோசமா இருக்கட்டும். இந்தப் பாழாப்போன எடத்துக்கு அவளைக் கூட்டிட்டு வந்தது நான்தான். பெரிய பாவம் பண்ணிட்டேன். அத நான்தான் சரிபண்ணனும். வள்ளியை வீட்டுக்குக் கூட்டிட்டு போக முதல்ல பணம் குடுத்தாப் போதும். கருங்குண்டு எஸ்டேட்டுக்குக் கூட வரத் தயாரா இருக்கேன்னு கோவிந்த சாமிகிட்ட சொல்லிடலாம்” என்று நினைத்துக் கொண்டான். அதே நேரம் வள்ளிக்குக் கொடுத்த வாக்கும் நினைவுக்கு வந்து மனதை அலைக் கழித்தது.

நீண்ட நேர மனப் போராட்டத்திற்குப் பிறகு கோவிந்தசாமியிடம் சம்பந்தப்பட்டது கருங்குண்டு எஸ்டேட்டா என்று நேரடியாகக் கேட்டு விடுவது என்றும், மற்றவற்றைப் பின்பு பார்த்துக் கொள்ளலாம் என்றும் முடிவு செய்தான். ஒரு தீர்மானத்தை எட்டியவுடன் விரைவாக நடந்து கோவிந்தசாமியை முன்பு சந்தித்த இடத்திற்குச் சென்றபோது அவன் ஏற்கெனவே அங்கு வந்து தனக்காகக் காத்துக் கொண்டிருப்பதைக் கண்டான். கருப்பன் நேரடியாக அவன் கண்களை பார்த்துக் கேட்டான். “என்னை நீங்க கூட்டிட்டு போறேன்னு சொன்ன இடம் கருங்குண்டா.”

“யார் சொன்னது?” ஏஜென்ட் திடுக்கிட்டு கேட்டான்.

“யார் சொன்னா என்னா? எஸ்டேட் பேரச் சொல்லுங்க. நான் நல்லா விசாரிச்சு அடுத்த வாரம் பதில் சொல்லுதேன்.”

“வாலே டீ கடைக்குப் போய் டீ குடிச்சிட்டே பேசுவோம். நமக்கு வேண்டியவ கடைதான். அங்க ஒரு துண்டு சீட்டு வாங்கி எந்த எஸ்டேட், எவ்வளோ சம்பளம் எல்லாத்தையும் எழுதிக் கொடுக்கிறேன். அப்புறமா பொஞ்சாதிகிட்டையும் வேற யார்கிட்ட வேணுமின்னாலும் பேசிட்டு அடுத்த வாரம் ஓம்முடிவச் சொல்லு. இதுக்கு மேல என்ன சொல்லணும்?” கோவிந்தசாமி தேனொழுகப் பேசினான்.கருப்பன் ஒப்புக் கொண்டான். ஒரு டீக் கடையை அடைந்ததும் கோவிந்தசாமி அவனை உள்ளே அழைத்தான். “வா டீ குடிக்கலாம்.”

“இல்ல எனக்கு டீ வேண்டாம்.”

“சரி பரவால. ஆனா ஏன் வெளிய நிக்கே? எழுதற வரைக்கும் உள்ள வந்து உக்காருலே!”

ஏதோ உள்ளுணர்வு தடுக்க கருப்பன் மறுத்துவிட்டான். “இல்லண்ணே வெளியவே நிக்ககேன்.”

“சரி ஒரு நிமிசத்தில வாறேன்” என்று சொல்லிவிட்டு ஏஜென்ட் உள்ளே மறைந்தான். சுமார் கால்மணி நேரம் ஆன பிறகும் கோவிந்தசாமி வருவதற்கான அறிகுறியே காணப்படவில்லை. சலித்துப் போய் திரும்ப எத்தனித்தபோது கோவிந்தசாமி பாய்ந்து வெளியே வந்து கருப்பனின் கையைப் பிடித்துக் கொண்டு கூச்சலிட்டான்.

“திருட்டுப் பயலே, கழுதைக்குப் பொறந்தவனே, கடைசியா மாட்டிக்கிட்டயா! மூணு வாரமா உன்னைத் தேடிட்டு இருக்கேன். இப்ப இங்கன நிக்க. நான் அட்வான்சக் குடுத்த பணத்தைக் குடுலே.”

கருப்பன் ஒரு வினாடி ஆடிப்போய் வாயடைத்து நின்றுவிட்டான். “என்ன சொல்லுத உனக்கென்ன பைத்தியமா? நான் எப்ப உங்கிட்ட பணம் வாங்கினேன்? போன ஞாயித்துக் கிழமைதானே உன்ன மொதத் தடவையாப் பார்த்தேன். என்னை விடு” பின்பு சமாளித்துக்கொண்டு பதிலுக்குக் கூச்சலிட்டபடி திமிறினான்.

ஆனால் கோவிந்தசாமியின் பிடி இரும்புப் பிடியாகவிருந்தது.

“திருட்டு நாயே என்னைத் தெரியாத மாதிரியா நடிக்கிறே கஷ்டப்பட்டுச் சம்பாதிச்ச பணம்தை வாயில போட்டுட்டு இல்லைன்னா சொல்லுதே?”

டீக்கடைக்குள்ளிருந்து இன்னும் இரண்டுபேர் ஓடிவந்து கருப்பனைப் பிடித்துக் கொண்டார்கள்.அவர்களில் ஒருவன் கருப்பனை ‘சுப்பன்’என்ற பேர் சொல்லி விளித்தான். “கோவிந்தசாமி மேஸ்திரியத் தெரியாதுன்னு பாசாங்கு பண்ணி ஒரு பிரயோனசமும் இல்ல. எங்களையும்கூட தெரியாதுன்னு இப்ப சொல்லுவியே.”

“ஐயோ நான் சுப்பன் இல்லண்ணே, எம்பேரு கருப்பன். நீங்க ஏதோ தப்புப் பண்ணுதீக. நான் குமரிமலை எஸ்டேட்டில கூலி. என்னை விட்டுடுங்க” என்று கருப்பன் தன்னை விடுவித்துக் கொள்ள முயன்றபடி கெஞ்சினான்.

“ஓஹோ, குமரிமலை எஸ்டேட்டில பதிவு பண்ணிட்டியால அங்கன எத்தனை பணம்லே வாங்கினே?” கோவிந்தசமி கருப்பனின் தோள் பட்டைகளைப் பற்றி முரட்டுத்தனமாக உலுக்கினான். “பேரை உன்

இஷ்டத்துக்கு மாத்தி வெச்சுக்கிடலாம். ஆனா கருங்குண்டு எஸ்டேட்டுக்கு கோவிந்தசாமி மேஸ்திரி கூட வந்ததும், அங்க சுப்புன்னு பேரு பதிவு செஞ்சது பொய்யாவா போவும்?" கருப்பனைப் பிடித்துக் கொண்டிருந்தவர்களில் ஒருவனும் உரத்துப் பேசி கருப்பனின் குரலை அமுக்க முயன்றான்.

இதற்குள் அங்கே ஒரு சிறிய கூட்டம் கூடி, சில ஆட்கள் சுற்றி நின்று நடப்பதை வேடிக்கை பார்க்கத் தொடங்கினார்கள். என்னதான் தயாரிப்போடு வந்திருந்தாலும் கருங்குண்டு என்ற பெயரைக் கேட்டதுமே கருப்பனின் அடிவயிறு கலங்கிப் போய்விட்டது. நாக்கு மேலண்ணத்தில் ஒட்டிக் கொள்ள வாயிலிருந்து ஒரு வார்த்தையும் வரவில்லை. நிமிடத்திற்கு நிமிடம் பெருகி வந்த கூட்டத்தைப் பார்த்து கோவிந்தசாமி பேசத்தொடங்கினான்.

"நீங்களே ஒரு நியாயம் சொல்லுங்கய்யா. இந்தப் பயலை முப்பத்தைந்து ரூபா அட்வான்ஸ் குடுத்து ராஜபாளையத்திலிருந்து கருங்குண்டு எஸ்டேட்டுக்குக் கூட்டிட்டு வந்து பதிவு பண்ணி வெச்சேன். அங்க இவன் ரெண்டு வாரம் வேல செஞ்சான். ஆனா மூணு வாரத்துக்கு முன்னாடி திடீர்னு காணாமப் போயிட்டான். அப்போதிலிருந்து இவனைத் தேடிட்டுத்தான் இருக்கேன். இப்பதான் இங்கே ஏதேச்சையா பாத்தேன். என்னைத் தெரியாதமாதிரி நடிக்கான்."

கருப்பனின் கண்களில் தாரை தாரையாகக் கண்ணீர் வழிந்தது. எதையுமே யோசிக்க முடியாமல் சர்வாங்கமுமே பதறித் துடித்துக் கொண்டிருந்தாலும், இப்போது பேசாவிட்டால் தொலைந்தோம் என்று உள்ளுணர்வு சொல்ல பெருமுயற்சி செய்து வாயைத் திறந்தான். "ஐயா இல்லீங்க. நான் குமரிமலை எஸ்டேட்டில பதிவு பண்ணின கூலி. போனவாரம் எம் பொஞ்சாதிக்கு பழைய துணி வாங்க வால்பாறைக்கு வந்தப்பத்தான் இந்த ஆளை ஒரு கடைக்கு முன்னால மொத தடவையாப் பாத்தேன்." பின்பு அப்போது நடந்தவற்றை விலாவாரியாக விளக்கிவிட்டு கருப்பன் தொடர்ந்தான். "இன்னைக்கு எந்த எஸ்டேட்டுக்கு என்னைக் கூப்பிடுறார்ன்னு தெரிஞ்சிக்கத்தான் வந்தேன். எஸ்டேட் பேரை ஒரு காகிதத்துல எழுதித் தர்றேன்னு இங்க கூட்டிட்டு வந்தாரு. இப்பத் திடீர்னு ரெண்டு பேரக் கூட்டிட்டு வந்து வாங்கின அட்வான்ஸை திருப்பிக் குடுங்கிறாரு. கடவுளுக்குப் பொதுவா சொல்லுதேன். இந்த ஆளை போன ஞாயித்துகிழமைதான் பார்த்தேன். இவர்கிட்ட எந்த பணமும் நான் வாங்கலய்யா."

"இந்தப் பயல நம்பாதீங்க" பிடித்துக் கொண்டிருந்தவர்களில் ஒருவன்

சொன்னான். “நாங்க மூணு பேருமே கருங்குண்டுல கோவிந்தசாமி மேஸ்திரி கேங்கில உள்ளவங்கதான். இந்தப் பயலோட நிஜப்பேரு சுப்பன். இவன் எஸ்டேட்டை விட்டு ஓடிப் போயி மூணு வாரம் ஆவுது.”

கருப்பன் செய்வதறியாது திகைத்துப் போய் கோவிந்தசாமியின் கால்களில் நெடுஞ்சாண் கிடையாக விழுந்தான். “அண்ணே, ஆண்டவனுக்கு பொதுவா இந்த மாதிரி அநியாயம் பண்ணாதீங்க. நான் கருங்குண்டுல பதிவு பண்ணவேயில்லைன்னு உங்களுக்கு நல்லாவே தெரியும். நான் உங்ககிட்ட பணமே வாங்கல அதுவும் உமக்கு தெரியும். என்மேலயும், எம்பொஞ்சாதி மேலயும் கொஞ்சம் இரக்கம் காட்டுங்கண்ணே. என்னை விட்டுருங்கண்ணே!”

“சரிலே, எங்கிட்ட வாங்கின அட்வான்ஸ் பணம் முப்பத்தஞ்சு ரூபாய மட்டும் திருப்பிக் குடுத்திரு. நான் விட்டுடுதேன். முப்பத்தஞ்சு ரூபாயை விட்டுக் குடுக்கிற அளவுக்கு நான் பெரிய பணக்காரன் இல்ல”கோவிந்தசாமியின் முகத்தில் இரக்கத்திற்கான எந்த அறிகுறியையும் காண முடியவில்லை.

“நா உங்களுக்கு எந்த பணமும் குடுக்க வேண்டியதில்லையே. நான் என்ன பாவண்ணே பண்ணினேன்?. எனக்கு ஏன் இப்படி ஒரு கொடும பண்ணுதீக.” கருப்பன் புலம்பினான். “நாடகம் நடிச்சது போதும்லே” கோவிந்தசாமி கூட்டத்தைப் பார்த்துவிட்டு அவசரப்படுத்தினான். “எங்கூட எஸ்டேட்டுக்கு வா. நம்ம பெரிய தொரையப் பாக்கலம். நீ அங்கன பதிவு பண்ணினவனா இல்லையான்னு அவரே முடிவு பண்ணுவாரு.”

“இது நியாயமான பேச்சு” கூட்டத்திலிருந்த யாரோ ஒருவன் சொன்னான். உற்சாகமடைந்த மேஸ்திரியின் ஆட்கள் ‘சரி வா’ என்று கருப்பனை இழுத்துச் செல்ல தொடங்கினார்கள். கருப்பன் திமிறித் தரையில் விழுந்து கண்ணீர் விட்டுக் கதறினான். “என்ன இங்கேயே கொன்னு போடுங்க. நா கருங்குண்டு கூலி இல்ல. நான் அங்க வரமாட்டேன்.”

“இவன் உங்க கூட்டத்திலிருந்து ஓடி போனவன்னா ஏன் போலீஸ் ஸ்டேசனுக்கு கூட்டிட்டுப் போயி கேஸ் கொடுக்கக்கூடாது?” கூட்டத்திலிருந்த ஒருவனுக்கு ஏதோ சந்தேகம் வரத் தொடங்கியது போல் தோன்றியது.

“இவங்க ரெண்டு பேரும் சொல்லியுமா என்ன நம்பலை”கோவிந்தசாமி கேட்டான்.

“அவுங்க ஒன்னோட ஆளுங்க. அடியாளுகளாக் கூட இருக்கலாம். இவுங்க சொல்றதை எப்படி நாங்க நம்பறது?” அதே ஆள் பதிலளித்தான். கூட்டத்தில் சிலர் தன் மீது அனுதாபம் கொண்டிருந்ததைப் பார்த்து கருப்பன் நம்பிக்கை வரப்பெற்று அழுகையும் புலம்பலுமாகப் பேசத் தொடங்கினான். “என்னக் கருங்குண்டுக்குக் கொண்டு போறதுக்கு பதிலா நான் வேலை செய்யற குமரிமலை எஸ்டேட்டுக்கு கூட்டிட்டு போகச் சொல்லுங்க. நீங்க யாராவது பெரிய மனுசங்க எம்மேல இரக்கம் காட்டி கூட வந்தா நான் சங்கரபாண்டியன் மேஸ்திரிகிட்டயும், பெரிய காட்டு ஐயாகிட்டயும் கூட்டிட்டு போறேன். நான் மூணு வருசமா அங்கதான் வேலை செஞ்சிட்டு இருக்கேன். உண்மையா, பொய்யான்னு அங்க கேட்டுத் தெரிஞ்சுக்கிங்க.”

“இந்த ஆள் சொல்றது சரிதான். கருங்குண்டு தொரைகிட்ட கூட்டிட்டுப் போறதுக்கு பதில் குமரிமலை தொரைகிட்ட கூட்டிட்டுப் போங்க” கூட்டத்திலிருந்து இன்னொருவன் கூறினான்.

“சரி வா, குமரிமலை பெரிய துரைகிட்டயே போலாம். பயல விட்டுராதீங்க. கண்ணை மூடித் திறக்கறதுக்குள்ள ஓடிருவான்.”

“ஐயா இவுங்க என்னையக் கொண்டு போக விட்டுடாதீங்க. கருங்குண்டுக்குக் கொண்டு போயிடுவாங்க” கருப்பன் திரும்பவும் கண்ணீர் வடித்தான். ஒரு வயதானவர் முன்னால் வந்தார்.

“இந்த ஆள் சொல்றது சரி. கருங்குண்டுக்கு ஒரு ஆளும் போகமாட்டான்னு எங்களுக்குத் தெரியும். கூலிகளை ஏமாத்தியும், பலவந்தமாகவும் கருங்குண்டுக்குக் கொண்டு போயிடறாங்கன்னு நானும் கேள்விப்பட்டிருக்கேன். அதனால நாம எல்லாரும், இந்த ஆளையும் கூட்டிட்டு போலீஸ் ஸ்டேசனுக்கு போகலாம். அவன் பாத்துக்கட்டும்.”

கோவிந்தசாமி ஒரு நிமிடம் யோசிப்பது போல் தோன்றியது, “ஐயா, நீங்க சொல்லுத மாதிரியே நானும் சந்தோசமா செய்வேன். ஆனா உங்களுக்கே தெரியும். போலீசுக்குப் போயிட்டா கொஞ்சம் பணமும் கூடச் சேர்ந்து போயிரும். அதுக்கு பதிலா உங்கள்ல கொஞ்சம் பேரு எங்களோட கருங்குண்டுக்கு வாங்க. நேராப் பெரிய தொரையப் போய் பாக்கலாம். நீங்களே இவன் எஸ்டேட்டுல பதிவு பண்ணினவனா இல்லையான்னு தெரிஞ்சுக்குவீங்க”

“முடியாது” அந்த பெரியவர் உறுதியாக மறுத்தார்.

“உங்க தொரைக்கு எஸ்டேட்டில இருக்கிற ஒவ்வொரு கூலியையும்

அடையாளம் தெரியாது. சுப்பன்னு யாராவது அங்க வேலை பாத்திட்டு இருந்து ஓடிப் போயிருக்கலாம். ஆனா அதுனால இவன்தான் அந்த சுப்பன்னு முடிவு கட்ட முடியாது.”

“அது சரிதான்” என்று கூட்டம் கூச்சலிட்டது.

திடீரென்று கூட்டத்திற்குப் பின்னிருந்து ஒரு சலசலப்பு எழுந்தது. மாயாண்டி பெருங்குரலெடுத்து கத்தியபடி கூட்டத்தை விலக்கிக் கொண்டு முன்னால் வந்தான். “எனக்கு இவனைத் தெரியும். இவன் குமரிமலை எஸ்டேட் கூலி.” மாயாண்டியைப் பார்த்ததும் கருப்பன் தன்னை விடுவித்துக் கொண்டு ஓடிச்சென்று அவன் காலைக் கட்டிக் கொண்டான்.

“என்னைக் காப்பாத்துங்கண்ணே, இந்தப் பாவிக என்னைக் கருங் குண்டுக்கு கொண்டுப் போக பாக்குதாங்க.”

“பயப்படாதே” என்றான் மாயாண்டி. “அப்படி ஒன்ன கடத்திட்டு போயிருவாங்களான்னு பாக்கலாம்” என்று கூறிவிட்டு கோவிந்தசாமியை நோக்கி நேரடியாகக் கைநீட்டி சொன்னான்.

“இவன்தான் கூலிகள கருங்குண்டுக்கு பலவந்தமாகக் கடத்திட்டு போறவன்னு நான் நெனக்கேன்.”

கூட்டத்தில் பெரிய சலசலப்பு எழுந்தது. திரும்பவும் கருப்பனைப் பிடித்துக் கொண்ட இரண்டு கூலிகளும் காற்று தங்களுக்கு எதிராக அடிப்பதைப் புரிந்து கொண்டு மெல்ல நழுவி மறைந்து போயினர். கூட்டம் தனக்கு எதிராக இருப்பதைக் கண்ட கோவிந்தசாமி தனக்குத் தானே ஏற்படுத்திக் கொண்ட நெருக்கடியிலிருந்து எப்படித் தப்பிப்பது என்று தீவிரமாக சிந்திக்கத் தொடங்கினான். பின்பு மெல்ல வாயைத் திறந்தான்.

“நீங்க பெரியவுக, இவன் சொல்றத நம்புற மாதிரி தெரியுது. நான் சொல்வது நிசம்னு கடவுளுக்குதான் தெரியும். நான் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போயி ஒரு போலீஸ்காரனை கூட்டிட்டு வாரேன். அவன் என்ன சொல்லுதான்னு பார்க்கலாம்.”

“அது சரி” கூட்டம் ஒப்புக் கொண்டது.

“அஞ்சு நிமிசத்தில வந்திடுதேன். அதுவரைக்கும் சுப்பன் ஓடிப் போகாம பாத்துகிறீயளா?” என்றான் கோவிந்தசாமி.

“அது எங்க பொறுப்பு” என்றார் அந்தப் பெரியவர். பின்பு மாயாண்டியிடம் திரும்பி “உனக்கு நல்லாத் தெரியுமா இவன்

குமரிமலை எஸ்டேட் கூலின்னு?” என்று கேட்டார்.

“நிச்சயமாத் தெரியும்” மாயாண்டி அழுத்தமாகச் சொன்னான். அதிகம் பேசாத அவன் நண்பனும் “இன்னைக்குக் காலைலதான் இவன் எங்களோட குமரிமலை எஸ்டேட்டிலிருந்து வால்பாறை வந்தான்”என்று அடித்துக் கூறினான்.

“சரி, போலீஸ் வரட்டும் பாக்கலாம்” என்றார் பெரியவர்.

போலீஸே வந்தாலும் கருப்பனை கருங்குண்டுக்குக் கொண்டு போக விடக்கூடாது. மொதல்ல குமரிமலை போயி சங்கரபாண்டியன் மேஸ்திரியத்தான் பாக்கணும். உண்மை தெரிஞ்சிரும். தேவைப்பட்டா பெரிய ஐயாவையும் பாக்கலாம்” என்றான் மாயாண்டி.

ஐந்து நிமிடங்கள் கடந்தன. பத்து, பதினைந்து என்று நேரம் ஓடிக் கொண்டே இருந்தது. கோவிந்தசாமி வருவதற்கான சுவடே தெரியவில்லை. “போலீஸுக்கு பணம் குடுதிட்டு இருக்கானோ என்னவோ, கொஞ்சம் பேரு போலீஸ் ஸ்டேசன் போயி என்ன நடக்குதுன்னு பாத்துட்டு வாங்க” என்றார் அந்தப் பெரியவர். மாயாண்டியின் நண்பனின் தலைமையில் ஒரு ஆறுபேர் காவல் நிலையம் சென்றனர்.

“கருப்பனைப் பிடித்துக் கொண்டிருந்த மற்ற இரண்டு பேரும் எங்கே?” என்றார் அவர். அவர்கள் பக்கத்தில் எங்கும் தென்படவில்லை. இதற்குள் காவல் நிலையம் போனவர்கள் திரும்பி வந்து விட்டனர். கோவிந்தசாமி காவல் நிலையத்தில் இல்லை என்றும் விசாரித்தபோது அவன் அந்தப்பக்கம் வரவே இல்லை என்று தெரிந்தது என்றும் சொன்னார்கள்.

“இப்ப அந்தப் பய ஆள்கடத்தல்காரன்தான்னு தெரிஞ்சுபோச்சு. நாம இங்கே இல்லாமல் போயிருந்தா இந்தப் பாவப்பட்ட மனுசன கருங்குண்டுக்கு கொண்டு போயிருப்பாங்க.”

“யாராவது அவன்கூட போலீஸ் ஸ்டேசன் போயிருக்கணும் நம்மள ஏமாத்திட்டான்” கூட்டத்தில் இருந்த ஒருவன் சொன்னான்.

“எப்படி இருந்தா என்ன? இவனைக் காப்பாத்திட்டோம். தனியா இவனை எஸ்டேட்டுக்குப் போகவுடக் கூடாது. அந்தப்பய திரும்பவும் கடத்திட்டு போக வந்தாலும் வருவான்.”

“அத நாங்க பாத்துக்குதோம்” என்றனர் மாயாண்டியும் அவன் நண்பணும்.

“போலீசுக்குத் தகவல் சொல்ல வேண்டாமா?”

“அதெல்லாம் வேண்டாம். போலீசை அவங்க பாட்டுக்கு விட்டுரலாம்” என்றார் அந்தப் பெரியவர். கருப்பன் அந்தப் பெரியவரின் காலில் விழுந்து நன்றி சொன்னான். கூட்டத்திலிருந்த ஒவ்வொருவருக்கும் கைகூப்பி நன்றி சொன்னான். அபாயம் விலகி விட்டாலும் சற்றுமுன் ஏற்பட்ட பெரும் பீதியால் ஆடிப் போயிருந்த அவனால் நடக்கவே முடியவில்லை. மாயாண்டி ஒரு டீ வாங்கிக் கொடுத்த பின்புதான் அவனுக்கு உயிரே வந்தது. திரும்பவும் கைகூப்பி எல்லோருக்கும் நன்றி சொல்லிவிட்டு மாயாண்டியோடு எஸ்டேட்டுக்குக் கிளம்பினான்.

குமரிமலை கடைவீதியை அடைந்ததும் மாயாண்டியும் நண்பனும் விடைபெற்றுக் கொண்டார்கள். கருப்பன் அவர்கள் கால்களைத் தொட்டு வணங்கி மனப்பூர்வமான தனது நன்றியைத் தெரிவித்துக் கொண்டு “என் பாடிக்கு வாங்கண்ணே, எம் பொஞ்சாதி ரொம்ப சந்தோசப்படுவா” என்று இருவரையும் வற்புறுத்தினான்.

“இன்னொரு நாளைக்கு வாரோம். முக்கியமான வேலை இருக்குது” என்று கூறிவிட்டு மாயாண்டி விடைபெற்றுச் சென்றான். தனியாக விடப்பட்ட கருப்பன் அறைக்குப் பாய்ந்தோடிச் சென்று வள்ளியைக் கட்டித் தழுவிக்கொண்டு கண்ணீர் வடித்தான். அவன் தேம்புவதைக் கண்ட வள்ளி தானும் அழத் தொடங்கினாள். ஒரு வழியாக தன்னைக் கட்டுப்படுத்திக்கொண்டு தனது சாகசங்களை அவளுக்கு விவரித்துக் கூறினான். கருப்பன் மயிரிழையில் தப்பியதைக் கேட்டதும் வள்ளிக்கு அழுகையை அடக்கிக் கொள்ளவே முடியவில்லை. “மாயாண்டியை நீ ஏன் கூட்டிட்டு வரலை. நானும் நேர்ல பாத்து நன்றி சொல்லியிருப்பேனே” என்று கோபித்துக் கொண்டாள்.

“நாம ஒருநா வேலிமலை எஸ்டேட்டுக்குப் போயி அவுங்களைப் பாக்கலாம்” என்றான் கருப்பன்.

“அந்த நாசமாப் போனவன் உன்னக் கடத்திட்டு போக இங்கயும் வருவானோன்னு பயமாயிருக்குது மாமா.”

“வரமாட்டான்” என்றான் கருப்பன்.

“இங்க வாறதுக்கு அவனுக்கு தைரியம் இருக்காது. அப்படி இங்கன அவன் கால் வெச்சான்னு கேள்விப்பட்டா சங்கரபாண்டியனும் மத்த மேஸ்திரிகளும் அவனை ஒழிச்சுக் கட்டிருவங்க. தங்களோட கூலிகள யாராவது கடத்திட்டு போனா அவங்களுக்கு எப்படியிருக்கும்.”

“ஆனா அந்த கோவிந்தசாமி நாயி இங்க வரணும்னு ஆசைப்படுதேன். அப்பத்தானே அவனுக்கு ஒரு பாடம் கத்து குடுக்க முடியும்”கருப்பன்

வீரம் பேசினான்.

“நாம எப்படி மாமா மத்தவங்களுக்கு பாடம் கத்துக் குடுக்க முடியும். நாம நல்லபடியா ஊர் போயிச் சேந்தாலே போதும்னு ஆண்டவனக் கும்புடுவோம். எனக்கென்னமோ ஊருக்குப் போற வரைக்கும் நான் உயிரோட இருக்க மாட்டேன்னு அடிக்கடி தோணுது”என்று சொல்லி விட்டு வள்ளி விம்மத் தொடங்கினாள். கருப்பன் அவள் தோள்களை மிருதுவாகத் தடவிக் கொடுத்தபடி தேற்ற முயன்றான்.“அழாத புள்ள கணக்கு முடிக்கிறதுக்கு இன்னும் மூணு மாசம் தானே இருக்கு. புதுசா வந்திருக்கிற டாக்டர் பழைய ஆளைவிட நல்லாப் படிச்சவராம். உன்ன அவருகிட்டக் கூட்டிட்டு போறேன். முருகன் கருணையில நீ நல்லாயிடுவ.”

# 20

இந்த உலகம் நீ வெல்லத் தகுந்ததாயிருந்தால்,
எண்ணிப்பார், அது நீ அனுபவிக்கவும் தகுந்ததுதான்.
இதோ ஓர் அழகிய தாய் (லாந்துப்) பெண் உன்னருகே,
கடவுள் கொடுத்த அற்புதமான பரிசாய் ஏற்றுக்கொள்!

அலெக்சாண்டர்ஸ் பெஸ்டிஸி
-டிரைடன்

திருவாளர் வொய்ட் சனிக்கிழமை மாலை தேநீர் அருந்தியபடி செய்தித்தாள் படித்துக் கொண்டிருந்தார். தனது வரவேற்பறையில் அனைத்து வேலைகளையும் முடித்துவிட்டு வசதியாக அமர்ந்து பேப்பர் படிக்கும் மாலை வேளைகளில் வொய்ட் நல்ல மனநிலையில் இருப்பார். முக்கியமாக சனிக்கிழமை மாலைகளில் அவர் மிகுந்த மகிழ்ச்சியுடன் இருப்பார். மறுநாள் ஞாயிற்றுக்கிழமை விடுமுறை தினம் என்பதல்ல அவரது மகிழ்ச்சிக்குக் காரணம். மேடம் வொய்ட் சனிக்கிழமை மாலைகளில் கிளப்புக்குச் சென்று இரவு அங்கேயே தங்கி விடுவாள் என்ற எண்ணமே அவருக்கு இன்பமான மனநிலையை அளிக்கும். அவரது இந்த பலவீனத்தை நன்கு அறிந்திருந்த சோக்ரா கிருஷ்ணன் எப்பொழுதுமே தனது காரியங்களை நிறைவேற்றிக் கொள்ள இந்த நேரங்களில்தான் அவரை அணுகுவான்.

“மாஸ்டர்” சோக்ரா பவ்யமாகத் தொடங்கினான் “மேடம் ஃபாக்ஸ் ரெண்டு பன்னிக்குட்டிகள எடுத்துக் கொண்டு போனார்கள்.”

“அது ஒண்ணும் பிரச்சினையில்லை.”

“புது டாக்டர் நல்லவர்னு எல்லாரும் சொல்கிறார்கள்.”

“ஆமாம், எல்லோருக்கும் சந்தோஷம் என்று அப்பாவுவும், ஜான்சனும் சொன்னார்கள்.

“மாஸ்டருக்கு புது கம்பவுண்டர் வேணும்னு ஹெட்கிளார்க் சொன்னார்.”

“ஆமாம் ஒரு நல்ல டாக்டரை வெச்சதுக்கு இதுதான் தண்டனை. அவனுக்குக் கம்பவுண்டர் வேணுமாம். அந்த வேலையை அவனே செய்யக் கூடாதாம். அவ்வளவு பெரிய ஆளாம். இப்பக்கூட நான் செடி வெட்டறேன். எடை போடுகிறேன். இவன் சின்னப்பையன்

கம்பவுண்டர் வேல செய்ய மாட்டேனென்கிறான். உலகம் எங்க போயிட்டிருக்குன்னே தெரியல ப்பூ.”

எசமானின் மனநிலை மாறத் தொடங்குகிறது என்பதைப் புரிந்து கொண்ட கிருஷ்ணன் அவசரமாகப் பேச்சை மாற்றினான்.

“மாஸ்டர் மேடம் இன்னைக்கு வெளியே சாப்பிடறாங்க.”

“ஒழிஞ்சு போகட்டும்” வொய்ட் அலட்சியமாகக் கூறினார்.

“மாஸ்டரைப் பாக்கணும்னு மாதவி கேட்டுக்கிட்டா மாஸ்டர்.”

“ஆல்ரைட், டின்னருக்கு அப்புறமா வரச்சொல்லு. அப்புறம் டின்னரை சீக்கிரமா தயார் பண்ணிடு.”

“எஸ் மாஸ்டர்.” என்ற சோக்ரா சற்றே இடைவெளிவிட்டுத் தொடர்ந்தான். “மாதவி பிரதர் நோ ஜாப், ஸ்டார்விங் (வேலையின்றி பட்டினி கிடக்கிறான்) மாஸ்டர்.”

“ஜான்ஸனிடம் பேசியிருக்கிறேன். சீக்கிரம் வேலை குடுக்கிறேன்.”

“மாஸ்டர், மாதவிக்கு இன்னொரு தம்பி இருக்கான் அவன் ஒரு கம்பவுண்டர்.”

“இதுதான் உன் விசயமா. இதபாரு பையா, கொஞ்ச நாளைக்கு முன்னாடி நீ சொன்ன இன்னொரு பயலுக்கு எப்ப வேலை கொடுக்க முடியுமென்று எனக்குத் தெரியவில்லை. ஆனால் இப்பொழுது எனக்கு ஒரு கம்பௌன்டர் வேண்டும் என்பது உண்மைதான். உன் மச்சானுக்குத் தகுதி இருந்தால் அவனுக்கு வேலை கொடுப்பேன். ஆனா நீ முதல்ல சொன்ன பயல் விசயமா என்ன நச்சரிக்கக் கூடாது. புரிந்ததா?”

“எஸ் மாஸ்டர்” என்றான் கிருஷ்ணன். ஒரு நேரத்தில் ஒரு பறவை என்பதுதான் அவனது தாரக மந்திரம்.

“அவனுக்கு ஒழுங்கான தகுதியிருக்கா?”

“ஆமாம் மாஸ்டர், நல்ல தகுதியுள்ளவன்தான்.”

“அது உனக்கு எப்படித் தெரியும்?”

“அவன் கண்ணனூர் அரசு மருத்துவமனையில வேலை செய்யறான் மாஸ்டர்.”

“ஆல்ரைட், அவனுக்கு லெட்டர் எழுதி சான்றிதழ்களை எனக்கு அனுப்பச் சொல். அதை டாக்டர் பார்பரைப் பார்க்கச் சொல்கிறேன். அவர் திருப்தி அடைந்தால் வேலை கிடைக்கும்.”

“நாங்கள் உங்கள் அடிமைக மாஸ்டர். ரொம்ப நன்றியுள்ளவங்களா இருப்போம்.”

“பையா இங்க பாரு, நேற்று எனக்கு கையெழுத்துப் போடாத கடிதம் ஒண்ணு வந்தது. புல்லும், ஜார்ஜின் மனைவியும் மிகவும் நெருக்கமாக இருக்கிறார்கள் என்று அதில் எழுதியிருந்தது. அது உண்மையாக இருக்குமா என்று யோசித்துக் கொண்டிருக்கிறேன். புல்லுடைய சோக்ராவை உனக்குத் தெரியுமில்லையா?”

“யெஸ் மாஸ்டர்.”

“அவனிடம் இது உண்மையா இல்லையா என்று கேட்டு என்னிடம் சொல்.”

“யெஸ் மாஸ்டர், எனக்கே தெரியும். அது உண்மைதான்.”

“ஏன் என்னிடம் முன்பே சொல்லவில்லை?”

“ரொம்ப பயமா இருந்தது மாஸ்டர்.”

“ஆல்ரைட். இப்பப் போ. உணவு தயாரான உடனே பரிமாறு.”

“வெரிவெல் மாஸ்டர்” என்று கூறிவிட்டு சோக்ரா டீ டிரேயை எடுத்துக் கொண்டு அறையை விட்டு வெளியேறினான்.

# 21

பின்பு இன்னொருவன் நீண்ட பெருமூச்சு விட்டபடி
சொன்னான், நீண்டநாள் கவனிக்கப்படாத எனது பூமி
வறண்டு கிடக்கிறது; ஆனால் அதே பழைய
பழரசத்தால் என்னை நிரப்பு,
நான் மெல்ல மெல்ல மீண்டு வரக்கூடும்!

திருபையாத் ஆப் உமர்கயாம்
- ஃபிட் ஜெரால்டு

ஒருநாள் வேலை முடிந்தவுடன் கருப்பன் மனைவியை அழைத்துக் கொண்டு மருத்துவமனைக்குச் சென்றான். மிகவும் அன்பாகப் பழகிய புதிய மருத்துவர் அவளை முழுமையாகப் பரிசோதித்தார். பின்பு கருப்பனை ஒரு மூலைக்கு அழைத்துச் சென்று அவள் மிகவும் மோசமான நிலையில் இருப்பதாகவும், தன்னால் முடிந்த அனைத்தையும் செய்வதாகவும் மற்றவற்றைக் கடவுள் பொறுப்பில் விட்டுவிட வேண்டும் என்றும் சொன்னார்.

“பல நாட்களுக்கு முன்பே இவளுக்கு முறையான சிகிச்சை அளிக்கப்பட்டிருக்க வேண்டும். ஏற்கெனவே காலம் கடந்துவிட்டது. ஆனால் என்னால் முடிந்ததெல்லாம் செய்கிறேன்” என்றார்.

கருப்பன் டாக்டரின் காலைத் தொட்டு கண்களில் ஒற்றிக் கொண்டான். “ஐயா, எங்களை உங்க புள்ளமாதிரி நெனச்சுக்குங்க. எப்படியாவது அவளைக் காப்பாத்துங்க ஐயா. மூணு வருசமா இங்கன இருக்கோம். ஊருக்குப் போகவே முடியல. இப்பத்தான் எல்லாக் கடனையும் அடச்சேன். கணக்குத் தீர்க்கறப்ப ஊருக்குப் போவ முடியுமான்னு பாக்கேன். அப்பா அம்மாவக் கூட பாக்க முடியாம ஏங்கிப் போயிருக்குதா. அதுனாலதா ஒடம்பு முடியாமப் போயிருச்சு. எப்படியாவது அவளைக் காப்பாத்துங்க ஐயா.”

“அடுத்த வாரம் அவளைக் கூட்டிட்டு வா” என்றார் மருத்துவர்.

“ஆஸ்பத்திரியில ஒரு மருந்தும் இல்ல. பொள்ளாச்சியில இருந்து ஒரு வாரத்துக்குள் மருந்து வரவழைத்து விடுகிறேன். அவளுக்கு நிறைய ஊசி போட வேண்டியிருக்கும். நான் குடுக்கிற மாத்திரையையும் எடுத்துட்டு போ. குழந்தை பிறக்கும் வரை என் பார்வையிலேயே இருக்கட்டும்.

நல்லதே நடக்கும்னு நம்புவோம்.”

“நீங்கதாய்யா எங்களுக்குச் சாமி” என்று சொல்லிவிட்டு மீண்டும் அவரது காலைத் தொட்டு கண்ணில் ஒற்றிக் கொண்டான்.

“வீடு திரும்பிக் கொண்டிருக்கும்போது கருப்பன் மருத்துவர் சொன்னதை வள்ளியிடம் கூறினான். “உனக்கு நிறையா ஊசி போட வேண்டியிருக்குதாம். வேலை முடிஞ்சதும் தினமும் ஆஸ்பத்திரிக்குக் கூட்டிட்டு போறேன். ஒரு வாரம் வேலைக்குப் போகாம இருந்தா நல்லாயிருக்கும்.”

“இல்ல மாமா எனக்கு லீவு வேண்டாம். நடக்க முடியற வரைக்கும் வேலைக்குப் போறேன்” என்றாள் வள்ளி. அவர்கள் அறையை அடைந்ததும் சுருண்டு படுத்துக்கொண்டு தேம்பத் தொடங்கினாள்.“எனக்கு சரியாகும்னே தோணலே மாமா.”

“ஏன் இப்பிடியெல்லாம் பேசுத. புது வைத்தியர் ரொம்ப நல்ல மனுசன். அன்பானவர் நீ சரியாகி விடுவேன்னு எங்கிட்ட சொல்லியிருக்காரு. அவரை நாம நம்பலாம், மீதிய ஆண்டவன் முருகன் பாத்துக்குவான்.”

# 22

அவன் அனைத்தின் விலையும் தெரிந்தவன்
எதன் மதிப்பும் தெரியாதவன்

லேடி வின்டர்மியர்ஸ் ஃபேன்
- ஆஸ்கார் வொயில்ட்

ஞாயிறு மாலைகளில் தனது நண்பர்களையும், சில நேரங்களில் நிறுவனத்தில் பணிபுரியும் மேலாளர்களையும் தேநீர் விருந்துக்கு அழைப்பது வொயிட்டின் வழக்கம். எஸ்டேட் தொடர்பாக எதைப் பற்றியாவது பேச அவர் விரும்பினால் சம்பந்தப்பட்ட மேனேஜரை தேநீர் பருக அழைத்து சாண்ட்விச்சுகளை மென்றுகொண்டும் தேநீரை உறிஞ்சியபடியும் விவாதிப்பார். புல் எஸ்டேட் வேலைகள் தொடர்பாக ஏதோ பேச வேண்டும் என்றதால் அவரை வொயிட் தேநீர் விருந்துக்கு அழைத்திருந்தார். புல் சற்று தாமதமாக வந்து சேர்ந்தார்.

“கடைசியில ஒரு வழியா நீங்கள் வந்து சேர்ந்ததில் ரொம்ப சந்தோசம் ஜேம்ஸ்” வொய்ட் வரவேற்றார். “உயிரே போவது போல் தாகம் எனக்கு.”

“நான் ரொம்ப வருந்துகிறேன் ஜார்ஜ். கிளம்பி வரும்போதுபங்களாவுக்குக் கீழே உள்ள மேடு இடிந்து சாலையில் சரிந்து விட்டது. அதனால் அதைக் கடந்து வருவதற்கு நீண்ட நேரமாகி விட்டது.”

வொய்ட் ஒரு கப் டீயையும் ஒரு தட்டு நிறைய சாண்ட்விச்சுகளையும் புல்லை நோக்கி நகர்த்தியபடியே கேட்டார்.

“அந்த பிச்சைக்கார நாட்டு வைத்தியன் குரூப் எப்படியிருக்கிறான்?”

“உண்மையில் அவனைப் பற்றித்தான் பேச வேண்டுமென்று வந்தேன். அவனுடைய குவார்ட்ஸுக்கு இன்னொரு அறை கட்டித்தரும்படி தொடர்ந்து எனக்குத் தொல்லை கொடுத்து வருகிறான். தான் முன்பு ஒரு பெரிய வீட்டில் வசித்ததாகவும் அதனால் ஏதோ சாமான்கள் செய்து விட்டதாகவும் அவற்றை இப்போதுள்ள வீட்டில் வைக்க முடியவில்லை என்றும் சொல்கிறான்.”

“முன்பிருந்த கம்பௌண்டர் குடியிருந்த வீடுதானே அவனுக்கு இப்போது கொடுக்கப்பட்டு இருக்கிறது. அப்ப அந்த பிளடி பயலுக்கு

அதுவே போதும்.”

“அவன் அடிக்கடி தான் வேலையை விட்டுப் போய் விடுவதாக வேறு சொல்லிக் கொண்டு இருக்கிறான்.”

“ப்பூ! அவன் அந்தமாதிரி எதுவும் செய்யவே மாட்டான். ஒரு பிளடி வார்டு பாய்க்கு நாம் கொடுக்கின்ற சம்பளத்தை யார் கொடுப்பார்கள்.”

“இத்தன வருடமாக ஆஸ்பத்திரிக்குப் பொறுப்பாக அவனை வைத்திருந்தோம். இப்போது நாம் அவனைக் கைவிட்டு விட்டதாக நினைக்கிறான்.”

“ஆமாம் ஆமாம். நாம்தான் அவனை வேலைக்கு வைத்தோம். ஆனால் அதற்காக அந்த பிளடி டூம்ஸ்டே (உலகம் அழியும் நாள்) வருகின்ற வரை அவன் இங்கேயே இருக்க வேண்டும் என்று அவசியமில்லை. அதே பிளடி சம்பளத்தைத்தான் இப்பொழுதும் தருகிறோமே? அப்புறம் அவனுக்கு என்ன பிளடி பிராப்ளம்! எனக்குப் புரியவேயில்லை.”

“அவன் வேலையில் இன்றுவரை உங்களுக்குத் திருப்தி என்று சொல்லுகிறான்.”

“சரியாகச் சொல். எனக்கு அவன்மீது புகார் எதுவும் இல்லை. மருத்துவச்செலவு ஒண்ணுமேயில்லை. அவனுக்கு எதிராக ஒன்றும் இல்லை.”

“பின்பு ஏன் அவனை மருத்துவமனையை விட்டு அனுப்பினீர்கள்?”

“இதோ பார் ஜேம்ஸ் இந்த டாம்தான் மருத்துவமனைக்கு ஒரு நல்ல டாக்டர் வேண்டுமென்று எப்பொழுதும் நச்சரித்து வந்தான். எஸ்டேட்டில் உள்ள நிலைமைகள் குறித்து நாட்டு மக்களிடம் மோசமான கருத்து உருவாகிவருவதாக அவன் நினைப்பது போல் தோன்றுகிறது. இந்த பிளடி காங்கிரஸைப் பற்றியும் அதிகம் கவலைப்படுகிறான். என்றாவது ஒருநாள் அவர்கள் எஸ்டேட்டுகளில் உள்ள நிலைமைகள் குறித்து விசாரிப்பதற்காக அரசை வற்புறுத்தி ஒரு கமிட்டியை அமைக்கச் செய்து விடுவார்கள் என்று சொல்கிறான். ஒரு பாதுகாப்பிற்காக கம்பெனி மருத்துவமனைக்கு ஒரு தகுதியுள்ள டாக்டரை நியமிக்க வேண்டுமென்று என்னை வற்புறுத்தினான். மற்ற நிறுவனங்களுக்கும் அவன் இதே ஆலோசனையைத்தான் கொடுத்து வருகிறான். ஒருநாள் ஏதோ ஒரு பலவீனத்தில் ஒரு படித்த மருத்துவரை நியமிக்க ஒப்புக் கொண்டேன். இப்போது வந்திருக்கும் இந்த பிளடி பூல் டாக்டர் தன்னை எல்லாம் வல்ல கடவுள் என்று நினைத்துக் கொண்டிருக்கிறான். மருத்துவமனையில் கொஞ்சம் மருந்து கலக்க

மாட்டானாம். அதனால் நான் ஒரு பிளடி கம்பௌன்டரை நியமிக்க வேண்டி இருக்கிறது. பழைய பிளடி குரூப்பாயிருந்தா ஆஸ்பத்திரியக் கூட்ட சொன்னாலும் தயங்க மாட்டான். அந்த மாதிரி ஆட்கள்தான் நமக்கு இங்கே வேண்டும். புதுசா வந்திருக்கிற இந்த பிளடிபூல் மருத்துவமனையைப் புதுப்பிக்க வேண்டும் என்கிறான். இன்னமும் நிறைய மருந்துகளும், கருவிகளும் வேண்டுமாம். எல்லாம் இந்த நாத்தம் புடிச்ச இந்தியப் பிச்சைக்காரப் பயல்களுக்காக."

"இன்னொரு அறை கட்டுவது பற்றி குரூப்பிடம் என்ன சொல்லட்டும்?"

"அந்தத் தேவடியா மகனை ஒழிஞ்சு போகச் சொல்லு"என்றார் வொய்ட். "ஆண்ட்ரூ (பாக்ஸின் முதல் பெயர்) வேறு பிளடி கம்பவுண்டருக்கு அவன் எஸ்டேட்டில் வீடு இல்லை என்றும் அடுத்த சீசனுக்குள் ஒரு வீடு கட்டித்தர வேண்டுமென்று விரும்புவதாகவும் சொல்கிறான். இந்த நாசமாய்ப்போன புது டாக்டர் நம்மை எங்கு கொண்டு போய்விடப்போகிறானோ தெரியவில்லை."

"ஆனால் ஜார்ஜ் புது டாக்டரை எல்லோருக்கும் பிடிக்கிறது என்று எனது தலைமை எழுத்தர் சொல்கிறான். தங்களுக்குச் சிகிச்சையளிக்க ஒரு நல்ல படித்த மருத்துவன் வந்தது பற்றி எல்லா எழுத்தர்களுக்கும் மகிழ்ச்சியாம்."

"ப்பூ" என்றார் வொய்ட்.

"அவன் எப்படியாவது சாவு விகிதத்தைக் குறைந்து விட வேண்டுமென்று விரும்புகிறேன். இது இப்படியே போய்க் கொண்டிருந்தால் கூலிகள் நமது எஸ்டேட்டுக்கு வர மாட்டார்களென்று மேஸ்திரிகள் என்னிடம் சொல்கிறார்கள். இங்கேயும் நிறையச் சாவுகள் என்று கேள்விபட்டேன்."

"பிளடி நான்சென்ஸ். கொஞ்சப் பிச்சைக்காரப் பயல்கள் செத்தா என்ன? அந்த நாய்கள்தான் பன்னிமாதிரி பெத்துப் போடுகிறார்களே! நான் சொல்கிறேன் நமக்கு ஒருநாளும் கூலிகளுக்குப் பற்றாக்குறை வராது. மேஸ்திரிகள் கூலிகளைச் சேர்ப்பது சிரமம் என்று சொல்லிக் கொண்டுதான் இருப்பார்கள். அந்தத் தேவடியா பயலுகளுக்குக் கமிஷனை உயர்த்திக் கொடுக்க வேண்டுமென்பதற்காக" என்றார் வொய்ட்.

"பொருளாதார அடிப்படையில் பார்த்தால் கூட மருத்துவ உதவிக்கும், மலேரியா ஒழிப்புப் பணிகளுக்கும் செலவிடுவது நல்லது என்று டாக்டர் பார்பர் கூறுகிறார். ஒவ்வொரு ஆண்டும் ஏராளமான கூலிகள்

மரணமடைகிறார்கள். அவர்களை இங்கே அழைத்துவர ஏராளமான பணம் செலவாகிறது. அவர்கள் இறந்தால் அந்தப் பணம் வீண் தானே?"

"நான்சென்ஸ். நமக்கென்ன நஷ்டம்? அந்த பிளடி மேஸ்திரிகள் தானே நஷ்டப்படுகிறார்கள்? அதனால்தான் அவர்கள் புலம்புகிறார்கள்!" வொய்ட்டின் குரலில் லேசாகக் கோபம்.

"அடிக்கடி மலேரியா வந்தால் கணையமும், ஈரலும் வீங்கிப் போய் அவர்களால் நன்றாக வேலை செய்ய முடியாதாம். பார்பர் சொல்கிறார். தவிர நிறைய நாட்கள் அவர்கள் உடல்நலமில்லாமல் படுத்துக் கிடந்தால் நமக்கு வேலை நேரம் நஷ்டம்தானே ஆகிறது."

"இது போன்ற முட்டாள்தனமான கருத்துக்களெல்லாம் எப்படித்தான் டாமின் மூளைக்குள் போகிறதென்று புரியவே மாட்டே னென்கிறது. அவனுக்கு வேண்டுமானால் இப்படிப் பேசுவது சரியாக இருக்கலாம். ஆனால் நம்மைப் பொறுத்தவரை மலேரியா ஒழிப்புக்கும், மருத்துவத்துக்கும் ஏராளமான தொகையைச் செலவழிப்பதை விட இந்த நாத்தம் பிடித்த பிச்சைக்காரப் பயல்கள் செத்துத் தொலைந்து போவதே நல்லது. கொஞ்சம் ஆட்கள் குறைந்து போவது இந்த நாட்டுக்கு மிகவும் நல்லது. பொருளாதார அடிப்படையில்."

"இப்படி மனிதாபிமானமில்லாமல் பேசக்கூடாது" என்றான் புல்.

"மனிதாபிமானத்தின் காரணமாக நாம் இங்கே வரவில்லை. இங்கிலாந்தில் இருக்கும் பங்குதாரர்களுக்கு லாபமீட்டித் தருவதற்காகவே இங்கே வந்திருக்கிறோம். அதுவும் கொழுத்த லாபம். அதற்கான விலையை இந்த நாடு கொடுக்கிறதா அல்லது வேறு யாராவது கொடுக்கிறார்களா என்பதைப் பற்றி எனக்கு கவலையில்லை. நமக்கு லாபம் வேண்டும். அதை ஈட்டியே ஆக வேண்டும்" வொய்ட் சூடேறிப் போயிருப்பது தெரிந்தது.

"ஆமாம் நமக்கு கண்டிப்பாக லாபம் வேண்டும்" புல் அவசரமாக ஒப்புக் கொண்டான்.

"பட்லர் எப்படியிருக்கிறான்?" (பட்லர் புல்லின் உதவியாள் வொய்ட் பேச்சை மாற்றினார்.

"நன்றாக வருவானென்று நினைக்கிறேன்."

"அந்தப் பாழடைந்த பங்களாவில் அவன் இருப்பதே சரியில்லை. மழைக்காலம் முடிந்ததும் அவன் கொஞ்சம் வசதியாக இருப்பதற்காக ஒரு நல்ல பங்களா கட்டித் தருவோம். நல்ல வீட்டில் இருந்தால்தான்

அவனால் ஒழுங்காக வேலையில் கவனம் செலுத்த முடியும். அவனுக்கு சீக்கிரம் நல்ல பங்களா கட்டித் தருவதுதான் நிறுவனத்திற்கு நல்லது. அவன் அதில் குடிபோன பின்பு அந்த வீட்டை திரும்பவும் டீ மேக்கருக்குக் கொடுத்து விடலாம். டீ மேக்கர் இப்போது எங்கேயிருக்கிறான்?"

"அவனை உதவி டீ மேக்கரின் வீட்டில் குடிவைத்து இருக்கிறேன். உதவி டீ மேக்கருக்கு பாக்டரி கூலி லைனில் இரண்டு அறைகள் கொடுத்து அங்கே அனுப்பி விட்டேன்."

"டீ மேக்கர் வீட்டை பட்லருக்குக் கொடுப்பதற்கு முன் பழுதுபார்க்க நிறைய செலவு செய்ய வேண்டியிருந்தா?"

"ஆமாம் அந்த வீடு படுமோசமாக இருந்தது. ஒரு படுக்கையறையும், ஒரு வரவேற்பறையும் புதிதாகக் கட்ட வேண்டியிருந்தது. செலவு இரண்டாயிரத்து ஐநூறு ரூபாய்க்கு மேல் ஆகிவிட்டது."

"ஓ அப்படியானால் டீ மேக்கருக்கு அவ்வளவு நல்ல வீடு தேவையில்லை. ஒரு ஆயிரம் ரூபாயில அவனுக்கு இன்னொரு வீடு கட்டிக்கொடுத்து விடலாம்.

"அந்த வீட்டை என்ன செய்வது?"

"வாயை மூடு. அதற்கு பின்பு ஏதாவது ஏற்பாடு செய்யலாம்."

"குரூப்புக்கு நான் என்ன பதில் சொல்லட்டும்?"

"அந்த முட்டாள் பயலிடம் தற்போது அவனிருக்கும் வீடே ரொம்ப அதிகம் என்று சொல்லிவிடு. அவனுக்கு ஒரு நல்ல வீடு கொடுத்தால் அவன் அதில் நீட்டிப்படுத்துத் தூங்கிவிடுவான். அவனுக்கு கொடுக்கப்பட்டுள்ள வீடு பிடிக்கவில்லை என்றால் ஒழிந்து போகச் சொல்லு."

உரையாடல் முடிந்து விட்டது போலத் தோன்றினாலும் புல் ஏதோ சொல்வதற்குத் தயங்கி கொண்டிருப்பது போல் தோன்றியது. வொய்ட் அதைக் கவனித்தாலும் பிடிவாதமாக மௌனமாக இருந்து விட்டார். எனவே புல்லே தொடங்க வேண்டி வந்தது.

"என்னுடைய தலைமை எழுத்தர் ஜார்ஜைப் பற்றிக் கொஞ்சம் உங்களிடம் பேச வேண்டி இருக்கிறது…"

"அவனைத் துரத்தி விடலாமென்று நினைக்கிறாயா? செய்துவிடு உதவாக்கரைப் பயல்."

“இல்லையில்லை. நீங்கள் தவறாக நினைத்து விட்டீர்கள் அவன் மிகவும் உதவிகரமானவன்” என்கிறார் புல்.

“நீ மட்டும்தான் இப்படிச் சொல்கிறாய். வேலை எப்படிச் செய்கிறான்? திறமைசாலியா?”

“மிகவும் திறமைசாலி. உண்மையில் அவனுக்கு வேறு ஏதாவது நிறுவனத்தில் இதைவிட நல்ல வேலை ஏற்பாடு செய்து தருவதைப் பற்றித் தான் உங்களிடம் பேச விரும்பினேன்.”

“அவனுக்குப் பதவியுயர்வு கொடுத்து நமது நிறுவனத்திலேயே வைத்துக் கொள்ள விரும்பவில்லை?”

“இல்லை இல்லை நான் அதைச் செய்ய விரும்பவில்லை. உங்களிடம் அவனுக்கும் மூத்த ஆட்கள் இருக்கிறார்கள் என்பது எனக்குத் தெரியும்.”

“சரி நான் என்ன செய்ய வேண்டும்?”

“திரு.ஷப்மேக்கரிடம் அவனுக்கு சிபாரிசு செய்து நீலகிரியிலோ, மைசூரிலோ உள்ள அவர்களுக்குச் சொந்தமான சிறிய தேயிலைத் தோட்டங்களில் ஏதாவது ஒன்றில் அவனுக்கு உதவி மேலாளர் பதவி வாங்கித் தரலாமா என்று சிந்தித்துக் கொண்டிருக்கிறேன்.”

“இது போன்ற மரியாதைக்குரிய பதவிகள் பிளடி இந்தியர்களுக்கு தரப்படுவதில்லை என்பது தெரியாதா மிஸ்டர் புல்? உண்மையிலேயே இந்தத் துறை முழுவதிலும் இதுபோன்ற பதவிகளில் இரண்டு அல்லது மூன்று இந்தியர்களுக்கு மேல் இருக்க மாட்டார்கள் என்று நான் நினைக்கிறேன். அவர்களும் பெரிய இடங்களில் தொடர்புகள் உள்ளவர்கள், தங்களது நடைமுறைகளில் மேற்கத்திய மயமானவர்கள்” என்றார் திரு வொய்ட்.

“என்னுடைய எழுத்தரைப் பொறுத்தவரை கல்லூரியில் படித்தவன். மிகவும் திறமை வாய்ந்தவன். தொழிலாளர்களை கட்டுப்பாட்டுக்குள் வைத்திருக்கிறான்.”

“ஆனால் அவன் மனைவியைக் கட்டுப்பாட்டில் வைத்திருப்பது போல் தெரியவில்லையே” என்றார் வொய்ட். புல் முகம் சிவந்து போனான்.

“உங்களுடைய எழுத்தர் திறமையானவரா? அல்லது அவன் மனைவியா?” என்று கேட்டபடி திருவாளர் வொய்ட் தனக்கு வந்த மொட்டைக் கடிதத்தை நீட்டினார். கடிதத்தைப் படிக்கப் படிக்க புல்லின் முகம் சவம் போல் வெளிறிப் போனது.

“ஹா…ஹா…ஹா… திருட்டு நாய், திருட்டு நாய்” வொய்ட் இடி இடி என்று சிரித்தார். புல் பெரிதும் நிம்மதியடைந்தான் ஆனால் வாயைத் திறக்கவில்லை.

“அப்படியென்றால் எனக்குப் புரிகிறது. ஆனால் அவன் பதவி உயர்வு பெற்று எஸ்டேட்டை விட்டுச் சென்றுவிட்டால் நீ என்ன செய்வாய்?”

“ஏப்ரலில் நான் நாடு திரும்புகிறேன். என்னுடைய முட்டாள் அம்மா திருமணம் செய்து கொள்ளச் சொல்லி நச்சரித்துக் கொண்டு இருக்கிறாள்…”

வொய்ட் திரும்பவும் வெடிச்சிரிப்பு சிரித்தார். “இப்ப எனக்குப் புரியுது. நீ ஏன் உன்னுடைய தலைமை எழுத்தனை ஒதைச்சு மேல தள்ளி இங்கிருந்து ஒழித்துக் கட்டப் பார்க்கிறாய் என்று ஹா… ஹா… ஹா…ஹா…”

“இல்லை, அது அப்படி இல்லை. அவனுக்கு உண்மையிலேயே தகுதி இருப்பதால்தான் ஒரு நல்ல வேலை வாங்கித் தருகிறேன்.”

“உண்மைதான். அவளுக்கு உண்மையிலேயே நிறையத் தகுதிகள் இருக்கத்தான் செய்கிறது.” சொல்லிவிட்டு வொய்ட் திரும்பவும் குலுங்கிக் குலுங்கிச் சிரித்தார். புல் சிறிது நேரம் மௌனமாக இருந்து விட்டு மெதுவாகக் கேட்டான்.

“திரு.ஷிமேக்கரிடம் நான் இதுபற்றிப் பேசுவதில் உங்களுக்கு ஏதாவது ஆட்சேபணை இருக்கிறதா?”

“செய்” என்றார் வொய்ட்.

“நீங்களும் தயை கூர்ந்து ஒரு வார்த்தை சொல்வீர்களா?”

“முடியாது” அதைச் செய்யச் சொல்லி என்னிடம் கேட்காதே. இங்கே அப்பாவு இருப்பது உனக்குத் தெரியும். அவனுக்கு இவனைவிட அனுபவமும் திறமையும் அதிகம். உன்னுடைய பயலுக்கு நான் உதவினால் அப்பாவுவுக்கு அநீதி இழைத்தது போல் ஆகிவிடும். அது எப்படி இருந்தாலும் இந்தப் பயலுக்கு நீ இவ்வளவு கௌரவம் மிக்க ஒரு பதவியைப் பெற்றுத்தருவதில் எனக்கு அவ்வளவு உடன்பாடில்லை. உதவி மேலாளராக நியமிக்கப்படும் ஒருவன் மேலாளராகப் பதவி உயர்த்தக் கூடிய அளவுக்குத் திறமை உள்ளவனாக இருக்க வேண்டும். இல்லாவிட்டால் அவன் பெற்ற பயிற்சியெல்லாம் வீணாகிவிடும். மேனேஜர் ஆகும் பட்சத்திலாவது நாம் அவனை நமது கிளப்பில் அனுமதிக்க வேண்டியிருக்கும். அவன் மனைவிக்கு நமது பெண்களோடு

பழகும் அளவிற்கு கல்வித்தகுதி இருக்க வேண்டும்.”

“ஜார்ஜின் மனைவி நல்ல சாமர்த்தியசாலி சரளமாக ஆங்கிலம் பேசுகிறாள். கான்வென்டில் படித்தவள். அவள் நல்ல, திறமையான பெண்...”

“அட... அட... அட...” வொய்ட் திரும்பவும் சிரித்தார்.

சில நிமிடங்கள் தயங்கிய பிறகு புல் தொடங்கினான்: “இரண்டு பேரையும் உங்களைப் பார்க்க அனுப்பி வைக்கிறேன். அவர்கள் திறமையானவர்கள் என்று நீங்கள் நினைத்தால் தயவு செய்து அவர்களுக்கு உதவுவீர்களா?”

“பார்க்கலாம்” என்றார் திரு.வொய்ட்.

“நான் அவர்களை அனுப்பட்டுமா?”

“அனுப்பு.”

“எப்போது அனுப்பட்டும்?”

“வரும் சனிக்கிழமை மாலை ஆறுமணிக்கு இங்கே வந்து என்னைப் பார்க்கட்டும்.”

# 23

மூத்த திரு.வெல்லர் பெருமூச்சு விட்டபடி இப்படித் தலையைக் குலுக்கிக் கொண்டே பதிலளித்தார், ‘இந்த விவகாரங்கள் எனக்கு ரொம்பப் பழக்கமானவை ஜாமி; ரொம்பப் பழக்கமானவை. உன் தகப்பனின் உதாரணத்தைக் கருத்தில் கொண்டு வாழ்நாள்முழுவதும் நடத்தை கெட்டவர்களிடம் கவனமாயிரு... உன்னை வளைத்துப் போடும் விசயத்தில் ஒரு நடத்தை கெட்டவள் எத்தனை சாதாரணப் பெண்களுக்கு இணையானவள் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். அது இருபத்தைந்தாக இருக்கலாம் (ஒரு நடத்தை கெட்டவள் இருபத்தைந்து நல்ல பெண்களுக்கு இணையானவள்) என்று நினைக்கிறேன். அது ஒருவேளை இன்று அதிகமானதாகவும் இருக்கலாம். எனக்குச் சரியாகத் தெரியாது.

பிக்விக் பேப்பர்ஸ்
- சார்லஸ் டிக்கென்ஸ்

டாக்டர் ஆபிரஹாமின் வழிகாட்டுதலின்படி கருப்பன் வள்ளியை மருத்துவமனைக்கு அழைத்துச் சென்றான். டாக்டர் ஊசி போட்டுவிட்டு மேலும் ஊசிகள் போடுவதற்காக ஒருநாள விட்டு ஒருநாள் அவளை மருத்துவமனைக்கு அழைத்து வரும்படிக் கூறினார். கரும்பழுப்பு நிறத்தில் சில மாத்திரைகளையும் கொடுத்து மூன்று மாதங்களுக்குத் தொடர்ந்து சாப்பிட வேண்டுமென்றார்.

“சாயங்காலம் இவள கூட்டிட்டு வரலாமா ஐயா” என்று கருப்பன் கேட்டான்.

“ஏன்? காலையில அழைத்து வா” என்றார் டாக்டர்.

“காலையில வேலைக்கு போறா ஐயா.”

“இந்த நிலையில் வேலைக்குப் போகிறாளா? எப்படி முடிகிறது”டாக்டர் திகைத்துப் போனார்.

“வேலைக்குப் போகாட்டி சம்பளம் கிடைக்காது. ஊருக்குப் போக முடிஞ்சவரை பணம் சம்பாதிக்கலாமின்னு பாக்கோம். அதோட வேலைக்குப் போகாம பாடில கெடக்க மேஸ்திரி வுடமாட்டாக.” “அடடா சரி. மாலையில் வாங்க. ஆனா எப்ப அவளுக்கு வேலைக்குப்

போக முடியாத அளவுக்கு பலவீனம் வந்தாலும் என்னிடம் வாங்க. நான் லீவு வாங்கித் தர்றேன்.”

“எவ்வளவு நல்ல டாக்டர்” திரும்பி நடந்து கொண்டிருக்கும் போது வள்ளி கூறினாள்.

“எல்லோருக்கும் அவரைப் புடிச்சிருக்கு. இதுக்கு முன்னாடி எப்பவும் கத்திட்டே திட்டிக்கிட்டே இருப்பானே அவன மாதிரி இல்லாம இவர் எல்லார்கிட்டயும் அன்பா பழகறார். நம்ம நல்ல நேரத்துக்குதா இவுரு இங்க வந்திருக்காரு.”

அறைக்குத் திரும்பி வந்தபோது அங்கே ஒரே கூட்டமும் கூச்சலு மாகவிருந்தது. அன்று ஞாயிறு விடுமுறை தினம் என்பதால் வால்பாறைக்குப் போகாதவர்கள் நீண்ட நேரம் படுக்கையிலேயே புரண்டு கொண்டிருப்பது வழக்கம். வள்ளியும், கருப்பனும் மருத்துவமனைக்குக் கிளம்பும்போது கோவிந்தன் குடும்பத்தினர் எழுந்திருக்கவேயில்லை. குப்பாயியும் குழந்தைகளும் கூட உறங்கிக் கொண்டிருந்தனர் என்பதை மூடியிருந்த சமையலறைக் கதவு காட்டியது.

கோவிந்தனின் மனைவி மாரியாயிதான் முதலில் எழுந்தாள். அடுப்பு மூட்டும்போதே எப்போதும் சீக்கிரத்திலேயே எழுந்துவிடும் ராஜாவைக் காணவில்லை என்பதைக் கவனித்தாள். சமையல் முடித்த பின்பும் அவன் வருவதற்கான அறிகுறியே இல்லை.

“ஆத்துக்குப் போனாலும் போயிருப்பான். பாக்கேன்” என்றபடி கோவிந்தன் வெளியே வந்தான். லைனிலிருந்து பார்த்தாலே தெரியும் தொலைவில்தான் ஆறு ஓடிக் கொண்டிருந்தது. கோவிந்தன் பலமுறை ராஜாவைப் பேர் சொல்லி அழைத்தும் எந்தப் பதிலும் இல்லை. எனவே திரும்ப வந்து மேடைக்குக் கீழே பார்த்தவன் ராஜாவின் படுக்கையையும் காணவில்லை என்பதைக் கண்டான்.

“ஐய்யோ என்னாச்சு?” என்று மாரியாயி திகைப்புடன் கேட்டா.

“அவனை எதுக்காவது ஏதாவது திட்டினியா?”

“ஏன் இந்த மாதிரி கேக்க? நான் வேலையிலிருந்து வந்ததிலிருந்து நீயும் இங்கனயேதான இருந்த?” மாரியாயி அழத் தொடங்கி விட்டாள்.

“ஏதாவது பக்கத்து அறைக்குப் போயிருக்கானான்னு பார்த்துட்டு வாறேன்” என்று கூறிவிட்டுஒவ்வொரு அறையாகப் பக்கத்திலிருந்து அறைகளில் தேடிக் கொண்டு சென்றான். ராஜா காணாமல் போய்விட்டான் என்பது சீக்கிரமே தெளிவானது.

“ஒருவேளை சந்தைக்குப் போயிருப்பானோ?” யாரோ கேட்டார்கள்.

“சந்தைக்குப் போறவன் படுக்கையையும் தூக்கிட்டா போவான்?”

“ஒம் புருசன் அடிக்க கிடிக்க செஞ்சானா?” பக்கத்தில குடியிருக்கும் ஒரு பெண் மாரியாயியைக் கேட்டாள்.“இல்ல அவரு அடிச்சதேயில்ல. அவங்கிட்ட யாரும் ஒரு சண்டையும் போட மாட்டோம்” மாரியாயி அழுதுகொண்டே பதிலளித்தாள்.

இந்தக் கட்டத்தில்தான் கருப்பனும் வள்ளியும் மருத்துவமனையிலிருந்து திரும்ப வந்தனர். உடனடியாக இருவரும் மாரியாயி ஏதாவது தொல்லை கொடுத்திருக்க வேண்டும். அதிலிருந்து தப்ப அவன் ஏதாவது பக்கத்து அறைக்குச் சென்றிருக்க வேண்டுமென்று முடிவுக்கு வந்தனர்.

அவர்களது சந்தேகத்தை முகத்தைப் பார்த்தே தெரிந்து கொண்ட மாரியாயி அவசரமாச் சொன்னாள். “ராத்திரி படுக்கப் போகும்வர ராஜா சந்தோஷமாகத்தானிருந்தான்.”

திடீரென்று கூட்டத்திலிருந்து யாரோ கேட்டார்கள். “ஏன் குப்பாயி இன்னும் கதவைத் திறக்காம இருக்கா? இத்தனை ரகளைக்கு இடையிலயுமா ஒருத்திக்கு தூக்கம் வரும்?

வள்ளி கதவருகே சென்று கும்பலின் பேச்சொலியையும் தாண்டிக் கூச்சலிட்டாள். “குப்பாயி குப்பாயி கதவைத் தொறவேன்.”

“என்ன வேணும்?” கதவைத் திறக்காமலேயே குப்பாயி உள்ளிருந்து கேட்டாள்.

“ராசாவைக் காணாமாமக்கா. எல்லா எடத்துலயும் தேடிட்டிருக்காகவோ. கதவத் திற.”

குப்பாயி கொஞ்சமாகக் கதவைத் திறந்து வெளியே எட்டிப் பார்த்தாள். “ராசாவ ஏன் தேடறீய? அது எம் வீட்டுலதான் தூக்கிட்டிருக்கு. நாங்க கண்ணாலம் கட்டிக்கலாம்னு இருக்கோம்.”

அத்தனை பேரும் அதிர்ந்து போயினர்.

“கெழட்டுத் தேவிடியா, மகன மாதிரி இருக்கற பயலைப் புடிச்சுட்டா” கூட்டத்தில் ஒரு குரல் நிஜமான கோபத்துடன் இரைந்தது.

“உம் பொஞ்சாதிதான் தேவிடியா. அவளைப் போய் சொல்லுலே” குப்பாயி பதிலுக்குக் கொடுத்தாள்.

பக்கத்து அறைகளில் தம்பியைத் தேடிக் கொண்டிருந்த கோவிந்தன் விஷயம் அறிந்து கூச்சலிட்டபடி ஓடிவந்தான். “ஏலே ராசா

கழுதப்பயலே வெளியில வாடா.”

“ஆமா ஆமா நீதான் பெரிய கழுத” குப்பாயி இன்னும் கதவை விட்டு விலகாமல் அடைத்து நின்றபடியே அடித் தொண்டையில் பேசினாள்.

“பொட்டச்சி சேலைக்குப் பின்னாடி ஒளிஞ்சிருக்கியாலே. வெளிய வா கழுதை” கோவிந்தனுக்கு கோபம் தலைக்கேறி நரம்புகள் புடைக்க கத்தினான். ராஜா பதில் பேசவுமில்லை. வெளியே வரவுமில்லை.

“தள்ளி நில்லு, அந்த முட்டாப்பயல நான் பாக்கணும்”கோவிந்தன் செய்வதறியாது குப்பாயியைப் பார்த்து இரைந்தான்.

“உள்ள வந்தேன்னாப் பாத்துக்கோ!” குப்பாயி, கோவிந்தன் முன்னேறும் பட்சத்தில் அவன் மீது பாய்வதற்குத் தயாரானாள்.

“மேஸ்திரியக் கூட்டிட்டு வரலாம்” யாரோ ஓடினார்கள். ஆனால் சங்கரபாண்டியன் வால்பாறைக்குப் போயிருந்தான். எனவே அவனது கோல் மேஸ்திரி திருமலையை அழைத்து வந்தனர். உள்ளே வந்ததும் திருமலை முதல் வேலையாக மூன்று பெரியவர்களைத் தவிர மற்றவர்களை வெளியேறும்படி உத்தரவிட்டான். வெளியேற்றப்பட்டவர்கள் கதவருகே முண்டியடித்துக் கொண்டு வேடிக்கை பார்க்கத் தயாரானார்கள்.

திருமலை, ராஜா என்ன சொல்கிறான் என்று கேட்க வேண்டுமென்பதற்காக அவனை வெளியே விடும்படி குப்பாயியிடம் கூறினான்.

“அது வெளிய வந்தா அவங்கண்ணன் எங்கிட்டேயிருந்து இழுத்துட்டுப் போயிடுவான்.”

“அது என்ன ஒஞ்சொத்தா?” என்றாள் மாரியாயி.

“சத்தம் போடாதிய, சளசளசளன்னு பன ஓலைல நாய் மோண்ட மாரி” என்று மற்றவர்களை அடக்கிவிட்டு திருமலை குப்பாயியிடம் பேசினான். “ஒருத்தருக்கும் ஒரு தப்பும் நடக்காம பாத்துக்கத்தான் எல்லாரும் இங்க இருக்கோம். அவன மொதல்ல வெளிய வரச் சொல்லு.”

குப்பாயி கதவை இன்னும் கொஞ்சம் திறக்க ராஜா அந்த இடைவெளியில் தலையை நீட்டினான்.

“என்னா தைரியசாலி பாரு. பொட்டச்சிக்குப் பின்னாடி ஒழிஞ்சிட் டிருக்குதான்” கோபத்தைக் காட்ட வழியில்லாமல் அதை வெறுப்பாக மாற்றிக் கொண்டான் கோவிந்தன்.

“பேசாம இருல” திருமலை கோவிந்தனை அடக்கிவிட்டு ராசாவிடம் திரும்பினான். “குப்பாயி சொல்லுதா நீ அவளக் கண்ணாலம் கட்டிக்கப் போறேன்னிட்டு. உண்மையால?”

“ஆமா” ராசா யாருடைய கண்களையும் சந்திக்காமல் முகத்தை மறைத்துக் கொண்டு பதிலளித்தான்.

“சின்னப்பயலுக்கு அம்மால்லா வேணும். இவன் பொஞ்சாதி கேக்கான்.” கதவோரம் முண்டியடித்துக் கொண்டு வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த ஒருவன் சொன்னான். வேறு யாரோ குழந்தை அழுவதுபோல் அழுது காட்டினார்கள்.

“அம்மா ஆ ஆ ஆ... அம்மா ஆ ஆ ஆ...”

“குப்பாயி அவனுக்குப் பால்கொடுப்பா” கூட்டத்தில் சிரிப்பு அலை எழுந்தது.

“ஏலே நீ சின்னப் பயதானே. உனக்கெதுக்கு இப்பக் கண்ணாலம்?” திருமலை கேட்டான்.

“எங்கண்ணாச்சி எஞ்சம்பளமெல்லாம் புடுங்கிக்குது. நான் அரைவயித்தோட பட்டினி கெடக்கேன்.”

“ஆண்டவனே! சொந்தத் தம்பியாட்டம் பாத்துக்கிட்டதுக்கு இப்பிடிச் சொல்லுதானே!” கொஞ்சநேரமாக அமைதியாயிருந்த மாரியாயி பெருங்குரலெடுத்து அழத் தொடங்கினாள்.

“அம்மா அப்பா செத்த பின்னாடி பாத்துக்க யாருமில்லேன்னுல்ல நான் இந்தப் பயலக் கூடக் கூட்டியாந்தேன். இப்ப இப்பிடிப் பேசுதானே நன்றிகெட்ட நாயி” கோவிந்தனும் அவளுடன் சேர்ந்து கொண்டான்.

“நீ இவுங்களோடதான்ல சாப்புடுதே அப்ப உன்னோட ரேசனும் செலவு காசும் அவங்களுக்குத்தான்லே போகும்?” திருமலை கேட்டான்.

“இனிமேல் அப்படி வேண்டாம். நான் என்னோட வூட்ல சாப்பிடுவேன். என்னோட ரேசனும், செலவு காசும் எனக்கு வரணும்.” ராஜா எங்கோ பார்த்துக் கொண்டு தீர்மானமாகச் சொன்னான்.

“கிளிப்பிள்ளைக்கு நல்லாச் சொல்லிக் குடுத்திருக்குதா” என்றாள் மாரியாயி.

“நீ அவனப் புடிக்கலாம்னு காத்துக் கெடக்கல? நீ கண்ணு போடறத நானும்தான் பார்த்திருக்கேன்லா” என்றாள் குப்பாயி.

பேச்சு அபாயகரமாகப் போய்க் கொண்டிருப்பதை உணர்ந்தோ

என்னவோ திருமலை "நாத்தம் புடிச்ச வாயை மூடு" என்ற குப்பாயியிடம் சீறிவிட்டு ராஜாவிடம் திரும்பினான்.

"சரிலே. கோவிந்தங்கூட இருக்க வேண்டாம். இன்னொரு கூலி இருக்கான். அவங்கூட அம்மாக் கெழவி மட்டுந்தான் இருக்கா. நான் ஏற்பாடு பண்ணுதேன். கணக்கு முடிக்கற வரைக்கும் அங்க போய் இரு. குப்பாயியக் கண்ணாலம் கட்டிக்கணும்னா ஊருக்குப் போன பொறவு கட்டிக்கோ."

"அதெல்லாம் முடியாது நா எங்கியும் போகமாட்டேன். குப்பாயி கூடத்தான் இருப்பேன்" ராஜா உறுதியாகத் தலையாட்டி மறுத்தான்.

"நீங்க எல்லாருமாச் சேந்து எம்புருசனை எங்கிட்டேயிருந்து பிரிக்கப் பாக்குதீய" என்றாள் குப்பாயி.

"என்னவொரு தங்கமான பொஞ்சாதி" மாரியாயி கிண்டல் செய்தாள்.

"நாஞ் செலவழிச்ச பணத்தைத் திருப்பிக் கொடுத்திரட்டும். அப்புறம் எந்தக் கெழட்டுத் தேவிடியாகூட வேணாலும் போய்க்கட்டும் எனக்கென்னா?" என்றான் கோவிந்தன்.

திருமலை அறையிலிருந்து மூன்று பெரியவர்களுடனும் கலந்து பேசினான். இறுதியில் கணக்கு முடிக்கும்போது ராஜாவின் சம்பளத்தில் பாதியை கோவிந்தனுக்குக் கொடுத்துவிட வேண்டுமென்றும், கோவிந்தனுக்குக் கொடுக்கப்பட்ட அட்வான்ஸ் தொகையில் மூன்றில் ஒரு பகுதியை ராஜா அடைக்க வேண்டும் என்றும் முடிவு செய்யப்பட்டது. மேற்கொண்டு சண்டைகள் வராமல் தடுக்க குப்பாயிக்கும் ராஜாவுக்கும் வேறொரு அறை கொடுக்கப்பட வேண்டுமென்றும் அவர்கள் முடிவு செய்தனர்.

"இத நான் ஒடனே செஞ்சு போடுதேன்" என்றான் திருமலை. திருமலை சற்றுமுன் ராஜாவைத் தங்க வைக்க விரும்பிய கூலியும், அவன் தாயும் சமையலறைக்குக் கொண்டு வரப்பட்டு, அவர்களது அறை குப்பாயியின் குடும்பத்திற்குக் கொடுக்கப்பட்டது.

"இனிமேல் சண்டகிண்ட எதுவும் போடக்கூடாது" திருமலை சம்பந்தப்பட்ட அனைவரையும் எச்சரித்தான். "அப்படி ஏதாவது கெளம்புச்சுன்னா பெரியய்யாகிட்ட சொல்லி எல்லாத்தையும் போலீஸ் ஸ்டேசனுக்கு அனுப்பிருவேன்."

அத்தனைப்பேரும் கிளம்பிப் போனதும் ராஜா தான் சொன்னபடியே மாரியாயி குறித்து யாரிடமும் ஒரு சொல்லும் பேசவில்லை என்று

ஆச்சரியத்துடன் வள்ளி கருப்பனிடம் கிசுகிசுத்தாள்.

“ராஜாவுக்கும், குப்பாயிக்கும் ஏதாவது இருக்கும்னு நெனச்சியா?” கருப்பன் கேட்டான்.

“இல்லவே இல்ல. குப்பாயி ராசாவப் பத்தி பேசவே மாட்டா ஒருநாள் போன வாரம் தன் பொண்ணுகிட்ட வழிஞ்சான்னு அவ ராசாவ திட்டக்கூட செஞ்சா மாமா.”

“அதுதான் அவளோட தந்திரம். யாருக்கும் சந்தேகம் வராமப் பாத்துட்டிருக்கா.”

# 24

அதனாலென்ன, என்னால் ஒன்றும் செய்ய முடியாது. அது அவனுக்குத் தெரியும். நான் ஒரு கீழ்நிலை அதிகாரிதான். எனது நேரத்திற்கு எந்த மதிப்பும் இல்லை.

இந்தியனைப் பொறுத்தவரை அவனுக்கு திண்ணை போதும். அவன் அங்கேயே இருக்கட்டும்.

எ பேசேஜ் டு இண்டியா
- இ.எம்.பாஸ்டர்

அந்த ஆண்டு மழைக் காலத்திற்கு ஒரு முடிவே இல்லை போல் தோன்றியது. அடைமழை வழக்கமாக நவம்பர் தொடக்கத்தில் நின்றுவிடும். பின்பு விட்டு விட்டுத்தான் மழை வரும். இடையிடையே இதமாக சூரியனும் ஒளி வீசும். ஆனால் நவம்பர் மாதம் பாதி கடந்த பின்பும்கூட தொடர்ந்து கடும் மழை கொட்டிக் கொண்டிருந்தது. ஒரு நாளைக்கு ஒரு அணா கூடக் கிடைக்கவில்லை. கொழுந்துகளைத் தேடித்தான் கிள்ள வேண்டியிருந்தது.

குமரிமலையிலிருந்த மேஸ்திரிகளெல்லாம் ஒன்றாகச் சேர்ந்து வந்து பெரிய காட்டு ஐயாவை சந்தித்து மாரியம்மனின் கோபத்தைத் தணிக்கப் பலி கொடுக்கப்பட்டாலொழிய மழை பெய்வது நிற்காது, கூலிகளுக்கு நல்ல சம்பளமும் கிடைக்காது என்று முறையிட்டனர்.

“அப்போ ஜெனரல் மேனேஜரிடம் பணம் கேட்டு எழுதனுங்கிறீயளா?” அப்பாவு கேட்டார்.

“ஆமா ஐயா” அவர்கள் கோரஸாக பதிலளித்தனர்.

“இன்னைக்கு சனிக்கிழமை, மாலைக்குள்ள பணம் கிடைச்சுட்டுன்னா நாளை லீவுங்கிறதால நாளைக்கே பலி கொடுத்திடலாம்..”

“சனிக்கிழமை சாயந்திரம் ஜி.எம் ஆபிஸுக்கு வரமாட்டாருங்கிறது உங்களுக்குத் தெரியாதா? இப்ப எழுதினா திங்கட்கிழமை சாயங்காலம்தான் பணம் கிடைக்கும்.”

மேஸ்திரிகள் ஜெனரல் மேனேஜரை அவரது பங்களாவிற்குச் சென்று பார்த்து பணம் வாங்கித் தரும்படி கெஞ்சிக் கேட்டுக் கொண்டனர்.“சரி, என் வேலையெல்லாத்தையும் நான் முடிக்காண்டாமா? ராத்திரி போயி அவர பங்களால பார்க்க முடியுதான்னு பாக்கேன்.”

தான் வாக்களித்தபடி அப்பாவு இரவு ஏழுமணிக்கு மேனேஜரைப் பார்க்கச் சென்றார். ஏதாவது குமாஸ்தா துரையை அவரது பங்களாவில் சென்று பார்க்க வேண்டுமென்றால் முதலில் சமையலறைக்குச் சென்று பட்லரிடம் எஜமானைப் பார்க்க விரும்புவதாகக் கூற வேண்டும். பட்லர் எஜமானிடம் சொல்வான். எஜமான் சமையலறைக்கு வந்து குமாஸ்தாவைப் பார்ப்பார். மேனேஜர்கள் இந்திய ஊழியர்களை தங்களது வரவேற்பறையிலோ அல்லது வராந்தாக்களிலோ சந்திப்பது கௌரவக் குறைச்சல் என்று கருதினர். பங்களாவுக்கு முன்புறம் இருந்த காம்பௌன்டில் கூட அவர்கள் இந்தியர்களை சந்திக்க மாட்டார்கள். எனவே மரபுப்படி அப்பாவு சமையலறைக்குச் சென்று மேஸ்திரிகள் மாரியம்மனுக்கு பலி கொடுக்க விரும்புவது தொடர்பாக மாஸ்டரை சந்திக்க விரும்புவதாக பட்லரிடம் தெரிவித்தார்.

பட்லர் அப்பாவுக்கு நெருங்கிய நண்பன். பட்லர் விரும்பும்போதெல்லாம் அப்பாவு எஸ்டேட்டிலிருந்து இலவசமாக விறகும் அவனது காய்கறித் தோட்டத்தில் வேலை செய்ய கூலிகளும் வழங்கி வந்ததில் அவர்கள் நட்பு ரொம்பவும் பலப்பட்டுப் போயிருந்தது. பட்லர் அப்பாவுவை ஓரமாக அழைத்துச் சென்று “மாஸ்டர் முக்கியமான சோலியா இருக்காரு” என்று கிசுகிசுத்தான். பின்பு குரலை இன்னும் தணித்துக் கொண்டு அப்பாவுவின் காதுகளில் ஒரு சிபாரிசுக்காக வந்த குரங்குமலை எஸ்டேட் எழுத்தரின் மனைவியோடு துரை முக்கியமான வேலையாக இருக்கிறார்” என்று கிசுகிசுத்தான்.

“மேடம் உள்ள இல்லியா?” அப்பாவுவும் அதேபோல் கிசுகிசுப்பாகக் கேட்டார்.

“மேடம் கிளப்புக்கு போயிருக்காவ, சாப்பாட்டை வெளியிலயே முடிச்சிட்டுதான் வருவாவ” என்று சொல்லிவிட்டு பட்லர் அத்தனைப் பற்களையும் காட்டினான்.

“ரைட்டர் பொஞ்சாதி இதுக்கு முன்னாடியும் இங்க வந்திருக்காளா?”

“ஆமா. மொதல்ல புல்கிட்ட இருந்து சிபாரிசுக் கடிதம் வாங்கிட்டு புருசன்கூட வந்தா. அதுக்கப்புறம் எப்பப் பாத்தாலும் ஒத்தைலதான் வாரா. நீலகிரியிலயோ, எங்கியோ உதவி மேனேஜர் வேல காலி இருக்கும் போல இருக்கு. எசமான எப்படியாவது சரிகட்டி அத வாங்கிடணும்னுதான் ஹெட் ரைட்டர் படாதபாடுதான்னு புல்லோட பட்லர் சொல்லுதான்.”

“வேலை கிடைச்சுடும் போலத் தெரியுதே” என்றார் அப்பாவு.

“ஆமா” பட்லர் திரும்பவும் இளித்தான்.

“அப்ப சரி, நான் எசமானை திங்கள் காலையில ஆபீஸில வந்து பாத்துக்குதேன்” அப்பாவு குடையை விரித்துக் கொண்டு கிளம்பினார்.

வீட்டுக்குத் திரும்பி வந்தபோது மேஸ்திரிகள் கொட்டும் மழையிலும் தனக்காகக் காத்துக் கொண்டிருப்பதைக் கண்டார்.

“பெரிய தொரை கிளப்புக்கு போயிட்டாரு. நான் காளிச் செட்டிக்கு ஒரு கடுதாசி தாரேன். அவரு வேணுங்கிறதத் தருவாரு. திங்கட்கிழமை ஆபிஸிலிருந்து பணமெடுத்துக் குடுத்திருதேன்” என்றார்.

மேஸ்திரிகள் தேவையானவற்றை வாங்கி மாரியம்மனை வணங்கி மழையின் சீற்றத்தைத் தணிப்பதற்கு, நிறுத்துவதற்கு உதவி புரியும்படி கேட்டுக் கொண்டனர். வழிபாடு முடிந்தபின்பு கொட்டித் தீர்த்துக் கொண்டிருந்த பேய் மழையை நிறுத்துவதற்கு தங்களால் ஆன அனைத்தையும் செய்து முடித்து விட்டதாக ஒவ்வொருவருக்கும் மனநிறைவு ஏற்பட்டது.

# 25

உறக்கம் என்பது ஒரு வேளை கனவு
காண்பதற்கும்தான். ஆ அது என் உள்ளத்தைக்
கழுவித் தூய்மையாக்குகிறதே!...

ஹாம்லெட்
-ஷேக்ஸ்பியர்

வள்ளிக்குப் போடப்பட வேண்டிய ஊசிகள் அனைத்தும் போடப்பட்டு விட்டன. ஆனால் அவள் நிலையில் குறிப்பிடத்தக்க முன்னேற்றம் எதுவும் தெரியவில்லை. உண்மையில் கால்களில் இருந்த வீக்கம் இன்னும் மோசமாகத்தான் ஆகி இருந்தது. டாக்டர் கருப்பனிடம் வள்ளி எழுந்து நடமாட முடியாத நிலையை நெருங்கிக் கொண்டிருக்கிறாள் என்றார். கூடவே, அவளை இனிமேலும் வேலை செய்ய அனுமதிப்பது ஆபத்தாக முடியும் என்று எச்சரிக்கையும் செய்தார்.

வேலைக்குப் போகாவிட்டால் அவளுக்கு ரேசன் கிடைக்காது என்பது தனக்குத் தெரியும். எனவே அவளை இங்கே கொண்டு வந்து சேர்ந்துவிட்டால் மருத்துவமனையிலிருந்து அவளுக்குத் தான் உணவு கொடுத்து விடுவதாகவும் அப்போது அவளுக்கு ரொம்ப தேவையாயிருக்கின்ற ஓய்வு கிடைப்பதோடு நேரடிக் கண்காணிப்பிலும் இருக்க முடியும் என்றும் டாக்டர் கூறினார். கருப்பன் நேராக முத்துக்கருப்பனிடம் சென்று மருத்துவமனையில் சேர்வதற்கு நல்ல நாள் குறித்துத் தரும்படி கேட்டான்.

“வார ஞாயித்துக் கெழம நாள் நல்லாயிருக்கு. காலையில சூரிய உதயத்துக்கு பொறவு மதியத்துக்குள்ளார அவளை ஆசுபத்திரிக்கு கொண்டுட்டுப்போ. அவளுக்கு ரெண்டு தாயத்து கட்டணும். ஒண்ணு கழுத்திலயும், ஒண்ணு இடுப்புலயும். அவளோட கிரகங்களெல்லாம் ரொம்ப மோசமான நெலமைல ஒண்ணு சேரப் போகுது. கவலப்படதுக்கு ஒண்ணும் இல்ல. நான் இருக்கேன்லா. என் தாயத்து அவளை எல்லா கெட்ட சத்திகிட்டேயிருந்தும் காப்பாத்தும்” என்றான் முத்துக்கருப்பன்.

“அதுக்கு எவ்வளவு செலவாகும்?”

“இத பாருல, அவளை எம்புள்ள மாதிரி நெனைச்சிட்டுருக்குதேன். எவ்வளவு கொறவாப் பண்ண முடியுமோ அவ்வளவு கொறவாப் பண்ணித் தாறேன். பத்து ரூபா தந்தாப் போதும்” கொஞ்ச நேர

பேரத்திற்குப் பின்பு முத்துக்கருப்பன் ஆறு ரூபாய்க்கு தாயத்துகள் தருவதாக ஒப்புக் கொண்டான். எனவே கருப்பன் அந்தப் பணத்தை ஆபிஸில் பெற்று முத்துக்கருப்பனிடம் கொண்டுவந்து கொடுத்தான். தாயத்துகள் தயாரானதும் கருப்பன் வள்ளியை மாரியம்மன் கோயிலுக்கு அழைத்துச் சென்றான். அங்கே முத்துக்கருப்பன் சில மந்திரங்களை ஓதிவிட்டு தாயத்துகளை வள்ளியின் கழுத்திலும், இடுப்பிலும் கட்டும்படி கூறி கருப்பனிடம்கொடுத்தான்.

“இப்ப நீங்க சந்தோசமா இருக்கலாம் மக்கா. இந்தத் தாயத்து உன்னை எல்லா கெட்ட சக்திகிட்ட இருந்தும் காப்பாத்தும், நான் சொல்லுதேன் கேளு, நீ ஆசுபத்திரியிலிருந்து வரும்போது கொழுக் மொழுக்-னு துள்ளிக் குதிக்கிற ஆம்பிளைக் கொழந்தையோட உடம்பு முழுசும் சொகமாயி வாரீயா இல்லயான்னு பாரு” என்றான் முத்துக் கருப்பன்.

சனிக்கிழமை இரவு வள்ளி மருத்துவமனைக்குப் போவதற்கான ஏற்பாடுகள் செய்தாள். சமையல் தொடர்பாக, ஒரு நாளைக்கு எவ்வளவு அரிசி போட வேண்டும். வாரத்திற்கு எத்தனை சாமான்கள் வாங்க வேண்டும் என்பது பற்றியெல்லாம் கருப்பனுக்கு ஆலோசனைகள் கூறினாள்.

“எத்தன நாளைக்கு ஆசுபத்திரில இருக்கணுமோ... நீ ஒத்தைல கஷ்டப்பட்டு சோறுப் பொங்கி திங்கணுமோ தெரியல மாமா.”

“சோறு பொங்கதா பெருசு. என் வள்ளி குணமாயி துள்ளி குதிச்சி நடக்கணுமுன்னல்லா நான் ஆண்டவங்கிட்ட கேட்டுட்டு இருக்கேன்.”

அன்றிரவு வள்ளிக்கு எப்பொழுது பிரசவமாகும் என்று விசாரிக்க கோல் மேஸ்திரி திருமலை வந்தான். டாக்டர் உடனடியாக அவளை மருத்துவமனையில் சேர்க்க வேண்டுமென்று சொல்லியுள்ளதாக கருப்பன் பதிலளித்தான்.

“இன்னொரு வாரமும் அவளால வேலை செய்ய முடியாதா?” என்று எரிச்சலுடன் கேட்டான் திருமலை. “உனக்கே தெரியுமில்லலே, இவ வேலைக்கே ஒழுங்கா வர்றதில்ல. கணக்குத் தீர்க்கிற அன்னைக்கு அவ கடனில மாட்டிக்கப் போறான்னு நெனக்கேன்” கருப்பன் வள்ளியின் வீங்கிய கால்களை சுட்டிக்காட்டி சொன்னான்.

“இவளால நடக்கவே முடியல. எப்படி மலைமேல ஏறி கொழுந்தக் கிள்ளுவா?”

“ஐயாகிட்டப் பேசி அவள மேடுபள்ளம் இல்லாத காட்டுக்கு கொழுந்து கிள்ள அனுப்புதேன். இதவிட அதிகமா கால் வீங்கிப் போன

பொம்பளைங்களெல்லா பேறுகாலத்துக்கு முந்தின நாள்வரைக்கும் வேலை பாக்குதாங்க.”

“டாக்டரய்யா இவள உடனே ஆஸ்பத்திரிக்கு கொண்டு வந்து சேர்க்கச் சொன்னார். அவர் சொன்னபடி கேட்க வேணாமா?”

“சரி சரி அவரு சொல்றபடியே கேளுல, நல்லா கடனில கிடந்து அவஸ்தபட்டா டாக்டர் ஐயாவே வந்து எல்லாக் கடனையும் கட்டுவாரு”என்று சொல்லிவிட்டு கோபத்துடன் வெளியேறினான்.

“என்ன மாதிரி மனசாட்சியே இல்லாத சென்மங்க. அவங்களுக்கு வர்ற பணத்தைப் பத்திமட்டும்தான் கவலைப்படுதாங்க” கருப்பன் சுவரைப் பார்த்துக் கொண்டே முணுமுணுத்தான்.

அவர்கள் படுக்கையில் படுத்தவுடன் வள்ளி கணவனின் தோளைத் தொட்டாள். “எனக்கென்னமோ இந்த எடத்தில இன்னைக்குத்தான் எனக்கு கடைசி நாளுன்னும், நான் பத்திரமா திரும்பி வந்து சேர மாட்டேன்னும் தோணுது மாமா”, என்று சொல்லிவிட்டு கண்ணீர் வடிக்கத் தொடங்கினாள். கருப்பனின் கண்களிலும் கண்ணீர் நிரம்பியது. இருந்தாலும் சமாளித்துக் கொண்டு அவள் முதுகை மிருதுவாகத் தடவிக் கொடுத்தான்.

“உனக்கு நல்லபடியா பிரசவம் ஆயிடும் புள்ள.. எனக்கு அது நல்லாத் தெரியும். பிரசவத்துக்கு அப்புறம் வீக்கம் கொறஞ்சிரும். உடம்பு நல்லபடியா ஆகிடும்னு டாக்டர் சொல்லியிருக்காரு. உனக்கு கிளம்பற அளவுக்கு பலம் வந்திருச்சுன்னா நம்ம ஊருக்குப் போலாம். எங்கம்மாவும் உங்க அம்மா அப்பாவும் பேரக் குழந்தையப் பாத்து எத்தன சந்தோசப்படுவாங்க.”

“ஊரைவிட்டுக் கிளம்பி வந்து மூணு வருசம் ஆகுது. ஆனா பத்து வருசமா இருக்கிற மாதிரி தெரியுது மாமா. எங்கப்பாவும், பாட்டியும் எப்படியிருக்காங்களோ! என்ன மாதிரி ஆசையோட இங்கே வந்தோம். உனக்கு ஞாபகமிருக்குதா? ஒரு வருசம் கழிச்சு வீட்டுக்குப் போகும்போது பாட்டிக்கும் அம்ம, அப்பாவுக்கும் பொள்ளாச்சி பெரிய சந்தையில புது துணிமணி வாங்கிட்டு போலாம்னு நினைச்சோமில்ல. மூணு வருசம் வேலை செஞ்ச பின்னாடியும்கூட ஒரு புதுத்துணி கூட வாங்க முடியாம இருப்போம்னு நினைச்சே பாக்கலையில்லா.”

“பரவாயில்ல, போகட்டும், இந்த வருசம் ஊருக்குப் போகிறதுக்கும், நமக்கும் நம்ம அப்பா அம்மாவுக்கும் துணி வாங்கிறதுக்கு வேணும்கிற பணம் கிடைக்கும், ஊருக்குப் போற வரைக்கும் கொஞ்சம்

பொறுத்துக்கோ; போன பின்னாடி ஊரிலிருக்கிற அத்தனை பேர்கிட்டயும் நாம இங்கே என்னா கஷ்டப்பட்டோம்ங்கிறதைச் சொல்லி இந்த நரகத்துக்கு ஒரு ஆளும் வராமத் தடுக்கப் போகுதேன்.”

மொதல்ல இங்கிருந்து வெளியே போகப் பார்க்கலாம் என்று சொல்லிவிட்டு வள்ளி எதையோ நினைத்துக் கொண்டு கேட்டாள்,

“மாமா உங்கிட்ட ஒண்ணு கேட்டா கோவிச்சுக்க மாட்டேயே?”

“என்ன வள்ளி இப்படி ஒரு கேள்வி கேக்குதே. நாலு வருசம் நாம ஒண்ணா இருந்திருக்கிறோம். நான் எப்பவாவது உங்கிட்ட கோபப்பட்டிருப்பேனா?”

“இல்ல இல்ல நீ எப்பவுமே தங்கமான புருசனாத்தான் இருந்திருக்கே. அன்பாத்தான் இருந்திருக்கே. உங்கூட இன்னும் கொஞ்ச வருசம் இருக்கிறதுக்கு ஆண்டவன் என்ன விடமாட்டான்னு என் மனசுக்குத் தோணுது. இங்கேயே செத்துப் போயிருவேனோன்னு பயமாயிருக்கு. ஆனா நீ கண்டிப்பா ஊருக்குத் திரும்பிப் போவ மாமா! என் அப்பா அம்மைகிட்ட நான் இல்லாதப்ப பாசமா இருப்பேன்னு வாக்குக் குடுப்பியா?”

“கடவுளுக்குப் பொதுவா நான் நீ சொன்னபடி செய்வேன் வள்ளி. ஆனா உங்கிட்ட ஒரு விசயம் சொல்லுதேன். நாம ஒண்ணா ஊருக்குப் போவோம். இல்லாட்டி இங்கியே ஒண்ணாச் செத்துப் போவோம். தனியா நான் வூட்டுக்குப் போக மாட்டேன். உனக்கு நல்லபடியா பிரசவம் ஆகணும்னு வேண்டிக்குதேன். அப்புறம் நாம ரெண்டு பேரும் ஒண்ணா ஊருக்குப் போலாம்” கருப்பன் பேசியதைக் கேட்டு வள்ளி விம்மினாள். கருப்பன் அவளை அணைத்துக் கொண்டு நம்பிக்கையூட்ட முயன்றான். அப்படியே அவர்கள் இரவு நெடுநேரம் தாங்கள் மகிழ்ந்திருந்த பழைய காலங்களைப் பற்றிப் பேசிக் கொண்டே விழித்திருந்தனர்.

கருப்பன் அடித்துப் போட்டதைப் போல் தூங்கிப் போன பின்பும் வள்ளிக்கு நிம்மதியான உறக்கம் கிடைக்கவில்லை. அடிக்கடி உலுக்கிப் போட்டு கொண்டும், திடுக்கிட்டு விழித்துக் கொண்டுமிருந்தாள் அவள். விடியற்காலை நேரத்தில் வள்ளிக்கு ஒரு கனவு வந்தது. அதில் அவள் மயிலோடையில் தங்களது சின்னஞ்சிறிய குடிசையில் இருக்கிறாள். கருப்பனின் அம்மா மூட்டு வலிக்கான எந்த அறிகுறியுமின்றி அங்குமிங்கும் ஓடியாடிக் கொண்டிருப்பதைக் காண்கிறாள். குடிசை பனையோலைகளாலும், மாவிலைகளினாலும்

அலங்கரிக்கப்பட்டிருக்கிறது. கதவில் மஞ்சள் மலர்களாலான ஒரு மாலை தொங்கிக் கொண்டிருக்கிறது. அறிமுகமற்ற ஆட்கள் அங்குமிங்கும் நடமாடிக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் கருப்பனைக் காணவில்லை. கருப்பனின் அம்மா ஒரு புதுசேலை அணிந்து ஒரு பித்தளைத் தட்டை சந்தனம், குங்குமம் கலந்த கலவையில் மிதக்கும் மலர்களோடு கையில் ஏந்திக் கொண்டிருக்கிறாள். திடீரென்று வெளியேயிருந்து இசையொலி கேட்கிறது. எல்லோரும் வெளியே ஓடுகின்றனர். முத்தாத்தாள் முன்னே நகர்ந்து கதவுக்கு முன் முகம் நிறையச் சிரிப்புடன் நின்று கொள்கிறாள். வெளியே பார்த்த வள்ளி ஒரு இளைஞன் மாலையும் மஞ்சள் ஆடைகளும் அணிந்து குடிசையை நோக்கி வந்து கொண்டிருப்பதைக் காண்கிறாள். அவனோடு வேறு பலரும் வருகிறார்கள். அவனருகில் மஞ்சள் ஆடைகளணிந்த ஒரு பெண்ணும் வருகிறாள். அவளும் கழுத்தில் மாலையணிந்திருக்கிறாள். அந்த மனிதனின் முகம் வேறு புறம் திரும்பியிருந்ததால் வள்ளியால் அவனை அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை. அருகே வரவர அவனது உருவம், உடல்வாகு, நடை அனைத்துமே மிக மிக பழக்கமானதாகத் தோன்றியது. இதயம் வேகமாக அடித்துக் கொள்ளத் தொடங்க, உயிரையே கண்களில் தேக்கி கழுத்தை நீட்டி உற்றுப் பார்க்கிறாள். அதேநேரத்தில் அந்த மனிதன் முகத்தைக் குடிசை நோக்கித் திருப்புகிறான். அது கருப்பன்! அவனது தாயாரை ஒருபுறம் தள்ளிவிட்டு விட்டு வள்ளி ஓடிச்சென்று அவனுடன் வரும் பெண்ணை உற்று நோக்குகிறாள். என்ன அதிர்ச்சி! அது வேறு ஒரு பெண். அவளது கழுத்திலிருந்த மாலையைப் பிய்த்து வீசுவதற்கு கையை உயர்த்துகிறாள். அதற்குள் கருப்பனின் அம்மா தன் இரு கைகளிலும் ஏந்தியிருந்த பித்தளைத் தட்டை மூர்க்கத்தனமாக அவள் தலையில் இறக்குகிறாள். அலறியெழுந்த வள்ளிக்கு தான் தங்களது அறையில் தூங்கிக் கொண்டிருப்பதை உணரக் கொஞ்ச நேரம் பிடித்தது. கருப்பன் அவளைப்பிடித்து உலுக்கிக் கொண்டிருந்தான்.

“வள்ளி ஏன் கத்தினே?”

“ஐயோ என்ன ஒரு பயங்கரமான கனவு. நான் பயந்தே போயிட்டேன்” என்று வள்ளி படபடப்பு தீராமல் பதிலளித்தாள்.

“இப்பொழுதுதான் விடியத் தொடங்கியிருக்கு. இன்னும் கொஞ்ச நேரம் தூங்கு. அடுப்புப் பத்த வெச்சு சாப்பாட்டைச் சூடுபடுத்துதேன்” என்றான் கருப்பன். வள்ளி தூங்க முயலத்தான் செய்தாள் என்றாலும் அவள் மனமிருந்த நிலையில் அவளால் கண்மூடவே முடியவில்லை. எனவே அவளும் எழுந்து வெளியே சென்றாள். தான் கண்டக் கனவைப்

பற்றி மட்டும் யாரிடமும் சொல்லவில்லை. உணவுக்குப் பிறகு மாரியாயியும் உடன்வர கருப்பன் அவளை மருத்துவமனைக்கு அழைத்துச் சென்றான். டாக்டர் வள்ளிக்கு ஒரு படுக்கையை அளித்து அங்கேயே உணவு அளிக்கப்படுமென்றும், தனது அனுமதியில்லாமல் வேறெந்த உணவையும் அவளுக்குத் தந்துவிடக் கூடாது என்றும் கண்டிப்பாகக் கூறிவிட்டார்.

இரவு நேரங்களில் கருப்பன் வள்ளியுடனிருக்க அனுமதி வழங்கப்பட்டது. மாரியாயி ஒவ்வொருநாள் மாலையும் வேலை முடிந்ததும் தான் மருத்துவமனை வருவதாகக் கூறிவிட்டுச் சென்றாள். மாலையில் சமைத்த பின்பு வருவதாகக் கூறிக் கருப்பன் தானும் விடைபெற்றுக் கொண்டான்.

# 26

செல்வர்களே சற்றுக் கேளுங்கள். உங்களுக்கு வரப்போகும்
இழிநிலையை நினைத்து அலறி எழுங்கள்...
உங்கள் வயலில் அறுவடை செய்த வேலையாள்களுக்குரிய
கூலியைப் பிடித்துக்கொண்டீர்கள்; அது கூக்குரலிடுகிறது.
அறுவடைசெய்தவர்களின் கூக்குரல்
ஆண்டவருடைய படைகளின் செவிக்கு எட்டியுள்ளது.

பைபிள் -யாக்கோபு- 5

குமரிமலை எஸ்டேட்டில் அலுவலக உதவி குமாஸ்தாக்களான ராஜ், அருள்தாஸ், கிருஸ்துதாஸும் அப்பாவுவின் மருமகனான ராபர்ட்டும் ஒரு ஞாயிறு மாலை ராஜின் வீட்டில் சீட்டு விளையாடிக் கொண்டிருந்தனர்.

"நாள் முழுக்க வெயில் அடிச்சிட்டே இருக்கு. ரொம்ப இதமா இருக்கு. அப்படியே நடந்து போயிட்டு வரலாமா?" என்று கிறிஸ்துதாஸ் எல்லோரையும் அழைத்தான்.

"சரி. டீ குடிச்சிட்டு மலை ரோடு வரைக்கும் போயிட்டு வரலாம்" என்று ராஜ் ஒப்புக் கொள்ள அவர்கள் தேநீர் அருந்திவிட்டு உலாவக் கிளம்பினார்கள்.

"போன வாரம்தான் மாரியம்மனுக்கு பலி குடுக்கிறதுக்கு மேஸ்திரிகளுக்கு அம்பது ரூபா குடுத்தோம். இப்ப நாள் முழுக்க வெயில் பளிச்சின்னு அடிக்கி. இந்த மடையனுக படையல் போட்டதாலதான் மழை நின்னுட்டுன்னு நினைச்சிகிடுவாக" என்றான் ராஜ்.

"என்னமாதிரி ஒண்ணும் தெரியாத ஜனங்களா இருக்கிறாக?" என்றான் கிறிஸ்துதாஸ்.

"இதில வேடிக்கை என்னன்னா ஏப்ரல்ல வந்து மழை வருணுமின்னு காவு குடுக்கப் பணம் கேப்பாக. நவம்பர்ல மழைய நிறுத்தணுமின்னு காவு குடுக்கப் பணம் கேப்பாக. ஆனா சரியா மழை ஆரம்பிக்கிற நேரத்திலும், மழை முடியற நேரத்திலயும்தான் இவங்க பூசை நடக்கும்."

"நம்ம எஸ்டேட்டில மட்டுந்தான் இப்படியா? எல்லா எஸ்டேட்டிலயுமா?" ராஜின் வேகத்துக்கு ஈடுகொடுத்தபடி மூச்சிரைக்க

நடந்து கொண்டே கிறிஸ்துதாஸ் கேட்டான்.

“ஆனைமலைகளில் இருக்கிற எல்லா எஸ்டேட்டுகளிலும் இப்படித்தான்” என்றான் ராஜ்.

“மூணாறிலயும் கூடத்தான்” என்றான் ராபர்ட்.

“ஜூன் மாசம் கவாத்து தொடங்கும்போது எதாவது விபத்து நடக்காமத் தடுக்க இன்னொரு பூஜை பண்ணி பலி குடுப்பாக” என்றான் ராஜ்.

“அதென்னது கவாத்து?” கிறிஸ்துதாஸ் கேட்டான்.

“தேயிலைச்செடியத் தானா வளர விட்டா பெரிய மரமாயிடும். கொழுந்து கிள்றவங்க மரத்து மேல ஏறித்தான் கிள்ளணும். அதனால மூணு நாலடி உயரத்துக்கு மேல தேயிலைச்செடிய வளர விடாமக் கத்தரிச்சு விடுவாக. மூணு நாலு வருசத்துக்கு ஒரு தடவை இப்படிச் செய்வாக. ஒரு செடிய கத்தரிச்சு விட்டா அது இன்னும் வேகமாக வளரும். நிறையா இலைகள் கிடைக்கும். கொழுந்து குறைவாக இருக்கிற மழை காலத்தில் கத்தரிச்சு விடுவாக, எஸ்டேட்டில தேயிலைச் செடி இருக்கிற மொத்தப் பரப்பில் ஒவ்வொரு வருசமும் கால்வாசி கால்வாசி செடிய கத்தரிப்பாக. அப்போ நாலு வருசத்தில எஸ்டேட் முழுக்க கத்தரிச்சு விட்ட மாதிரி ஆகிடும். ஒரு மரத்தை தரையில் இருந்து பதினெட்டு அங்குல உயரத்துக்குக் கட் பண்ணினா அது இலை குடுக்கிற அளவுக்கு வளருவதற்கு ஆறு மாதம் ஆகும். இந்த கத்தரிக்கிற வேலையச் செய்யற கூலிக கிளைகளை வெட்டி விடுவாங்க. அப்ப அவங்களுக்கு, இல்லாட்டி பக்கத்தில வேல செய்யறவங்களுக்கு காலு கைலயெல்லாம் சில சமயம் காயமாகி விடும்” என்றான் ராஜ்.

“ஏண்ணே கூலிங்களை எல்லாம் மேஸ்திரிகளுக்கு கீழே பதிவு பண்ணறாங்க?”

“மொதல் காரணம் கூலிகளை வேலைக்குச் சேர்க்கிறது மேஸ்திரிகங்கிறதாலதான்” அருள்தாஸும் பேச்சில் கலந்து கொண்டான்.

“ரொம்ப மழை பெய்யற, குளிரடிக்கிற இடமா இருக்கிறதால எஸ்டேட்டுக ஆரோக்கியம் இல்லாத எடம்னு பேரு வாங்கியிருக்கு. இந்த மாதிரி எடங்களுக்கு கூலிகள் தானா வேலை தேடி வரமாட்டாக. எஸ்டேட்டில அப்படி இருக்கும், இப்படி இருக்கும் பாலும் தேனும் ஓடும், கொஞ்சம் வேலை செஞ்சா எக்கசக்கமா சம்பாதிக்கலாம் அப்படியெல்லாம் யாராவது பொய் சொல்லி ஏமாத்திதான் கூலிகளை கூட்டிட்டு வரணும். இங்கே வந்த பின்னாடி ஸ்டாப்கிட்டயும்

தொரைககிட்டயும் பழகத் துணைக்கு யாராவது வேணும்னு கூலிக நினைக்கிறாக. இதை மேஸ்திரிக செய்யறதுனாலதான் கூலிகளை மேஸ்திரிகளுக்குக் கீழே பதிவு பண்ணுதாக. ரெண்டாவது இந்த முறையினால நிர்வாகத்துக்கு எத்தன லாபம் தெரியுமாலே? கூலிகளை எஸ்டேட்டுக்கு அழைத்து வர நிர்வாகம் அட்வான்ஸ் மணிங்கிற பணம் குடுக்கும். மேஸ்திரியோட தகுதிக்குத் தகுந்தமாதிரி ஒவ்வொரு கூலிக்கும் பத்திலிருந்து பதினைஞ்சு ரூபா வரைக்கும் மேஸ்திரிகளுக்கு நிர்வாகம் குடுக்கும். கீழேதான் பஞ்சம் இருக்குல்லா. ஜனங்க சாப்பாட்டுக்கே இல்லாம கடன்ல சிக்கியிருப்பாக. மேஸ்திரிக அவுங்ககிட்டப் போயி கடனை நான் கட்டிடுதேன். போக வர செலவை நான் பாத்துகிடுதேன். எஸ்டேட்டுக்கு வா, ஒரு வருஷத்தில நல்லா சம்பாதிச்சிட்டு திரும்பி வரலான்னு சொல்லுவாக. இப்படித்தான் எஸ்டேட்டுக்கு கூலிகளைக் கூட்டி வராக. அவங்களுக்கு செலவழிக்கப்பட்ட பணம் அத்தனையும், கம்பளியோட விலையையும் சேர்த்து வருசக் கடைசியில கூலியோட வருமானத்தில இருந்து கழிச்சுக்குவாக. எவ்வளவுதான் கூலிகளைக் கண்காணிச்சாலும் சிலபேர் ஓடிப் போகத்தானே செய்வாக தம்பி! சிலபேர் மலேரியா இல்லைன்னா வேற ஏதாவது நோயினால செத்துப் போவாக. இந்த மாதிரி சூழ்நிலையில மேஸ்திரியோட கமிசனிலிருந்து கூலிகளுக்குக் கொடுத்த பணத்தைக் கழிச்சிடுவாக. வருசக் கடைசி வரைக்கும் கூலிக வேலை செஞ்சாலும், பெரும்பாலும் அவங்களால கடன அடைக்க முடியாது. ஒரு நல்ல இளவயசுக் கூலிக்கு ஒரு நாளைக்கு நாலணாதான் சம்பளம். கொளுந்து கிள்ளற பொம்பளைங்களுக்கு ஒரு பவுண்டுக்கு ரெண்டு பைசா. நல்ல மழைக்காலத்தில நல்லாக் கொழுந்து கிள்ளறவங்க கூட ஒரு நாளைக்கு மூணு நாலு பவுண்டுக்கு மேல கொழுந்து கிள்ள முடியாது. அப்போ அவளோட வருமானம் மழை பெய்யற காலத்தில சராசரியா அரையணாதான் பெறும். ஒரு குடும்பத்தில புருசனும் பொஞ்சாதியும் வேலை செஞ்சா அவங்களுக்கு நாப்பது ரூபா அட்வான்ஸா வாங்கியிருப்பாக. இங்க வந்து சேருவதற்கான பயணச் செலவும் கம்பளியும் சேர்ந்து இருபத்தி ஐந்து ரூபாய் ஆகும். அப்ப மெத்தம் அறுபத்தி அஞ்சு ரூபாய் ஒரு குடும்பத்துக்குக் கடனிருக்கும். வருசம் முழுவதும் ரெண்டுபேரும் நாள் தவறாம வேலைசெஞ்சா வருசம் முடியும் போது கடனை அடைத்து விட முடியும். ஆனா இங்கன வியாதி வராமத் தப்ப முடியாதில்லை? ஒவ்வொரு ஆளும் கண்டிப்பா இருபது முப்பதுநாள் காச்சல்ல விழுந்து வேலைக்குப் போக முடியாம ஆயிரும். அதனால வருசக் கடைசியிலயும் பெரும்பாலான குடும்பங்கள் கடனிலேயே இருக்கும். அதை மேஸ்திரிகளோட கணக்கிலேர்ந்துதான்

(கமிசன்) பிடிச்சுக்குவாக. இப்பத் தெரியுதா. மேஸ்திரிகள் இல்லாம எஸ்டேட்டை நடத்துவே முடியாதுன்னு!”

“அதென்ன மேஸ்திரி கமிசன்?” கிறிஸ்துதாஸ் கேட்டான்.

“கூலிகள் சம்பாதிக்கும் மொத்தப் பணத்தில் பத்திலிருந்து பதினைந்து சதவீதம் வரை மேஸ்திரிகளுக்குக் கொடுக்கறாங்க. ஒரு கூலி ஐம்பது ரூபாய் சம்பாதித்தால் மேஸ்திரிகளுக்கு ஐந்து அல்லது ஏழு ரூபாய் எட்டு அணா போய்ச் சேரும். கூலிகள் எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாகச் சம்பாதிக்கிறார்களோ அவ்வளவுக்கவ்வளவு அதிகமாக மேஸ்திரிகளுக்குப் பணம் கிடைக்கும். அதனாலதான் மேஸ்திரிகள் கூலிகள் ஒடம்புகிடம்பு சரியில்லாமப் படுத்துக்கிடந்தாலும் இரக்கமில்லாம வேலை வாங்குறாக” அருள்தாஸ் கூறினான்.

“ஏன் இரண்டுவிதமான கமிசன்?”

“ஒருவேளை ஒரு மேஸ்திரியிடம் ஐம்பது கூலிகள் கொண்ட ஒரு கேங்க் இருக்குன்னு வெச்சுக்கலாம். வருடம் முடியும்போது எல்லாக் கூலிகளும் தொடர்ந்து வேலை செய்து வந்தால் மேஸ்திரிக்குப் பதினைந்து சதவீதம் என்ற அளவில் கமிசன் கிடைக்கும். ஒண்ணு ரெண்டு பேர் குறைவாக இருந்தாலும் இதேயளவு கமிசன் கிடைக்கும். ஆனால் நாற்பத்தி ஐந்து கூலிகள் வேலை செய்யும் நிலையிலிருந்தால் பத்து சதவீத கமிசன்தான் கிடைக்கும். நிறையக் கூலிகள் நோய்வந்து இறந்து போறதால பெரும்பாலான மேஸ்திரிகளுக்கு பத்து சதமானம் கமிசன்தான் கிடைக்கும்.”

“எதுனாலண்ணே டெக்ஸ்டைல் மில் மாதிரி கூலிகளுக்கு தினமுமோ, மாதத்திற்கு ஒரு முறையோ இல்லாமல் வருடக் கடைசியில் கூலி தராக? எனக்கிது புரியவே மாட்டேங்குது.”

“ஒருவேளை சனவரி மாத சம்பள பில் ஏழாயிரம் ரூபாய் வருதுன்னு வெச்சுட்டா அந்தப் பணத்த வருடம் முடிவில் அதாவது பதினோரு மாதங்கள் கழித்துதான் குடுக்கறாக. கம்பெனிக்கு இவ்வளவு காலத்துக்கான வட்டி கெடச்சுடும். கூலிகளோட சம்பளத்துக்கான வட்டி ஐரோப்பிய எசமானர்களுக்குப் போய்ச் சேருது” அருள்தாஸின் குரலில் வெறுப்பு நிறைந்திருந்தது.

“ஹஹ்ஹா அவங்க புத்திசாலிங்க” என்றான் கிருஸ்துதாஸ்.

“இன்னொரு விசயமும் இதில் இருக்கு. அட்வான்ஸ் குடுக்கற விவகாரம் இல்லாட்டி கூலிகள் இங்க வேலைக்கு வரமட்டாக. அவங்களுக்கு ஒவ்வொரு மாசமும் சம்பளம் கொடுத்தா அட்வான்சாக் கொடுத்த

பணத்தைத் திருப்பி வாங்க முடியாது.”

“சரி ஒரு கூலிக்கு வருசக் கடைசியில் எவ்வளவு பணம்தான் கையில் கிடைக்கும்?” கிருஸ்துதாஸுக்கு ஏறக்குறைய தலை சுற்றுவது போலிருந்தது.”

“புருசனும், பொஞ்சாதியும் இருக்கற ஒரு குடும்பத்துக்கு மொத வருசம் ஒரு பணமும் கிடைக்காது. கடன்தான் மிஞ்சும். மொதலில் வாங்கிய அட்வான்ஸ் பணத்தைக் கழித்துக் கொள்வதால் இப்படியாயிடும். அதோட காளிச்செட்டியார் கிட்டேயும், மற்றவங்ககிட்டேயும் வாங்கிய கடன்களையும் அடைக்க வேண்டியிருக்கும். காய்ச்சல் வந்து வேலைக்குப் போகலைன்னா ஒண்ணு ரெண்டு நாளைக்கு மேல் முழு ரேசன், எஸ்டேட்டிலிருந்து கிடைக்காது. பாதி ரேசன் இல்லாட்டி அதுவும் கிடைக்காது. அந்த மாதிரி நேரங்களில் கூலிகள் சாமான்களை காளிச்செட்டியார்கிட்டதான் கடனுக்கு வாங்குவார்கள். பத்து ரூபாய்க்கு வாங்கினா வருசம் முடியும்போது காளிச்செட்டி இருபது ரூபாய்க்குக் கணக்குக் காட்டுவான். கூலிகள் எழுதப் படிக்கத் தெரியாதவக. அவங்ககிட்ட கணக்கு வழக்கு இருக்காது. அதனால கேட்டதைக் கொடுக்க வேண்டியதுதான். இந்த மாதிரி கடங்காரங்களுக்குக் கடன் கழிக்க கூலிகள் திரும்பவும் மேஸ்திரிகளிடம் அட்வான்ஸ் வாங்க வேண்டியிருக்கும். ஒரு தடவ பெரிய தொகை அட்வான்ஸா வாங்கிட்டா வருசக் கணக்கா எஸ்டேட்ல சங்கிலியால கட்டிப் போட்ட மாதிரிதான்” என்றான் அருள்தாஸ்.

“ஒரு கூலி ஒரு தடவை உள்ளே வந்துவிட்டால் மூணு நாலு வருசத்துக்கு வெளியவே போக முடியாத அளவுக்கு எல்லாம் தெளிவா திட்டம் போட்டிருக்கு இல்லண்ணே?” என்றான் கிருஸ்துதாஸ்.

“சாவு வந்து விடுதலை கொடுத்தாத்தான் அதுக்கு முன்னால தப்பிக்க முடியும். இந்த வழில நெறயப் பேர் விடுதலையாகி இருக்குதான்கள்” ராஜ் பாதி கிண்டலாகவும் பாதி வருத்தத்துடனும் பேசினான். “எல்லாப் பழியும் எழுத்து வேல செய்யறவங்க மேலதான் விழுது. கூலிகள், எழுத்தர்கள்தான் அதுவும் காட்டு வேலையில் இருக்கும் எழுத்தர்கள் மேற்பார்வையாளர்கள்தான் தங்களோட அத்தனை வேதனை களுக்கும் காரணம் என்று நெனைக்குதாங்க. அவங்களப் பொறுத்தவரை மேனேஜருங்க நல்லவங்க. எழுத்துப் பணியிலிருப்பவர்கள்தான் கொடூரமா நடந்துக்கறவங்க. ஆனா உண்மை என்ன? எல்லா வேலைகளையும் மேனேஜர்கள்தான் தீர்மானிக்குதாங்க. அவர்கள் நிர்ணயிப்பதை நாம நிறைவேற்றித்தான் ஆகணும். இல்லாட்டி

வேலையை விட்டுத் துரத்தி விடுவாக. இந்த விசயத்துக்குள்ள போனா கூலிகளைவிட எழுத்து வேலை செய்யறவங்க நிலைமை படுமோசம்னு உனக்கே தெரியவரும். கூலிககிட்டேயிருந்து அட்வான்ஸ் திரும்பி வரணுங்கறதால அவங்களை திடீரென்று வேலையை விட்டுத் தூக்க மாட்டாங்க. ஆனா எழுத்து வேலை செய்யறவங்களை எப்ப வேணா தொரத்திடுவாங்க. அதனால எஸ்டேட்டுக்கு லாபம்தான். எப்படின்னா அந்த மாசத்துக்கான சம்பளம் தரமாட்டாங்க. அதனாலதான் அடிக்கடி மேனேஜர்கள், எழுத்தர்களை ஏறக்குறைய உதைச்சே வெளிய விரட்டி விடறாங்க. குமாஸ்தாக்களோட நிலைமை இப்படியிருக்கும்போது கூலிகள்கிட்ட வேற எப்படி நடந்துக்க முடியும்? ஆனா எல்லாப் பிரச்சினைக்கும், கஷ்டத்துக்கும் காரண மானவங்க "நல்ல தொரையாயிடறாங்க. நாம கொடுமைக்காரங்கங்கற பழிக்கு ஆளாகவேண்டியிருக்கு"

அவர்கள் சந்தையைக் கடந்து செல்லும்போது தலைமை எழுத்தர் ரத்தினம், காளிச்செட்டியார் கடையில் உட்கார்ந்து யாரோ ஒரு கூலியை ஆபாசமாகத் திட்டிக் கொண்டிருப்பதைக் கண்டார்கள்."ஏன் குமாஸ்தாக்கள் இப்பிடிக் கெட்ட வார்த்தை பேசறாங்க? பெண்டுகளைக் கூட பச்சை பச்சையாய் பேசறதக் கேட்டிருக்குதேன்" கிருஸ்துதாஸுக்கு எல்லாமே ஆச்சரியமாகத்தானிருந்தது.

"கூலிகளைக் கண்டிக்க இதுதான் வழக்கமான வழின்னு நெனைக்கறாங்க. கூலிகளும் அதைப் பெரிசா எடுத்துக்கறதில்ல. கீழகூட கட்டட வேலை அல்லது ரோடு போடற வேலை நடக்கிற இடங்கள்ள மேஸ்திரிகள் இப்படித்தான் ஆண் பெண் கூலிகளை அசிங்க அசிங்கமாத் திட்டுவாங்க. மத்தியதர வர்க்கத்துல கூட அதிகம் படிக்காதவங்க நடுவுல இந்த மாதிரி வசவுகள் சர்வ சாதாரணம். நெசத்துல அவங்க அப்படிப் பேசறதை பெரிய சாமர்த்தியம்னுதான் நெனச்சுக்குதாங்க. இங்க வருமுன்ன மெட்ராஸ்ல என் சொந்தக்காரங்க வீட்ல இருந்தேன். எங்க வீட்டுக்குப் பக்கத்து வீட்டுல இருந்த நடுத்தரக் குடும்பத்தில ஒரு ஆறு வயசுப் பையனிருந்தான். அந்தப் பயல் பெரியவங்களைப் பார்த்துகாதே கூசறமாதிரி கெட்ட கெட்ட வார்த்தையாக் கத்தறதைக் கேட்டிருக்கேன். யாரும் அவனைக் கண்டிக்க மாட்டாங்க. "பய என்னமாதிரி வெவரமா இருக்கான்னு" மெச்சிக்குவாக" என்றான் அருள்தாஸ்.

"நம்ம ஜி.எம் இந்த வார்த்தைகளை எல்லாம் பழகி வெச்சிருக்காரு. அவருக்குத் தமிழ்ல எக்கச்சக்கக் கெட்ட வார்த்தை தெரியும். கோபம் வந்துட்டாப் போதும் வசைமாரி பொழிஞ்சு தள்ளிடுவாரு."

“அதுகூடப் பரவாலண்ணே! இங்க வேலை செய்யற பெண்டுக கிட்ட ஜி.எம். நடந்துக்கிற விதம்தான் சகிக்கவே முடியல. அதில ஆச்சர்யம் என்னன்னா கொஞ்சம்கூட வெக்கமே இல்லாம எல்லாத்து முன்னாடியும் இப்படிப் பண்ணுதாரு. ஆபிஸ் போகும்போது கொழுந்து கிள்ளற காட்டில சின்னப் புள்ளைங்க கிட்ட கூச்சமே இல்லாம அவரு நடந்துக்கிறதப் பாத்திருக்கேன். ஒரு ஒண்ணாந்தர ரவுடி மாதிரி இருக்குதாரு”என்றான் கிறிஸ்துதாஸ்.

“மாதிரி என்ன அவன் ஒண்ணாந்தர ரவுடிதான். எல்லா மேனேஜர்களும் அவனை மாதிரிதான். இவனுக்கும் மத்தவங்களுக்கும் என்ன வித்தியாசம்னா மத்தவங்க இவனை மாதிரி வெளிப்படையா எல்லார் முன்னாடியும் நடந்துக்க மாட்டாங்க. வெள்ளைக்காரங்கிட்ட கூட வொய்ட்டுக்கு நிறைய செல்வாக்கு இருக்கு. அதனால தடுக்கிறதுக்கு யாருமேயில்லன்னு நினைச்சபடியெல்லாம் நடந்துக்குதான்” என்றான் ராஜ்.

“நம்ம நாட்டு எழுத்து வேலை செய்யறவங்க மட்டும் என்ன? எல்லாரும் ஒரே மாதிரிதான். முக்கியமா ஃபீல்டு ரைட்டருக மோசமா ஆனா பத்து வருசத்துக்கு முன்னாடி நிலைமை இன்னும் மோசமா இருந்துச்சுன்னு கேள்விப்பட்டிருக்கேன். அப்ப எஸ்டேட்டுக்கு வந்தவனுகளுக்கும் ரௌடிகளுக்கும் கொஞ்சம்தான் வித்தியாசம் இருந்திச்சு. ரவுடிப் பயலுக செய்யற அத்தன வேலைகளையும் இவுனுக செஞ்சானுங்க. இப்ப படிச்சவுக எஸ்டேட்டுக்கு வராக. அவுகள்ல பெரும்பாலான பேர் ஒழுக்கமாகத்தான் நடந்துக்கிடுதாக” அருள்தாஸின் மதிப்பீடு துல்லியமானதாக இருந்தது. இதுபோன்ற விஷயங்களைப் பேசியபடியே அவர்கள் நடந்து வெகு தூரம் வந்துவிட்டனர். சூரியன் மறையத் தொடங்கி இருந்தது.

“ஐயோ, ரொம்ப தூரம் வந்திட்டோம். ஏற்கெனவே இருட்டாயிட்டு. சீக்கிரம் போகலைன்னா காட்டுப் பன்னிங்க குறுக்க வரும். அது ரொம்ப மோசமான மிருகம்” அவர்கள் திரும்பி விரைவாகத் தங்கள் வீடுகளை நோக்கி நடக்கத் தொடங்கினர்.

# 27

நெருக்கம் வெறுப்பையும், குழந்தைகளையும்
உற்பத்தி செய்கிறது.

-மார்க் ட்வைன்

திருவாளர் புல் கிளப்பிலிருந்து ஞாயிறு இரவு எட்டு மணிக்குத் திரும்பி வந்தபோது தலைமை எழுத்தர் ஜார்ஜ் தனக்காக பங்களாவில் காத்துக் கொண்டிருப்பதைக் கண்டான்.

“ஹலோ ஜார்ஜ், என்ன செய்தி?” என்றார் புல்.

“மாஸ்டர், ஷபி மேக்கர் எனக்கு மைசூர் டீ எஸ்டேட்டில அசிஸ்டென்ட் சூப்பிரண்ட் வேலை தர்றதுக்கு ஒத்துகிட்டாருன்னு மிஸ்டர் வொய்ட் சொல்கிறார். அவங்க புதுசா ஒரு டிவிசன் ஆரம்பிக்கறாங்க. புதுசா காடு வெட்டி திருத்தின எடத்துக்குப் பொறுப்பா என்னை வேலைக்குச் சேர்க்கிறாங்க.”

“அற்புதமான விசயம் ஜார்ஜ், வாழ்த்துக்கள்.”

“மாஸ்டரோட அன்பினாலதான் எல்லாம் நடந்தது. சாகற வரைக்கும் அம்மிணியும் நானும் மாஸ்டரை மறக்கவே மாட்டோம்.”

“எப்ப உத்தரவு வரும்னு திரு. வொய்ட் சொன்னார்?”

“ரெண்டு மூணு நாளில ஷபி மேக்கர் எழுதி அனுப்புவாராம்.”

“நல்லது இங்கிருந்து உன்னை எப்போ விடுவிக்க ஏற்பாடு செய்யப் போகிறார்?”

“அது நியூ இயருக்கு அப்புறம் என்று மாஸ்டர் சொன்னார்.”

“எக்சலன்ட், டிசம்பர் முழுவதும் இருக்கிறது உனக்கு.”

“எஸ் மாஸ்டர்.”

“இத பாரு ஜார்ஜ் எனக்கு கிறிஸ்மஸுக்கு கொஞ்சம் பணம் வேண்டும்.”

“மாஸ்டருக்கு எவ்வளவு பணம் வேண்டும்?”

“ஐநூறு ரூபாய் வேண்டியிருக்கிறது ஜார்ஜ்.”

“அது ரொம்ப சுலபம் மாஸ்டர். ஒப்பந்தம் போட்டிருக்கிற போயனுகள

இருநூறு ரூபாயும், அரிசி வியாபாரியை முன்னூறு ரூபாயும் தரச் சொல்லி ஏற்பாடு செய்கிறேன்.”

“அற்புதம் ஜார்ஜ், நீ தான் எனக்கேத்த ஆள்.”

“மாஸ்டருக்கு இன்னும் பணம் வேண்டுமென்றால் களை பறிக்கும் கணக்கிலிருந்து எடுத்துக் கொள்ளலாம்.”

“அதெப்படி ஜார்ஜ்?”

“முப்பதிலிருந்து முப்பத்தி ஐந்து வரையுள்ள பீல்டுகள் காட்டிற்கு பக்கத்தில் இருக்கு. ஜி.எம். அந்த இடங்களை மேற் பார்வையிடப் போறதில்ல. அந்த இடங்களில் களை எடுக்கப்பட்டது, ஒப்பந்தகாரர்களுக்குப் பணம் கொடுக்கப்பட வேண்டும்னு சீட்டு அனுப்புறேன். மாஸ்டர் கையிலிருந்து பணம் மாஸ்டர் பைக்குப் போய்விடும்.”

புல்லுக்கு சிரிப்பு பொத்துக் கொண்டு வந்தது. “வாங்கின பணத்திற்கு யாராவது ரசீது கொடுக்க வேண்டியிருக்குமோ?”

“மாரி போயனிடம் ரசீதில் கையெழுத்து வாங்கி விடுகிறேன்.”

“ஹ ஹ ஹ மனுசனுகளுக்குள் நீ ஒரு வைரக்கல் ஜார்ஜ். நீ போன பிறகு உன்ன மாதிரி ஒரு ஆள நான் எப்படித்தான் பிடிக்கப் போறேனோ?”

“மாஸ்டர் ரொம்ப அன்போட பேசறீங்க” என்றான் ஜார்ஜ் அடக்கத்துடன்.

“குட் நைட் ஜார்ஜ். இப்பவே அம்மிணியை இங்க அனுப்பு. அவளுக்கும் நான் வாழ்த்துச் சொல்ல விரும்புகிறேன்.”

“இப்பவே அனுப்புகிறேன் மாஸ்டர். குட் நைட் மாஸ்டர்.”

மறுநாள் புல்லின் உதவி மேனேஜர் பட்லர், மைசூரில் ஒரு டீ எஸ்டேட்டில் ஜார்ஜ் உதவி மேலாளர் பதவி பெற்றுவிட்டாரென்று தான் கேள்விப்படும் வதந்தி உண்மையா என்று கேட்டான்.

“ஆமாம், அது உண்மைதான். வொய்ட், ஷ்ரூமேக்கரிடம் சிபாரிசு செய்தார் போலிருக்கிறது. ஏனென்று எனக்குத் தெரியவில்லை. அந்தப் பிச்சக்காரப் பயலுக்கு ஒழுங்கா ஆங்கிலம் பேசக் கூடத் தெரியாது. ஆனால் அவன் மனைவி புத்திசாலித்தனமான பெண். அற்புதமாக ஆங்கிலம் பேசுவாள். உண்மையில் அவளுக்குத்தான் அந்த வேலையைக் கொடுத்திருக்க வேண்டும்” என்று பதிலளித்தான் புல்.

# 28

நல்ல மாட்டுக்கு ஒரு சூடு

- பழமொழி

சிகிச்சைக்கும், ஓய்வுக்கும் பிறகு வள்ளியின் உடல் நிலையில் முன்னேற்றம் ஏற்படுவதற்கான அறிகுறிகள் தெரிந்தன. கருப்பன் அடைந்த சந்தோசத்திற்கு அளவேயில்லை. அன்று வழக்கம் போல் மாலை நேரத்தில் மருத்துவமனைக்கு வந்திருந்தவன்,

“எனக்கு நல்லாத் தெரியுது வள்ளி. நீ சீக்கிரம் சரியாயிடுவே”என்றான்.

“மாரியாயியும், கோவிந்தனும் எப்படி இருக்காங்க?” உடல்நிலையில கொஞ்சம் முன்னேற்றம் தெரிந்தவுடன் வள்ளிக்கு எல்லா விசயங்களிலும் ஆர்வம் திரும்ப வந்துவிட்டிருந்தது.

“நெசமாலுமே ரொம்ப நல்லாயிருக்குதாங்க. ராசா விவகாரத்தை மறந்தே போயிட்டாகன்னு நெனக்கேன்.”

“ராசாவ அதுக்கப்புறம் பாத்தியா மாமா?”

“சில சமயம் பாப்பேன். ஆனா என்னப் பாத்தாலே அந்தப் பய ஒளிஞ்சுக்குதான்.”

“குப்பாயி அவன சுட்டுவிரலில ஆட்டி வெச்சிடுவா. அவனக் கண்ணாலம் கட்டிக்கிட்டாளா?”

“கழுத்துல ஒரு மஞ்சக்கயிறு கட்டியிருக்குதா. அது தாலியா இல்ல வேற எதாவதான்னு எனக்குத் தெரியல. எப்படியிருந்தாலும் பெரியவங்க முன்னாடி தாலி கட்டறதானே நம்ம வழக்கம். அப்படி எதுவும் நடக்கல.”

“கருங்குண்டு எஸ்டேட் கோவிந்தசாமி உன்ன எப்படியாவது மயக்கி, எஸ்டேட்டுக்கு வெளிய கொண்டுபோயி தூக்கிட்டு போயிடுவான்னு எப்பவும் பயந்திட்டே இருக்கேன் மாமா” வள்ளி தனது கவலையை வெளியிட்டாள்.

“அப்படியொண்ணும் பயப்பட வேண்டாம் வள்ளி. நான் வால்பாறைக்குப் போகவே மாட்டேன். எஸ்டேட் எல்லைக்குக்கூட போகமாட்டேன். அவனுக்கு நம்ம எஸ்டேட்டுக்குள்ள வர்ற அளவுக்கு தைரியம் வராது.”

“கணக்கு எப்போ முடிக்கப் போறாக?”

“சனவரி மாசம் நடுவிலன்னு திருமலை மேஸ்திரி எங்கிட்டே சொல்லுதான்.”

“முருகன்தான் என்ன இந்த நோயிலிருந்து காப்பாத்தணும். ஒரு மாசத்துக்குள்ள வீட்டுக்குப் போயிரலாம். எவ்வளவு சந்தோசமாயிருக்கும். ஊருல பட்டினி கிடந்தாலும் சரி. இங்கன திரும்பி வரவே மாட்டோம். ஊரைவிட்டும் வெளியே வரமாட்டோம்” என்றாள் வள்ளி.

“வரவே மாட்டோம்” கருப்பன் உறுதிப்படுத்தினான்.“எவனோ முன்பின் தெரியாத ஒருத்தனை நம்பி ஏமாந்து முட்டாள்தனமா ஊரை விட்டு வந்துட்டோம். இனிமே அப்படி செய்யவே மாட்டோம்.”

# 29

நான் உனக்கு நீந்தக் கற்றுக் கொடுத்தேன்,
நீ என்னை முழுகடித்து விட்டாய்

- பழமொழி

தலைமை எழுத்தர் அப்பாவு கழுகுமலை எஸ்டேட்டுக்கு அருகில் உள்ள ஒரு காட்டில் ஏதோ வேலையை மேற்பார்வையிட்டுக் கொண்டிருக்கும்போது, அந்த எஸ்டேட் தலைமை எழுத்தர் மாணிக்கம் அவரை பார்த்துவிட்டார்.

“வணக்கண்ணே” என்று கத்தியபடி அருகில் வந்தார் மாணிக்கம்.

“இன்னைக்கு ராத்திரிதான் உங்களை நேரில வந்து பாத்து ஒரு முக்கியமான விசயம் சொல்லலாமுன்னு இருந்தேன்.”

“வணக்கம் தம்பி” அப்பாவு பதிலளித்தார் “பார்த்து ரொம்ப நாளாச்சு. என்ன அப்படி முக்கியமான விசயம்?”

“அந்தப் பிச்சைக்காரப்பய ஜார்ஜ் மைசூரில ஏதோ டீ எஸ்டேட்டில உதவி சூப்பிரெண்டா வேலை வாங்கிட்டானாம்.”

“நல்லாத் தெரியுமா” யாரு சொன்னாக?”

“இன்னைக்குக் காலைலதான் எங்க அசிஸ்டென்ட் மேனேஜர் கிரீன் சொன்னான்.”

“அப்ப அது உண்மையாத்தான் இருக்கும்”

“இந்த மாதிரி அலிப் பயல்களுக்குத்தான் எஸ்டேட்டில பதவியுயர்வு கிடைக்குது” என்று சொல்லிவிட்டு அப்பாவு கடுங்கோபத்துடன் காறித் துப்பினார்.

“ஜார்ஜோட எடத்துக்கு அவனோட உதவியாளைப் போடப்போறாங்களாம். வேற யாராவது வர்றதுக்கு முன்னாடி வொய்ட்டைப் பாத்து அசிஸ்டென்டோட எடத்தை உங்க மருமகனுக்குக் குடுக்க சொல்றியாளா?”

“எனக்கு மனசில்ல. எவளாவது தேவிடியாளோட சொந்தக்காரனுக்குதான் அந்த இடம் கிடைக்கும்.”

“நீங்க வொய்ட்கிட்டப் பேசினீங்கன்னா கண்டிப்பா உங்க மருமகனுக்கு வேலை தருவான். அவனுக்கு உங்களைப் பிடிக்கும்ங்கிறது எனக்குத் தெரியும்.”

“அவனுக்கு என்னை விட அம்மிணியத்தான் ரொம்பப் பிடிக்கும்” அதே வெறுப்புடன் அப்பாவு பதிலளித்தார். “இந்த வெள்ளக்காரங்களுக்கு வேலைல செஞ்சு செஞ்சு ஓஞ்சு போயிட்டேன். எவ்வளவு கஷ்டப்பட்டு வேலை செஞ்சாலும், சாமார்த்தியசாலியா இருந்தாலும் அவங்களுக்கு அது ஒரு பொருட்டே இல்ல.”

“ஜார்ஜைப் பத்தி கவலைப்படாதீங்க அண்ணே, இந்த விசயத்தில அவங்கூட நாம போட்டி போட முடியாது. ஆனா நீங்க மட்டும் சரியான நேரத்தில வொயிட்கிட்ட பேசினா கண்டிப்பா உங்க மருமகனுக்கு வேலை தருவாருன்னு நான் நம்பறேன்.”

“ரொம்ப நன்றி தம்பி. தோட்டத்தில வேலை செய்யறதுக்கு இஷ்டமான்னு நான் மருமகன்கிட்ட கேட்டுப் பாக்கேன். ஆனா வொய்ட் கிட்டப் போயி இனிமே சகாயம் கேட்கறதுக்கு உண்மைலேயே எனக்கு விருப்பமில்ல.”

“அதப் பொறவு பாத்துக்கலாம். இப்ப சீக்கிரம் போய் வொய்ட்டப் பாருங்கண்ணே” மாணிக்கம் அப்பாவுவின் வெறுப்பை அலட்சியப்படுத்திவிட்டு தான் கூறிய விசயத்தையே திரும்பத் திரும்ப வலியுறுத்தினார்.

“கண்டிப்பாப் போறேன் தம்பி. உங்க அசிஸ்டென்ட் மேனேஜர் எப்படியிருக்காரு? அவருக்கு கத்துக்குடுக்கிற விசயம் எப்படி இருக்கு?”

“கத்துக் குடுக்கிறதா? நானா? கடவுளே! இப்போ அவந்தாண்ணே எனக்கு வாத்தியார்னு நினைச்சிட்டு இருக்குதான். இல்ல வாத்தியார் இல்ல. புரொபஸர்னு நினைச்சிட்டு இருக்குதான் போனவாரம் அந்தப் பிச்சைக்காரப் பய வந்து நான் கொழுந்து கிள்ளறது நல்லா இல்லைன்னு சொல்றான். இவன் எஸ்டேட்டுக்கு வந்து மூணு மாசம் தான் ஆகுது. கொழுந்து கிள்ளறதுன்னா என்னன்னு இவனுக்கு சொல்லிக் குடுத்ததே நான்தான். இப்ப இவன் எங்கிட்ட குறை காங்கிறான். அந்த நாயி என்ன சொல்லுச்சு தெரியுமாண்ணே? என்று கேட்ட மாணிக்கம் கிரீன் போலவே பேசிக் காட்டினார்.“மாணிக்கோம். உங்கூலிக என் டீயையே நாசமாக்கறாங்க”ங்கு தான் அவன் பாட்டனோட டீ மாதிரி. ஆண்டவனே. இந்த வெள்ளக்காரங்களுக்குத்தான் எவ்வளவு ஆணவம். நம்மகிட்ட இருந்தே எல்லா வேலையும் கத்துகிட்டு நம்மகிட்டயே குத்தம்

கண்டு பிடிக்குதாங்க.”

“அவன் நாட்டுக்காரன் தானே இந்த நாட்டை ஆண்டிட்டிருக்கு தான். அதனாலதான் இப்படி. உன்னைய ஒதைச்சு வெளியே தொரத்தாமப் பாத்துக்கோ.”

“யாரு கண்டது? அவன் ஒருநாள் அதையும் செஞ்சாலும் செய்வான்” என்றார் மாணிக்கம்.

# 30

மனிதகுலத்தின் ஒவ்வொரு தலைமுறையும் தாங்கள் வேதனையடைந்தாலும் தங்கள் குழந்தைகள் பலனடைய வேண்டுமென்பதற்காக தங்களைத் தாங்களே சித்திரவதை செய்து கொள்கிறது. நமது செல்வமும்கூட இறந்த காலத்தின் துன்பங்களின் மீது கட்டியமைக்கப்பட்டதுதான்.

மார்ட்டயர்டம் ஆஃப் மேன்
-வின்வுட் ரீடே

கிருஸ்துமஸுக்கு இன்னும் ஒரு வாரம் தானிருந்தது. அப்பாவும், ஜான்சனும் டாக்டர் ஆபிரஹாமைப் பார்க்க வந்திருந்தனர். “உங்களுக்கு ஒரு சந்தோசமான சமாச்சாரம் டாக்டர். ஆஸ்பத்திரிக்கு ஒரு கம்பவுண்டரைக் கொண்டு வரப்போறாங்க. அவன் பெயர் குஞ்சுராமன். நம்ம வொய்ட்டுடைய சோக்ராவுக்கு உறவு. முதலில் அவனது சான்றிதழ்களை டாக்டர் பார்பரிடம் அனுப்பினாங்க அவர் சரின்னதும் பணி உத்தரவு போட்டுட்டாங்க” ஜான்சன் உற்சாகமாகக் கூறினான்.

“ரொம்ப சந்தோஷம். ஆஸ்பத்திரிக்கும், என் வீட்டுக்கும் ஏதாவது விடிவு பிறக்குமா?”

“இரண்டையும் மராமத்துச் செய்ய மதிப்பீடு பண்ணிட்டாங்க கிருஸ்துமஸ் முடிஞ்சதும் வேலை தொடங்கிவிடும்” என்று ஜான்சன் கூறிவிட்டு, “இங்கே உங்களுக்கு வேலை பிடித்திருக்கிறதா?” என்று கேட்டான்.

“வேலையாவது... பிடிப்பதாவது.. இப்படியொரு நரகத்தை என் வாழ்க்கையில் பார்த்ததே கிடையாது. வியாதியில் இங்கே செத்துப் போகிறவர்களின் எண்ணிக்கை உண்மையிலேயே அதிர்ச்சியடைய வைக்கிறது. இதில் ரொம்பவும் துரதிருஷ்டம் என்னன்னா சரியா மலேரியா ஒழிப்புப் பணிகள் செய்தால் சுத்தமான தண்ணீர் கொடுத்தால் பெரும்பாலான நோய்களை இல்லாமல் செய்து விடலாம். ஆனா இதுக்குப் பணம் செலவழிப்பது வீண்வேலை தண்டச் செலவு என்கிறார்கள். எப்படியிருந்தாலும் நான் தலைமை மருத்துவ அதிகாரியிடம் பேசி என்னசெய்ய முடியும் என்று பார்க்கிறேன். பெரும்பாலான குழந்தைகளுக்கு கணையம் வீங்கிப் போயிருக்கிறது.

பாதிப் பெண்கள் ரத்த சோகையால் பாதிக்கப்பட்டிருக்கின்றனர். எப்படித்தான் இவர்களுக்கு வேலை செய்வதற்கு சக்தி இருக்கிறதோ என்று எனக்குப் புரியவே மாட்டேனென்கிறது."

"இப்பப் பரவாயில்ல டாக்டர். பத்து வருசத்துக்கு முன்னால நெனச்சே பாக்க முடியாத அளவுக்கு படுமோசமா இருந்தது. மொத்த ஜனங்கள்ல பாதிப்பேரு ஒவ்வொரு வருசமும் மலேரியா வந்து செத்துப் போவாக. அதவிடக் கொஞ்சம் கொறச்சலான பேர் நிமோனியாவும், வயிற்றுப்போக்கும் வந்து சாவாக. அப்பெல்லாம் கூலிக ஓடாமாத் தடுக்க எல்லா எடத்திலயும் காவக்காரங்களை நிறுத்தி வெச்சுருப்போம். வேல செய்யும் போது கூட கூலிகளை கண்காணிச்சிட்டேதான் இருப்போம். பெரும்பாலான மேஸ்திரிக ராவுல கூலிகளை அறையில போட்டுப் பூட்டிடுவாக. இத்தனை ஜாக்கிரதையா இருந்தாலும் கூலிக ஓடிப் போயிடுவாக. அவுகள்ல சிலபேர திரும்பி புடிச்சிக் கொண்டு வந்து மத்தவங்களுக்கு பீதிய ஏற்படுத்துவதற்காக அடிச்சேக் கொன்னுடுவாக. ஓ... எஸ்டேட்டில எவ்வளவு பயங்கரமான விசயங்களையெல்லாம் பாத்திருக்கேன் தெரியுமா டாக்டர். பத்து வருசம் முன்னாடி கூலிகளை தொழிலாளர் ஒப்பந்தக்காரங்கதான் வேலைக்கு சேர்த்தாங்க. அவுங்கள்ல தொண்ணூறு சதவிகித பேர் ஏமாத்தி எஸ்டேட்டுக்குக் கொண்டு வரப்பட்டவங்கதான். அவுகளுக்கும், ஒப்பந்தக்காரர்களுக்கும் சம்பந்த மே இல்லைங்கிறதால கூலிகளை மிருகங்க மாதிரிதான் நடத்தினாக. ஆடுமாடுகளை இதைவிட நல்லா நடத்தினாகன்னு சொன்னாக்கூட தப்பா இருக்காது. திருநெல்வேலிக் கூலிகள சேத்த பின்னாலதான் நிலைமை கொஞ்ச கொஞ்சம நல்லாயிட்டு வருது" என்றார் அப்பாவு.

"அதெப்படி."

"பெரும்பாலான ஒப்பந்தக்காரங்க எஸ்டேட்டில வேலை செய்ய மாட்டாக. அவுக மேஸ்திரிகளுக்குத் தொழிலாளிகளை சேத்தித் தருவாக. இல்லாட்டி அவுக ஆளுக மேஸ்திரிகளா இருப்பாக. இந்த மேஸ்திரிகளுக்கும், கூலிகளுக்கும் சம்பந்தமே இல்லைங்கறதினால நினைச்சுப் பார்க்காத கொடுமை எல்லாம் பண்ணினாக. ஆனா திருநெவேலி மேஸ்திரிக தங்களோட சொந்த ஊர்களிலிருந்து வேலைக்கு ஆள் சேக்கிறாக. சொந்த ஊர் கூலிகளைக் கொடூரமா நடத்தினா ஊருக்குப் போகும் போது பதிலடி கிடைக்குமில்லையா? அதனால அந்த மாதிரி மேஸ்திரிகளுக்குக் கூலிகளை கொடுமைப்படுத்தற அந்த அளவுக்கு தைரியம் வராது. வேற ஊரிலிருந்து வர்ற கூலிகதான் ரொம்ப கஷ்டப்படறாக."

“இங்க எத்தனை வருசமா இருக்கிறீங்க?” டாக்டர் கேட்டார்.

“பத்து வருசம் ஆச்சு. முன்னாடி சிலோன்ல இருந்தேன். அந்த காலத்திலயே சிலோன் இதவிட நல்லாத்தான் இருக்கும்.”

“எப்படித்தான் இத்தனை கஷ்டத்தைத் தாங்கி இங்கயே வாழ்க்கையை ஓட்டிட்டு இருக்கீங்களோ? அப்போ இங்க எத்தனை எழுத்து வேலை செய்யறவங்க இருந்தாங்க?”

“நாலே நாலு பேர்தான் டாக்டர். நான், ஜான்ஸன் தம்பி, வடக்கு டிவிசன் எழுத்தர் பாலையா, டீமேக்கர், அப்புறம் கணக்கு வழக்கு பாத்துக்கிட ஒரு கணக்குப்பிள்ளை ஆபிஸில இருந்தார். எங்கள்ல யாருக்குமே உதவியாள் கிடையாது. மேஸ்திரிகளோட உதவிய வெச்சுத்தான் சமாளிச்சோம். அஞ்சு வருசத்துக்கு முன்னாடிதான் முறையான உதவியாட்களை நியமிச்சாக. அதுக்கும் ஒரு வருஷம் கழிச்சுதான் என்னோட அசிஸ்டென்ட் வந்து சேர்ந்தான். இதுக்கு முன்னாடி இருந்த டீ மேக்கர் ஏழு வருசத்துக்கு முன்னாடி மலேரியா வந்து செத்துப் போனான். ரெண்டு வருசத்துக்கு முன்னாடி ஜான்ஸன் தம்பியோட மொத பொஞ்சாதியும் மலேரியா வந்து செத்துப் போச்சு. நாங்க எல்லாருமே நிறையப் பிள்ளைகளை மலேரியாவுக்கு பறி குடுத்திருக்கோம். எப்பவாவதுதான் குழந்தைக தப்பிப் பிழைச்சது. இப்ப நாங்க இருக்கிற வீடுகளை ஏழு வருசம் முன்னாடிதான் கட்டினாக. பழைய வீட்ல இருந்தவரைக்கும் கொழந்தைங்க பொழச்சதேயில்ல. அப்போ வீட்டில் சமையலறையோட ஒரே ஒரு அறைதான் இருக்கும். காஞ்சுபோன புல்லை வெச்சுதான் கூரை போட்டிருப்பாக. வீடு முழுக்க சாமான்னு பாத்தா ஒரே ஒரு மரக்கட்டில் தான் எனக்கு இருந்தது. மரப்பெட்டிகளைத் தான் மேசையாகவும், முக்காலியாகவும் துணிமணி வெக்கறதுக்கும் பயன்படுத்தினோம். அப்ப நான் டாக்டர் வேலையும் பார்த்தேன். ஒவ்வொரு நாள் காலையிலேயும் திறந்த வாயோட கூலிக வரிசையா நிற்பாக. அதுக்குள்ள ஒரு அவுன்ஸ் குயினைன் கலவையை ஊத்தி அவங்களை அதை முழுங்க வைக் கிறதுதான் என் வேலை. இன்ஃபுளுயன்ஸா மிச்சர்னு ஒண்ணு இருக்கும். டிசென்ட்ரி மிக்சர்னு ஒண்ணு இருக்கும். இந்த மிக்சர்களையெல்லாம், முடீஸ் ஆஸ்பத்திரியில தயாரிச்சு இங்க அனுப்பி வெப்பாக. எனக்கு எது நல்லதுன்னு தோணுதோ அந்த மாதிரிதான் அதுகளைப் பயன்படுத்து வேன்” என்றார் அப்பாவு.

“நான் வந்தப்பக்கூட இந்த ஆஸ்பத்திரியில மருந்துகள் ரொம்பக் குறைவாத்தான் இருந்தது. இது ஆஸ்பத்திரி மாதிரியே இல்லை. ஏதோ

முதலுதவி குடுக்கிற ஷெட் மாதிரிதான் இருந்தது" என்று கூறிய டாக்டர் சில விநாடிகள் நிறுத்தி ஏதோ யோசித்து விட்டுத் தொடர்ந்தார். "கூலி லைன்களைப் பாத்தா பரிதாபமா இருக்கு. இவ்வளவு அழுக்கான அருவெறுப்பான இடங்களை வேற எங்கேயுமே பாத்ததில்ல. நமது கிராமங்களில் இருக்கிற மாட்டுக் கொட்டகை கூட இதவிடச் சுத்தமா இருக்கும். இங்கு வந்து ஒரு வாரம் கழித்து உடம்பு சரியில்லாத ஒரு கூலியை பார்ப்பதற்கு லைனுக்குப் போனேன். அப்பொழுது மழை கொட்டிக் கொண்டிருந்தது. கடவுளே! அந்த எடத்தைப் பார்த்ததும் எனக்கு வாந்தியே வந்துவிட்டது. ஈ, எறும்பு மாதிரி கூலிகள் சாகிறாங்கன்னா அதில ஆச்சரியமேயில்ல."

"கூலிங்ககிட்டயும் குத்தம் இருக்கு டாக்டர். அவுங்க நினைச்சா அவங்க இருக்கிற எடத்தை சுத்தமா வெச்சுக்க முடியும். அறைக்குள்ளேயே கோழிகள வெச்சுக்கிறாங்க. எங்க வேணும்னாலும் மலஜலம் கழிக்கிறாங்க" என்றார் அப்பாவு.

"அது ஓரளவுக்கு சரியாக இருக்கலாம். ஆனால் கோழிகள் இல்லாத அறைகளும் கூட இதே அளவுக்கு அழுக்கடைந்துதான் இருக்கின்றன. அவர்கள் வாழ்கிற நிலைமைகளில் சுத்தமாக இருப்பது என்பது சாத்தியமே இல்லை. ஆட்கள் இடித்து நெரித்துக் கொண்டுதான் இந்த இடத்தில் வாழ்கிறார்கள். ஒவ்வொரு அறையிலும் இரண்டு மூன்று குடும்பங்கள் இருக்கின்றன. அறையில் இருக்கிற அத்தனைப்பேரும் செத்துப் போனால் அவர்களைப் புதைப்பதற்கு அவர்கள் குடியிருக்கும் இடத்தைவிட அதிக இடம் தேவைப்படும். கொட்டும் மழையிலிருந்து உடம்பெல்லாம் சேறடித்து, அட்டை கடிகளிலிருந்து இரத்தம் ஒழுக அவர்கள் நேராக அறைக்குள் நுழைகிறார்கள். ஈரத்தைப் போக்கிக் கொள்ள அவர்களுக்கு இடமே இல்லை. கம்பளிகளையும், துணிகளையும் உலர வைக்க எங்கே இடமிருக்கிறது. அந்தப் பாவப்பட்ட மனிதர்களுக்கு மாற்றுக் கம்பளியும் கிடையாது. முழுவதும் நனைந்துபோன கம்பளியை உலர வைத்து இரவு அதைப் போர்த்திக் கொள்ள வேண்டும். கம்பளிகளிலிருந்து வழிந்தோடி வரும் தண்ணீரினாலும் ஒழுகிக் கொண்டிருக்கும் கூரையினாலும் சிறு சிறு குளங்கள் போல் தண்ணீர் வீட்டுக்குள்ளேயே தேங்கி நிற்கிறது. மண்தரைகளில்தான் அவர்கள் உறங்க வேண்டி இருக்கிறது. அவர்கள் எப்படி ஆரோக்கியமாக இருக்க முடியும். எப்படித் தூய்மையாக இருக்க முடியும். இந்த நிலைமையில் இத்தனை பேர் உயிரோடு இருப்பதே ஒரு ஆச்சரியமான விசயம்தான்" என்றார் டாக்டர்.

"வறுமை, அறியாமை, படுமோசமான நிலைமைகள் எல்லாம் சேர்ந்து

அவர்களது வாழ்க்கையை சகிக்க முடியாததாக்கி இருக்கின்றன”என்றான் ஜான்ஸன்.

டாக்டர் தலையசைத்துவிட்டு தான் விட்ட இடத்திலிருந்து தொடர்ந்தார். “குடியிருப்புகளைச் சுற்றி மலஜலம் கழிப்பதைப்பற்றிச் சொன்னீர்கள். ஆனால் நமது கிராமங்களிலும் சரி, நகரங்களிலும் சரி மக்கள் இப்படித்தான் செய்கிறார்கள். துரதிருஷ்டவசமாக இதுதான் நமது மக்களுடைய பழக்கம் போல் தோன்றுகிறது. ஆனால் சமவெளிகளில் ஏதாவது ஒரு மிக மிக வறுமையில் வாடும் கிராமத்துக்குச் சென்று அங்கு உள்ளவற்றிலேயே வறுமை மிகுந்த குடிசைக்குப் போய் பாருங்கள். இந்த லைன்களில் இருக்கும் அறைகளில் உள்ள அசுத்தத்தை அங்கே நீங்கள் காணவே முடியாது. எஸ்டேட் நிர்வாகம் கூலிகளுக்கு ஒரு கழிப்பறைக்கூட கட்டித் தரவில்லை. அதனால் அவர்கள் கண்ட இடங்களில் எல்லாம் இயற்கை உபாதையைத் தீர்த்துக் கொள்கிறார்கள். அதுவும் இரவு பகலாக மழை பெய்யும் நாட்களில் லைன்களை விட்டு இதற்காக தூரமாகச் செல்வது அவர்களுக்கு எவ்வளவு சிரமமாக இருக்கும்.”

“நீங்கள் சொல்வது சரிதான் டாக்டர்”

“இவ்வளவு சிரமங்களுக்கு இடையில் அவர்கள் வேலை செய்கிறார்கள். ஆனால் அவர்களுக்கு என்ன சம்பளம் கிடைக்கிறது?” டாக்டர் கேட்டார்.

“ஒரு வயது வந்த ஆளுக்கு ஒரு நாளைக்கு நாலணாவும், பெண்ணுக்கு ஒரு பவுண்டுக்கு இரண்டு பைசாவும் சிறுவர்களுக்கு இரண்டணாவும் பொடியன் என்று சொல்லப்படுகிற குழந்தைகளுக்கு ஒரு நாளைக்கு ஒரு அணாவும் கொடுக்கப்படுகிறது” என்றார் அப்பாவு.

“பரிதாபம்தான்” என்றார் டாக்டர்.

“நிர்வாகம் இந்தத் தொழிலாளிகள் யாரையும் வேலைக்கு வைத்திருக்கவில்லை. அதனுடைய நன்மைக்காக இவர்களைத் தங்களைத் தாங்களே தியாகம் செய்து கொள்ளும்படி பலவந்தப்படுத்திக் கொண்டிருக்கிறது. இங்கிலாந்தில் உள்ள பங்குதாரர்கள் கொழுத்த லாபம் அடைய வேண்டும் என்பதற்காக நமது நாட்டைச் சேர்ந்த ஆண்களும், பெண்களும் தியாகம் செய்யும்படி, தங்களைத் தாங்களே அழித்துக் கொள்ளும்படி நிர்பந்திக்கப்படுகிறார்கள்.”

“எஸ்டேட் ஆரம்பிச்சதிலிருந்து லட்சக்கணக்கான செத்துப்போன அல்லது கொல்லப்பட்ட தொழிலாளிகள், எழுத்தர்கள்

ஆகியோர்களுடைய இரத்தத்தையும் சதையையும் உரமாப் போட்டுதான் இந்தத்தேயிலைப் புதர்களெல்லாம் வளந்திருக்குன்னு சொன்னா அது முழுக்க முழுக்க சரியாத்தான் இருக்கும்னு நினைக்கிறேன் டாக்டர். ஒவ்வொரு தேயிலைப் புதருக்கும் ரெண்டு மூணு இந்தியர்களுடைய உயிராவது பலியாயிருக்குனு சொன்ன அதில மிகைப்படுத்தலே இருக்காது.”

“ஆமாம், ஒரு நாளைக்கு இந்த நாலணாக் கூலிக்காக இந்தப் பாவப்பட்ட ஜனங்கள் அரைப் பட்டினிலயும், அதனால வர்ற நோய்களினாலயும் சாகறாங்க. இது எவ்வளவு பெரிய கொடுமை? கூலிகளை அவங்க கிராமத்திலிருந்து வேரோடு பிடிங்கி எடுத்து அவங்க செலவிலேயே இங்கே கொண்டு வந்து இந்த பயங்கரமான சூழ்நிலையில அற்பமான நாலணாவுக்கு வேலை செய்ய வைக்கிறார்கள். இந்தியர்களோட பணத்தையும், உயிர்களையும் கொண்டு லாபம் அடைவதற்காகத் தானே இந்தியாவை பிரிட்டன் வெற்றி கொண்டது.”

“நம்ம கிராமங்களிலயும் ஏழ்மை இருக்கத்தானே செய்கிறது? ஆனால் மக்கள் இவ்வளவு வேதனை அடைவதோ இப்படி சாவதோ இல்லை” என்றார் அப்பாவு.

“இவையனைத்திலும் மிகவும் துரதிருஷ்டம் என்னவென்றால் மலேரியா ஒழிப்புப் பணிக்கும், சுத்தமான தண்ணீர் தருவதற்கும் கொஞ்சம் பணம் செலவழித்தால் போதும். இத்தனை மரணங்களையும், வேதனைகளையும் தவிர்த்து விடலாம். நீங்களே பாருங்கள். இந்த மலைகளில் எந்த இடத்தில் நான்கடி ஆழம் தோண்டினாலும் தண்ணீர் கிடைக்கிறது. பத்தடி ஆழம் தோண்டினால் சுத்தமான குடிநீரே கிடைக்கும். ஆனாலும் லைன்களில் ஒரு கிணறுகூட இல்லை. லைன்களில் இருந்து வரும் அத்தனை சாக்கடைகளும் கலக்கும் ஓடைகளிலிருந்துதான் கூலிகள் குடி தண்ணீரை எடுத்துக் கொள்கிறார்கள். அடிக்கடி இந்த ஓடைகளில் மனித மலம் மிதந்து செல்வதை நீங்கள் பார்த்திருப்பீர்கள். இந்தத் தண்ணீரைக் குடித்தால் என்ன ஆகும்? ஆரோக்கியம் எங்கிருந்து வரும்?”

“எழுத்துப் பணியார்களாகிய நாங்களும்கூட இந்த ஓடைகளிலிருந்துதான் தண்ணீர் எடுக்க வேண்டியிருக்கிறது. நமது டிவிசன் முழுவதிலும் சேர்ந்த ஒரே ஒரு கிணறுதான் உள்ளது. நானும், ஜான்ஸனும் அதற்கு அருகில் இருப்பதால், கிணற்றிலிருந்து தண்ணீர் எடுத்துக் கொள்கிறோம். மற்றவர்கள் கூலிகளைப் போலத்தான் ஓடையிலிருந்து தண்ணீர் எடுத்து வருகிறார்கள்” என்றார் அப்பாவு.

“இவ்வளவு சின்னஞ்சிறிய குழந்தைகளை வற்புறுத்தி, கொடுமைப்படுத்தி வேலை வாங்குவதை எஸ்டேட்டைத் தவிர வேற எங்கேயுமே நான் பார்த்ததில்லை” கம்மிப்போன குரலோடு டாக்டர் தொடர்ந்தார். “அந்தப் பாவப்பட்ட குழந்தைகளுக்கு கம்பளிகள் கூட வழங்கப்படுவதில்லை. அவர்கள் சாக்குப் பைகளைத்தான் சுற்றிக் கொண்டு இருக்கிறார்கள். இந்த சாக்கோடுதான் அவர்கள் கொட்டும் மழையிலும், எலும்பைத் தொடும் குளிரிலும் வேலை செய்கிறார்கள். ஆனால் என்ன கிடைக்கிறது? ஒரு நாளைக்கு ஒரு அணா. பழங்கால அடிமை முறையைப் பற்றி நாம் பேசுகிறோம். ஆனால் இதற்குப் பெயரென்ன?”

“டாக்டர், ஸ்டாஃபுடைய நிலைமையும் ஒண்ணும் மேலானதில்ல. சொல்லப்போனா இதைவிட மோசம்தான். ஒரு தொழிலாளியும், அவன் மனைவியும் குறைந்தது பத்து ரூபாயாவது சம்பாதிச்சிடலாம். ஆனால் ஒரு இளம் எழுத்துப் பணியாளருக்கு தொடக்கத்தில் மாதம் ஏழு ரூபாய்தான் கெடைக்கும். வருடா வருடம் சம்பள உயர்வு என்ற பேச்செல்லாம் இங்கே கிடையாது. இதே வருமானத்தோடு அவன் வருசக்கணக்கா இருக்க வேண்டி வந்தாலும் வரும். மாஸ்டருக்கு ஒரு எழுத்தரை பிடித்திருந்தால் அவனுக்குக் கல்யாணமாகும்பொழுது சம்பளத்தைப் பதினைந்து ரூபாயாக உயர்த்தித் தருவார். இல்லாவிட்டால் இதே வருமானத்தில் அல்லது இதைவிடக் கொஞ்சம் அதிகமான வருமானத்தில் பத்து ரூபாய் என்று வெச்சுக்கோங்க. அவன் காலம் தள்ள வேண்டியதுதான். ஒரு மூத்த ஊழியர் மாஸ்டரின் நல்லெண்ணத்தைப் பெற்றவராக இருந்தால் அதிகபட்சம் ஓய்வு பெறும்போது ஐம்பது ரூபாய் கிடைக்கும். ஆனால் நூறு கூலிகளை வெச்சிருக்கிற ஒரு மேஸ்திரி இதைவிட அதிகமாக சம்பாதிப்பான். பெரும்பாலான எழுத்துப் பணியாளர்கள் கஞ்சித் தண்ணியும், கருவாடும் தின்னுதான் வாழ்க்கையை ஓட்டுகிறார்கள். வேறெதுவும் அவங்களால வாங்க முடியாது. உங்களிடம் உண்மையைச் சொன்னால் எங்களைப் போன்ற மூத்த எழுத்தர்களுக்கு மேஸ்திரிகள் விருப்பப்பட்டு குடுக்கிற மாமூல் இல்லைன்னா வாழ்க்கையை ஓட்டவே முடியாது” என்றான் ஜான்ஸன்.

“நான் மொத தடவையா எஸ்டேட்டுக்கு வந்தபோது” என்று அப்பாவு தொடங்கினார். “ஒரு ரூம் குடிசையிலதான் இருக்க வேண்டியிருக்கும். காலைல ஆறு மணிக்கு வேலைக்குப் போவோம். பல சமயங்கள்ல அதுக்கு முன்னாடியே போக வேண்டியிருக்கும். திரும்பி வரும்போது ராத்திரி எட்டு மணியாகிரும். அந்தக் காலத்தில தேயிலைக் காட்டில

உடம்பெல்லாம் அட்டை மொய்யும். செக்ரோல் வேலைய முடிச்ச உடனே ஒம்பது மணிக்கு போட்டிருக்கிற துணியெல்லா கழட்டி வீசிட்டு துண்டை மட்டும் கட்டிக்கிட்டு, ஒரு கத்தி எடுத்து உடம்பில ஒட்டிகிட்டு இருக்கிற அட்டைகளை எல்லாம் சொரண்டி எடுப்பேன். ரத்தம் ஒழுகிறதத் தடுக்க எல்லா எடத்திலயும் பேப்பரை ஒட்டிக்குவேன். அப்புறம் சாப்பிட்டு விட்டு, முட்டக் குடிச்சிட்டு படுத்துக்குவேன். எஸ்டேட்டுக்கு வார வரைக்கும் எனக்குக் குடிக்கிற பழக்கம் இல்லை. கீழே இருக்கிற ஆளுங்க எல்லாரும் எங்களைப் பத்தி கேவலமாப் பேசறாக. ஊருக்குப் போகும்போது ‘காட்டு மனுஷன் போறான்’, ‘எஸ்டேட் குடிகாரன் போறான்’ன்னு சொல்லிக் கிண்டல் பண்ணுவாங்க. ஆனா இந்த மாதிரி சூழ்நிலையில வேலை செய்யற எந்த மனுசனும் குடிக்காம இருக்க முடியாதுன்னு நான் அவுங்ககிட்ட சொல்லுவேன். குடிக்காம இருந்தா, குளிரு, நோயி, களைப்பினால அவன் செத்துப் போயிருவான். இந்தக் குளிர், மழையத் தாங்கிக்கிறதுக்கும் ஒரே மாதிரி யான தனிமையான வாழ்க்கையினால வர்ற சலிப்பைத் தாங்கிக்கவும் சக்தியைக் குடுக்கறது சாராயம்தான். அதுமட்டும் இல்லைன்னா எங்கள்ல முக்காவாசிப்பேரை புதைச்ச இடத்தில புல்லு மொளைச்சிருக்கும். இப்ப நாங்க எல்லாருமே குடிகாரங்க ஆயிட்டோம். நாங்க வேலையிலிருந்து ரிட்டையர் ஆகி ஊருக்கு திரும்பும்போது இந்தக் குடிதான் எங்களை ஒழிச்சுக்கட்டி சவக்குழிக்கு அனுப்பப்போகுது” என்றார் அவர்.

“அந்தக் காலத்தில் எங்களுக்கு வருட விடுமுறையும், சிக் லீவும் கிடையாது. தொடர்ச்சியா மூணு, நாலு வருசம் வேலை செய்துவிட்டு சம்பளமில்லாத லீவுல ஊருக்குப் போவோம். பத்து வருசத்துக்கு முன்னாடி எங்கப்பா சாகக் கிடந்தப்பகூட எனக்கு லீவு கெடக்கலை. என்னப் பாக்காமலேயே எங்கப்பா செத்துப் போனாரு. ஒரு ரெண்டு வருசமாத்தான் ஏதோ ஒரு வகையில வருஷ லீவும் சிக் லீவும் சில எஸ்டேட்டுகள்ல குடுக்கிறாங்க. அதுவும் மாஸ்டரோட விருப்பு வெறுப்புக்குத் தகுந்த மாதிரிதான் கிடைக்கும். மாஸ்டருக்கு என்னைப் புடிச்சா ரெண்டுவாரம் வருச லீவு கிடைக்கும். இல்லாட்டி லீவே கிடைக்காது. ஒடம்பு சரியில்லாம இருக்கும்போது மாஸ்டர்கிட்ட நல்ல பேர் இருந்தா சம்பளத்தோட லீவு கிடைக்கும். எசமானுக்கு பிடிக்காட்டி சம்பளம் இல்லாத லீவுதான். அதவிட மோசம் என்னன்னா அடிக்கடி படுத்தா வேலைய விட்டுத் தூக்கிருவாங்க. இப்பக்கூட சில எஸ்டேட்டுகளில ஏதாவது ஸ்டாஃபுக்கு லீவு வேணும்னா அவனே தன்னோட செலவில இன்னொரு ஆளைத் தன்னோட வேலையச் செய்யறதுக்கு ஏற்பாடு பண்ணனும். அப்பத்தான் லீவு கிடைக்கும். பல

சமயங்களில அவன் திரும்பி வந்துப் பாக்கும்போது வேலைய விட்டுத் தூக்கியிருப்பாங்க. அதனால பெரும்பாலான எழுத்தர்கள் வீட்டுக்குப் போக லீவு கேக்கவேமாட்டாங்க. நான் மொதல்லயே சொன்ன மாதிரி ஒரு நாளைக்குப் பதினாறிலிருந்து பதினெட்டு மணிநேரம் வரைக்கும் வேலை செய்ய வேண்டியிருக்கும். கவாத்துப் பண்ணுற நேரத்தில அப்பாவு அண்ணன் தேயிலைக் காட்டிலதான் சாப்பிடுவாரு, மழை கொட்டிட்டு இருக்கும்போது மேஸ்திரி கொடை புடிச்சிட்டு இருப்பாரு. இவரு சாப்பாடு இருக்கிற பித்தளை தூக்கை ஒரு கையில புடிச்சிட்டு இன்னொரு கையில சாப்பிட்டு இருப்பாரு. மத்தியானம் சாப்பிடுவதற்கு வீட்டுக்குப் போனதற்காக எத்தனை பீல்டு ரைட்டர்களை வேலையை விட்டுத் தூக்கியிருக்காங்க தெரியுமா? அதனால எல்லாத்தையுமே சகிச்சிட்டு வேலை செஞ்சிட்டே இருந்தோம். இப்பக் கொஞ்சம் கொஞ்சமா சிரமம் குறைஞ்சிட்டு வருது.”

“பிரிட்டிஷ்காரர்களோட நன்மைக்காக இந்தியாவில் தேயிலைத் தொழிலை உருவாக்கியதற்கு நமது நாடு எவ்வளவு பெரிய விலை குடுத்திருக்குங்கறது என்பது இப்போது எனக்குத் தெரியுது. எஸ்டேட்டுக்கு வேலைக்கு வந்த லட்சக்கணக்கான தொழிலாளிகள் நோயாலும், அதிகாரிகளின் கொடுமையாலும் இறந்து போயிருக்கிறார்கள். தப்பிப் பிழைத்தவர்கள் நடைப்பிணங்களாகவோ, குடிகாரர்களாகவோ ஆகி விட்டார்கள். உண்மையிலேயே பயங்கரமான விலைதான். மாபெரும் செல்வம் சேர்த்துள்ள இங்கிலாந்துப் பங்குதாரர்கள் எந்த விலையும் கொடுக்கவில்லை. நமது நாடும், நமது மக்களும்தான் அதற்கான விலையைக் கொடுத்திருக்கிறோம்” என்றார் ஆபிரஹாம்.

“ஆனால் நமது நாட்டுக்காரர்கள் சிலரும் கூட எந்த விலையும் கொடுக்காமல் செல்வம் சேர்க்க முயன்று வருகிறார்கள்” என்றார் அப்பாவு.

“யார் அவர்கள்? எந்த வழியில்?”

“குரங்குமலை எஸ்டேட்டில் ஜார்ஜ் என்ற ஒரு தலைமை எழுத்தன் இருக்கிறான். எங்களுக்கெல்லாம் அப்புறம் நீண்டநாள் கழித்துதான் இங்கே வந்தான். இப்போது எங்களை எல்லாம்விட அவன்தான் மிகப்பெரிய பணக்காரன் ஆயிட்டான். இப்ப மைசூரில் ஒரு எஸ்டேட்டில் அவனை உதவி மேனேஜராப் போட்டிருக்காங்கன்னு நேத்து கேள்விப்பட்டோம். அவன் எஸ்எஸ்எல்சி பாசாகி இருக்கிறான் என்கிறார்கள். ஆனால் வேறு பலரும் எஸ்எஸ்எல்சி பாசாகி

இருக்கிறார்கள். மற்றவர்கள் மாதம் அம்பது ரூபாய் சம்பளம் பெற்று ஓய்வு பெறுவார்கள். ஆனால் ஜார்ஜ் ஒரு மேனேஜராக ஓய்வு பெறுவான். வீரமுள்ளவர்களையே அதிர்ஷ்டம் விரும்புகிறது என்று சொல்கிறார்கள். ஆனால் வெட்கங்கெட்டவர்களைக் கூட அதிர்ஷ்டம் தேடி வருகிறது என்பதை நாங்கள் கண்கூடாகப் பார்க்கிறோம்” என்று ஜான்ஸன் கசப்புடன் சொன்னான்.

“யோகம்தான் அல்லது இந்த வேலையை வாங்கித் தரக்கூடிய அளவிற்கு செல்வாக்குள்ள உறவினர் யாராவது இருந்திருக்கலாம். இதில் வெட்கங்கெட்டதனம் ஏதும் இருப்பதாக தெரியவில்லையே.”

“அது சரிதான் டாக்டர். அவ்வளவு செல்வாக்கான ஒரு சொந்தக்காரன் ஜார்ஜுக்கு இருக்கத்தான் செய்யுதான்” என்று சொல்லி விட்டு அப்பாவு கோணலாகச் சிரித்தார். ஜான்ஸனும் அவரோடு சேர்ந்து கொண்டான்.

“நீங்கள் சொல்வது எனக்கு கிரேக்க மொழியிலோ லத்தீன் மொழியிலோ பேசுவது போலிருக்கிறது” என்றார் டாக்டர்.

“அந்த செல்வாக்கு வேற ஒண்ணுமில்ல, பாவாடைக்குக் கிடைக்கிற செல்வாக்குதான். அவன் பொஞ்சாதி புல்லுடனும், வொயிட்டுடனும் நெருக்கமான உறவு வைத்திருப்பதாகச் சொல்கிறார்கள். திரு வொய்ட்டுடைய செல்வாக்கினால்தான் அவனுக்கு உதவி மேனேஜர் பதவி கிடைத்திருக்கிறது” அப்பாவு விளக்கினார்.

“அவன் எந்த விலையும் கொடுக்காமல் இந்தப் பதவியைப் பெற்றுக் கொண்டதாக சொன்னீர்கள். ஆனால் இது மிகப்பெரிய விலையல்லவா.”

“டாக்டர் நீங்களும், நானும் அவன் பெரிய விலை கொடுத்து விட்டதாக நெனக்கோம். ஆனால் அவன் என்னமோ தனக்குப் பெரிய கௌரவம் கிடைத்து விட்டதாகத்தான் நெனக்கான்.”

“தங்களின் நலன்களுக்காக இதுபோன்ற முறைகளைக் கையாளக் கூடிய ஆட்கள் ஐரோப்பியர்களுக்கு நடுவிலும்தான் இருக்கிறார்கள். உண்மையில் உலகம் முழுவதும் இருக்கிறார்கள்” டாக்டர் சொன்னார்.

“ஆமாம்” அப்பாவு அதை ஆமோதித்தார். “டாக்டர் சொல்வது ரொம்பச் சரி. சிலோனில் ஒரு ரொம்பப் பெரிய கம்பெனிக்குச் சொந்தமான ஒரு எஸ்டேட்டில் நான் வேலைல இருந்தப்ப அதே கம்பெனியுடைய இன்னொரு எஸ்டேட்டில் ஒரு பெருங்குடிகாரன் மேனேஜராக இருந்தான். அந்தப் பய வேலைக்கே போகாமல் குடித்து விட்டு பங்களாவில் தூங்கிட்டே இருப்பான். அதனால் எஸ்டேட்டில் எல்லாமே

சின்னா பின்னமாயிருச்சு. கம்பெனி ஒருவரை நியமித்து எஸ்டேட்டைப் பார்வையிட்டு அறிக்கை அனுப்பும்படி உத்தரவிட்டது. மேனேஜர் வேலை நீக்கம் செய்யப்படலாம்னுதான் வதந்தி. ஆனால் அத்தனை குறைகளுக்கு நடுவிலும் அந்தக் குடிகாரனுக்கு ஒரு நல்ல தகுதி இருந்தது. அவனது பொஞ்சாதி நல்ல அழகி. அவளது கவர்ச்சி ஆய்வு செய்ய வந்தவரிடம் நல்லா வேலை செய்தது. அவர் அவளை கொழும்புவில் நடனங்களுக்கும், திரைப்படங்களுக்கும் கூட்டிட்டுப் போனார். கணவன் வேலை நீக்கம் செய்யப்படவில்லை. வேறொரு சிறிய எஸ்டேட்டுக்கு மாற்றம் செய்யப்பட்டதோடு தப்பித்துக் கொண்டான்.”

“எல்லாக் கம்பெனிகளிலும் மேனேஜர்களுக்கு நல்ல சம்பளம் வழங்கப்படும் போலத் தோன்றுகிறது” டாக்டர் பேச்சை மாற்ற விரும்புவதை அப்பாவு புரிந்து கொண்டார்.

“உண்மையிலேயே ரொம்ப நல்ல சம்பளம். கொழுத்த சம்பளத்தோடு எல்லா விதமான அலவன்ஸுகளும் அதோடு ஒரு வருட சம்பளத்தைவிட அதிகமான கமிஷன் தொகையும் கிடைக்கும். பர்லோ (furlough - ஒவ்வொரு மூன்றாண்டுக்கும் ஆறுமாதம்) லீவைத் தவிர வருடம் ஒரு மாதம் உள்ளூர் விடுமுறையும் மேனேஜர்களுக்கு உண்டு. அப்போ அவர்களுக்கும் அவர்களது குடும்பத்தினருக்கும் பயணப்படி, விடுமுறையை அனுபவிக்க நாளொன்றுக்கு இருபத்தி ஐந்து ரூபாய் எல்லாம் கிடைக்கும். கூட சம்பளமும் மற்ற அலவன்ஸுகளும் கிடைக்கும். ரொம்ப ஆடம்பரமான பங்களாக்களை அவர்களுக்கு கம்பெனி குடுத்திருக்கு. கூடவே திரைச்சீலைகள் விரிப்புகள், குஷன்கள் ஏன் சமையல் சாமான்கள்கூட இலவசமாகக் குடுக்கறாங்க.”

“விஸ்கி பாட்டில் இலவசமாகக் கொடுக்கப்படுவதில்லை என்பது ஒரு நல்ல விசயம்” டாக்டர் பாதி கேலியாகவும், பாதி வெறுப்புடனும் சொன்னார்.

“அவர்களுக்கு அப்படியென்ன தகுதி இருக்கிறது?” என்று கேட்டுவிட்டு ஜான்ஸன் தொடர்ந்தான். “பெரும்பாலும் வெள்ளைத் தோல் ஒன்றே ஒன்றுதான் அவர்களுடைய ஒரே தகுதி. அவர்களது தாய்மொழி ஆங்கிலம் என்பதால் அவர்கள் ஆங்கிலம் பேசுகிறார்கள்...”

“இல்லை பிளடி இங்கிலீஷ் பேசுகிறார்கள்” டாக்டர் இடையே புகுந்தார்.

ஜான்சன் சிரித்துவிட்டு மீண்டும் தொடர்ந்தான். “அவர்களது தோல்

மட்டும் கருப்பாக இருந்திருந்தால் செக்ரோல் கிளார்க் வேலைகூடக் கிடைத்திருக்காது. தேயிலைக் காட்டில் நிற்கும் எழுத்தர்கள் மற்றும் தொழிலாளர்களின் கடின உழைப்பால் நல்ல விளைச்சல் கிடைத்தால் ஏஜமானுக்குப் பாராட்டும் வெகுமதியும் கெடைக்கும். ஏதாவது தவறாகப் போனால் 'பிளடி ரைட்டர்' காரணமாகி வேலையிலிருந்து துரத்தப்படுகிறான். டீ மேக்கரும் அவனது உதவியாளர்களும் ராப்பகலாகக் கண்விழித்து பாக்டரியில் உழைத்தால் டீக்கு நல்ல விலை கிடைத்தால் அதற்கு மாஸ்டரின் அற்புதமான நிர்வாகத் திறன்தான் காரணம் என்று கூறப்பட்டு பரிசு கிடைக்கிறது. மாறாக ஏதாவது காரணத்தினால் விலை குறைந்துவிட்டால் உபயோகமற்ற பிளடி டீ மேக்கர் பலிகடாவாக்கப் பட்டு வீட்டுக்கு அனுப்பப்படுவான். எல்லாமே அநியாயம்தான். ஆனால் நாங்கள் என்ன செய்ய முடியும்? அவர்கள்தான் நம்மை ஆள்கிறார்கள். பணிந்து போவதைத் தவிர வேறு வழியில்லை."

"ஆமாம். அதனாலதான் மகாத்மா காந்தி, பண்டிட் நேரு இன்னும் மற்ற தலைவர்கள் எல்லோரும் சுயராஜ்ஜியம் அடைய வேண்டுமென்று போராடி வருகின்றனர். நாம் சுயராஜ்ஜியம் அடையும் போது இந்த அநீதிகள் மறைந்துவிடும்" என்றார் ஆபிரஹாம்.

"சரிதான். காங்கிரசின் புகழ் நாளுக்கு நாள் அதிகமாயிட்டுத்தானிருக்கு. ஒண்ணு ரெண்டு வருடங்களுக்கு முன்பு கிராமங்களில் இருக்கின்ற நமது மக்களுக்கு காங்கிரஸ் என்றால் என்னவென்றே தெரியாது. ஆனா இன்னைக்கு ஏறக்குறைய எல்லா கிராமங்களிலும் காங்கிரஸ் தொண்டர்கள் வேலை செய்யறாங்க. காங்கிரசுக்காகப் பிரச்சாரம் செய்வதோடு மக்களின் மனங்களில் வீரத்தையும் நம்பிக்கையையும் விதைத்து வருகிறார்கள். நமக்குத் தெரிஞ்சு முதன்முதலா இப்பத்தான் இந்தியர்கள் என்று சொல்லிக் கொள்வதில் கர்வம் வரத் தொடங்கி இருக்கிறது" என்றான் ஜான்ஸன்.

"இன்று டீ எஸ்டேட்டுகளைப் பற்றி உங்களிடமிருந்து நிறையத் தெரிந்து கொண்டேன்" என்று கூறிய ஆபிரஹாம் யோசனையுடன் தனக்குத் தானே கூறிக் கொள்வது போல் பேசத் தொடங்கினார் "இன்று இந்த எஸ்டேட்டுகளில் உற்பத்தி செய்யப்படும் தேநீரை சிவப்புத் தேநீர் என்று சொன்னால் அது மிகைப்படுத்துதல் ஆகவே ஆகாது என்று நான் நினைக்கிறேன். கடந்த காலங்களில் தங்களைத் தாங்களே பலி கொடுத்துக் கொண்ட ஆயிரமாயிரம் ஆண் - பெண்களின் இரத்தத்தாலும் கண்ணீராலும் வியர்வையாலும் உற்பத்தி செய்யப்பட்டு இருக்கிறது இந்தத் தேநீர். இந்த முகம் தெரியாத தொழிலாளர்கள் மற்றும் எழுத்துப் பணியாளர்கள் தென்னிந்தியாவில் தேயிலைத்

தொழிலை நிர்மாணிக்க செய்த தியாகங்கள் அரசாங்கத்தாலும், நமது நாட்டு மக்களாலும் என்றாவது ஒருநாள் புரிந்து கொள்ளப்படும், அங்கீகரிக்கப்படும் என்று நாம் நம்புவோம்.”

“அப்படியென்றால் நீங்கள் இங்கேயே தொடர்ந்து இருக்க முடிவு செய்து விட்டீர்கள்” அப்பாவு ஆர்வத்துடன் டாக்டர் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தார்.

“நான் சொல்ல வந்தது என்னவென்றால் இறுதி முடிவு எடுப்பதற்கு முன் இன்னும் கொஞ்சம் தெரிந்து கொள்ள வேண்டும் என்று நினைக்கிறேன். இந்த இடைவிடாத மழையை உண்மையிலேயே நான் வெறுக்கத் தொடங்கிவிட்டேன்.”

“டாக்டர் கிறிஸ்துமஸுக்கு உங்கள் புரோகிராம் என்ன?”

“இருபத்திநாலும், இருபத்தி ஐந்தும் விடுமுறை நாட்கள்தானே? ஓய்வாக இருந்தால் கிராஸ்ஹில்ஸுக்கு ஒரு பிக்னிக் போகலாமா? வறீயளா? அதுக்குள்ள மழை முழுவதாக நின்று போயிருக்கும். அட்டைகள் போய்விடும். கிராஸ்ஹில்ஸின்மேல் பூவாறுன்னு ஒரு சின்ன ஆறு ஓடுது. அந்த நதியோடும் பள்ளத்தாக்கு முழுவதும் கம்பளம் விரிச்ச மாதிரி அழகான பூக்களால் நெறஞ்சு போயிருக்கும். அந்தப் பள்ளத்தாக்கு வரை போய் கேம்ப் அடித்து சாப்பிட்டுவிட்டுத் திரும்பி வந்துடலாம். மான் கூட்டங்களும், காட்டெருமைக் கூட்டங்களும் புல் மேய்ந்து கொண்டிருக்கறதைக் கூட பாக்கலாம். என்ன சொல்றீங்க?” அப்பாவு எப்படியாவது டாக்டரைக் கட்டிப்போட்டு விடுவதென்ற முடிவிலிருந்தது தெரிந்தது.

“ஓ! அற்புதமாக இருக்கும்! ரொம்ப நன்றி! ஏற்பாடு செய்யுங்கள் நான் கண்டிப்பாக வருகிறேன்” டாக்டர் உற்சாகமாக ஒப்புக் கொண்டார்.

# 31

பனிக்கட்டியைப் போல் தூய்மையானவனாக,
வெண்பனியைப் போல் களங்கமற்றவனாக நீ
இருந்தாலும் பழியிலிருந்து தப்பிக்க முடியாது.

ஹாம்லெட்
-ஷேக்ஸ்பியர்

சங்கரபாண்டியன் மேஸ்திரியும், அவனது உதவியாள் திருமலையும் இரவு நேரத்தில் சங்கரபாண்டியனின் அறையில் உட்கார்ந்து அலுவலகத்திலிருந்து கொடுக்கப்பட்டிருந்த தொழிலாளர்களின் கணக்கு வழக்குகளை மேய்ந்து கொண்டிருந்தார்கள்.

“கருப்பன், வள்ளியோட கணக்கக் கொஞ்சம் பாருங்கண்ணே. அவ ஆஸ்பத்திரிக்குப் போயி ரெண்டு வாரம் ஆச்சு. எப்ப புள்ள பெத்து எப்போ வருவான்னே தெரியல. கடன் ஏறிப் போயிருக்கும்னு நெனக்கேன்” என்றான் திருமலை.

“எல்லாம் அந்த புதுசா வந்த டாக்டர் பயலோட வேல” என்றான் சங்கரபாண்டியன். புது டாக்டரை நினைத்தாலே அவனுக்கு எரிச்சல் மண்டிக்கொண்டு வந்தது. “கருப்பன் வந்து டாக்டர் அவள ஆஸ்பத்திரியில சேக்கச்சொல்லறான்னு சொன்னப்ப நான் நேராப்போயி பாத்து இன்னொரு பத்துநாள் வேலை செய்ய விடுங்கன்னு கேட்டுகிட்டேன். அவன் ஒத்துக்க மாட்டேன்னு சொன்னதோடு உடாம எம்மேல எரிஞ்சு வேற விழுந்துட்டான்... ‘நீ எல்லாம் ஒரு மேஸ்திரியா. உனக்கு மனசே இல்லையா அவ வேலை செய்யறதால உனக்குக் கிடைக்கிற கமிசனைப் பத்தி மட்டுந்தான் யோசிப்பியா? நோய் வந்தவங்களுக்கு ஒழுங்கா மருந்து கொடுக்கத்தான் எனக்கு சம்பளம் தராங்க. நான் அவள ஆஸ்பத்தியில சேத்து கவனிக்கத்தான் செய்வேன்’னு கத்தத் தொடங்கிட்டான். அவ ஆஸ்பத்திரியிலே ஒரு பதினைஞ்சு நாள் இருக்க வேண்டி வருமான்னு நான் கேட்டப்போ, ‘எனக்கு எப்படித் தெரியும்? ரொம்ப நாளைக்கு முன்னாடியே அவளை ஆஸ்பத்திரியில சேத்தியிருக்கணும். அவ ரொம்ப மோசமான நிலைமையில இருக்கா. பொழைப்பாளான்னே எனக்கு சந்தேகமா இருக்கு. அவ செத்துப்போனா நீ கடவுளுக்கு பதில் சொல்லியே ஆகணுங்கறான்.’ நான் பேசாம வந்திட்டேன். குரூப் ஐயா

மட்டும் இங்கே இருந்தா நாம ஒண்ணு கேட்டா மாட்டேன்னு சொல்லுவாரா? நாம ஒரு கூலிய ஆஸ்பத்திரியில சேத்திக்குங்கன்னு சொன்னா மறுக்க மாட்டாரு. வேண்டான்னு சொன்னா ஒரு வார்த்த மறுத்துப் பேசாம அந்தக் கூலிய தொரத்தியே விட்டுடுவாரு. அந்த மாதிரி ஒரு தங்கமான டாக்டர் இனி எப்ப நமக்கு கிடைக்கப் போறாரோ? இப்ப இருக்கிறவன் மாதிரி ஒரு உதவாக்கரைப் பயலை வெச்சுகிட்டு எப்படித்தான் எஸ்டேட்டுல வேல நடக்கப் போகுதோ" சங்கரபாண்டியன் புலம்பினான்.

"அண்ணே அந்த டாக்டர் அவனுக்கு சம்பந்தமே இல்லாத விசயத்திலகூட தலையிடுதான்" திருமலையும் தன் பங்குக்கு ஆரம்பித்தான். "போனவாரம் மெடிக்கல் கூலியக் கூட்டிட்டு லைன்ல நடந்து போயிட்டிருந்தான். எங்க லைனுக்கு வரும்போது நான் உள்ள தான் இருந்தேன். அவன் உள்ளவந்து கன்னுக்குட்டிய அறைக்குள்ள கட்டி யிருக்கிறதப் பாத்திட்டு அதை உள்ளே கட்டவேண்டான்னு சொல்லுதான். கன்னுக்குட்டி உள்ள இருக்கிறதால ரூம் அழுக்காகுதாம். நம்ம பாடி ரொம்ப அழுக்கா குப்பகூளமா இருக்குது, அதை சுத்தமா வெச்சுக்கன்னு வேற எங்கிட்ட சொல்லுதான். பாடில நாந்தான குடியிருக்கேன். இதல்லாம் அழுக்கா, அசிங்கமா இருந்தா இந்தப் பயலுக்கு என்ன? அவன யாரு இங்கன வந்து குடியிருக்கச் சொல்லுதாங்க. நம்ம குரூப் ஐயா இந்த மாதிரி விசயத்தில எல்லாம் தலையிட்டதேயில்ல. உண்மையிலேயே ரொம்ப நல்ல மனுசன்."

"கணக்கு முடிச்சதுக்கு அப்புறம் வழக்கமான மாமூலோட போயி இந்தப் புது டாக்டரப் பாக்கதா வேண்டாமான்னு புரியலையே" சங்கரபாண்டியன் கவலையுடன் சொன்னான்.

"அவன் ஒரு கிறுக்கன் போலிருக்காண்ணே. வாங்க மாட்டேன்னு சொல்லிட்டு இன்னும் தொல்ல குடுத்தாலும் குடுப்பான். வர்ற வருசம் புதுக்கூலிகள சேக்கும்போது நாம ஜாக்கிரதையா இருக்கணும்ணே. நோய் வந்தவங்க யாரையாவது கூட்டிட்டு வந்தா அவங்கள பதிவுப் பண்ணக் கூடாதுன்னு சொன்னாலும் சொல்லுவான். நாம எத்தன கஷ்டப்பட்டு கூலிகளக் கொண்டு வாரோம்ங்கிறது டாக்டர் குரூப்புக்கு நல்லாத் தெரியும். ஒரு ஆளையும் பதிவு பண்ணக் கூடாதுன்னு சொல்லவே மாட்டாரு. அப்படியே ஒருவேளை யாரையாவது சொன்னாலும் கெஞ்சிக் கேட்டிட்டா ஒத்துக்குவாரு. புதுசா வந்த பயலால நாம எல்லாரும் பிரச்சனையில மாட்டிக்கிட்டோமுன்னு நெனைக்கேன். இந்த தடவ கூலிகளுக்கு அட்வான்ஸ் குடுக்கும்போது பாத்துக் குடுக்கணும்ணே" சங்கரபாண்டியனின் கடினமான முகத்தில்

குறுக்கும், நெடுக்குமாக ஓடிய கோடுகள் அவன் பெருங்கவலையில் ஆழ்ந்திருப்பதைக் காட்டின.

“எல்லா மேஸ்திரிகளும் ஒண்ணாச் சேர்ந்து இந்த டாக்டர் மேல புகார் பண்ணினா என்ன?” திருமலை யோசனை கூறினான்.

“என்ன புகார் சொல்ல? காசு குடுத்தா வாங்க மாட்டேங்கிறான்னு எப்படி சொல்ல முடியும்.”

“பெரிய காட்டு ஐயாகிட்டப் பேசணும். டாக்டர் நம்ம கூலிகள நிராகரிச்சு, பதிவு செய்யவிடாம தடுத்திட்டா பெரிய காட்டு ஐயாவுக்கும், ஆபிஸ் ஐயாவுக்கும் மாமூல் குடுத்து என்ன பிரயோஜனம்?”

“அது வேற இருக்கா? நான் அதையெல்லாம் இன்னும் நெனச்சே பாக்கல. இந்தத் தேவடியாப்பய புள்ள டாக்டர் எந்த நேரத்துல இங்கன கால வெச்சானோ...”

“சரி விடுங்கண்ணே, வள்ளியோட கணக்கைப் பாருங்கண்ணே”என்றான் திருமலை.

“அக்டோபர்ல அவ பதினைஞ்சு நாள் வேல செஞ்சிருக்கா. நவம்பர்ல பத்துநாள், டிசம்பர்ல வேலையே செய்யல. ஆனா கருப்பன் ஒருநாள் கூட விடாம வேலை செஞ்சிட்டே இருந்திருக்கான். அவன் ஒரு நல்ல கூலிடே. அவன அடுத்த வருசமும் வெச்சுக்கப் பாக்கணும். ஒரு வேள அவுங்க ஊருக்குப் போனாலும் திரும்பி இங்க கொண்டாரப் பாக்கணும். அந்தப் பயகிட்ட இனிமேல் நல்லபடியா நடந்துக்க” என்றான் சங்கரபாண்டியன்.

“வள்ளி இங்கன திரும்பியே வரமாட்டா. கருப்பனையும் வரவிட மாட்டான்னுதான் நான் நெனைக்கேன். அவ பொழைப்பாளான்னே எனக்குத் தெரியல. அவ ஆபத்தான நிலையில இருக்கான்னு, கருப்பன்கிட்ட டாக்டர் சொன்னதா கோவிந்தன் சொல்லுதான். கருப்பன் துக்கத்தில முழுகிப் போய் கெடக்கான்.”

“ஆமா அந்த டாக்டர் எங்கிட்டயும் அப்படிதான் சொன்னான். அவ செத்தா அதுக்கு நான்தான் பொறுப்புன்னு வேற சொன்னானே. இந்த மாதிரி யோசனையெல்லாம் இந்தப் பயகளுக்கு எப்படித்தான் தோணுதோ. இங்க நான் கூட்டிட்டு வராட்டி கருப்பனும் வள்ளியும் ரொம்ப நாளைக்கு முன்னாடியே சோறில்லாம செத்திருப்பாங்க” என்றான் சங்கரபாண்டியன்.

கருப்பன் டாக்டரிடம் சென்று வள்ளியின் நிலையில் ஏதாவது முன்னேற்றம் தெரிகிறதா என்று விசாரித்தான். “அவ நிலைமை மோசமடையவில்லை. அதுவே ஒரு ஆறுதலான விசயம்தான்” என்றார் டாக்டர். அவளுக்கு இறைச்சியும், உப்புப் போட்டு சமைக்கப்பட்ட எந்த உணவும் கொடுக்கக் கூடாது என்று கண்டிப்பாக கூறியதோடு ஆஸ்பத்திரியிலேயே உப்பில்லாத உணவு கொடுக்க ஏற்பாடும் செய்தார்... எந்தக் காரணத்தைக் கொண்டும் வெளியிலிருந்து எந்த உணவும் அவள் எடுத்துக் கொள்ளாமல் பார்த்துக் கொள்ள வேண்டும் என்றும், அவள் பிழைப்பதே உப்பில்லாமல் சாப்பிடுவதை ஒட்டித்தான் இருக்கிறது என்றும் எச்சரித்ததோடு ஒரு வாரத்திற்குள் வள்ளிக்குப் பிரசவமாகி விடும் என்றும், பிரசவத்திற்கு முன்போ, பிரசவத்தின் போதோ அல்லது அதற்குப் பின்போ கூட வலிப்பு வந்தால் அவள் பிழைத்தெழுவது மிகவும் சிரமமாகி விடும் என்றும் கூறினார். அதன் காரணமாகவே வள்ளி வெளியிலிருந்து எதுவும் சாப்பிட்டு விடக்கூடாது என்பதில் தான் இவ்வளவு கண்டிப்புடன் இருப்பதாகவும் பொறுமையாக விளக்கினார். கருப்பன் நேராக வள்ளியிடம் சென்று டாக்டர் சொன்னதை கிளிப் பிள்ளையாக ஒப்பித்தான்.

“பத்துநாள் உப்பில்லாம தின்னுத்தின்னு ருசியே தெரியாமப் போச்சு மாமா. சோத்தப் பாத்தாலே வாந்தி வர்ற மாதிரி இருக்கு. எத்தனை நாளைக்கு இப்படி இருக்கணுமோ?”

அவளது மற்றும் தனது நன்மைக்காகத்தான் இவ்வாறு செய்ய வேண்டியிருக்கிறது என்றும் இன்னும் கொஞ்சம் நாள் உப்பில்லாமல் சமாளித்தால் எல்லாம் சரியாகிவிடும் என்றும் மென்மையான குரலில் சொல்லியபடி தன் மடியில் முகம் புதைத்திருந்த அவளது தலையை வருடிக் கொடுத்தான்.

# 32

பின்பு காட்டைச் சேர்ந்த நாங்கள் அந்த குகை வரை மந்தையோடு சென்றபோது குகையின் வாயிலில் பீதியூட்டும் ஒரு காட்சியைக் கண்டோம். எருமைகள் போல அவன் முடியில்லாமலிருந்தான். பின்னங்கால்களில் நடந்தான். எங்களைப் பார்த்ததும் கூவியழுதான். அதைக் கேட்டவுடன் நாங்கள் பீதியடைந்து ஒருவரையொருவர் இடித்து நெரித்துக் கொண்டு தலைதெறிக்க ஓடிவிட்டோம்.

செகன்ட் ஜங்கிள் புக்
- ரூட்யர்ட் கிப்லிங்

கிருஸ்துமஸிற்கு நான்கு நாட்கள் முன்பு ஆபிரஹாம் மாலையில் மருத்துவமனையை விட்டுப் புறப்பட்டுக் கொண்டிருக்கும் போது அப்பாவு வந்து சேர்ந்தார்.

“டாக்டர் மலைபாதைக்குப் போற நம்ம எஸ்டேட் ரோட்டுக்கு குறுக்கே ஓடும் ஓடையைப் பாத்திருக்கீயளா? பாலத்திலிருந்து ஒரு பர்லாங் தள்ளி அந்த ஆறு காட்டுக்குள் நுழையுது. அதுக்கும் கொஞ்சம் தள்ளி ஆற்றின் மேல் ஒரு பெரிய பாறை துருத்திட்டிருக்கும். அதற்குக் கீழே குகை போல ஒரு இடம் இருக்கு. ஒரு மேஸ்திரி இரண்டு கூலிகளோடு அங்கே விறகு வெட்டப் போனப்ப குகைக்குள்ள இரண்டு குழந்தைகள் உட்கார்ந்து இருப்பதைப் பாத்தானாம். அதுக காட்டுக்குள்ள இருக்குற காடர்களோட கொழந்தைகள். இன்னிக்கும் அதுக அங்கேயே இருக்கறதா சொன்னாங்க. நீங்க பாக்க வறீயளா நானும் வாறேன்” என்றார்.

“கண்டிப்பா வருகிறேன். காடுகளில் வாழும் பழங்குடி மக்களை நான் பார்த்ததேயில்லை” என்று டாக்டர் ஆர்வத்துடன் கிளம்பினார். வழியில் அப்பாவு பிக்னிக்கைப் பற்றி உற்சாகமாக பேசத் தொடங்கினார்.

“24-ஆம் தேதி பிக்னிக் ஏற்பாடு பண்ணியிருக்கேன். அதிகாலை ஐந்து மணிக்கு, இல்ல அதற்கு முன்பே நாம் கிளம்பிடனும். கிராஸ் ஹில்ஸ் அடிவாரத்துக்குப் போய்ச் சேர இரண்டு மணிநேரமாகும். சூரியன் கிளம்பும் நேரத்தில் அங்கேயிருந்தா காட்டெருமைகள் மேய்ஞ்சிட்டு இருக்கறதப் பார்க்கலாம். சமைக்கக் கொஞ்சம் கூலிகளையும் ஏற்பாடு பண்ணியிருக்கேன். காலை சாப்பாட்டைக் கையோட கொண்டு

போய்விடலாம். மாலை ஐந்து மணிக்கு முன்ன திரும்பி வந்துவிட வேண்டும். இல்லாட்டி ஆபத்தாயிடும்.”

“அற்புதம்” என்றார் டாக்டர். “அந்த நாளுக்காகத்தான் துடித்துக் கொண்டிருக்கிறேன். ஐந்து மணிக்கு முன்பே தயாராகி விடுவேன்” என்று உண்மையான ஆர்வத்துடன் கூறினார்.

“கம்பளி கோட்டையும், கம்பளி சால்வையையும் மறக்காம எடுத்து வாங்க. விடியற்காலையில் ரொம்பக் குளிரா இருக்கும். தலையை மறைத்துக் கொள்ள வேண்டியிருக்கும்.”

“ஆல்ரைட்” என்றார் டாக்டர்.

இதற்குள் அவர்கள் கடைவீதியைக் கடந்து, லைன்களைக் கடந்து பாதையின் இருமருங்கும் காடு மண்டியிருந்த இடத்திற்கு வந்து விட்டிருந்தனர். வெகு அருகாமையில் ஒரு காட்டுச் சேவல் கரைந்தது.

“இங்கே நிறைய காட்டுச் சேவல்கள் இருக்கின்றனவா?” என்று டாக்டர் அப்பாவுவிடம் கேட்டார்.“நான் முதல்முதலாக வந்தபோது காட்டுச் சேவல் கூவுவதைக் கேட்டு இது ஏதோ விசித்திரமான பறவைன்னு நினைத்தேன். அது வீட்டுச் சேவல் கூவுவதைவிட அவ்வளவு வித்தியாசமா இருந்தது. வேலையாள்தான் அது காட்டுச் சேவல்ன்னு சொன்னான்: ஒவ்வொரு நாளும் காலையும் மாலையும் அவைகள் கூவுவதைக் கேட்கிறேன், ஆனால் ஒருநாளும் அவற்றைப் பார்க்க முடிந்ததில்லை”என்று அவரே கூறினார்.

“ஆமா டாக்டர் நிறைய இருக்கு. காலையில வெளியே போனா. காடுகள் வெட்டப்பட்ட எடங்கள்ளயும் புல்மண்டிய சதுப்பு நிலங்களிலும் அதுகளப் பார்க்கலாம். சில சமயம் குஞ்சுகள் கூட இருக்கும். கூலிகள் அதுகளப் புடிச்சுத் தின்னுதாங்க. கிராஸ் ஹில்ஸில் இந்தக் காட்டுக் கோழிகள் எக்கச்சக்கமாயிருக்கும்.”

அவர்கள் ஆற்றை அடைந்து அதன் போக்கில் நடந்து குகையைக் கண்டனர். நீர்மட்டத்திற்குக் கொஞ்சம் மேலே தட்டையான ஒரு பாறைத்துண்டு நீட்டிக் கொண்டிருந்தது. அதற்கு மேல் ஒரு பெரும்பாறை தொங்குவது போல் அமைந்து குகை போன்ற தோற்றத்தை ஏற்படுத்தியிருந்தது. இந்தக் குகை பத்தடி நீளமும், ஆறு அடி அகலமும், ஐந்தடி உயரமும் கொண்டிருந்தது. உள்ளே இரண்டு குழந்தைகள் உட்கார்ந்திருந்தன. மூத்தவளான சிறுமிக்கு ஆறு வயதிருக்கும். இளையவனான பைய னுக்கு மூன்று வயதிருக்கும். அவர்கள் உடை என்ற பெயரில் எதையோ சுற்றிக் கொண்டு ஒரு பழைய

கம்பளியின் மேல் உட்கார்ந்திருந்தனர். அவர்களுக்கு அருகில் ஒரு தீ மூட்டுமிடமும், கற்களின் மீது ஒரு மண்பானையும் காணப்பட்டது. சாம்பலைக் கொண்டு பார்க்கும்போது கட்டாயம் இங்கு சமைக்கப்பட்டிருக்க வேண்டுமென்று தோன்றியது. கன்னங்கரேலென்றிருந்த குழந்தைகள் தமிழைப் போன்ற ஒரு மொழியில் பேசினர்.

“உங்க அப்பா எங்கே?” அப்பாவு சிறுமியிடம் கேட்டார்.

சிறுமி காட்டைச் சுட்டிக்காட்டினாள்.

“அம்மா எங்கே?”

சிறுமி திரும்பவும் காட்டையே சுட்டிக்காட்டினாள்.

“எவ்வளவு நாளா இங்க இருக்கீக?”

சிறுமி தலையாட்டினாள். அவளுக்கு ஒருவேளை எண்கள் தெரியாமலிருக்கலாம்.

“அம்மாவும் அப்பாவும் ராவு இங்கன இருந்தாகளா?” அப்பாவு கேள்வியை மாற்றிக் கேட்டார்.

சிறுமி இல்லையென்று தலையசைத்தாள்.

“இன்னிக்கி ராவு வருவாகளா?”

சிறுமி திரும்பவும் தலையசைத்தாள்.

“பெற்றோர் குழந்தைகளை இங்கே விட்டு விட்டு காட்டுக்குள் தேன் எடுக்கப் போயிருப்பார்கள்” என்றார் அப்பாவு.

அந்தக் குழந்தைகளையே வைத்த கண் வாங்காமல் இரக்கத்துடன் பார்த்துக் கொண்டிருந்த டாக்டர். “பாவம் குழந்தைகள். இரவு முழுவதும் தனியாக இருந்திருக்கின்றன. ஏதாவது மிருகங்கள் வந்திருந்தால் என்னவாயிருக்கும்? எப்படித்தான் பெற்றவர்கள் இவ்வளவு சின்னக் குழந்தைகளை தனியாக விட்டு விட்டுப் போனார்களோ?”

“அவங்க வாழ்க்கையே இப்படித்தான் டாக்டர் காட்டுக்குள்ளதான வாழறங்க. எப்பவுமே கொழந்தைங்களத் தனிய உட்டுட்டுத்தான் பெரியவங்க காட்டில காய் கெழங்கு தேன் எடுக்கப் போவாங்க. சில ஆம்பளையாளுக எப்பவாவது கடவீதிக்கு வந்து தேன் வித்துட்டு ராகி, அரிசி, உப்பு வாங்கிட்டுப் போவாங்க. மத்தபடி இவங்க காட்டவுட்டு வெளியவே போக மாட்டாங்க. கொழந்தைகளுக்கும் பழக்கம்தான்.”

“நேற்றிரவு சப்பிட்டீங்களாடே?” அப்பாவு திரும்பி சிறுமியிடம் கேட்டார்.

“அம்மா சமைத்தாள் நாங்கள் அதைத் தின்றோம்.” அந்தப் பெண் விசித்திரமான உச்சரிப்புடன் பேசினாள்.

அப்பாவு பானையைப் பார்த்துவிட்டு “ராகி” என்றார். அருகிலிருந்த மற்றொரு சிறிய பானையைப் பார்த்துவிட்டு “வேகவெச்ச மீன் போலிருக்கு” என்று கூறிவிட்டு “எங்கருந்து மீன் கெடச்சது?” என்று கேட்டார்.

சிறுமி ஆற்றில் நீந்திக் கொண்டிருந்த சிறிய மீன்களைக் காட்டினாள்.

“சாப்பிட வேறு ஏதாவது இருக்கிறதா?”

சிறுமி மூலையில் சாய்த்து வைக்கப்பட்டிருந்த மூங்கில் துண்டைக் கட்டினாள்.

“தேன்” அப்பாவு அதைப் பார்த்துவிட்டுச் சொன்னார்.

“பாவம் இந்தக் குழந்தைகள். காட்டு விலங்குகளால் இவர்கள் பாதிக்கப்படாமலிருப்பதற்குக் காரணம் அதிர்ஷ்டம் மட்டும்தான்”என்றார் டாக்டர்.

டாக்டர் தேவைக்கு அதிகமாகக் கவலைப்படுவதாக நினைத்தோ என்னவோ அப்பாவு காடர்களுக்கும், காட்டிற்கும் உள்ள உறவைப் பற்றிப் பேசத் தொடங்கினார்.

“காடர்களிடம் ஒரு விசித்திரமான சக்தி இருக்கு டாக்டர். காட்டு விலங்குகள்தான் அவர்களைப் பாத்து பயப்படும். சிலசமயம் குழந்தைகளை ரொம்பநாள் தனியா விட்டுட்டு கூடப் போயிடுவாங்க. குழந்தைகளைச் சுற்றி ஒரு வட்டம் வரைந்து ஏதோ மந்திரங்கள் சொல்லி சில மூலிகைகளையும் அந்தக் கோட்டு மேல் போட்டுட்டுப் போவாங்களாம்.

காட்டுவிலங்குகள் ஒரு போதும் அந்தக் கோட்டைத் தாண்டி வந்து குழந்தைகளுக்குக் கேடு விளைவிக்காதாம். இது எவ்வளவுதூரம் உண்மைன்னு எனக்குத் தெரியாது. ஆனால் இங்குள்ள எல்லோரும் இப்படித்தான் நம்புதாங்க. விலங்குகளின் மீது அவர்களுக்கு ஏதோ சக்தி இருக்கத்தான் வேண்டும் போலிருக்கிறது. ஏன் இப்படிச் சொல்கிறேனென்றால் எப்ப நமது கூலிகள் காட்டுக்குள் போனாலும் காட்டு விலங்குகள் அவர்களை வெரட்டியடிக்குது. சில கூலிகள் செத்துக் கூடப் போயிருக்காங்க. ஆனால் இப்படிக் காட்டு விலங்குகளால

காடர்கள் கொல்லப்பட்டதாக யாரும் கேள்விப்பட்டதேயில்லை.”

“இருந்தாலும் இருட்டில் இவ்வளவு சிறிய குழந்தைகள் எப்படித்தான் பயப்படாமலிருக்கின்றன என்பது எனக்கு வியப்பாக இருக்கிறது” டாக்டர் அப்பாவுவின் விளக்கத்தால் முழுவதும் திருப்தியடைந்துவிடவில்லை போலத் தோன்றியது.

“இந்தக் குழந்தைகள் காட்டுக்கும் பயப்படாது, இருட்டுக்கும் பயப்படாது. ஒருவேளை நமக்கு வேணாப் பயப்படலாம்” என்றார் அப்பாவு.

“குகையை விட்டு இந்தக் குழந்தைகள் வெளியே வருகிறார்களா என்று பார்ப்போம்” என்று கூறிவிட்டு டாக்டர் தன்னுடன் கொண்டு வந்திருந்த பிஸ்கெட்டுகளையும், இனிப்புகளையும் சிறுமியிடம் கொடுக்க முயன்றார். சிறுமி பலமாகத் தலையசைத்து பெற்றுக்கொள்ள மறுத்துவிட்டாள். உட்கார்ந்திருந்த இடத்திலிருந்து எழக்கூட இல்லை.

“வெளியே வரக்கூடாது என்று பெற்றோர்கள் ஒருவேளை சொல்லிக் கொடுத்திருக்கலாம்” என்று சொல்லிவிட்டு “உன் பேரென்ன?” என்று சிறுமியை நோக்கி கேட்டார் அப்பாவு.

சிறுமி வழக்கம் போலத் தலையசைத்தாள். அவளுக்குக் கேள்வி புரியவில்லை போலத் தோன்றியது.

“இந்த மாதிரி குகையில்தான் நீங்க எப்பவும் இருப்பீங்களா?” சிறுமி தலையசைத்து மறுத்தாள்.

“இங்கே தனியாக இருக்க பயமாயில்லையா? எங்களோட வர்றீயள?”

சிறுமி இன்னும் பலமாகத் தலையசைத்து மறுத்தாள். டாக்டர் சிறுமியின் அருகே சென்று இனிப்புப் பாக்கெட்டை நீட்டினார். சிறுமி திரும்பவும் மறுத்துவிட்டாள்.

“யாரிடமிருந்தும் எதுவும் பெற்றுக் கொள்ளக் கூடாது என்று ஒருவேளை அம்மா அப்பா சொல்லிக் கொடுத்திருக்கலாம்” என்றார் அப்பாவு.

“பாக்கெட்டுகளை இங்கேயே வைத்து விடுகிறேன்” என்று கூறியபடி டாக்டர் அவற்றை சிறுமிக்கு அருகில் வைத்துவிட்டு ‘நாம் போகலாம்” என்றார்.

“உங்கள் மேஸ்திரியை நாளை காலை இங்கே வந்து குழந்தைகள் இங்கேயே இருக்கிறார்களா என்று தயவு செய்து பார்க்கச் சொல்லுங்கள். அவங்களோட வாழ்க்கைதான் எவ்வளவு கடினமானதாக

இருக்கிறது”என்று திரும்பிச் செல்லும்போது டாக்டர் மீண்டும் மீண்டும் அப்பாவுவிடம் புலம்பிக் கொண்டேயிருந்தார். பாதை குன்றிற்குப் பின்புறம் சென்றதும் குழந்தைகள் இருந்த குகை அவர்கள் பார்வையிலிருந்து மறைந்துவிட்டது. மற்றவர்களை பாதையிலேயே இருக்கச் சொல்லிவிட்டு அப்பாவு மட்டும் குன்றின் மீது ஏறி குகையை உற்றுநோக்கி விட்டுத் திரும்பி வந்தார்.

“நீங்க வெச்ச இடத்திலேயே பிஸ்கெட் பாக்கெட்டுகள் இருக்கின்றன. குழந்தைகளும் அசையாமல் அங்கேயே உட்கார்ந்திருக்கு. அவுங்க அப்பா அம்மா வர்றவரைக்கும் அவை அங்கேயே கிடக்கும். சந்தேகமேயில்லை.”

# 33

கிறிஸ்துமஸ் தினத்தன்று மணிகள் ஒலிப்பதையும் பழைய பழக்கமான கிறிஸ்துமஸ் கீதங்கள் இசைக்கப்படுவதையும் கேட்டேன்.

கிறிஸ்துமஸ் பெல்ஸ்
- லாங்ஃபெல்லோ

டிசம்பர் 23ஆம் தேதி மாலை, வொய்ட் பங்களாவில் அமர்ந்து டீயை உறிஞ்சியபடி வழக்கம்போல தபால்களைப் படித்துக் கொண்டிருந்தார். ஒரு பெரிய கத்தை கடிதங்கள் வந்திருந்தன. பெரும்பாலானவை கிறிஸ்துமஸ் வாழ்த்து அட்டைகள்.

“பையா?” வொய்ட் அழைத்ததும் மூலையில் பணிவுடன் காத்திருந்த சோக்ரா முன்னால் வந்தான்.

“இந்த வாழ்த்து அட்டைகளைத் தீ காயும் இடத்திற்கு மேலுள்ள பரணில் அடுக்கிவை.”

“எஸ் மாஸ்டர்” சோக்ரா அந்த நிமிடமே அந்த வேலையைத் தொடங்னான்.

பட்லர் அப்போது உள்ளே வந்து “மாஸ்டர் கருப்ப போயன் மேஸ்திரி மாஸ்டரைப் பார்க்க வந்திருக்கான்” என்று அறிவித்தான்.

“அந்தப் பிச்சைக்காரனுக்கு என்ன வேண்டுமாம்?”

“கிறிஸ்மஸ் பரிசு கொண்டு வந்திருக்கிறான் மாஸ்டர்.”

“ஆல்ரைட்” என்ற வொய்ட் எழுந்து சமையலறைக்குச் சென்றார்.

அங்கே காத்திருந்த கருப்ப போயன், “சலாம் தொரைகளே!” என்று குனிந்து வணங்கிவிட்டு ஒரு பிரம்மாண்டமான மாலையை வொய்ட்டுக்கு அணிவித்தான். பின்பு சில எலுமிச்சம்பழங்களையும் அவரிடம் வழங்கினான்.

“மாஸ்டர் மேஸ்திரி மூன்று கோழிகளும் மூன்று பாட்டில் விஸ்கியும் கொண்டு வந்திருக்கிறார்” என்றான் பட்லர்.

“நல்லது சலாம் கருப்ப போயன்” என்று கூறிகொண்டே வொய்ட் வரவேற்பறைக்குத் திரும்பிச் சென்றார்.

அங்கே காத்துக் கொண்டிருந்த சோக்ரா "டூ ஜென்டில்மேன் ஸீ மாஸ்டர்" என்றான்.

"யார் அவர்கள்?"

"கம்பளி வியாபாரிகள் மாஸ்டர்."

கம்பளி வியாபாரிகள் விலையுயர்ந்த பரிசுகளும், எஸ்டேட் முழுவதற்கும் கம்பளி வாங்குவதற்கு தான் ஆர்டர் கொடுத்ததற்கான கமிசனும் கொண்டு வந்திருப்பார்கள் என்பதை வொய்ட் அறிந்திருந்தார். எனவே அவர்களை வரவேற்பறைக்கே அழைத்து வரும்படி சோக்ராவிடம் கூறினார். வந்தவர்கள் இருவரும் சகோதரர்கள். மூத்தவர் கோவிந்தசாமி இளையவர் கிருஷ்ணசாமி.

"ஹாப்பி கிறிஸ்துமஸ் ப்ராஸ்பரஸ் நியூ இயர் மாஸ்டர்" என்று கோவிந்தசாமி வாழ்த்துக் கூறியபடி வொய்ட்டுக்கு மாலையணிவித்தார். இளையவர் அவரிடம் சில எலுமிச்சம் பழங்களும் கிறிஸ்துமஸ் வாழ்த்து அட்டையும் கொடுத்தார். பின்பு கிருஷ்ணசாமி அறைக்கு வெளியே சென்று ஒரு பெரிய கூடையை சோக்ராவின் உதவியுடன் கொண்டு வந்தார். அந்த நேரத்தில் கோவிந்தசாமி தனது சட்டைப் பையிலிருந்து கத்தை கத்தையாக ரூபாய் நோட்டுகள் வைக்கப்பட்டிருந்த ஒரு உறையை எடுத்த வொய்ட்டிடம் வழங்கினார். கிருஷ்ணசாமி தான் கொண்டு வந்திருந்த கூடையிலிருந்து பல பாக்ெட்டுகளை எடுத்து வொய்ட்டுக்கு அருகேயிருந்த டீ பாய் மீது பரப்பினார்.

"எசமான் பெரிய மனசு பண்ணி இவற்றை ஏத்துக்கணும். எசமானோட அன்புக்கும் பெரிய மனசுக்கும் ஏதோ எங்களால முடிந்த சிறிய காணிக்கை."

"நன்றி. உட்கார்ந்து டீ சாப்பிடுங்க" என்று வொய்ட் விசேசமான கருணையுடன் கூறினார்.

"ரொம்ப நன்றி எசமான். ஆனா நாங்க இன்னும் கொஞ்சம் எஸ்டேட்டுகளுக்குப் போக வேண்டியிருக்கு."

"மேற்கொண்டு ஆர்டர்களுக்கு நாங்கள் எப்போது எஸ்டேட்டுக்கு வரலாம்?"

"நீங்க வரவேண்டாம். பிப்ரவரி தொடக்கத்தில்தான் ஆர்டர் தருவோம் என்று நினைக்கிறேன். ஜான்சனைப் பார்ப்பீர்கள் இல்லையா?"

"ஆமாம்."

“பிப்ரவரி தொடக்கத்தில் என்னிடம் இதுபற்றி நினைவுபடுத்தச் சொல்லுங்கள். நாங்கள் தபாலில் உத்தரவை அனுப்பி விடுகிறோம்”என்றார் வொய்ட்.

“ரொம்ப நன்றி எசமான். நாங்க அப்ப கிளம்புறோம் குட் பை”என்று கூறிவிட்டு தன் தம்பி பின் தொடர கோவிந்தசாமி அறையை விட்டு வெளியேறினார்.

“மாஸ்டர் ஹெட் கிளார்க், ஹெட் ரைட்டர் கம் டூ ஸீ” பட்லர் தலையை நீட்டினான். வொய்ட் எழுந்து சமையலறைக்குள் சென்றதும் அங்கு காத்திருந்த அப்பாவுவும், ஜான்சனும் அவருக்கு மாலையணிவித்தனர்.

“வி விஷ் ஹேப்பி கிறிஸ்துமஸ் பிரைட் அண்ட் ப்ராஸ்பரஸ் நியூ இயர்” என்றார் ஜான்சன்.

“நன்றி ஜான்சன். நன்றி அப்பாவு” என்று கூறிய வொய்ட் உள்ளே திரும்பி “பாய்” என்று அழைத்தார். “இரண்டு பாட்டில் விஸ்கி கொண்டு வா.”

நாள் முழுவதும் ஒப்பந்தக்காரர்களிடமிருந்தும் வியாபாரிகளிடமிருந்தும் தொடர்ந்து பரிசுகள் பெற்றுக் கொண்டிருந்ததால் அவர் உல்லாசமான மனநிலையிலிருந்தார். விஸ்கி பாட்டில்கள் கொண்டு வரப்பட்டதும் ஆளுக்கொன்றைக் கொடுத்துவிட்டு அப்பாவுவைப் பார்த்து கூறினார்.

“அப்பாவு குரங்குமலை ஜார்ஜுக்கு மைசூர் எஸ்டேட்டில் நல்ல வேலை கிடைத்துள்ளது தெரியுமா?”

“யெஸ் மாஸ்டர்.”

“அவன் சீக்கிரம் போய்விடுவான், அவனுடைய உதவியாளை அந்த இடத்திற்கு நியமிக்கப் போகிறேன். எனவே உதவியாள் வேலை காலியிருக்கும். உங்கள் மருமகன் களத்தில் வேலை செய்ய விரும்பினால் அவனுக்கு அந்த வேலையைத் தருகிறேன்.”

“யெஸ் மாஸ்டர். நீங்கள் கொடுக்கும் எந்த வேலையையும் அவன் செய்வான்.”

“நல்லது நான் பார்த்துக் கொள்கிறேன்.”

“ரொம்ப நன்றி எசமான்” அப்பாவு பணிந்து வணங்கினார். “குட்நைட் அப்பாவு. குட்நைட் ஜான்சன்” வொய்ட் உரையாடல் முடிந்துவிட்டது என்று குறிக்கும் விதமாகத் தலையசைத்து விடை கொடுத்தார்.

# 34

குறுவால் நீர்ப்பறவையும் நாரையும்
வழக்கமாய்ப் பறந்து திரியும் இடத்திலிருந்து
என் பயணத்தைத் தொடங்குகிறேன்...
திடீரென்று அருவியாய்ப் பொழிந்து
பாசிகளின் மேல் பட்டுத் தெறிக்கிறேன்...
பள்ளத்தாக்கில் பாய்ந்து மறைகின்றேன்...

தி புரூக்
- டென்னிசன்

டிசம்பர் இருபத்திநான்காம் தேதி சொல்லியபடியே அதிகாலை ஐந்து மணிக்கு அப்பாவுவும், ஜான்சனும் டாக்டரின் வீட்டுக்கு வந்தனர். ஏற்கனவே தயாராகக் காத்துக் கொண்டிருந்த ஆபிரஹாம் அவர்களோடு இணைந்து கொள்ள மூவரும் கிராஸ்ஹில்ஸை நோக்கி நடக்கத் தொடங்கினர். “காலைச் சாப்பாடு, சாமான்களோடு கூலிகளை முன்னாலேயே அனுப்பிச்சுட்டேன். கிராஸ்ஹில்ஸ் தொடங்கற எடத்துல நமக்காகக் காத்திருப்பாங்க” என்று அப்பாவு உற்சாகமாகக் கூறினார்.

“ரொம்ப நல்லது” டக்டர் குளிரில் விறைத்திருந்த கைகளைத் தேய்த்துக் கொண்டே பதிலளித்தார். நிலவு இன்னும் ஒளிவீசிக் கொண்டிருந்தது என்றாலும் அடர்த்தியாகக் கவிந்திருந்த மூடுபனியினால் அவர்களால் சில அடிதூரம் கூட முன்னால் பார்க்க முடியவில்லை. உடல் முழுவதையும் வெடவெடக்கச் செய்த கடுங்குளிரிலிருந்து தற்காத்துக் கொள்ளவும், சூடுபடுத்திக் கொள்ளவும் அவர்கள் விரைவாக நடந்தனர். ஷூக்கள் கற்களில் படும் ஒலியைத் தவிர வேறெந்த ஓசையும் இல்லை. மூடுபனியால் போர்த்தப்பட்டிருந்த மலைகள் மோனத்திலாழ்ந்திருந்தன.

வாயைத் திறந்தாலே குளிரால் பற்கள் கிடுகிடுத்ததால் அவர்களால் பேசவே முடியவில்லை. கீழே வெகுதூரத்தில் கழுகுமலை எஸ்டேட்டின் லைன்கள் மங்கலான கோடுகள் போல பனியினூடே தென்பட்டன. கீழ்வானம் மிக லேசாக வெளுக்கத் தொடங்கியதும் நிலவொளி மங்கி கும்மிருட்டாகி விட்டது. அவர்களால் முன்னால் உள்ள எதையும் பார்க்க முடியாமல் போனது.

அப்பாவு தன் கையிலிருந்த டார்ச் லைட்டை அடித்து கடிகாரத்தைப்

பார்த்தார் "மணி ஐந்தரையாயிட்டு."

"டார்ச் வைத்திருக்கிறீர்கள்தானே ஏன் அதை சாலையில் அடிக்காமலிருக்கிறீர்கள்?" டாக்டர் புரியாமல் கேட்டார்.

"அது இன்னும் மோசமாகத்தானிருக்கும்" என்ற அப்பாவு டார்ச்சை முன்னால் அடித்துக் காட்டினார். அதிலிருந்து புறப்பட்ட ஒளிக்கற்றை பனியால் எதிரொளிக்கப்பட அவர்களால் எதையுமே பார்க்க முடியாமல் போனது.

"ஓ இப்ப புரியுது" என்ற டாக்டர் சொன்னவுடன் அப்பாவு வெற்றிப் புன்னகையுடன் விளக்கை அணைத்தார். எதுவும் பேசாமல் மவுனத்தில் ஆழ்ந்தபடி அவர்கள் அரைமணி நேரம் தொடர்ந்து நடந்தனர்.

"ஆறுமணியாகப் போகுது. சூரியன் மேலே வந்ததும் இந்த நடுக்கிற குளிர் போயிரும்" அப்பாவுதான் மௌனத்தைக் கலைத்தார்.

எங்கோ தொலைவில் ஒரு சேவல் கொக்கரக்கோகோ என்று கூவி அந்தச் சலனமற்ற நிசப்தத்தைக் கிழித்தது.

"இங்கேயுள்ள சேவல்கள் சோம்பேறிகள் போலிருக்கிறது. எவ்வளவு நேரம் கழித்து எழுகின்றன பாருங்கள்" என்று கிண்டலாகக் கூறினார் டாக்டர்.

"குளிர்காலத்தில் அவைகளும் நேரங்கழித்துத் தான் கூவும்"என்று அப்பாவு அதை ஆமோதித்தார். கிராஸ் ஹில்லை அவர்கள் அடைந்தபோது சூரியன் மெல்ல மலை முகடுகளின் ஊடே எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தது.

"முதல் மலைக்கு வந்துட்டோம். நம்ம கூலிகள் இங்கேதான் எங்கயாவது இருப்பாக" என்ற அப்பாவு கைகளை வாயருகே குவித்து "ஏ ஏ ஏ குப்பாண்டி..." என்று பெருங்குரலெடுத்துக் கூவினார். அவர்கள் நின்று கொண்டிருந்த இடத்திற்கு மேலே எங்கிருந்தோ ஒரு பதில் கூச்சல் கேட்டது. சில வினாடிகளில் குப்பாண்டி மலைமேலிருந்தது ஓடிவந்து கொண்டிருப்பது தெரிந்தது.

"காலைச் சாப்பாட்டுக்கு நல்ல எடம் பாத்துருக்கங்கையா. கிருஷ்ணன் தீ மூட்டி காபி வெக்கத் தொடங்கிட்டான்" என்றான் அவன்.

"சரி வழிகாட்டு" என்றபடி அப்பாவு அவனைத் தொடர்ந்தார்.

காடும் புல் மலைகளும் இணையும் இடத்தில் ஒரு ஓடை வளைந்து சென்று கொண்டிருந்தது. அதன் இரு கரைகளிலும் வளர்ந்திருந்த

மரக்கிளைகள் குடை போல் விரிந்து ஓடையை முழுமையாக மூடியிருந்தன. காடு இருந்த பக்கம் மரங்கள் நெடிந்துயர்ந்து வளர்ந்திருந்தன. ஆனால் புல் மலைகள் இருந்த கரையில் வளர்ந்திருந்த மரங்கள் அதிகபட்சம் பத்தடி உயரந்தானிருந்தன. குப்பாண்டி சுமார் ஒரு பர்லாங் தூரம் அவர்களை ஓடைக் கரையிலேயே மேலே அழைத்துச் சென்றான்.

விரைவிலேயே மரங்களுக்கு இடையே ஒரு திறந்த வெளியிலிருந்து புகை வந்து கொண்டிருப்பதையும் தங்கள் கூலிகள் காபி தயாரித்துக் கொண்டிருப்பதையும் கண்டனர். இந்தத் திறப்புக்கு அருகில் ஒரு பெரிய தட்டையான பாறையிருந்தது. அதன்மீது விரிந்து பரவிய ஓடை பல சிற்றோடைகளாகப் பிரிந்து சோம்பலாகக் கீழிறங்கியது. இந்தச் சிற்றோடைகளுக்கு இடையே தீவுகள்போல மேலும் சில தட்டையான பாறைகள் தென்பட்டன. சிறிய செந்நிற மலர்களையும், ஊசிபோன்ற இலைகளையும் கொண்ட ஒரு சிறிய செடி இந்தத் தீவுகளில் ஏராளமாக வளர்ந்திருந்தது. பல்வேறு விதமான பாசிகள் தீவுகளையே மூடுவது போலப் பாறைகள் முழுவதும் அடர்ந்து படர்ந்திருந்தன. அப்பாவு - வும், ஜான்சனும் ஒரு பெரிய பாறை மீது அமர்ந்து கொள்ள, டாக்டர் ஒரு சிறிய மரக்கிளையில் ஏறிக் கால்களைத் தொடங்கவிட்டபடி உட்கார்ந்து கொண்டார்.

“எவ்வளவு அழகான இடம்” என்று சிலுசிலுவென்று வீசிய காற்றை ஆழ்ந்து இழுத்து விட்டபடி வாய்விட்டுக் கூறினார் அவர்.

“வாங்கப்பா கொஞ்சம் டீ கொடுங்க” அப்பாவு கூலிகளை நோக்கிக் கத்தினார்.

சமையல்காரன் கிருஷ்ணன் ரொட்டித் துண்டுகளையும், கட்லெட்டுகளையும் கூடையிலிருந்து எடுத்து அப்பாவுவிடம் தர அவர் அவற்றை வினியோகித்தார்.

“இவ்வளவு தூரம் நடந்த பின்பும்கூட களைப்பே ஏற்படவில்லை. ஆனால் பசி வயிற்றைக் கிள்ளுகிறது” டாக்டர் ரொட்டியைக் கட்லெட்டுடன் கடித்து அசைபோட்டபடியே சொன்னார். “விடியக் காலையில் அதிலும் குளிர் காலத்தில் களைப்பே இல்லாமல் மைல் கணக்காக நடக்கலாம். ஆனால் சூரியன் மேலே வந்துவிட்டால் குன்றுகளின் மேல் ஏறுவது ரொம்பவும் களைப்பூட்டி விடும்” என்றார் அப்பாவு. காலையுணவை முடித்ததும் அவர்கள் தங்கள் மலை யேற்றத்தைத் தொடர்ந்தனர். “இந்த ஓடையைத் தொடர்ந்து மேலே போவோம்” என்று அப்பாவு சொன்னதால் குன்றின் உச்சியை

அடையும் வரை அதைத் தொடர்ந்து நடந்து கொண்டேயிருந்தனர். அங்கிருந்து பார்த்தபோது அருகில் ஒரு பள்ளத்தாக்கும் அதையடுத்து அவர்கள் நின்றிருந்ததைவிட உயரமான ஒரு குன்றும் தென்பட்டன. குன்றின் மறுபுறம் இறங்கி ஓர் ஆழமான பள்ளத்திற்கு வந்து சேர்ந்தனர். அந்த இருண்ட பள்ளத்தாக்கு முழுவதும் பிரம்மாண்டமான மரங்கள் வளர்ந்திருந்ததால் பள்ளத்தின் அடிப்பகுதியே கண்ணில்படவில்லை.

ஆனால் அடியாழத்தில் எங்கிருந்தோ நீர் சுழித்தோடும் பேரொலி வந்து கொண்டிருந்தது. அப்பாவு ஒரு பாறையை உருட்டிக் கீழே தள்ளினார். அது மெல்ல மெல்ல வேகம் பிடித்து மற்ற பாறைகளை உரைத்து நொறுக்கியபடி இருண்டு கிடந்த அதல பதாளத்தை நோக்கிப் பாய்ந்தோடியது. மேலிருந்து பறந்தோடி வந்த கல் பட்டு மரங்கள் பயங்கரமாக குலுங்க, ஒரு கருங் குரங்குக் கூட்டம் நம்ப முடியாத வேகத்தில் மரத்திற்கு மரம் தாவிச் சென்றது. அப்பாவு மரத்தை நோக்கி ஒரு கல்லெறிய தலைவனான கருங்குரங்கு "ஹூட் ஹூட் ஹூட்..." என்று கூவியது. உடனே மற்ற குரங்குகள் அதைப் பின்பற்ற பள்ளத்தாக்கு முழுவதும் ஹூட் ஹூட ஹூட் என்ற கூச்சலால் நிரம்பியது. "பலா மரத்தின் பழங்களை அவை தின்று கொண்டிருக்கின்றன. இந்தக் குரங்குகளுக்கு அது ரொம்பப் பிடிக்கும்" அப்பாவு கூறினார். நெடி துயர்ந்து வளர்ந்திருந்த பலா மரங்களின் உயரத்தின் காரணமாக மேலே தொங்கிக் கொண்டிருந்த பலாப் பழங்கள் சிறியவையாகத் தோன்றின. "இந்த மரத்திற்கு மதிப்பு அதிகம். எஸ்டேட்டுகளில் வீடு கட்டவும், சாமான்கள் செய்யவும் இந்த மரங்ளைத்தான் பயன்படுத்துகிறார்கள்" அப்பாவுவே மேலும் விளக்கினார்.

அவர்கள் திரும்பவும் குன்றைக் கடந்து ஓடையோடு நடந்து இரண்டாவது குன்றிற்கு வந்து சேர்ந்தனர். அந்தக் குன்றுகள் அனைத்திலும் பச்சைக் கம்பளம் விரித்தது போல் மூன்று நான்கடி உயரத்திற்கு புற்கள் வளர்ந்திருந்தன. அவற்றில் ஒரு மரத்தையோ, குறுஞ்செடியையோ கூடக் காணவில்லை. ஆனால் ஆற்றோரம் அடர் சிவப்புப் பூக்கள் பூத்துக் குலுங்கும் குட்டை மரங்கள் வளர்ந்திருந்தன. அந்தக் குன்றின் உச்சிக்கு அருகே வந்தவுடன் அப்பாவு அடுத்திருந்த பள்ளத்தாக்கில் காட்டெருமைகள் மேய்ந்து கொண்டிருக்கின்றனவா என்று பார்த்துத் தகவல் கொடுக்க ஒரு கூலியை அனுப்பினார். ஆனால் அவை தென்படவில்லை என்பதால் அவர்கள் குன்றிலிருந்து இறங்கி இன்னும் உயரமான ஒரு குன்றை அடைந்தனர். அதிலிருந்து சலசத்து ஓடிவந்த ஒரு சிற்றோடையோரம் சில அடிதூரம் கூட ஏறியிருக்க

மாட்டார்கள், ஆபிரஹாம் வியப்புடன் ஒரு மரத்தைச் சுட்டிக்காட்டினார். செம்பழுப்பு நிறத்தில் இரண்டடி நீளமும், அதே அளவுக்கு நீண்ட மயிரடர்ந்த வாலுங்கொண்ட ஒரு மிருகம் அங்கே கிளைக்குக் கிளை தாவிக் கொண்டிருந்தது.

“இதுதான் மலபார் அணில்” என்றார் அப்பாவு. “இந்தக் காட்டில் இதுகள் ஏராளமாக இருக்கு. அஞ்சு வருசத்துக்கு முன்னே கூலிகள் ஒரு குட்டியைப்பிடித்து என்னிடம் கொண்டு வந்தாங்க. நான் அதை வளர்த்திட்டிருந்தேன். அது நல்லாப் பழகி வீட்டைச் சுத்தி ஓடிட்டிருக்கும்.”

“அது என்ன தின்னும்” ஆபிரஹாம் வைத்த கண் வாங்காமல் அந்த அணிலையே பார்த்துக் கொண்டு கேட்டார்.

“காட்ல அது எல்லாப் பழமும் சாப்பிடும். ஆனா நான் அதுக்கு வாழப்பழமும், தக்காளியும் நெலக்கடலையும் கொடுப்பேன். ஏன் அது தானியங்களைக் கூடச் சாப்பிடும்.”

“இப்பவும் அது இருக்கிறதா?”

“இல்ல போனவருசம் ஒரு வாரம் லீவுல போயிருந்தேன். வேலக்காரப்பய கவனிச்சுப் பார்த்துக்கல. அது வீட்டை விட்டு வெளியே வந்திருக்கு வொய்ட்டோட நாய் கடிச்சுக் கொன்னுடுச்சு.”

“பாவம்.”

அப்பாவு திடீரென்று அவர்களை நிற்கச் சொல்லி எதிரே தெரிந்த குன்றில் சில மான்கள் மேய்ந்து கொண்டிருந்ததைச் சுட்டிகாட்டினார். அவை ஆடுகளைப் போல்தான் தோன்றின. ஆனால் அளவில் மட்டும் கொஞ்சம் பெரிதாக இருந்தன.

“இதுதான் குரைக்கும் மான். இது கத்தினா நாய் கொரைக்கிற மாதிரியே இருக்கும். அதான் அந்தப் பேர். வெயில் காலத்துல இந்த மான்கள் எஸ்டேட்டுக்கு வரும். விடியற்காலைல இவை எஸ்டேட்டிலிருக்கற சதுப்பு நிலங்களில் மேஞ்சிட்டிருக்கும்.”

அப்பாவு ஒரு கூலியிடம், சுமார் முப்பது மான்கள் கொண்ட அந்தக் கூட்டத்தின் அருகே பதுங்கிச் சென்று ஒரு குட்டியைப் பிடிக்க முயற்சி செய்யும்படி கூறினார். அவன் புல்லுக்குள் ஆளே தெரியாதபடி பதுங்கிப் பதுங்கி மந்தையை நெருங்கினான். கொஞ்ச நேரம் அவன் பசும் புல்லுக்குள் ஒரேயடியாக முழுகிப் போய் எங்கேயிருக்கிறானென்றே கண்டுபிடிக்க முடியவில்லை. திடீரென்று மந்தைக்கு அருகில் அவன்

புல்லிலிருந்து எழுந்து மான்களை நோக்கிப் பாய்ந்தோடுவதைக் கண்டார்கள். ஏறக்குறைய மான் கூட்டத்திற்குள்ளேயே அவன் புகுந்து விட்டான். ஆனால் கண்ணிமைக்கும் நேரத்தில் மந்தை முழுவதும் பறந்தோடி மறைந்துவிட்டது.

பின்பு அவர்கள் குன்றின் மீது ஏறியிறங்கி அடுத்த பள்ளத்தாக்கை அடைந்தனர். அங்கே ஏராளமான காட்டுக் கோழிகள் மேய்ந்து கொண்டிருந்தன. காட்டுச்சேவல் வீட்டுச்சேவலைவிட உருவத்தில் சிறியதாக இருந்தாலும் அதைவிட மிகவும் அழகாக இருந்தது. வீட்டில் இருந்த கோழிகளைப் போலல்லாமல் காட்டுக் கோழிகள் ஒரே ஒரு வண்ணத்தில் தான், ஒரு வகையான பழுப்பு கலந்த சாம்பல் நிறத்தில்தான் காணப்படும் என்றார் அப்பாவு.

திரும்பவும் இன்னொரு ஓடையை பின்பற்றி அவர்கள் அடுத்த குன்றிற்கு சென்றனர். ஓரிடத்திற்கு வந்ததும் முன்னால் சென்று கொண்டிருந்த அப்பாவு திடீரென்று நின்று கைகளால் வாயைப் பொத்தி பேச வேண்டாம் என்று மற்றவர்களை எச்சரித்தார். அவர் கீழே தெரிந்த பள்ளத்தாக்கை சுட்டிக்காட்டினார். அங்கே சுமார் இருபது காட்டெருமைகள் கொண்ட ஒரு மந்தை அமைதியாகப் புல் மேய்ந்து கொண்டு இருந்தது. அவை நாட்டு எருமைகளைப் போலவே தோன்றினாலும் இன்னும் கருப்பாக அவற்றைவிட இரு மடங்கு பெரியவையாக இருந்தன.

“கீழே பள்ளத்தாக்கிற்குப் போகக் கூடாது. காட்டெருமைகள் ரொம்பவும் ஆபத்தானவை. நம்மைப் பார்த்துட்டாப் போதும் அத்தனையும் கூட்டமாக நம்மை நோக்கி பாஞ்சு ஓடி வரத் தொடங்கிரும், அதோடு தொலைந்தோம்” என்று அப்பாவு சொன்னதால் அவர்கள் அமைதியாக வந்த வழியே திரும்பி குன்றின் அடுத்த பக்கத்தை அடைந்தனர். அரை டஜன் குன்றுகளை ஏறி இறங்கிய பின்னர் ஒரு மிக உயரமான குன்றின் அடிவாரத்திற்கு வந்து சேர்ந்தனர்.

“இதுதான் இங்கிருப்பதிலேயே மிகவும் உயரமான குன்று. இதற்கு அப்புறம்தான் மலர் பள்ளத்தாக்கு (valley of flowers) இருக்கிறது”என்றார் அப்பாவு. அந்தக்குன்றில் ஏறுவதற்கு அவர்களுக்கு ஏறக்குறைய ஒரு மணிநேரம் பிடித்தது. உச்சியை அடைந்ததும் கற்பனைக் கெட்டாத ஓர் அற்புதமான காட்சி கண்முன் விரிந்தது. சுற்றிலும் கண்ணுக்கெட்டிய தொலைவு வரை புற்களால் மூடப்பட்ட சிறிய எண்ணற்ற குன்றுகள் பரந்து விரிந்திருந்தன.

“என்ன ஒரு அற்புதமான காட்சி” என்றார் டாக்டர். “ஒரு

பிரம்மாண்டமான தட்டில் அருகருகே அடுக்கப்பட்டுள்ள இட்டிலிகளைப் போல இந்த மலைகள் தோன்றுகின்றன. இவ்வளவு அற்புதமான மனதைக் கொள்ளை கொள்ளக்கூடிய காட்சியை நான் இதுவரை கண்டதே இல்லை."அந்தக் குன்றை அடுத்திருந்த பள்ளத்தாக்குதான் அவர்கள் இதுவரை பார்த்ததிலேயே மிகவும் பெரியது. அதன் மத்தியில் ஒரு சிற்றாறு பெருகி ஓடி ஓரிடத்தில் பரந்து விரிந்து ஒரு சிறிய ஏரியை உருவாக்கியிருந்தது. அந்தப் பள்ளத்தாக்கு முழுவதும் பல்வேறு வண்ண மலர்கள் நிறைந்திருந்தன. லில்லி வெள்ளை மலர்களுடன் கண்ணுக் கெட்டிய தூரம் வரை காணப்பட்டது. சில குட்டை மரங்கள் ஆற்றோரங் களில் வளர்ந்திருந்தன. கூலிகள் மூட்டைகளை அவிழ்த்து மதிய உணவை சமைக்கத் தொடங்கினர். அவர்கள் ஆற்றோரத்தில் சிறிது நேரம் அமர்ந்து கட்லெட்டுகளோடு, காஃபி அருந்தி புத்துணர்ச்சியூட்டிக் கொண்டனர்.

பின்பு திரும்பவும் அவர்கள் புறப்பட்டு ஆற்றங்கரையோரமாகவே நடந்து சென்று அடைந்த இடம் ரிசர்வ் ஃபாரஸ்ட் "ஆபத்தில்லை என்றால் காட்டுக்குள் போகலாம் என்று நினைக்கிறேன்" என்றார் டாக்டர்.

"ரொம்ப தூரம் உள்ளே சென்றால் கண்டிப்பாக ஆபத்துதான்"என்றார் அப்பாவு.

"அப்படி உள்ளே போனால் யானைகளையோ, சிறுத்தைகளையோ எதிர்ப்பட வேண்டியிருக்கும். ஆனால் சில அடி தூரம் உள்ளே போகலாம். காட்டுக்குள் நுழைவதற்கு ஏதாவது திறப்பு இருக்கிறதா பார்க்கலாம்" என்று சொல்லிவிட்டு அப்பாவு நடந்து சென்று ஒரு சிறிய குன்றின் மேல் ஏறி நோட்டம் விட்டார். சில நிமிடங்களில் அவர் திரும்பி வந்து "ஒரு வறண்டு போன சிறிய ஓடை இருக்கு. அந்த ஆற்றுப்படுகையில் நடந்து காட்டுக்குள் போகலாம்" என்றார். எனவே அவர்கள் அப்பாவுவைப் பின்பற்றி படுகையூடே காட்டுக்குள் புகுந்தனர். சுற்றிலும் பிரம்மாண்டமான மரங்கள் அடர்ந்து வளர்ந்திருந்தன. பெரும்பாலான மரங்களின் தண்டுகள் கொடிகளால் போர்த்தப்பட்டிருந்தன. தரை முழுவதும் பெரும் பெரும்பாசிகளாலும், புதர்களாலும் மூடப்பட்டி ருந்தது. அந்த ஓடைப் படுகை மட்டும் இல்லாமல் இருந்திருந்தால் அவர்களால் ஒரு மாபெரும் பச்சைச்சுவர் போல் வானத்தையும் பூமியையும் மறைத்து நின்று கொண்டிருந்த காட்டுக்குள் நுழைந் திருக்கவே முடியாது. சூரிய ஒளியே தரையில் விழ முடியாத அளவுக்கு இலைகள் அடர்த்தியாக இருந்ததால் உள்ளே செல்லச் செல்ல வெளிச்சத்தையே காண முடியவில்லை. பகலிலேயே

இரவு வந்துவிட்டது போல் காட்டுக்குள் இருள் மண்டிக் கிடந்தது. மரங்களில் ஏராளமான குரங்குகளும், பறவைகளும் காணப்பட்டன. அவை இடைவிடாது அலறிக் கொண்டே இருந்தன. காட்டுக்குள் ஒரு பர்லாங் தூரம் கூட போயிருக்க மாட்டார்கள். திடீரென்று அவர்களுக்கு அருகே சற்று தூரத்தில் ஏதோ ஒரு ராட்சஸ விலங்கு அடர்ந்த புதர்களினூடே கிளைகளை முறித்துக் கொண்டு முன்னேறி வருவதைப் போன்ற ஒரு ஓசை கேட்டது.

“ஓடுங்க, யானைகளா இருக்கும் போல இருக்கு, திரும்பி ஓடுங்க” அப்பாவு பதறினார். அவர்கள் கண்மூடித்தனமாகப் பாய்ந்து ஓடி காட்டின் எல்லையைக் கடந்து புல் மேட்டில் ஏறிவிட்டனர். அந்த ராட்சஸ மிருகம் இடித்து நெரித்துக் கொண்டு வரும் ஒலி விட்டு விட்டுக் கேட்டதோடு மேலும் மேலும் நெருங்கி வந்து கொண்டிருந்தது.

“இது ஒத்தை யானைன்னு நினைக்கேன். தும்பிக்கையை மாத்தி மாத்தி ஆட்டிட்டு வருது. அதனாலதான் விட்டு விட்டு நமக்கு சத்தம் கேட்குது. இன்னும் புல்லுக்குள்ள போயிடலாம்” என்றார் அப்பாவு. அவர்கள் இன்னமும் காட்டிலிருந்து விலகிச் சென்றனர். இப்பொழுது ஓசை காட்டின் எல்லைக்கருகே கேட்டது.

“யானை வெளியே வந்தா நாம அப்படியே புல்லில் குப்புறப்படுத்து ஊர்ந்து பள்ளத்தாக்குக்குப் போயிடணும்” என்று சொன்னவர் அடுத்த விநாடியே இடி இடி என்று சிரிக்கத் தொடங்கினார். கேள்விக்குறியோடு பார்த்தவர்களுக்கு காட்டின் எல்லையை சுட்டிக்காட்டினார். இரண்டு காடர்கள் காட்டிலிருந்து வெளியே வந்து கொண்டிருந்தனர். இடுப்பில் கட்டியிருந்த கோவணத்தைத் தவிர அவர்கள் வேறுஎந்த ஆடையும் உடுத்தி இருக்கவில்லை. ஒவ்வொருவனின் முதுகிலும் கொடிகளால் செய்யப்பட்ட ஒரு கூடை தொங்கிக் கொண்டிருந்தது. ஒரு கையில் தடியும் மற்றொரு கையில் ஒரு வளைந்த கத்தியும் வைத்திருந்தார்கள். கழுத்தைச்சுற்றி பல பாசி மணி மாலைகள் கிடந்தன. அவர்கள் கத்தியைக் கொண்டு இருபுறமும் மரக்கிளைகளை வெட்டி வழி செய்தபடி வந்து கொண்டிருந்தார்கள். நாம் கேட்டது அந்த சத்தம்தான் என்று அப்பாவு விளக்கினார்.

“இந்த மாதிரி காட்டுக்குள்ள நடக்கறாங்க. ஆனா செருப்பு கூடப் போடல” ஜான்ஸன் ஆச்சரியத்துடன் அவர்களை உற்று நோக்கியபடியே கூறினான்.

“ஆமா, சாதாரணமா அவுங்க முள்ளுப் புதருக்குள்ளயும், செடிகளுக்குள்ளேயும் நடந்து போவாங்க. இரும்பிலயோ,

மரக்கட்டையிலயோ செஞ்ச கால் மாதிரி" என்று கூறிவிட்டு காடர்களை அழைத்தார். அவர்கள் அருகே நெருங்கி வந்ததும்."

"எங்கேயிருந்து வர்றீங்க?" என்றார்.

"தேனெடுக்கக் காட்டுக்குள்ள போயிருந்தோம்" என்றான் அவர்களில் ஒருவன்.

"தேனெடுத்திட்டீங்களா?"

"அது எங்க இருக்குன்னு கண்டுபிடிச்சிட்டோம். சூரியன் மறைஞ்சபிறகு திரும்பவும் போயி தேனெடுத்துருவோம்."

"தேனீ கொட்டாதா."

"எங்களுக்கு அது பழகிப் போச்சு."

"இவங்ககிட்ட ஒரு மூலிக இருக்காம். அத அவங்க கையில வெச்சுகிட்டா தேனீ பக்கத்துல வராதாம்" என்று அப்பாவு சொன்னார்.

"நீங்க எங்க இருக்கிறீங்க" ஜான்ஸன் கேட்டார்.

"மலைக்கு அந்தப் பக்கம் காட்டில இருக்கோம். நாங்க பன்னென்டு குடும்பங்க."

டாக்டரின் வேண்டுகேளின்படி அப்பாவு அவர்களிடம் வளர்ப்பதற்கு ஒரு குட்டி மலபார் அணிலை பிடித்துத் தரமுடியுமா என்று கேட்டார்.

"ஓ, பிடிச்சுத் தரோமே" என்றான் ஒருவன்.

"குமரிமலை எஸ்டேட் தெரியுமா?"

"ம், தெரியும். சில சமயம் பஜாருக்கு தேன் விக்க வருவோம்"

"ஒரு மலபார் அணிலைப் பிடிச்சிட்டா குமரிமலை எஸ்டேட்டுக்குக் கொண்டு வாங்க. இந்த டாக்டர் உங்களுக்குப் பணம் தருவார்"என்றார் அப்பாவு.

"எங்களுக்குக் கொஞ்சம் டின்னும், பாட்டில்களும் வேணும்"

"சரி, டாக்டர் உங்களுக்கு விதவிதமான அளவில டின்களும், பாட்டில்களும், கூட கொஞ்சம் பணமும் கொடுப்பாரு" என்றார் அப்பாவு.

டாக்டர் அவர்களுக்கு தலைக்கு நான்கணா கொடுக்க, மகிழ்ச்சியுடன் பெற்றுக் கொண்டு சென்றனர்.

“இந்த ஆளுகளுக்கு எஸ்டேட்டோட கொஞ்சம் தொடர்பு இருக்கு. ஆனா காட்டைவிட்டு வெளியவே வாராதவங்களும் இருக்காக.”

பனிரெண்டு மணி ஆனதும் அவர்கள் தங்களது கேம்ப்புக்குத் திரும்பி வந்தனர். உணவு தயாராகக் காத்துக் கொண்டிருந்தது. அத்தனை பேருக்கும் கடும்பசி என்பதால் ஒரு பிடி பிடித்தனர். ஒரு மணிநேரம் ஓய்வு எடுத்த பின்பு திரும்பவும் பயணம் தொடங்கியது. ஒரு குன்றிலிருந்து இறங்கிக் கொண்டிருக்கும்போது திடீரென்று பத்தடி நீளமுள்ள ஒரு பெரிய பாம்பு, அதன் குறுக்களவு ஒரு மனிதனின் தொடையளவு இருக்கும். அது புற்களுக்குள் வழுக்கி அவர்களைக் கடந்து காட்டுக்குள் சென்றது.

“இது ஒரு மலைப்பாம்பு. எஸ்டேட்டில கூட இதைப் பார்க்கலாம்” என்றார் அப்பாவு.

“நாகப்பாம்போ, இல்ல வேற விசமுள்ள பாம்புகளோ இங்கே இல்லையா?” என்று டாக்டர் கேட்டார்.

“நல்லவேளையா இங்க விசப்பாம்பு இல்லை. சட்டித்தலைப் பாம்பு என்கிற ஒருவகைப் பாம்பு இங்க நிறையா இருக்கு. அதோட தலை ரொம்பப் பெரிசா இருக்கும். ஒடம்பு தலையைவிட கொஞ்சம்தான் நீளமாயிருக்கும். சிலசமயம் கூலிகளை இந்தப் பாம்பு கடிச்சுரும். கடிபட்ட கால் வீங்கிப் போய் வலியெடுக்கும், ஆனா நாலைந்து நாட்கள்ள வீக்கம் வடிஞ்சிடும். எலி திங்கற இன்னொரு பாம்பு இருக்கும். அதுக்கும் விசம் கிடையாது.”

“எல்லாப் பாம்பும்தான் எலி தின்னும்” என்றார் டாக்டர்.

“ஆமாம் ஆனால் ஏதோ காரணத்தால இந்தவகைப் பாம்பு மட்டும் எலிதிங்கற பாம்புன்னு பேர் வாங்கியிருக்கு. கீழ கூட இந்தப் பாம்பு நெறயா இருக்கு.”

திரும்பி வரும்போது காட்டெருமைகளோ மான்களோ கண்ணில் படவில்லை.

“வெப்பத்தினால மிருகங்களெல்லாம் காட்டுக்குள்ள போயிருக்கும். ஐந்து மணிக்குப் பொறவுதான் வெளியே வரும்” வழக்கம் போல் அப்பாவுதான் இதற்கும் விளக்கமளித்தார்.

“மலை ஏறுவதைவிட இறங்குவது எனக்கு மிகவும் சிரமமாக இருக்கிறது. பாதங்களைவிட வேகமாக முழங்கால் இறங்க நினைக்குது”என்றார் டாக்டர்.

“உடல் கனத்தை குதிக்கால்ல எறக்காம பெருவிரல்ல எறக்குங்க. அப்ப இவ்வளவு சிரமமிருக்காது.”

நான்கு மணி சுமாருக்கு அவர்கள் காலையுணவு அருந்திய முதல் மலை அடிவாரத்துக்கு வந்து சேர்ந்தனர். கூலிகள் காபி தயாரிக்கையில் அவர்கள் அமர்ந்து இளைப்பாறினர்.

“மனதுக்கு எவ்வளவு இனிமையாக இருக்கிறது. கற்களின் இடையே ஓடை சலசலத்து ஓடும் ஓசையைச் சும்மா உட்கார்ந்து கேட்டுக் கொண்டிருந்தாலே போதும்” என்றார் ஆபிரஹாம்.

“ஆமாம் இப்ப ரொம்ப நல்லாத்தானிருக்கு. ஆனா மழைக் காலத்தில பாக்கணும். இதுதான் அந்த ஆறான்னு ஆச்சரியப்பட்டுப் போவீங்க. இப்ப இவ்வளவு அழகா, அடக்கமா இருக்குல்ல இந்த ஆறு. அப்ப இடி மாதிரி இரைச்சலோட நுங்கும் நுரையுமாய்ப் பாய்ந்தோடி வரும். அப்ப இந்தச் சலசலப்புக்குப் பதில் ஒரு பர்லாங் தூரத்துக்கு அப்பால் கூட இந்த ஆத்தோட கர்ஜனை கேட்கும்.”

“அதுவும் சரிதான். கர்ஜனை இல்லாவிட்டால் இந்த இனிமையான சலசலப்பை நாம் எப்படி கவனிப்போம்” டாக்டர் தத்துவம் பேசினார். அவர்கள் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தபோது ஒரு கருநிறப்பறவை, காக்கையைவிட உருவத்தில் சற்றே சிறியது அவர்களைச் சுற்றிப் பறந்து காதைக்கிழிக்கும் வகையில் அலறியது. “இதைப் பார்த்தால் காக்கா நினைவுக்கு வருகிறது” என்றார் டாக்டர். “ஆமாம், ஏன் ஆனைமலை களில் காகங்கள் இல்லை?”

“எனக்குத் தெரியாது. உயரமோ, குளிரோ அதற்குக் காரணமில்லை. ஏன்னா நீலகிரியில நிறையக் காக்கா இருக்கு. முடீஸ் எஸ்டேட்டில் குமாஸ்தாவா இருந்த ஒரு அய்யர் சமவெளிகளிலிருந்து சில காக்கைளைக் கொண்டு வந்து பறக்கவிட்டுப்பாத்தான். ஆனால் அவை திரும்பவும் கண்ணில் படவேயில்லை.”

“ஆனைமலைகளில் ஏராளமான மனித காக்கைகள் இருக்கின்றன. அதனால்தான் பறக்கும் காக்கை இங்க வரமாட்டேனென்கிறது” என்றான் ஜான்சன்.

“ஓ அந்தமாதிரி காக்கைகள் சமவெளிகளிலும் எக்கச்சக்கமாக இருக்கத்தானே செய்யுது” என்றார் டாக்டர்.

அவர்கள் காபி அருந்திவிட்டு புத்துணர்வுடன் சுறுசுறுப்பாக எஸ்டேட்டை நோக்கி நடக்கத் தொடங்கி சூரியன் மறையும் நேரத்தில் மருத்துவமனையை அடைந்து விட்டனர்.

“ஹேப்பி கிறிஸ்துமஸ் டாக்டர். நாங்கள் வாழ்த்துகிறோம்”என்று அப்பாவுவும், ஜான்சனும் ஒரே குரலில் சொன்னார்கள்.

“நன்றி நண்பர்களே! நான் நினைத்தே பார்க்காத அளவிற்கு இன்றைய பொழுது இன்பமாகக் கழிந்தது. கற்பனைக்கெட்டாத அற்புதங்களையும் இயற்கையின் மர்மங்களையும் அறிமுகப்படுத்திய உங்களுக்கு நன்றி. உங்களுக்கும், உங்கள் குடும்பத்தினருக்கும் கிறிஸ்துமஸ் வாழ்த்துக்கள்.”

# 35

என் அன்பே, கழிந்தவை பற்றிய வேதனைகளும்
வருபவை பற்றிய பயங்கரங்களும் கொண்ட
இன்றைய தினத்தை மறக்கச் செய்யும் வகையில்
என் கோப்பையை நிரப்பு.
நாளை? ஏன் நாளை? ஏழாயிரம் ஆண்டுகள்
பழமைவாய்ந்த நேற்றோடு நான் நானாகவே இருப்பேன்.

தி ரூபையாத் ஆப் உமர்கயாம்
-ஃபிட்ஜெரால்டு

டிசம்பர் இருபத்தி நான்காம் தேதி விடுமுறை என்பதால் கருப்பன் நாள் முழுவதும் மருத்துவமனையிலேயே இருந்தான். ஒரு நிமிடம் கூட வள்ளியை விட்டு அகலவில்லை. எல்லோரும் பண்டிகையை வீட்டில் கொண்டாட வேண்டுமென்ற விருப்பத்துடன் டிஸ்சார்ஜ் வாங்கிக் கொண்டு சென்றுவிட்டதால் மருத்துவமனை வெறிச்சோடிக் கிடந்தது. வள்ளியின் நிலைமை மோசமானதாக இருந்ததால் டாக்டர் அவளை மட்டும் அனுப்ப மறுத்துவிட்டார்.

“நாளைக்குப் பண்டியல் உன்னோட பாடியில இருக்கணும்னு ஆசையாயிருக்கு மாமா” வள்ளி ஏக்கத்துடன் சொன்னாள்.

“இந்தமாதிரி ஒரு பாழாய்ப் போன எடத்துல இருக்கிற வரைக்கும் ஆஸ்பத்திரியில இருந்தா என்ன? பாடியில இருந்தா என்ன?” கருப்பன் பாதி வெறுப்புடனும் பாதி வருத்தத்துடனும் பேசினான்.

“எல்லாரும் பண்டியல் கொண்டாடுதாங்க. நா மட்டும் தனியா இங்கன கெடக்கேன்” வள்ளி கண்கலங்கினாள்.

“ஆனா நா இன்னிக்கு உங்கூடதானே இருக்கேன். நாளைக்கும் இங்கனயே இருப்பேன். நான் ரொம்ப ரொம்ப வேண்டிக்கறது என்னன்னா எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரம் உனக்கு நல்லபடியா பிரசவம் ஆகணும் அதுக்கப்பறம் கணக்குத் தீர்த்த ஒடனே நாம ஊருக்குப் போயிடலாம்.”

“இப்ப எனக்கு தேறுனமாதிரி இருக்கு” என்றாள் வள்ளி.

“உனக்கு மட்டும் நல்லபடியா பிரசவம் ஆக வெச்சிட்டா மாரியம்மனுக்கு

எஸ்டேட்ல இருக்கறதுலயே நல்ல சேவலாப் பாத்து பலி கொடுக்கேன்னு வேண்டிட்டிருக்கேன்” கருப்பன் உணர்ச்சிவசப்பட்டு அழுத்திச் சொன்னான்.

“வழிச் செலவுக்குப் போதுங்கற பணம் இருக்கும்னு நெனக்கிறியா மாமா?”

“ஆமாம். திருமலை மேஸ்திரிகிட்ட கேட்டேன். உனக்கு பத்து ரூபா கடனிருக்காம். எனக்கு முப்பத்தி ஐந்து ரூபாய் வர வேண்டியிருக்கு. அதனால கைல இருபத்தி அஞ்சு ரூபா கிடைக்கும் வள்ளி. அது தேவைக்கு அதிகமில்லயா?” கருப்பன் அவள் முதுகை ஆதரவாக மென்மையாக வருடிக் கொடுத்தபடியே மொழிந்தான்.

“உன்னோட வீட்டுக்கு வாறதுக்கு வேணுங்கற உடல் பலத்தையும், நல்ல சொகத்தையும் அந்த முருகன்தான் எனக்குக் கொடுக்கணும். கொடுப்பான்.”

“ஒவ்வொரு நாளா எண்ணிட்டே இருக்கேன். வள்ளி கணக்கு முடிக்கறதுக்கு இன்னும் இருபது நாளிருக்கு. அப்பா அம்மா நம்மளப் பாத்தா எவ்வளவு சந்தோசப்படுவாங்க.”

“நாளைக்கு சமைக்க மாட்டுக்கறி வாங்கலையா மாமா?”

“நீ ஆசுபத்திரியில இருக்கிற வரைக்கும் கறியப் பத்தியோ பண்டியலப் பத்தியோ எனக்கு நெனப்பே இல்ல” கருப்பன் உண்மையான தீவிரத்துடன் பதிலளித்தான்.

“நான் இங்கன இருக்கறப்ப நீ நல்லா சாப்புடக் கூடாதுன்னு ஏதாவது இருக்கா மாமா?”

“ஒரு குத்தமுமில்ல. எனக்குத்தான் சாப்புடணும் போலத் தோணமாட்டேங்குது.”

“எம்மேல கோபப்பட மாட்டேன்னா ஒரு ஒத்தாச கேக்கலாமா மாமா?” வள்ளியின் கண்கள் கேள்விக் குறியுடன் கருப்பனுடைய கண்களை ஆழத் துழாவின.”

“நான்தான் ஒருநாளும் உங்கிட்ட கோபப்பட்டதேயில்லையே.”

“அதனாலதான் தைரியமா இதக் கேக்கேன். இந்த உப்பில்லாத சாப்பாட்ட சாப்புட்டு சாப்புட்டு சலிச்சுப் போச்சு. ரெண்டு வாரத்துக்கு மேல இதையேதான் சாப்புட்டுட்டிருக்குதேன். நாளைக்கு கறி சமைச்சு எனக்குக் கொஞ்சம் கொண்டு வாறியா? கொஞ்சம் போதும்.

சோத்தோட... ஒரே ஒரு தடவ கொஞ்சூண்டு கொடுத்தாப் போதும்.”

கருப்பன் பதறிப் போனான்.

“ஐயோ வள்ளி எப்படி நீ இந்தமாதிரி பேசுத. டாக்டரு உனக்கு கறியோ, உப்புல சமைச்ச பண்டமோ கொடுக்கக் கூடாதுன்னு திட்டவட்டமா சொல்லியிருக்காருல்லா. நம்ம நல்லதுக்குத்தானே அவரு சொல்லுதாரு.”

“அவரு சொல்லுதாருன்னு எனக்குந்தான் தெரியுமே மாமா. அது என்னோட நல்லதுக்குத்தான் அதுவும் எனக்குத் தெரியும். ஆனா நாளைக்குப் பண்டியல். ஒரு சின்னத்துண்டு கறியும் நீ சமச்ச சோறும் தின்னாட்டி நான் ஏங்கியே செத்துப் போயிருவேன்னு தோணுது.”

“நா வேணா டாக்டரப் பாத்து நாளைக்கு ஒருநா கறி தின்னலாமான்னு கேக்கேன். அவரு ஒத்துக்கிட்டா நீ சொன்னபடி சமச்சுக் கொண்டாறேன். ரெண்டு பேருமாத் தின்னலாம்.”

“அய்யோ அவருகிட்ட கேக்காத மாமா. அவருதா நான் கறி தின்னக் கூடாதுன்னு சொல்லிட்டாருல்லா. அவருகிட்ட சும்மா சும்மா நச்சறது சரியில்லல்லா.”

“அப்ப சாப்பிட வேண்டாம்.”

“மாமா... ஆ... ஆ.. எனக்காக ஒரே ஒரு சின்னத் துண்டு கறியும் ஒரே ஒரு பிடி சோறும் கொண்டா, ஒரே ஒரு தடவை. அப்புறம் நான் உங்கிட்ட கேக்கவே மாட்டேன்.”

கருப்பன் தயங்கினான். வள்ளி தொடர்ந்து அவனைக் கரைக்க முயன்றாள். “ஒரு வேளை நான் செத்துப்போனா நான் கேட்ட இத்துணூண்டு சமாச்சாரத்தக்கூட குடுக்கலையேன்னு வருத்தப்படுவே.”

கறிக்காக வள்ளி எவ்வளவு தூரம் ஏங்கிப் போயிருக்கிறாளென்று புரிந்து கொண்ட கருப்பனின் பிடிவாதம் கொஞ்சம் கொஞ்சமாகத் தளர்ந்து இறுதியில் விட்டுக் கொடுத்தே விட்டான்.

“சரிம்மா. நீ சொன்னபடியே சமச்சுக் கொண்டாறேன்” வள்ளி மகிழ்ச்சியடைந்தாள். அவளது திருப்தி முகத்திலேயே தெரிந்தது.

தான் வாக்களித்தபடியே கருப்பன் மாட்டுக் கறியும் சோறும் சமைத்து ஒரு பானையில் வைத்துக் கொண்டு வந்தான். இருவரும் ஒன்றாகச் சாப்பிட அமர்ந்தனர். மருத்துவமனையில் ஒரு ஈ காக்காய் கூட இல்லை. மெடிக்கல் கூலி கூட குடும்பத்தோடு பண்டிகையைக் கொண்டாடப் போயிருந்தான்.கருப்பன் வள்ளியினருகே நெருங்கியமர்ந்து கறியையும்

சோற்றையும் பிசைந்து உருண்டை பிடித்தான். “வாயைத் திறம்மா. ஒவ்வொரு உருண்டையாத் தாறேன். நல்லா மென்னு முழுங்கணும்” என்றான்.

“ஆ எவ்வளவு நல்லாயிருக்குது” வள்ளியின் முகம் புன்னகையால் மலர்ந்து பூரித்துப் போனது.

“நல்லாச் சமைக்கற மாமா” என்று சொல்லிவிட்டுச் சிரித்தாள்.

“பின்ன இல்லாம” கருப்பனுக்கும் சிரிப்பு வந்தது.

அவளை அவ்வளவு இன்பமான மனநிலையில் பார்த்ததில் மிதந்துபோன கருப்பன் பானை முழுவதும் தீரும்வரை அவளுக்குத் தொடர்ந்து ஊட்டிக் கொண்டேயிருந்தான்.

“டாக்டர் சொன்னதற்கு விரோதமா உனக்கு முட்டாள்தனமா சோறும் கறியும் குடுத்துட்டிருக்கேன்.”

“இனி நான் கேக்கவே மாட்டேன் மாமா. எனக்கு ரொம்பத் திருப்தியா சந்தோசமா இருக்கு. நீ போய் சினேகிதகாரங்களோட பண்டியல் கொண்டாடு. நான் இப்படியே படுத்துத் தூங்கறேன். நீ ராத்திரி வந்தாப் போதும்..”

“இல்ல இல்ல, நா போல. உன்ன இங்கன வுட்டுட்டு அங்க போயி எனக்கென்ன கொண்டாட்டம். நீ படுத்துத் தூங்கு. உங்கூட இங்கயே இருந்தாத்தான் எனக்குச் சந்தோசம் திருப்தி.”

# முடிவு

ஒடுக்கப்பட்டவர்களின் கண்களில் நான் கண்ணீரைக்
கண்டேன். அவர்களைத் தேற்றுவார் யாருமில்லை
வல்லமை ஒடுக்குபவரின் பக்கமிருந்தது. பாருங்கள்!
உங்கள் வயலில் அறுவடை செய்த வேலையாட்களுக்கு
உரிய கூலியைப் பிடித்து வைத்துக் கொண்டீர்கள்; அது
கூக்குரலிடுகிறது. அறுவடை செய்தவர்களின் கூக்குரல்
ஆண்டவருடைய படைகளின் செவிக்கு எட்டியுள்ளது.

-பைபிள்

டிசம்பர் 25ஆம் தேதி விடுமுறை. அன்றும் கருப்பன் நாள் முழுவதும் வள்ளியுடனேயே இருந்தான்.

"எனக்கு இப்ப ரொம்ப நல்லாயிருக்கு மாமா. சீக்கிரம் வீட்டுக்குப் போயிடுவோம்னு நெனைச்சாலே ஒடம்பெல்லாம் புல்லரிக்குது"என்றாள் வள்ளி.

"மூணு பயங்கரமான வருசங்க இந்த எஸ்டேட்ல இருந்திட்டோம். எம்பெருமான் முருகன் இந்த எஸ்டேட் வாழ்க்கைய நல்லபடியா முடிச்சு வெச்சுடுவான். நம்மோட ஊர்ல கிராமத்தில நாம கால் வெக்கிற வரைக்கும் அவன் நம்மகூட இருக்கணுமின்னு வேண்டிக்குதேன்"என்றான் கருப்பன்.

மறுநாள் மாலை வேலையிலிருந்து வந்து சமைத்துக் கொண்டிருக்கும்போது பக்கத்து வீட்டுக்காரன் ஓடிவந்து அவனை உடனே மருத்துவமனைக்குப் போகும்படி சொன்னான். கருப்பனை உடனே அனுப்பச் சொல்லி டாக்டர் சங்கரபாண்டியனுக்குச் சொல்லியனுப்பியிருந்தார். அவன்தான் இந்த ஆளை அனுப்பி இருந்தான்.

"வள்ளிக்குக் கொழந்த பொறந்து செத்துப்போச்சு போலிருக்கு"என்றான் வந்தவன்.

"வள்ளிக்கு ஒண்ணுமில்லையே" கருப்பன் பதறித் துடிக்கும் நெஞ்சைக் கைகளால் அழுத்தியபடி கேட்டுக் கொண்டே ஓடத் தொடங்கினான்.

"தெரியல, சீக்கிரம் போ" என்று அந்த ஆள் கூச்சலிட்டு பதிலளித்தான்.

பயந்தோடி மருத்துவமனையை அடைந்து வார்டுக்குள் நுழைந்ததும் டாக்டர் வள்ளிக்கு ஊசி போட்டுக் கொண்டிருப்பதையும், மெடிக்கல் கூலி அவளை அழுத்திப் பிடித்துக் கொண்டிருப்பதையும் கண்டான். வள்ளிக்குக் கடுமையான வலிப்பு வந்திருந்தது. அவள் வாயிலிருந்து நுரை தள்ள கைகளும், கால்களும் நீண்டு விரைத்து இருந்தன. அவளுக்கு சுத்தமாக சுயநினைவே இல்லை. அருகிலிருந்த கட்டிலில் இறந்துபோன குழந்தை கிடந்தது.

“நான் பயந்தது மாதிர‘யே நடந்திருச்சு மத்தியானம் சாப்பாடு கொடுக்கும் பொழுது இவள் நன்றாகத்தான் இருந்தாள்” என்று மெடிக்கல் கூலி சொன்னான். ஒரு மணிநேரத்திற்கு முன்பு வலிப்பு வந்தது போல் இருந்தது. குழந்தை இறந்தே பிறந்தது. அடிக்கடி இவளுக்கு வலிப்பு வருகிறது என்றார் டாக்டர். அவர்கள் தரையில் ஒரு கம்பளியை விரித்து அவளைப் படுக்கவைத்தனர். கருப்பனை அவள் பக்கத்திலேயே உட்கார்ந்து ஏதாவது அவசரம் என்றால் தனக்கு தகவல் கொடுக்கும்படி டாக்டர் கூறினார்.

“டாக்டரய்யா, இவளுக்கு நல்லாயிருமா?” என்று கருப்பன் கவலையுடன் கேட்டான்.

“சொல்ல முடியாதுப்பா... என்னால என்னென்னவெல்லாம் முடியுமோ, அதெல்லாம் செய்யறேன். மத்ததை கடவுள்கிட்ட விட்டுடலாம்.”

கருப்பன் வள்ளியின் அருகே உட்கார்ந்து அவள் கரத்தை எடுத்து மடியில் வைத்துக் கொண்டான். மாரியாயியும், கோவிந்தனும் அவர்களைப் பார்க்க வந்தனர். வள்ளியின் நிலைமையைப் பார்த்துவிட்டு கோவிந்தன் தன் மனைவியை கருப்பனுக்கு உதவியாக அங்கேயே இருக்கும்படி கூறினான்.

“காலையில குழந்தையைப் பொதச்சிடலாம். மேஸ்திரிகிட்ட அனுமதி வாங்கிட்டு விடியக்காலைல வாரேன்” என்று கூறிவிட்டு கோவிந்தன் கிளம்பினான். ஒன்பது மணிக்கு டாக்டர் திரும்பி வந்து வள்ளிக்கு இன்னொரு ஊசி போட்டார்.

“மெடிக்கல் கூலியை இங்கேயே தூங்கச் சொல்லியிருக்கிறேன். ஏதாவது தேவையென்றால் அவனை எழுப்பினால் போதும். அவன் என்னை கூப்பிடுவான்” என்று கூறிவிட்டுச் சென்றார் டாக்டர்.

கருப்பன் வள்ளியைத் தான் கவனித்துக் கொள்வதாகவும், தேவைப்பட்டால் எழுப்புவதாகவும் சொல்லி மாரியாயியைத் தூங்கச் சொன்னான்.

வள்ளிக்கு நினைவு திரும்பவேயில்லை. நள்ளிரவுக்குப் பின்பு வலிப்பு அடிக்கடி வரத் தொடங்கியது. அவள் மிகுந்த சிரமத்துடன் மூச்சு விட்டாள். கருப்பன் மெடிக்கல் கூலியை எழுப்ப, டாக்டர் செய்தி கேட்டு விரைந்து வந்தார். அவர் அவளைப் பரிசோதிக்கும்போது கருப்பன் அவர் முகத்தையே உன்னிப்பாகக் கவனித்துக் கொண்டிருந்தான்.

ஆனால் டாக்டரின் முகம் எந்த உணர்ச்சியையும் வெளிக்காட்டவில்லை. "சரியாயிருமா டாக்டரய்யா?"

"நல்லதே நடக்கும்னு நம்புவோம்" என்றார் அவர்.

அதிகாலையில் பதினைந்து நிமிடங்களுக்கு ஒருமுறை வலிப்பு தொடர்ந்து வரத் தொடங்கியது. மூச்சு பெருத்த இரைச்சலுடன் வந்தது. வள்ளி விழித்தெழ மாட்டாள் என்ற பயம் கருப்பனுக்குள் தலை காட்டத் தொடங்கியது. ஊருக்குப் போகக்கூடிய நிலை வரும்போது வள்ளி இப்படிப் படுத்துக்கிடக்கிறாளே என்ற நினைப்பால் தேம்பித் தேம்பி அழத் தொடங்கினான். ஒரு நிமிடம் வள்ளியின் கையை விட்டால் கூட அவள் தன்னை என்றென்றைக்குமாக விட்டு விட்டுப் போய்விடுவாள் என்ற பயத்தில் அவள் கரங்களை விடாமல் இறுகப் பற்றிக் கொண்டே இருந்தான்.

"வள்ளி... வள்ளி... என்னை விட்டுட்டு போயிறாதே, என்ன தனியா விட்டுட்டு போயிறாதே, என்னத் தனியா விட்டுட்டு போயிறாத" விம்மலோடு அவன் கிசுகிசுத்துக் கொண்டே இருந்தான். ஒரு விநாடியும் நிற்காமல் "முருகா! முருகா! என் பொஞ்சாதிய உட்டுடு, என்னை விட்டு அவளைப் பிரிச்சுட்டு போயிறாத" என்று அவன் உதடுகள் முணு முணுத்துக் கொண்டே இருந்தன.

இறுதியில் ஒரு வழியாகப் பொழுது விடிந்தது. கோவிந்தனும் சில நண்பர்களும் குழந்தையைப் புதைப்பதற்கு வந்தனர். அவர்களோடு திருமலையும் வந்திருந்தான். வள்ளியின் நிலைமையைப் பார்த்து திருமலை சென்று டாக்டரிடம் கலந்து பேசினான். முடிவு நெருங்கிக் கொண்டிருக்கிறது என்றார் அவர். எனவே அவன் மாரியாயியை கோவிந்தனோடு இருக்க அனுமதித்து விட்டு மாலையில் வருவதாகக் கூறிச் சென்றான். கோவிந்தனும், அவன் நண்பர்களும் குழந்தையை எடுத்துச் சென்று புதைத்தனர்.

காலை ஏழு மணிக்கு டாக்டர் வந்து வள்ளியின் நாடி பிடித்து பார்த்துவிட்டு ஊசி போடாமலேயே திரும்பிச் சென்றார். கருப்பன் துள்ளி எழுந்து பின்னே ஓடி அவர் கால்களைக் கட்டிக் கொண்டு

“டாக்டரய்யா எம்பொஞ்சாதியக் காப்பாத்துங்க, காப்பாத்துங்க” என்று கதறி அழுதான். டாக்டர் மென்மையாகத் தன்னை விடுவித்துக் கொண்டு உடனே திரும்பி வந்து விடுவதாகக் கூறிவிட்டு விலகிச் சென்றார். ஆனால் அவர் திரும்பி வரவேயில்லை. இனி நம்பிக்கைக்கு இடமே இல்லை என்பதைக் கருப்பன் புரிந்து கொண்டான். குளிர்ந்த வியர்வை ஆறாகப் பெருகியது. அவன் கால்கள் நடுங்கத் தொடங்கின. அங்கிருந்த மெடிக்கல் கூலி அவனை சாந்தப்படுத்த ஒரு கப் காஃபியை நீட்டி பருகச் சொன்னான். கருப்பன் தலையசைத்து மறுத்துவிட்டு மனைவியையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான். வள்ளி விட்டுவிட்டு மூச்சுவிட்டுக் கொண்டிருந்தாள். அவள் உடல் குளிர்ந்து வந்தது. இரண்டு சுவாசங்களுக்டையிலான இடைவெளி மேலும் மேலும் அதிகரித்துக் கொண்டிருந்தது. திடீரென்று வள்ளியின் உடல் பயங்கரமாக ஒரு குலுங்கு குலுங்கியது. அவள் வாயிலிருந்து ரத்தம் வழிந்தது. கருப்பன் உலகில் தன்னந்தனியனாகி விட்டான். “ஐயோ வள்ளி! என்னத் தனியா விட்டுட்டு போயிட்டியே” என்று நெஞ்சைப் பிளக்கும்படி கதறி கருப்பன்மனைவியின் உயிரற்ற உடல் மீது விழுந்து அதை இறுகப் பற்றிக் கொண்டான்.

டாக்டர் சங்கரபாண்டியன் மேஸ்திரிக்கு சொல்லி அனுப்பினர். அவன் சுமார் இரண்டு மணிக்கு திருமலையையும், வேறு சில ஆண், பெண் கூலிகளையும் அழைத்துக் கொண்டு மருத்துவமனைக்கு வந்து சேர்ந்தான். அவர்கள் வள்ளியின் உடலைத் தங்கள் லைனுக்கு எடுத்துச் சென்றனர். கருப்பன் அறையை அடைந்தவுடன் அவள் உடல் மீது விழுந்து புரண்டு விரக்தியும், வெறுமையும் மேலிட கதறிக் கதறி அழத் தொடங்கினான்.

“ஐயோ! என்ன மாதிரி ஆசைகளோட இங்க வந்தோம். இப்ப என்னைத் தன்னந்தனியா விட்டுட்டு போயிட்டாளே. என்னை ஏம் முருகா இப்படி சோதிக்கறே. எம் பொஞ்சாதியக் கூட்டிட்டு என்னை ஏன் விட்டுட்டே. என்னையும் உங்கிட்ட கூப்பிட்டுக்கோ. கொஞ்சம் கருணை காட்டு. என்னையும் உங்கூட கூப்பிட்டுக்கோ” வேதனை மிகுந்த விசும்பல்களால் அவன் உடல் தன்பாட்டில் குலுங்கிக் கொண்டே இருந்தது. கோவிந்தனும் மற்றவர்களும் ஏதேதோ சொல்லி அவனை சமாதானப்படுத்த முயன்றனர். ஆனால் அடியற்ற பள்ளத்தில் வீழ்ந்து கொண்டிருப்பதைப் போன்ற நிலையில் இருந்த கருப்பனின் காதுகளில் எதுவுமே விழவில்லை.

“ஐயோ! கடவுளே, இவங்க அப்பா அம்மாகிட்ட என்ன சொல்லுவேன். முருகா என்னையும் கூப்பிட்டுக்கோ. நான் வீட்டுக்குத் தனியாப்

போகமாட்டேன். கடவுளே! கடவுளே!”

மாரியாயியும், வேறு சில பெண்களும் புதைப்பதற்கு முன்பு குளிப்பாட்டுவதற்காக வள்ளியின் உடலை எடுத்துச் செல்ல முயன்றனர். கருப்பன் அவளோடு ஒட்டிக் கொண்டு பிரிய மறுக்க, ஆண்கள் அவனைப் பலவந்தமாக பிடித்து இழுத்துப் பிரிக்க வேண்டி வந்தது. பெண்கள் வள்ளியைக் குளிப்பாட்டி மரபுப்படி புதுச்சேலை அணிவித்து திரும்பவும் அவளை அறைக்குள் கொண்டு வந்தனர்.

“ஐயோ! கடவுளே புதுச்சேல கட்டியிருக்காளே. மூணு வருசமா அவளுக்கு ஒரு புதுச்சேல கிடைக்கலியே! இப்ப புதுச்சேல கிடைச்சிருக்கே! ஆனா என்ன உட்டுட்டு போகப் போறாளே, முருகா! முருகா!” கருப்பன் மார்பில் அடித்துக் கொண்டான். வள்ளி தனது கடைசிப் பயணத்தை மேற்கொள்ள சில ஆண்கள் பாடையை கட்டிக் கொண்டிருந்தனர். குழி வெட்டச் சென்றவர்கள் திரும்பி வந்து எல்லாம் தயாராகி விட்ட தென்றனர். வள்ளி பாடையின் மீது கிடத்தப்பட்டாள். “ஐயோ! அவள எங்க கொண்டு போறீங்க. என்ன விட்டுப் பிரிச்சிறாதீங்க” என்று கருப்பன் அவள் உடலைக் கட்டிக் கொள்ள மற்றவர்கள் அவனைப் பிடித்து அகற்ற முயன்றனர். ஆனால் கருப்பன் தன் பலம் அனைத்தையும் பிரயோகித்து அவள் உடலோடு ஒட்டிக் கொண்டான் “ஐயோ! கொஞ்சம் இருங்க, கொஞ்சம் இருங்க! நான் ஒரு வார்த்த சொல்லிக்கிறேன். ஏ வள்ளி! கண்ணத்திற! என்னைப் பாரு நான் சொல்றது கேக்கலையா? கடவுளே முருகா! இவ பேசாம இருக்காளே வாயத் திறந்து ஒரு வார்த்த சொல்லு. ஒரே ஒரு வார்த்த...”

கோவிந்தனும், திருமலையும் கருப்பனைத் தூக்கி விலக்க மற்றவர்கள் பாடையைத் தோளில் சுமந்தபடி நடந்தனர். சங்கரபாண்டியனும், அவனது ஆண்கூலிகள் அனைவரும் வள்ளியைப் பின்தொடர்ந்தனர். கருப்பன் கோவிந்தனின் தோளில் சாய்ந்து கொண்டு விம்மியபடியே நடந்தான். சூரியன் மறையும் நேரத்தில் அவர்கள் அவளைப் புதைத்தனர்.

கருப்பன் அரை மயக்க நிலையில் திரும்ப அறைக்கு அழைத்து வரப்பட்டான். தரையில் குப்புற விழுந்து விம்மி விம்மி அழத் தொடங்கினான். அவன் துயரத்தோடு அவனை தனியாக விட்டு விடுவதே நல்லது என்று கருதி மற்றவர்கள் மெல்ல மெல்ல அங்கிருந்து நகர்ந்தனர்.

கருப்பன் மறுநாள் முழுவதும் அறையிலிருந்து வெளியே வரவே இல்லை. இரவு கோவிந்தன் அவனை கொஞ்சம் சாப்பிடச் சொல்லி

வற்புறுத்தினான். ஆனால் கருப்பன் வெறும் தலையசைப்பால் மறுத்துவிட்டு பேரதிர்ச்சி அடைந்தவனைப் போல் படுத்தே கிடந்தான். ஒருவரிடமும் ஒரு வார்த்தையும் பேசவில்லை. எல்லோரும் தூங்கிய பிறகு இரவு முழுவதும் கருப்பனின் தேம்பல் ஒலி கேட்டுக் கொண்டே இருந்தது. மறுநாள் காலையில் கருப்பன் எழுந்து அடுப்புப் பற்ற வைக்கும் ஓசை கேட்டு கோவிந்தன் அவன் அறைக்குள் சென்று தாங்கள் அன்று அவனுக்கு உணவு கொண்டு வந்து விடுவதாகவும், சமைக்க வேண்டாம் என்றும் கேட்டுக் கொண்டான். கருப்பன் பதில் பேசாமல் பலமாக தலையசைத்து மறுத்து விட்டான். அவனை அப்படியே விட்டு விடுவதே நல்லது என்று நினைத்த கோவிந்தன் வேலைக்கு கிளம்பினான். கருப்பன் ஒரு பானை நிறைய காஃபி வைத்து அதில் பாதியைக் குடித்துவிட்டு படுத்துக்கொண்டான். கோவிந்தன் மாலையில் திரும்பிய போதும் கருப்பன் படுக்கையிலேயே படுத்துக்கொண்டிருந்தான். எல்லாரும் தூங்கச் சென்றவுடன் கருப்பன் எழுந்து மீதியிருந்த காப்பியைக் குடித்துவிட்டு மீண்டும் படுத்துக் கொண்டான். ஆனால் தூக்கம் வரவில்லை. ஃபாக்டரி கடிகாரம் பதினொன்று அடிப்பதையும், பனிரெண்டு அடிப்பதையும் பின்பு ஒன்று அடிப்பதையும், கண்களை அகல விரித்தபடி படுக்கையில் கிடந்தபடியே கேட்டுக் கொண்டிருந்தான். காலையில் கருப்பன் இன்னும் அயர்ந்து தூங்கிக் கொண்டிருப்பதைக் கண்ட கோவிந்தன் அவனைத் தொந்தரவு செய்யாமல் வேலைக்குச் சென்றுவிட்டான்.

மாலையில் அவன் வேலையிலிருந்து திரும்பியபோது கருப்பன் எழுந்து சமைத்துக் கொண்டிருப்பதைக் கண்டான். “ஏதாவது வேணும்னா சொல்லுண்ணே, நான் செஞ்சு தாரேன்” என்றான் அவன். “வேண்டாம்”என்று ஒற்றைச் சொல்லில் பதிலளித்துவிட்டு கஞ்சி வைத்து அதில் கொஞ்சம் குடித்தான். கோவிந்தன் தனது அறைக்குச் சென்று சாப்பிட்டு விட்டு திரும்பவும் வந்து கருப்பனுக்கு அருகே உட்கார்ந்து கொண்டான். நீண்டநேரம் கருப்பன் ஒரு வார்த்தையும் பேசவில்லை. பின்பு தேம்பித் தேம்பி அழுதபடி “வள்ளி கறியோ, உப்புப் போட்ட சாப்பாடோ சாப்பிடக் கூடாதுன்னு அந்த டாக்டரய்யா சொல்லியிருந்தாரு. ஆனாப் பண்டியல் அன்னைக்கு கொஞ்சம் கறியும் சோறும் குடுக்கச் சொல்லி ரொம்பக் கெஞ்சிக் கேட்டா. அத மறுக்க மனசில்லாம கறியும் சோறும் சாப்பிட வெச்சேன். அதனாலதான் வள்ளிக்கு வலிப்பு வந்து செத்துப் போனாளா?”

“இல்ல” என்று உடனே பதிலளித்தான் கோவிந்தன். “சங்கரபாண்டியன் மேஸ்திரி டாக்டர்கிட்ட பேசிட்டு இருந்ததை நான் கேட்டேன்.

மொதல்ல இருந்தே அவ பொழப்பாங்கிறதுல தனக்கு நம்பிக்கையில்லன்னு டாக்டரு சொன்னாரு. வயித்துல ரெண்டு பக்கமும் அவளுக்கு பெரிய காய்ச்சுக் கட்டி இருந்ததாம். அப்புறம் அவளுக்கு ரத்தமே இல்லை. இந்த மாதிரி ஆளுங்க கர்ப்பமானா பொழைக்கவே மாட்டாங்கன்னு டாக்டர் சொன்னாரு." என்று கோவிந்தன் சொல்லிக் கொண்டிருக்கும்பொழுதே உள்ளே வந்த திருமலை, கருப்பன் நாளை காலை வேலைக்குப் போக வேண்டும் என்று மேஸ்திரி சொல்லி அனுப்பியதாகக் கூறினான். இறுதிச் சடங்குக்கு ஏராளமான பணம் செலவாகிவிட்டது. எவ்வளவு முடியுமோ அவ்வளவு விரைவாக வேலைக்குப் போகாவிட்டால் திரும்பவும் கடனில் மாட்டிக் கொள்வானென்றும் சொல்லிவிட்டுப் போனான்.

அரைத் தூக்கத்தில் புரண்டு கொண்டிருந்தவனுக்கு விடியற்காலை ஆழ்ந்த உறக்கம் வந்தது. அதில் ஒரு கனவும் வந்தது. அவன் மயிலோடையில் தனது குடிசையில் அம்மாவுடனும், வள்ளியுடனும் இருக்கிறான். குடிசை புத்தம் புதியதாகத் தோன்றியது. வள்ளியின் மடியில் உட்கார்ந்திருந்த குழந்தையோடு அவன் அம்மா விளையாடிக் கொண்டிருந்தாள். நன்கு உடையணிந்திருந்த வள்ளியின் காதுகளில் தங்க வளையங்கள் தொங்கிக் கொண்டிருந்தன. அம்மாகூட புதிய வெள்ளைச் சேலை அணிந்து சுறுசுறுப்பாக நடமாடிக் கொண்டிருந்தாள். அடுப்பில் உலையில் அரிசி கொதித்துக் கொண்டிருந்தது. காய்கறிகள் குவிந்து கிடந்தன.

"காய்கறிகள வெட்டு... சோம்பேறிப் பயலே" அம்மாவின் கண்களில் மகிழ்ச்சி நடனமிட்டது.

"நான் குழந்தைய வெச்சுக்குதேன். உம் மருமகள காய்கறி நறுக்கச் சொல்லு" என்று கூறிவிட்டு கருப்பன் வள்ளியின் மடியில் இருந்த குழந்தையை எடுக்கச் சென்றான். ஆனால் அம்மா அவன் கையைப் பிடித்து இழுத்து "குழந்தையை அவ வெச்சிருக்கட்டும் விடு" என்றாள்.

கருப்பன் திடுக்கிட்டு விழித்துக் கொண்டான். தான் மயிலோடையில் அல்ல. குமரிமலை எஸ்டேட்டில் தன்னந்தனியாகத் தன் அறையில் படுத்துக் கிடப்பது நினைவுக்கு வந்தது. திருமலை அவன் கையைப் பிடித்து இழுத்து "எந்திரில, வேலைக்கு நேரமாயிட்டு" என்று கத்திக் கொண்டிருந்தான்.

*********